உ

திருச்செந்திலாண்டவன் துணை

மெய்கண்டதேவர் அருளிய

# சிவஞான போதமும்

சிவஞான முனிவரின்

# சிற்றுரையும்

( நுண்பொருள் விளக்கத்துடன் )

ஸ்ரீ-ல-ஸ்ரீ 'கயிலைமாமுனிவர்' அவர்களின்

மணிவிழா நினைவு வெளியீடு

19-3-1991



விலை ரூ. 16-00



ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள்

உ

திருச்செந்திலாண்டவன் துணை

மெய்கண்டதேவர் அருளிய

# சிவஞான போதமும்

சிவஞான முனிவரின்

# சிற்றுரையும்

( நுண்பொருள் விளக்கத்துடன் )

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர்,
'கயிலைமாமுனிவர்'
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்களின்
அருளாணையின் வண்ணம் வெளியிடப்பெற்றது

மணிவிழா நினைவு வெளியீடு

19—3—1991

நுண்பொருள்விளக்கம்:
தருமபுர ஆதீனப்புலவர்,
பேராசிரியர், டாக்டர் கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., பிஎச். டி.,
முன்னாள் முதல்வர், செந்தமிழ்க்கல்லூரி,
திருப்பனந்தாள்.

ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள்

இரண்டாம் பதிப்பு: 1000 பிரதிகள்
1991

# பொருளடக்கம்



ஸ்ரீ குமரகுருபரர் அச்சகம்,
ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்.

செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்ட இரு தயகமல முகைகள் எல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

— அருணந்தி சிவாசாரியார்.

சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவ சமயமாகும். சைவத்தின் சமய குரவர்களாக விளங்கும் நால்வர் பெருமக்களாலும் அவர்களின் அருள்வழி வந்த அருளாளர்களாலும் செய்யப்பெற்றவையே திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்கள், புராணங்கள், பிரபந்தங்கள், முதலியவைகளாம். அவைகள் மெய்யுணர்வையும், பக்தி நலத்தையும் விளைவிப்பனவாய் அமைந்துள்ளன. பன்னிரண்டாம்நூற்றுண்டு முதல் 14 ஆம் நூற்றுண்டிற்கு உட்பட்ட கால எல்லையில் எழுந்தனவே சைவ சித்தாந்த சாத்திரங்கள் எனப்படும் மெய்கண்ட நூல்கள் ஆகும். மெய்கண்ட நூல்கள் பதினுன்கினுள் சிவ ஞானபோதமே பலராலும் பயின்று பாராட்டப்பெறும் ஞானநூல் ஆகும். இவ்வரிய நூலை அருளியவர் மெய்கண்டார் ஆவர். இவ்வருட்குரவரை அவர்தம் மாணுக்கராகிய அருணந்தி சிவாசாரியார் முதல் அவருக்குப் பின்வந்த அருளாளர்கள் பலரும் போற்றி வந்துள்ளனர், வேதங்களிலும் ஆகமங்களிலும் அறிதற்கு அரிதாய் அமைந்துள்ள பல பொருள்கள் இந்நூற்கண் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் விளக்கப்பட்டுள்ளன. பதினுன்கு சாத்திரங்களுள் சிவஞான போதத்திற்கு முன்னும் பின்னும் பல நூல்கள் எழுந்தனவேனும் அவற்றிற்கு எல்லாம் தலைமையாக நின்று இலங்குவது இந்நூலேயாகும். பலராலும் பாராட்டப் பெறும் அருளாளராகிய மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்திற்குப் பலர் உரை எழுதியுள்ளனர். அவர்களுள் 18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த வடமொழி, தென்மொழி ஆகிய இருமொழி களிலும் புலமைவாய்ந்த சிவஞான முனிவர் எழுதிய உரையே சிறப்புடையதாகும். இவர் சிற்றுரை ஒன்றையும் பேருரை ஒன்றையும் எழுதியுள்ளார்.

மெய்கண்ட நூல்கள் பதினான்கும் தமிழக மக்களுக்குப் பயன்படும் வண்ணம் விரிவான விளக்கங்களுடன் வெளிவர வேண்டுமெனத் திருவுளம்கொண்டு அவ்வாறே வெளிவரச் செய்து சைவத்தையும் தமிழையும் போற்றி வளர்த்துவருபர்கள் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் 21-ஆவது அதிபர் கயிலைமா முனிவர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** ஆவார்கள். அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் சிவஞானபோதமும் சிவஞான முனிவரின் சிற்றுரையும் எனும் இச்சாத்திர நூலின் இரண்டாம் பதிப்பினை மணிவிழா நினைவு வெளியீடாகப் பதிப்பித்து 19-3-91 அன்று வெளியிடப் படுகிறது. இந்நூலினைச் சைவ அன்பர்கள் பலரும் பெற்றுப் பயின்று சாத்திர உணர்வு பெறுதலே ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கட்குச் செய்யும் கைமாறாகும்.

இப்பதிப்பில், சிவஞான முனிவரின் சிற்றுரையை விளங்கிக் கொள்வதற்கு ஏதுவாக அவ்வவ் இடங்களில் முதற்பதிப்பில் கொடுக்கப்பட்டுள்ள பேராசிரியர், டாக்டர் கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., பிஎச். டி., அவர்களின் நுண்பொருள் விளக்கமும், ஆராய்ச்சி முன்னுரையும் அப்படியே அச்சிடப் பெற்றுள்ளன.

இந்நூல் அச்சிடுங்கால் பிழைதிருத்தம் முதலாயின செய்து உதவிய டாக்டர் சி. மனோகரன், எம். ஏ., எம். ஃபில்., பிஎச். டி. ச. திருஞானசம்பந்தம், எம்.ஏ., எம்.ஃபில், ஆகிய எஸ். கே. எஸ். எஸ். கலைக்கல்லூரி விரிவுரையாளர்களுக்கும் பனசை எம். சுவாமிநாதன், எம்.ஏ., எம்.ஃபில்., புலவர் பொன். முருகையன், புலவர் அர. சிவப்பிரகாசம் ஆகியவர்களுக்கும் செந்திலாண்டவன் திருவருள் மல்குவதாகுக.

நூல் பதிப்பிடும் பணியில் அடியவனை ஈடுபடுத்தி யருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் வான் கருணையைப் பெரிதும் போற்றி வணங்கி அவர்களின் திருவடிக் கமலங்கட்கு மனமொழி மெய்களால் ஆகிய பணிவான வணக்கங்களைச் செலுத்திக் கொள்கின்றேன்.

இங்ஙனம்

ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்,
19—3—91

ஸ்ரீமத் குமாரசுவாமித் தம்பிரான்
காறுபாறு.

# ஆராய்ச்சி முன்னுரை

## 1. தோற்றுவாய்

தமிழ் நாட்டில் பண்டைக் காலம் தொட்டே பயின்று வந்த சமயம் சைவ சமயமாகும். அதற்குரிய குறிப்புக்கள் பலவும் பழந்தமிழ் நூல்களில் ஆங்காங்குக் காணப்பெறினும் அவற்றை முழுமையாகவும் முறையாகவும் வகுத்துத்தந்த பெருமை சிவஞான போதத்திற்கே உரியதாகும். வேதங்களினும் ஆகமங்களினும் அறிதற்கறிதாய் அமைந்துள்ள பல பொருணுண்மைகள் இந்நூற்கண் மிகத்தெளிவாகவும் சுருக்கமாகவும் விளக்கப்பெற்றுள்ளன. ஞானமிர்தம் திருஉந்தியார் முதலிய நூல்கள் பல இதற்கு முன்னிருப்பினும், இதனைத் தழுவி எழுந்த சிவஞானசித்தியார், திருவருட்பயன் முதலிய நூல்கள் பல பின்னிருப்பினும் அவற்றிற்கெல்லாம் தலைமையாக நின்றிலங்குவது இந்நூலேயாம்.

## 2. நூல் அமைப்பு

இந்நூல் பன்னிரண்டு நூற்பாக்களை உடையது. அந்நூற்பாக்கள் பன்னிரண்டும் நாற்பது வரிகளை உடையன. நூற்பாக்களின் கருத்துக்களைத் தக்க ஏதுக்கள் கொண்டு விரித்துரைக்கும் அதிகரணங்கள் 39 உள்ளன. இவற்றை விளக்க எடுத்துக்காட்டாக அமைந்த வெண்பாக்கள் 81 உள்ளன. இவையன்றிப் பொல்லாப்பிள்ளையார் வணக்கமும் அவையடக்கமும் இந்நூல் முகப்பில்நின்று அணி செய்கின்றன. இந்நூல் பொது, சிறப்பு என இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முன்னைய ஆறு நூற்பாக்களும் பொதுவியல்பு என்றும் பின்னைய ஆறு நூற்பாக்களும் சிறப்பியல்பு என்றும் கூறப்படும். பொதுவியல்பு பிரமாணவியல், இலக்கணவியல் என இரு பிரிவுகளை உடையது. சிறப்பியல்பு சாதனவியல், பயனியல் என இரு பிரிவுகளை உடையது. ஒவ்வொருஇயலும் மும்மூன்று நூற்பாக்கள் கொண்டவை.

## 3. முதல் நூலே

சிவஞானபோதம் தனித்தமிழ் முதல்நூலேயாம். இதனை ஆசிரியர் சுந்தரம்பிள்ளை, மறைமலையடிகளார், கா.சுப்பிரமணிய பிள்ளை முதலிய பேரறிஞர்கள் நன்கு ஆய்ந்து தெரிவித்துள்ளனர். மேற்கண்ட அறிஞர் பெருமக்கள்தம் கருத்துக்களை உளங்கொண்டு திரு.ம. பாலசுப்பிரமணியமுதலியார் அவர்கள்

120 காரணங்கள் காட்டிச் சிவஞானபோதம் தனித்தமிழ் முதல் நூலே என நிறுவியுள்ளார். அவற்றுள் சிலவற்றை ஈண்டுக்குறித்தல் தகும்

1) மெய்கண்ட நூல்கள் பதினன்கையும் அருளிய அருளாளர்கள் எண்மராவர். இவர்களுள் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனரின் மாணக்கராவர், அருணந்திசிவம் திருவதிகை மனவாசகங்கடந்தார் ஆகிய இருவரும் மெய்கண்டாரின் மாணக்கராவர். இவர்களனைவரும் நமக்குக் குருவாக விளங்கும் மேன்மையுடையராயினும் இவர்கள் தம்தம் குருமூர்த்திகளையும் அவர்களருளிய நூல்களே தமக்கு முன் நூல்களாயினமையும் தவருது குறிப்பிடுகின்றனர். அவர்களுள் ஒருவராய மெய்கண்டாரும் தம் நூலுக்கு முதல் நூல் ஒன்று இருப்பின் தவருது குறிப்பர். அவ்வாறு குறியாமையின் இந்நூல் முதல்நூலேயாம்.

(2)சிவஞானபோதத்திதகு முதல் நூல் உண்டெனக் குறிப்போர் அது இரௌரவ ஆகமத்தில் பாசவிமோசனப் படலத்தில் உள்ள பன்னிரண்டு சூத்திரங்கள் என்பர். இது வாய்மையாயின் மெய்கண்டார் அதனைத் தலைக்கொண்டு போற்றி இருப்பர் அவ்வாறு அவர் குறியாமையேயன்றிச் சிறந்த வடமொழிப் பேராசிரியர்களும் சிவஞானபோதத்திற்கு முன்னூல் எனக் கூறப்படும் பன்னிரு சூத்திரங்களுள் ஒன்றேனும் குறிப்பிட்டிலர். சத்தியோ சோதி சிவாசாரியார் தத்துவ சங்கிரகம் என்ற நூலை இயற்றியவர் ஆவர்; திரிலோசன சிவாசாரியார், சிந்தாந்த சாராவளி என்ற நூலை எழுதியவர் ஆவர்; சோதிசிவாசாரியார் இரௌரவ ஆகமத்திற்கு உரை எழுதியவர். அகோரசிவாசாரியார் இரௌரவ ஆகமப் பகுதிகள் பலவற்றையும் மேற்கோள் காட்டும் இயல்பினர். நீலகண்டசிவாசாரியார் ஆதி சங்கராசாரியார் முதலியவர்கள் ஆகமங்கள் பலவற்றிற்கும் பேருரை எழுதியவர்களாவர். இவர்களுள் ஒருவரேனும் அப்பன்னிரண்டு சூத்திரங்களுள் ஒன்றேனும் குறித்திலர்.

3) இனிச் சிவஞானபோதத்தையும், அதற்கு முன்னூலென குறிக்கப் பெறும் அப்பன்னிரண்டு சூத்திரங்களையும் ஒப்பிட்டுக் காணினும் அப்பன்னிருநூற்பாக்களும் முதல்நூலெனக் குறித்தற்கு ஏலாதனவாயுள்ளன. அவ்வாறு ஒப்பிட்டுக்கண்டவகையில் உளவாகும் மாறுபாடுகள் வருமாறு:

அ. இரௌரவ ஆகமத்தின் முதல்சூத்திரம் பெண், ஆண் அலி, எனத்தொடங்குகிறது. சிவஞானபோத முதல் நூற்பா, அவன் அவள் அது எனத்தொடங்குகிறது. ஆகமநூற்பாவில் காரியமாகக் காணப்படுதலின் என்றுள்ளது, சிவஞானபோதத்தில் மூவினைமையின் என்றுள்ளது. சிவஞானபோதத்தில் காணப்படும் மலத்துளதாம் என்றதொடர்க்கு ஏற்றதொருதொடர் அவ் ஆகம நூற்பாவில் இல்லை.

ஆ. இரௌரவ ஆகமத்திலுள்ள இரண்டாவது நூற்பாவில் இறைவன் வியாப்தியாய் இருத்தல் கூறப்படுகிறது. சைவசித்தாந்தம் கடவுள் வியாபமாகவும் உயிர்கள் வியாப்பியமாகவும் மலங்கள் வியாப்தியாகவும் கூறும். இவ்விரிவு ஆகமநூற்பாவில் இல்லை.

இ. சிவஞானபோத 3-வது நூற்பாவில் 'ஐம்புலனறிதலின்' என்றதொடர் உளது. இதற்கேற்ற தொடர் அவ்ஆகமசூத்திரத்துள் இல்லை. அன்றியும் இந்நூற்பாவில் "மாயா இயந்திரதனுவினுள் ஆன்மா" எனக்குறிக்கப்பட்டிருப்ப, வடமொழிச் சூத்திரத்துள் தனுவினுள் ஆன்மா உளது என்ற அளவிலேயே உள்ளது.

ஈ. இரௌரவ ஆகமத்திலுள்ள நான்காவது சூத்திரத்தில் மலத்துணராது என்ற அளவே உளது, சிவஞானபோதத்திலோ 'சகசமலத்துணராது' எனக் குறிப்பாக ஆணவமலம் குறிக்கப் பட்டுள்ளது.

உ. சிவஞானபோத ஐந்தாவது நூற்பாவில் பொறிகள் உயிரை அறிவதில்லை; உயிர்தன்னையும் தலைவனையும் அறிவதில்லை என்ற கருத்துக்கள் உள்ளன. வடமொழிச் சூத்திரத்துள் அவை இல்லை.

ஊ. அசித்து சித்தை அறியாமைக்கும் சித்து அசித்தை அறியாமைக்கும் வடமொழிச் சூத்திரம் வெவ்வேறு காரணம் கூறவில்லை. ஆனல் தமிழ்ச் சிவஞானபோதத்தில்ஏழாவது நூற்பா அதனை விளங்கக் கூறுகிறது.

எ. உயிர்கள் முன்செய்தவத்தால் இறைவன் குருவாக வருவன் எனச் சிவஞானபோதந்து எட்டாவது நூற்பா தெளிவாகக் கூறுகிறது. இக்கருத்து வடமொழிச் சூத்திரத்துள் இல்லை.

ஏ. சிவஞானபோதத்து ஒன்பதாம் நூற்பாவில் 'ஊனக்கண் பாசம் உணராப்பதி' என்றும், 'நாடுக' என்றும். 'ஊராத்துனைத் தேர்த்து' என்றும், 'ஒருவுக' என்றும், தண்ணிழல்' என்றும்

உள்ளன. இவற்றுள் துனே என்ற விரைவு குறித்த சொற்கும், நிழல் என்பதற்கு முன்னுள்ள தண்மை என்ற சொற்கும் ஏற்ப வடமொழிச் சூத்திரத்துச் சொற்களில்லை. எஞ்சிய பகுதிக்கு ஏற்ற சொற்களுமில்லை.

ஐ. சிவஞானபோதப் பத்தாவது நூற்பாவில் உள்ள 'ஏகனுகி நிற்க', 'இறைபணி நிற்க' என்ற ஏவல்களும், பணி என்ற கருத்தும் வடமொழிச் சூத்திரத்து இல்லை.

ஒ. சிவஞானபோதப் பதினென்ருவது நூற்பாவில் இறைவன் புரியும் காணும் உபகாரம் வடமொழிச் சூத்திரத்துள் இல்லை. அன்றியும் இந்நூற்பாவிலுள்ள. 'காட்டும் உளம்போல்', 'அரன்கழல் செலுமே' என்ற தொடர்களுக்கேற்ற தொடர்களும் வடமொழிச் சூத்திரத்துள் இல்லை.

ஓ. சிவஞானபோதப் பன்னிரண்டாவது நூற்பாவில் உள்ள "செம்மலர் நோன்ருள் சேரல்லொட்ட அம்மலம் கழீஇய', என்ற பகுதி வடமொழிச் சூத்திரத்துள் இல்லை. அன்றியும் "மால் அற நேயம் மலிந்தவர்" என்ற தொடர்க்குரிய கருத்துக்களும், 'அரன்' என வரும் சொல்லும் வடமொழிச் சூத்திரத்து இல்லை. அன்றியும் இப்பன்னிரண்டாவது நூற்பாவில் அறிவு, இச்சைத் தொழில்கள், செயல்படும் இடங்கள் இவையென விளங்கக் குறிக்கப்பட்டுள்ளன. இவை வடமொழிச் சூத்திரத்துள் இல்லை.

வடமொழியின்கண் உள்ள இரௌரவ ஆகமத்தின்வழி இந் நூல் உருப்பெற்று இருப்பின் இனைய பல நெகிழ்வுகள் உளவாகா என்பது ஒருதலை. எனவே தமிழில் சிவஞானபோதம் எழுந்தபின் அதன் திட்பமும் நுட்பமும் கண்ட வடமொழி அறிஞர் ஒருவர் வடமொழியின் வழியது எனக் கூறற்கேற்பப் பன்னிரண்டு சூத்திரங்களை எழுதி இரௌரவ ஆகமத்தோடு இணைத்துவிட்டனர் என்பதே உண்மையாகின்றது.

**தமிழ் வழியதாம் தகைமை:-** சிவஞானபோதம வடநூல் வழிய தன்று என்பது மட்டுமன்று, முழுமையாகத் தமிழ்நூல் வழிய தென்பதும் அறியத்தக்கது. தொல்காப்பியம், சங்கப்பனுவல்கள், திருக்குறள் ஆகியவற்றைப் பொதுநூலாகவும், திருமுறைகளைச் சிறப்பு நூலாகவும் கொண்டு எழுந்தநூல் சிவஞானபோதமாகும். இதற்கு ஏற்பதாய சில காரணங்களை ஈண்டுக் குறித்தல் தகும்.

1. தொல்காப்பியத்திலும் இறையனுர் களவியலே ஒத்த சில இலக்கண நூல்களிலுமே 'என்மனுர்' என்ற தொடர் காணப்படுகிறது. இத்தொடர் சிவஞானபோதம் முதல் நூற்பாவிலேயே வந்துள்ளமை அறியத்தக்கதாம்.

2. சிவஞானபோத ஆருவது நூற்பாவில்'இரண்டுவகையின் இசைக்கு மன்உலகே' என்றுள்ளது. இத்தொடர் தொல்காப்பியத்தில் வரும் 'ஆயிருதிணையின் இசைக்குமன் சொல்லே' எனவரும் தொடரோடு ஒத்து உள்ளமை அறியத்தக்கது.

3. 'காய்கடவுள்' (5) எனப்பரிபாடலும், ''கொலேவன்சூடிய குழவித்திங்கள்போல'(103)எனக்கலித்தொகையும்குறிக்கின்றன. இவற்ருல் சிவபெருமானே அழித்தற்கடவுள் எனச்சங்கப் புலவர்கள் கருதினர் எனத்தெரிகிறது. இதனேடு சிவபெருமானே சங்கார காரணன் எனக்குறிக்கும் சிவஞானபோதக் கருத்து இயைபு படுகிறது.

4. இவ்வாறு அழித்தற்கடவுளாக விளங்கும் சிவபெருமானே அனேத்தையும் படைத்தற்கடவுளாகவும் விளங்குகின்ருன் எனப் பண்டைத்தமிழர் கருதினர்.

நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்பொடு ஐந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் [453-55]

எனவரும் மதுரைக்காஞ்சியால் இவ்வுண்மை அறியப்படும். இதனுடன் அந்தத்தைச் செய்கின்றவனே ஆதியாவன் எனச் சிவஞானபோதம் கூறும் கருத்து பெரிதும் இயைபுடையதாகின்றது.

5. இவ்வாறு உலகைப் படைத்த சிவபெருமான் பின் தம்பால் அனேத்தையும் ஒடுக்கிக் கொள்ளும் வல்லமையும் தலேமைச் சிறப்பும் உடையன் எனச்சைவசித்தாந்தம் கூறுகிறது. சிவஞானமுனிவர் சிவபெருமானே 'ஒடுங்கி' என்ற சொல்லாலும் குறிப்பர்.'தொல்லூழி தடுமாறித் தொகல் வேண்டும் பருவத்தால் பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான் போல்' எனவரும் கலித்தொகை இக்கருத்தொடு இயைபு படுகின்றமை அறியலாம்.

6. சிவபெருமான் ஒருவனே ஈறிலாதவன், நஞ்சுண்டும் சவாதிருந்தவன் எனச் சைவசித்தாந்தம் பேசுகிறது.

நீலமணி மிடற்று ஒருவன்போல
மன்னுக பெரும நீயே [புறம்-91]
பிறவா யாக்கைப் பெரியோன் [சிலம்பு]
காரிஉண்டிக் கடவுள் [மலைபடு-83]

எனவரும் பண்டைத் தமிழ் நூல்களொடு இக்கருத்துப் பெரிதும் இயைபுபடுகின்றது.

7. சிவபெருமான் ஒருவனே முழுமுதற்கடவுள் எனச் சைவ சித்தாந்தம் கூறுகிறது.

நன்றாய்ந்த நீணிமிர்சடை முதுமுதல்வன் (புறம்-169)
நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலா (சிலம்பு)
நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக

(மதுரைக்காஞ்சி-453-455)

எனவரும் பாடற்குறிப்புக்களும், சேரன் செங்குட்டுவன் வட நாட்டுப் படையெழுச்சிக்குச் செல்லுங்கால் முதற்கண் சிவ பெருமானது சேடத்தைத் தலையில் ஏற்றமையின், பின்வந்த திருமால் சேடத்தைத் தோளில் ஏற்றனன் என்ற வரலாற்றுக் குறிப்பும் இதனொடு ஒருங்கு காண்டற்கு உரியவாய் உள்ளன.

8. சிவபக்தரோடு இணங்குக அல்லாதாரோடு இணங்கற்க. எனச் சிவஞானபோதம் கூறும். சங்கப்பனுவல்களில் சிவபத்தர் எனக் குறிக்கவில்லையாயினும் இறைக்கொள்கையுடன் ஏனைய பல குணநலன்களும் உடையாரோடு இணங்குக; அல்லாதாரோடு இணங்கற்க எனக்கூறும் குறிப்புக்கள் பல உள்ளன.

நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லையென்போர்க்கு இனன் ஆகிலியர் [புறம்-29]
அருளும் அன்பும் நீங்கி நீங்கா
நிரயம் கொள்பவரொடு ஒன்றாது [புறம்-5]

பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுது சேண்விளங்கி
நடுக்கின்றி நிலீஇயரோ [புறம்-2]

அறவோ ரவைக்களம் அகலாது அணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்தும் பெயர்மின் [சிலம்பு]

எனவரும் பண்டைப் பனுவல் குறிப்புக்கள் நினைவு கூரத்தக்கன. அன்றியும் திருக்குறளில் பெரியாரைப் பிழையாமை, சிற்றினம் சேராமை எனவரும் அதிகாரங்களும் இவ்வுண்மையை விளக்குவனவாம்.

9. திருவைந்தெழுத்தைத் தன் செவிகேட்பக் கூறுதலினும் அறிவால் கணித்தலே தக்கது என்னும் சிவஞானபோதம் தொல்காப்பியத்தில் மந்திரப்பொருள்பற்றிய குறிப்புக்கள் பல உள்ளன இவையன்றி 'முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார் போல்' எனக் கலித்தொகையில் ஒரு குறிப்பும் உள்ளது. எனவே முதுமொழியைச் சொல்லுதலினும் நினைதல் தக்கதெனும் கருத்து பண்டையபனுவல் வழியது என்பது புலனாகிறது. இது மேற்குறித்த சிவஞானபோதக் கருத்தோடு இயைபுபடவுள்ளது.

10. இறை உயிர் தளை ஆகிய முப்பொருள்களும் நிலையானவை என்பது சைவசித்தாந்தத்தின் முடிந்த முடிபாகும். இம் முப்பொருள் உண்மையைப் பண்டைத் தமிழ்ப் பனுவல்கள் சைவசித்தாந்தம் கூறுவது போலத் தொகுத்துக் கூறவில்லை எனினும் அவற்றினியல்பை ஆங்காங்கு விளக்கிக் கூறியுள்ளன. பண்டைப் பனுவல்களில் இற்றைக்குக் காணும் நிலையில் தொல்காப்பியமே முதல் நூலாக விளங்குகின்றது. அப்பெரு நூலில் 'முனைவன்', 'தெய்வம்', 'கடவுள்' முதலிய பெயர்களால் இறை உண்மை கூறப்படுகிறது. 'காலம் உலகம்' எனத் தொடங்கும் நூற்பாவிலும், ''கணையும் வேலும் துணையுற மொய்த்தலின்'' எனத் தொடங்கும் நூற்பாவிலும் உயிர் உண்மை குறிக்கப்படுகிறது. ''வினையின் நீங்கி விளங்கிய அறிவன்'' இறைவன்எனவே உயிர் அதற்கு மறுதலையாய் வினையின் வயப்பட்டதென உய்த்துணரக் கிடக்கிறது 'காலம் உலகம்' எனத் தொடங்கும் நூற்பாவில் வினை என்பது தனித்தும் கூறப்படுகின்றது. ''ஒன்றே வேறே என்றிருபால்வயின் ஒன்றி உயர்ந்த பாலதாணையில் ஒத்தகிழவனும் கிழத்தியும் காண்ப'' என்பதால் உயிர் வினை வயத்ததாய்ச் செயற்படும் உண்மை பெறப்படுகிறது. இவ்வாறு பரந்து காணப்பெறும் முப்பொருளுண்மைகள் சைவ சித்தாந்தத்தில் தொகுத்து விளக்கப்பெற்றுள்ளன.

11. இனிச்சங்கப் பனுவல்களிலும் ஆங்காங்கு இம்முப்பொருள் பற்றிய கருத்துக்கள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. இறையுண்மை முற்காட்டிய காட்டுக்களால் பெறப்படும்.

நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது
திறவோர்க் காட்சியில் தெளிந்தனம் [புறம்-192]
இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆயலன் [புறம்-134]
தொல்வினைப் பயன் துய்ப்பத்
துறக்கம் வேட்டு எழுந்தான் போல்[கலி]
ஈண்டுச்செய் நல்வினை ஆண்டுச்சென்று உணீஇயர்
உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் [புறம்-124]
அறம் பெரிது ஆற்றி அதன்பயன் கொண்மார்
சிறந்தோர் உலகம் படருநர்போல [பரிபாடல்-19]
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே [புறம்-235]
வீயாது உடம்பொடுநின்றஉயிரும் இல்லை[புறம்-363]
யாக்கை இன்னுயிர் கழிவதாயினும் [அகம்-52]

என்பனவாகியகூற்றுக்களால்வினையுண்மையும் உயிருண்மையும் விளக்கப்பட்டிருத்தல் அறியலாம்.

12. இனித் திருக்குறளோடு சிவஞானபோதம் பெரிதும் இயைபு பட்டுள்ளமையைக் காணலாம்.

அ. அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

என்னும் திருக்குறள். இதனொடு

அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றேல்
இக்கிரமத்து என்னும் இருக்கு

எனவரும் சிவஞானபோதக் கருத்துப் பெரிதும் இயைபுபடுகின்றது.

ஆ. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது

என்னும் திருக்குறள். இதனொடு

—அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு

எனவரும் சிவஞானபோதக் கருத்துப் பெரிதும் இயைபுபடுகின்றது.

(இ) கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.

என்னும் திருக்குறள்

கண்டுகேட்டு உண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்

எனவரும் சிவஞானபோதப் பகுதி மேற்காணும் திருக்குறளை முகந்து நிற்கின்றது.

(ஈ) ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல

என்னும் திருக்குறள்.

நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரில்அவை இன்றுமா றெப்பு

எனவரும் சிவஞானபோதக் கருத்து இதனுடன் பெரிதும் இயைபு படுகின்றது.

(உ) அன்பினை வெளிப்படுத்தற்குரிய கருவியாக அன்புடையார்கண் தோன்றுகின்ற கண்ணீர் அமையும் என்பர் திருவள்ளுவர்.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

என்பது அவர் வாக்கு.

மகவிடத்துண்டாய அன்பால் முன்பில்லாத பாலும் கண்ணீரும் தோன்றும் என்பர் மெய்கண்டார்.

இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால்

என்னும் சிவஞானபோதம். இவ்வாற்றான் இவ்விருவர் கருத்தும் இயைந்து நிற்றல் அறியலாம்.

(ஊ) யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்

என்னும் திருக்குறள்.

ஏகனுகி நிற்கவே யான் எனதென்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையுமாதலின் என்னும் சிவஞானபோதம். இவ்விரு கருத்துக்களும் பெரிதும் இயைபுபட்டு நிற்கின்றன.

(எ) நீரின்கண் உள்ளபாசி தொடுவழி நீங்கி விடுவழிப் பரக்கும் தகையது. இதனை 'மற்றது நீர்ச்செருவீழ்ந்த பாசியானும் எனத் தொல்காப்பியமும்,

ஊருண்கேணி உண்துறை தொக்க
பாசியற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே

என்னும் குறுந்தொகை (399) யும் இவ்வுண்மையை விளக்கும். இம்மரபுவழி வந்த உவமையைப் பயன்படுத்தி மலத்தின் இயல்பை விளக்குகின்ருர் ஆசிரியர். மலம் உயிர் முதல்வனை அணைந்தவழி நீங்கி அவனில் பிரிந்தவழிக் கூடும் தகையது.

ஐம்பொறியின் அல்லைஎனும் அந்த தரசிவனை
ஐம்பொறியை விட்டங்கு அணைசகலன்-ஐம்பொறியின்
நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்
நீங்கானை நீங்கும் நினைந்து.

என்னும் சிவஞானபோதம்.

விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல்கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு
புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக் கொள்வற்றே பசப்பு

எனவரும் திருக்குறட்பாக்கள் இவற்ரேடு எண்ணி நினைதற் குரியன.

(ஏ) சார்தற்குரிய பொருளாய இறைவனைச்சார்ந்து, தன்னைச் சார்ந்திருக்கும் இருவினைகளையும் கெடுக்கவேண்டும் என்னும் திருக்குறள். ''சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்'' எனவரும் திருக்குறளால் இவ்வுண்மை அறியப்படும்.

ஏகனுகி இறைபணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினையின்றே

எனவரும் சிவஞான போதப்பகுதி இதனுடன் பெரிதும் இயைபு பட்டு விளங்குகின்றது.

(ஐ) எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு.

என்னும் திருக்குறள்.

தன்னை யறிவித்துத் தான்தானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழை

எனவரும் சிவஞானபோதப் பகுதியோடு இது பெரிதும் இயை புடையதாய் உள்ளது.

(ஒ) இவற்றிற்கெல்லாம் மேலாக நினைவு கூரத்தகும் கருத் தொன்று ஈண்டு எண்ணற்குரிய தாகும். திருக்குறளில் மெய்யு ணர்தற்குப் பின் அவாவறுத்தல் வைக்கப்பட்டுள்ளது. மெய்யு ணர்தல் குருவருள்வழி வாய்ப்பதாகும். இதனைக் 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்' என்னும் குறளால் அறியலாம். குரு வருள்வழி மெய்யுணர்ந்த பின்னும் முன்பழக்க வாசனையால் உயிர் உலகியற் பொருள்களை நினைந்து அவாவுறும். அவ் அவா வழிப்படாது மெய்யுணர்ந்த வாற்றான் இறைவழிப்பட்டு நிற்பதே உயிர்க்கு உய்தி தருவதாகும் என்பதாலேயே ஆசிரியர் திருவள்ளுவனார் இவ்வாறாக இவ்வதிகார வைப்பு முறையை வைத் தார் என்பது புலனாகின்றது. இதனுடன், சிவஞான போதத்தில் எட்டாம் நூற்பாவை அடுத்து ஒன்பதாம் நூற்பாவை வைத்திருக் கும் அமைப்பு முறை ஆழநினைந்து அறிதற்குரியதாகும்.

13. இனித் திருமுறைக் கருத்தொடு சிவஞானபோதம் இயைபு பட்டு நிற்கும் அமைப்பைக் காணலாம். பன்னிருதிருமுறைகளின் கருத்தே சிவஞானபோதத்தில் பன்னிரு நூற்பாக்களாய் விளங்கு கின்றன என்பது அறிஞர்கள் பலரும் ஆய்ந்து கூறிவரும் உண்மை

(அ) அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறியாய் அறிகின்றான் தானே-அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்

எனவரும் காரைக்காலம்மையார் வாக்கும்.

ஈருய்முதல் ஒன்ருய்இரு பெண் ஆண் குணம் மூன்ருய்
மாருமறை நான்காய் வருபூதம்அவை ஐந்தாய்
ஆருர்சுவை ஏழோசையோ டெட்டுத்திசை தானுய்
வேருய்உடன் ஆனுன்இடம் வீழிம்மிழ லேயே.

எனவரும் திருஞானசம்பந்தர் வாக்கும் இறைவன் உயிரிடத்து ஒன்ருயும் வேருயும் உடனுயும் நின்று உதவும் பாங்கை விளக்கு வனவாம். இக்கருத்தையே

அவையே தானேயாய் இருவினையின்
போக்கு வரவுபுரிய ஆணையின்
நீக்கமின்றி நிற்கு மன்றே

எனவரும் சிவஞானபோத இரண்டாவது நூற்பா விளக்குகிறது.

(ஆ) இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

எனவரும் திருஞானசம்பந்தர் வாக்கு மெய்கண்டார் கூறும் அத்து வித விளக்கத்திற்கு அரணுக உள்ளது.

(இ) நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடி யேசறவும் தெரியாத தோர்
கோடி காவனைக் கூருத நாளெல்லாம்
பாடி காவலில் பட்டுக் கழியுமே.

எனவரும் அப்பரடிகள் திருவாக்கு, 'ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவல் இட்டாங்கு அவை அவனது ஆக்கினையாகலான்' எனவரும் சிவஞானபோதப் பொருண்மைக்கு இடனுக உள்ளது

(ஈ) மாணி பால்கறந்து ஆட்டி வழிபட
நீணுல கெலாம் ஆளக் கொடுத்தஎன்
ஆணியைச் செம்பொன் அம்பலத்துள் நின்ற
தாணுவைத் தமியேன் மறந்து உய்வனே.

எனவரும் அப்பரடிகளின் திருவாக்கு இறைவனை ஆணி எனக் குறிக்கின்றது.

இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்-பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவன்தான் மெய்ப்பொருள்
ஆயஅதனல் உணரும் அச்சு.

என வரும் சிவஞான போதத்தில் இறைவனை அச்சு எனக் கூறு தற்கு இவ்வாக்கு அடித்தளமாகிறது. 'உருள் பெருந்தேர்க்கு அச்சாணி அன்னருடைத்து,' 'உழுவார் உலகத்தார்க்கு ஆணி' என வரும் திருக்குறள் பகுதிகளும் ஈண்டு நினைவு கூர்தற்குரியன.

(உ) சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்கு வான்நலன்
குலமில ராகிலும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே

என வரும் அப்பரடிகளின் திருவாக்கால் இறைவன் கோட்டமிலன் ஆதலை அறியலாம். இது

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்தும் சலம்இலனுய்ச்-சார்ந்தடியார்
தான்தானுய்ச் செய்துபிறர் தங்கள் வினை தான் கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.

என வரும் சிவஞான போதப்பாடற்கு அடித்தளமாகிறது.

(ஊ) வெள்ளநீர் சடையனுர் தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்ருர்க் குறங்கு நான் புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீ ரென்னக் கலந்துதா னேக்கி நக்கு
வெள்ளரோ மென்று நின்ருர் விளங்கிளம் பிறையனுரே.

எனவரும் திருவாக்கால் அப்பரடிகள் இறைவனைக் கள்வன் எனவும், குறித்தருளுதல் விளங்குகிறது.

'ஒளிக்கும் சோரனைக் கண்டனம்' எனவரும் மணிவாசகர் வாக்கும் "என்னுள்ளம் கவர் கள்வன்" என்ற ஞானசம்பந்தர் திருவாக்கும் "கள்ளரோடு இல்லமுடையார் கலந்திடில்" என்ற திருவுந்தியார்வாக்கும் ஈண்டு நினைவு கொளற் குரியனவாம். இவ்வாறே,

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா—காட்டிய
உள்ளந்தனைக்காணா உள்ளத்தைக் கண்ணுய
கள்வன்தான் உள்ளத்தில் காண்.

எனச் சிவஞானபோதம் குறிக்கின்றது.

(எ) உறுகயி றூசல் போல வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல்போல வந்து வந்துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல்போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்
தறுகயி றூச லானே னதிகை வீரட்டனீரே

என்பது அப்பர் திருவாக்காகும்.

சிவஞானபோதத்தில் 'ஊசல் கயிறற்றால் தாய்தரையே ஆம் துணையாம்'' என உவமைகாட்டி உயிரது திறத்தை விளக்கி இருப்பது இதனைத் தழுவியதாகும்.

(ஏ) பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை
பெண்ணொடாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணில் உள்மணி கச்சி யேகம்பனே.

என அப்பரடிகளும்.

பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினில் சுவையொப்பாய்
எனச் சுந்தரரும் அருளுவர்.

பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும் போல் எங்குமாம்

எனவரும் சிவஞானபோதத்திற்கு இத்திருவாக்குகள் அடித்தளமாய் அமைகின்றன.

(ஐ) கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக்
கழித்துப் போக்கித்
தெள்ளியேன் ஆகிநின்று தேடினேன் நாடிக்
கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந்தறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும்விலாவிறச்
சிரித்திட்டேனே.

எனவரும் அப்பரடிகளின் திருவாக்கால் இறைவன் உயிர் நினைவதை எல்லாம் உடனிருந்து அறிபவன் என்னும் உண்மை பெறப்படுகிறது. இவ்வாறே சிவஞான போதத்தும்

ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்—ஏகமாய்
உள்ளத்தின் கண்ணுனன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தால் காணுனே உற்று.

என விளக்கப் பெறுகிறது.

இவ்வாறு நின்றருளும் இறைவன் உயிர்க்கு உறுதிகாட்டி உய்வித்தருளுவன் என்றும் அப்பரடிகள் கூறுவது கருதத்தக்கது.

பப்போதிப் பவணனைப் பறித்ததொருதலையோடே திரிதர்வேனை
ஒப்போட ஓதுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்தங் குறுதிகாட்டி
அப்போதைக் கப்போதும் அடியவர்கட் காரமுதாம் ஆரூரை
எப்போதும் நினையாதே இருட்டறையில் மலடுகறந் தெய்த்தவாறே.

என்பது அவர் திருவாக்காகும்.

(ஒ) இறைவன் இவ்வுலகைப் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் எல்லாம் நாம் செய்யும் செயல் போலக் கருவிகளைக் கொண்டன்று; நினைவு மாத்திரையினலேயாம். இதனை அப்பரடிகள்

நோக்காதே எவ்வளவும் நோக்கினனை
நுணுகாதே யாதொன்றும் நுணுகினனை
ஆக்காதே யாதொன்றும் ஆக்கினனை
அணுகாதார் அவர்தம்மை அணுகா தானைத்
தேக்காதே தெண்கடனஞ் சுண்டான் றன்னைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோகனை
நீக்காதே பேரொளிசேர் நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே.

என்னும் திருப்பாடலால் விளக்குவர். மணிவாசகரும் கேளாதே எல்லாம் கேட்டான் எனக் கூறுவர். இவை

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தின்
தாக்காது நின்றுளத்தின் கண்டிறைவன்—ஆக்காதே
கண்ட நனவுணர்வில் கண்ட கனவுணரக்
கண்டவனின் இற்றின்றுங் கட்டு.

எனவரும் சிவஞானபோதக் கருத்திற்கு அடித்தளமாகின்றன.

(ஓ) இறைவன் உயிர்க்குக் குருவாய் வந்து அருளுவன் என அப்பரடிகள் அருளுவர்.

ஒருவராய் இருமூவரும் ஆயவன்
குருவதாய குழகன் உறைவிடம்
பருவரால் குதிகொள்ளும் பழனம்சூழ்
கருவதாம் கடம்பூர் கரக்கோயிலே.

என்பது அவர் வாக்காகும். மணிவாசகப் பெருந்தகையார்க்கு இறைவன் குருவாய் நின்று அருளியமையும் அவ்வருளினைப் பெற்ற அடிகள் பல்லாற்றானும் இறைவனிடத்து நன்றியறிதலுடன் போற்றியமையும் திருவாசகத்தில் பரக்கக் காணலாம்.

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமஎனப் பெற்றேன்
தேனாய் இன்அமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்து எனதுள்ளம் புகுந்தாண்டான் அடியேற்கு
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே'

வினையிலே கிடந்தேனைப் புகுந்துநின்று போதுநான்
வினைக்கேடன் என்பாய்போல
இனையன்நான் என்றுன்னை அறிவித்து ஆட்கொண்டு
எம்பிரான் ஆனாய்க்கு'
புவனியில் சேவடி தீண்டினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டருளினன் காண்க
சிவன்என யானும் தேறினன் காண்க

எனவருவன குறிப்பிடத்தக்கன. இக்கருத்துக்கள்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

எனவரும் சிவஞானபோதத்திற்குக் கருவியாய் அமைகின்றன.

(ஔ) இறைவன் உயிர்க்குக் கண்டும் காட்டியும் உதவும் கருணை உடையவன். ஆதலால்தான்,

'தொண்டனேன் நினையுமா நினையே'
'தொண்டனேன் விரும்புமா விரும்பே'
'தொண்டனேன் தொடருமா தொடரே'
'தொண்டனேன் நுகருமா நுகரே.'

என்றெல்லாம் திருவிசைப்பாப் பகுதிகள் செப்புகின்றன. இவை,

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே

எனவரும் சிவஞானபோதக் கருத்திற்கு அடித்தளமாய் அமைந்துள்ளன.

(க) பதி பசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல் பசுபாசம் அனாதி

என்னும் திருமந்திரம். இதுவே

ஈறே முதல்அதனின் ஈறுஅலா ஒன்றுபல
வாறே தொழும்பாகும் அங்கு

நெல்லிற்குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லின் புதிதன்று தொன்மையே–வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலால் பொன்வாள்
அலர்சோகம் செய்கமலத்து ஆம்

வீயாத
வன்னிதனைத்தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம்போல்
தன்னை மலம் அன்றணைதல் தான்

மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்தது

எனவரும் சிவஞான போதப்பகுதிகளுக்கு மூலமாகும்.

(ங) சீவன்முத்தரும் அடியவரின் திருவேடத்தையும் ஆலயத்தையும் வழிபட்டு வாழ்வர் எனப் பன்னிரண்டாவது நூற்பா கூறுகின்றது. திருத்தொண்டர்புராணத்தில் அதன் காப்பியத் தலைவராய ஆளுடைய நம்பிகளும்.

பெருமையால் தம்மைஒப்பார் பேணலால் எம்மைப்பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனமேல் ஒன்றுமில்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார் இவரைநீ அடைவாய் என்று

இறைவனால் அருளப்பெற்று அவ்வடியவர்களைப்போற்றிவாழ்ந்த

பாங்கு அதனுல் அறியப்படுகின்றது. இவ்வாறே அப் புராணத்தில் காணும் ஏனைய அடியவர்களும் ஒருவர் ஒருவரில் கலந்த அன்புடையராய் வழிபட்டு வாழ்ந்து வந்தனர் என்பது அறியப்படுகிறது. இவ்வாற்ருன் பன்னிரண்டாந்திருமுறை சிவஞானபோதப் பன்னிரண்டாம் நூற்பாவுக்கு அடித்தளமாய் விளங்குகிறது.

எனவே மெய்கண்டாருக்குத் திருவருள் வழிவந்த உணர்வு வழி வழியாக வந்து கிடைக்கப் பெற்றமை ஒருமருங்கு இருக்கப் பிறிதொரு மருங்கு நம் தமிழ் மொழியில் அமைந்து விளங்கும் தொல்காப்பியம் சங்ககாலப் பனுவல்கள் முதலாகவுள்ள இலக்கியங்கள் பொதுவாகவும் திருமுறைகள் சிறப்பாகவும் நின்று உதவின என்பது அறியத்தகும்.

## 4. நுவலும் பொருள்

**சிறப்புப் பாயிரம்:** எல்லா நூல்களாலும் எடுத்துக் கூறப்படும் சிறப்பினதாய முதற்கடவுளது திருவருளாலன்றி அறிய இயலாத முப்பொருள் உண்மையை அத்திருவருளால் காணும் பேறு கிட்ட அதன்வழி ஆணவம் நீங்கிய நிலையில் பொறுத்தற்கரிய துன்பத்தைத் தந்து நிற்கும் காணப்பட்ட இவ்வுடலால் காணப் படாத உயிர் இயல்பையும் உயிர்க்கு உயிராக விளங்கி நிற்கும் இறை இயல்பையும் மயக்கம் நீங்க நந்தியம்பெருமான் வழி, வழிவழியாக உணர்த்தப்பட்டு வரும் சிவஞானபோதத்தைப் பெண்ணையாறு சூழும் திருவெண்ணெய் நல்லூரில் சுவேதவனப் பெருமாள் என்னும் இயற்பெயரும், நிலையில் பொருள்களை நிலையில் என்று அறிந்து அதனுல் நிலையுடைய பொருள்இது என உணர்ந்தமையால் மெய்கண்டதேவன் என்னும் சிறப்புப் பெயரும் உடையவனும் பிறவிப் பெரும்பகையைக் கடந்தவனும் தவத்தோர் தனது திருவடிகளைப் புனைந்து கொள்வதற்கு ஏதுவாய தலைமைப் பாட்டினை உடையவனும் ஆவன்.

**மங்கல வாழ்த்து:** அருள் வடிவாகிய கல்லால மரத்தின் நிழலில் எழுந்தருளி யிருந்து நந்தியெம் பெருமானுக்கு மலைவு தீர்த்தருளிய சிவபெருமான் அருள் செய்தற்பொருட்டுக் கருவியால் பிளக்கப் படாத (சுயம்புவாகிய) பொல்லாப் பிள்ளையார் தம் திருவடிமலர்கள் இரண்டையும் கற்றல் கேட்டல் உடைய பெரியோராகிய மெய்யன்பர்கள் தம் திருமுடிக்கண் சூட்டிக் கொள்வர். எனவே யானும் அவ்வாறு சூட்டிக் கொள்வன் என்பதாம்.

**அவையடக்கம்:-** இறைவனுக்கு உடைமைப் பொருளாக விளங்கும் உயிராகிய தம்மியல்பினை உணர்ந்து தம்மை உடையானாகிய தலைவனை உணரும் மெய்யுணர்வு உடையார் எம்மையும் உடைமைப் பொருளாக உடையார் ஆதலின் எமது குற்றங்களை நீக்கிக் குணம்கொண்டு பாராட்டுதலின்றி இகழார் ஆதலின் எம்மால் செய்யப்படும் இந்நூலையும் ஏற்பர். உயிராகிய தம்மையும் உடையானாகிய இறைவனையும் உணராதவர் தம்மில்தாம் கருத்து வேறுபாடு கொண்டு மாறுபட்டிருத்தலின் அவர் எமது நூலையும் இகழவே செய்வார் அவ்விகழ்வுரையை யாம் ஒரு பொருளாகக் கொள்ளோம்.

## 5. நூற்பொருள்

### பிரமாண இயல்

இந்நூல் நான்கு இயலாகப் பிரித்து உணர்த்தப் படுகிறது என முன்னும் கூறப்பட்டது. அவை பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயன் இயல் என்பன.

இறை, தளை, உயிர் ஆகிய முப்பொருள்களும் என்றும் உள்ளனவாம். அவற்றை ஆய்வு வகையான் ஏற்றுக் கொள்ளுமாறு இவ்வியலில் கூறிதலின் இது பிரமாண இயல் எனப்பட்டது. ஒரு பொருளை உறுதிப்படுத்துதற்குக் காண்டால் கருதல் உரை எனும் மூவளவைகள் வேண்டும், இம்மூவகை அளவைகளானும் முப்பொருளுண்மையை ஆசிரியர் இவ்வியற்கண் காட்டுகின்றார். பிரமாணம் – அளவை.

**முதற் நூற்பா :-** அவன் அவள் அது எனப் பகுத்துப் பலவாய் உணரப்படும் இவ்வுலகம் தோன்றுதல் நிலைத்தல் ஒடுங்குதல் எனும் முத்தொழில் உடையது. உலகு அறிவற்றதாகலின் இம்முத்தொழில்களைத் தானே செய்து கொள்ளும் தகுதியுடையதன்று. ஆதலின் அது அவ்வாறு முத்தொழிற்படுதற்கு ஒரு முதல்வன் வேண்டப்படும். அம்முதல்வனால் ஒடுக்கப்பட்ட உலகமே மீளத் தோற்றுவிக்கப்படுதலின் உலகம் உள்பொருளேயாம். ஒடுக்கிய உலகத்தை மீளத் தோற்றுவித்தற்குக் காரணம் உயிர்களிடத்திலுள்ள மலமாசினை அகற்றுதற்காம். எனவே ஒடுக்கியும் தோற்றுவித்தும் தொழிற்படுத்தும் ஒரு ஒப்பற்ற அழித்தற்கடவுளாய சிவபெருமானே உலகிற்கு முதற்கடவுளாவர் என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இந்நூற்பா மூன்று அதிகரணங்களால் விளக்கப்படுகிறது.

**முதல் அதிகரணம் :-** உலகம்கண்ணுல் காண்டற்குரியதாக இருப்பதன்றி அதன் தோற்றத்தையும் அழிவையும் யாரும் கண்டதில்லே. எனவே காட்சி அளவையால் அறிய இயலாத தோற்றமும் ஈறும் உண்டென்றல் எங்ஙனம்? ஆதலின் உலகம் அழியும் பொருளே என்பர் உலகாயதரும் மீமாஞ்சகரும் அவரை மறுக்கவே இவ்வதிகரணம் எழுந்ததாம்.

தோற்றமும் ஈறும் காணப்படும் இருப்பு ஒன்றினுலேயே அறியப்படும். எவ்வாறெனில் காணப்படுவதொரு பொருள் தோன்றினுலன்றிக் காணப்படாது. அவ்வாறு தோன்றுவதொன்று தோன்றுதற்கு முன் அழிந்திருத்தல் வேண்டும். எனவே தோன்று தலும் அழிதலும் இருப்பது ஒன்றினுலேயே அறியப்படும் என மறுத்தனர் ஆசிரியர். அவ்வாருயினும் ஒன்று அழியப் பிறி தொன்று நிற்ப மற்ருென்று தோன்றப்பிறிதொன்று அழியக் காண்பதன்றி எல்லாப் பொருள்களும் ஒருங்கு தோன்றி ஒருங்கு நின்று ஒருங்கு அழியக் கண்டிலம் எனில் அற்றன்று. மழைக் காலமாகிய ஒரு காலப்பகுதியில் ஒருவிதமான பயிர்களும் ஒரு விதமான உயிரினங்களும் ஒருங்கு தோன்றி வேனிற்காலத்தில் அவை யாவும் அழியக் காண்கின்ருேம். இது கண் கூடாகக் காண்பதொன்று. இவ்வாறே ஒரு காலத்தில் உலகமும் ஒருங்கு அழியும் எனக் கருதத்தகும்.

**இரண்டாம் அதிகரணம்:-** உலகம் தோன்றியழியும் எனினும் அது உள் பொருள் ஆகாது: இல்பொருளாய்த் தத்தம் சார்பில் தோன்றியழியும். அவ்வாறுதோன் றியழிதலும்அதன் இயற் கையே ஆம் ஆதலின் அதற்கொரு முதல்வன் தேவையின்று எனப் புத்தரும் சமணரும் கூறுவர். இவரை மறுக்கவே இவ் வதிகரணம் எழுந்தது.

முயற்கோடு முதலிய இல்பொருள்கள் என்றும் தோன்று வதில்லே. உள் பொருளே என்றும் தோன்றுவதாகும். உலகம் காண்டற்குறிய பொருளாயிருத்தலின் ஒரு காலத்துத் தோன்றி யிருத்தல் வேண்டும் என முதற்கருத்தை மறுத்தார் ஆசிரியர். அடுத்து உலகம் உள்பொருள் எனினும் அது மாயையில் ஒடுங்குதலின் அதிலிருந்தே தோன்றலாம்; அதற்கொரு முதல் வன் தேவையில்லே என்றனர். மாயையும் உலகமும் வித்தும் முளேயும் போல்வனவாம். விதைக்கு நிலேக்களனுகிய நிலம் குளிர்ந்த விடத்தன்றி அந்நிலத்தினின்றும் அவ்விதை முளேப்ப தில்லே. அதைப் போன்றே இறைவனின் வைப்புச் சத்தியாக

விளங்கும் மாயையும் இறைவனது அருளாற்றலின் நினைவின்றி அவ்வுலகைத் தோற்றுவித்தற்கு இயலாது. ஆதலின் அது தோன்றுதற்கு ஒரு முதல்வன் வேண்டும். குளவியாக விரும்பும் புழுவுக்கு அது விரும்பிய அவ்வடிவினை அப்புழுவை எடுத்து வைத்திருக்கும் அக்குளவி கொடுக்குமாறு போல, அவரவர் விரும்பும் வினைக்குத்தக்க வடிவையும் பயன்களையும் மாயையினின்று இறைவன் தோற்றுவிப்பன். அவ்வாறு படைப்பு முதலாய தொழில்களைச் செய்யும் முதல்வன் அத்தொழிலால் வேற்றுமையடையானோ எனில் அடையான். காலம், இறப்பு நிகழ்வு, எதிர்வு, நாள், நாழிகை முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலையும் செய்யினும் தான் வேறுபாடற்று நிற்கும். அதுபோல முதல்வனும் வேறுபடான். அன்றியும் உலகில் உள்ள மக்கள் தாம் செய்யும் தொழில்களுக்கெல்லாம் தம் உறுப்பையும் உணர்வையும் பயன்படுத்துவர் ஆனால் இறைவனோ எதனையும் எக்காலத்தும் தன் நினைவு மாத்திரையின் செய்யும் பேராற்றல் உடையன் ஆதலால் அதனாலும் வேற்றுமையடையான் என்பர் ஆசிரியர்.

**மூன்றும் அதிகாரணம்:** மிகவும் வியக்கத்தக்க இவ்வுலகை ஒருவன் தோற்றுவித்தல் என்பது இயலாது; அதற்குப் பல கடவுளர் வேண்டும் என அநேகேசுரவாதி கூறுவர். அவரை மறுக்கவே இம்மூன்றும் அதிகரணம் எழுந்தது.

தேர் முதலியன பலர்கூடிச் செய்யப்படினும் ஒருவன் ஏவல் வழிநின்றே அச்செயல் செய்யப்படுகிறது. அதுபோல இவ்வுலகும் அயன் முதலியவரால் செய்யப்படினும் அவர் அனைவரும் சிவபெருமான் ஏவல்வழி நின்றே செய்வர் என்பதாம்.

காணப்படும் உலகும் கருதப்படும் தத்துவங்களும் ஐங்கலையில் அடங்கியுள்ளன. நிவர்த்தி கலையில் அடங்கிய தத்துவங்களையும் உலகையும்அழித்தற்குரியன் அயன். பிரதிட்டா கலையில் அடங்கிய தத்துவங்களையும் உலகங்களையும் அழித்தற்குரியன் மால். வித்தியா கலையில் அடங்கிய தத்துவங்களையும் உலகங்களையும் அழித்தற்குரியன் உருத்திரன். சாந்திகலையில் அடங்கிய தத்துவங்களையும் உலகங்களையும் அழித்தற்குரியன் அனந்ததேவர். சாந்தி அதீதகலையில் அடங்கிய தத்துவங்களையும் உலகங்களையும் அழித்தற்குரியவர் சதாசிவர். இவ்வைவரும் சிவபெருமானதுஆணையினால் அவ்வத்தொழிலைச் செய்பவராவார். அவ்வாறு செய்வதும் அவரவர்கட்கு ஏற்பட்ட கால எல்லை வரையுமே ஆம். இவர்களுள் பேரொடுக்கத்தைச் செய்யும்

சதாசிவரைத் தூண்டித் தொழிற்படுத்துவோன் சிவபெருமானே ஆவன். இவ்வுலகம் அவனையே முதலாக உடைத்து என்பது அறியத்தக்கதாம் இவ்வாறு இம்மூன்றதிகரணங்களாலும் உணர்த்தப்படுவது முதற்கடவுளது உண்மையாம்.

## இரண்டாவது நூற்பா

உலகின் முதல்வனாக விளங்கும் சிவபெருமான் உயிர்களின் பொருட்டு உலகைத் தோற்றுவிப்பன் உடல் இருத்தற்கு உயிர் அதனோடு கலந்து நின்று அவ்வுடலேயாய் நிற்பது போல, உயிர்கள் (உடலொடு) நிலைத்தற்கும் அவ்வுயிர்களிடத்து அம்முதவன் கலந்து நின்று அவ்வுயிர்களேயாய் நிற்பன் இது ஒன்றாய் நிற்றல் எனப்படும். கண் காண்பதற்குத் துணையாய் நிற்கும் கதிரவன் அக்கண்ணினின்றும் வேறுதல்போல உயிர்களிடத்து அறிதற் தொழில் நிகழ்த்தற்குத் துணையாய் நிற்கும் இறைவன் அவ்வுயிர்களின் வேறாய் நிற்பன். இது வேறாய் நிற்றல் எனப்படும் கண் ஒளி பொருளைக் காண்பாற்கு உயிர் அறிவுடன் நின்று கண்ணொளியோடு கூடப் பொருளிற் செல்லுமாறு போல, உயிர்கள் இன்பதுன்பங்களைத் துய்த்தற்கு அவ்வின்பதுன்பங்களுக்கு இடனாக நிற்கும் பொருள்களில் உயிரோடு கூட இறைவன் செல்லுதலின் அவ்வுயிர்களோடு உடனாய் நிற்பன். இது உடனாய் நிற்றல் எனப்படும். இவ்வாறு உயிர்களோடு இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று தனது ஆணை என்னும் அறிவாற்றலால் இயக்கப்பட்டு வரும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும். அவ்வாறாக அவ்வாணையோடு பிரிவின்றி ஒற்றுமைபட்டு நிற்பன் இறைவன் என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இது நான்கு அதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** இறைவன் உயிர்களோடு கலந்து நிற்கும் தன்மையில் மூவிதக் கருத்துக் கூறப்படுகிறது. பொன்னே அணியாவது போல் பிரமமே உயிராயிற்று என்பர் ஏகான்ம வாதிகள். இவர்கள் இறைவன் வேறு உயிர்வேறு என்பதன்றி ஒரு பொருளாய பிரமமே உண்டென்பர். இருளும் ஒளியும் போல் இறைவனும் உயிரும் வேறு வேறு என்பர் மாத்துவர். சொல்லும் பொருளும் போல் இறைவனும் உயிரும் ஒருவாற்றான் ஒன்றாயும் பிறிதொருவாற்றான் வேறாயும் இருக்கும் என்பர் பாஞ்சராத்திரிகள். இவர்கள் மூவருக்கும் வேதத்தில் கூறப்படும் அத்துவிதம் என்ற சொல்லே மேற்கோளாகும். நத்துவிதம்

என்னும் வடமொழிச் சொல்லில் உள்ள நகரமெய் கெட்டு அதன் மேல் நின்றஅகரம் முதலாக நின்று தமிழில் அத்துவிதம் என வழங் கப்படுகிறது. அத்துவிதம்] என்னும் சொல்லில் உள்ளஅகரம் அன்மை இன்மை மறுதலைஎன்னும்முப்பொருளையும் உணர்த்தும். அப்பிரகாசம் என்பதில்உள்ள அகரம் பிரகாசம் இல்லை;அதாவது ஒளியில்லை என்னும்பொருளைக் குறிக்கின்றது.அதைப் போன்றே ஏகான்மவாதிகளும் அ+துவிதம் = அத்துவிதம்; இரண்டு இன்று எனவே ஒன்று என உரை காண்பர். அவ்வாறு பிரமப் பொருள் ஒன்றென்று உணர்வது எதுவோ அது (உயிர்) அப்பிரமத்தின் வேறும் என இவரை மறுப்பர் ஆசிரியர்.

அநீதி என்பதில் உள்ள அகரம் மறுதலைப் பொருள்பட்டு இது நீதி அல்ல எனப் பொருள் படுகின்றது. இவ்விடத்து நீதியின் மறுதலை கொள்ளவே நீதியும் கொள்ளக்கிடக்கும் அதுபோல அத் துவிதம் என்னும் சொல்லினும் அகரம் மறுதலைப் பொருள்பட்டுக் கடவுளும் உயிரும் வேறு வேறு எனப்படும் என்பர் மாத்துவர் இரண்டும் வேறு வேருயின் யாண்டும் நீக்கமற நிற்பவன் இறைவன் எனும் நிலைக்கு மாருகும். அவ்வாருகவே உயிரும் தனித்து நிற்கும். தன்வயமுடையது எனப்படும். இந்நிலை உயிர்க்கியல்பன்று ஆதலின் இது பொருந்தாதென மறுப்பர் ஆசிரியர்.

ஏகான்மவாதிகள் கொண்டவாறே இன்மைப் பொருள் கொண்டு கடவுள் யாண்டும் நீக்கமற நிறைந்தவன் எனவும் உயிரும் உலகும் அவனில் அடக்கம் எனவும், ஆயினும் உயிரும் உலகும் பலவாயினுற் போலக் கடவுள் பல அல்ல ஒன்றே எனவும் கூறுவர் பாஞ்சராத்திரிகர்.

இறையுள் உயிர் அடங்கி நிற்கும் வகையின் ஒன்றேயாயின் ஒன்றென்று கூறுதற்கு ஏகம் என்னும் சொல் இருப்ப அத்துவிதம் என்று கூறவேண்டுவதில்லை எனப் பிரமம் ஏகம் என ஓரிடத்திலும், பிரமம் அத்துவிதம் என ஓரிடத்திலும் இருத்தலின் ஏகம். அத்து விதம் ஆகிய இரு சொற்களும் ஒருபொருட்கிளவியாம் என்றனர். ஏகம், அத்துவிதம் ஆகிய இருசொற்களும் வெவ்வேறிடங்களின்றி ஓரிடத்திலேயே 'ஏகமேவ அத்துவிதீயம் பிரமம்' என இருத்தலின் அவை ஒருபொருட் கிளவியல்ல என மறுக்க. அவை உறுதிபயக்க வந்த அடுக்குமொழி என்றனர். அடுக்குமொழி என்பது ஒரு சொல்லே அடுக்கி வருவதன்றி இருசொற்கள் அடுக்கி வருவதன்று. ஆதலின் ஏகம் எனப்படும் பரம்பொருளே உயிருடன் பலவற்ருே டும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் என்பதே தெளிதற்குரியதாம்.

இவ்வாருக அகரம் இன்மைப் பொருளையும் மறுதலைப்பொருளையும் குறித்தல் பொருந்தாது ஆகவே எஞ்சிய அன்மைப் பொருள் குறிக்கலே ஈண்டுப் பொருந்துவதாகும் என்பது தெளிவு

அப்பிராமணன் என்னும் இடத்துள்ள அகரம் பிராமணனுயிருந்தும் பிராமணத் தன்மையில்லாமைக் குறித்தல் போல இறையும் உயிரும் இரண்டாய் இருந்தும் இரண்டாகப் பிரித்தறிய வாராது. கண்ணொளியும் உயரறிவும் போலக் கலந்து நிற்கும் என்பதேஅத்துவிதம் எனும் சொற்பொருளாகும்.

இவ்வாருயின் இறைவன் ஒன்ருய் நிற்பன் என்பதால் ஓராற்ருன் மாத்துவர் கருத்தையும், உடனுய் நிற்பன் என்பதால் ஓராற்ருன் பாஞ்சராத்திரிகள் கருத்தையும் ஒத்து உள்ளதே எனின் அற்றன்று. ஏகான்ம வாதிகள் பிரமம் ஒன்றே உயிராகவும் உலகாகவும் ஆயிற்று எனக் கொண்டு அவ்வகையில் பிரமம் ஒன்றே என்றனர் ஆனல் சைவ சித்தாந்தமோ உயிர் இறை உலகு ஆகிய மூன்றும் வேறு வேறு என்றும், உலகில் உயிர் உடலொடு கூடி வாழுங்கால் அவ்வுயிர் உடலில் நிலைத்தற்காக இறைவன் அவ்வுயிரோடு கலந்து ஒன்ருய் நிற்பன் என்றும் கூறுகிறது. ஆதலின் பொருள் ஒன்றே என்ற கருத்திற்கும், பொருள் பல, இறைவன் கொள்ளும் கருணையால் ஒன்ருய் நிற்பன் என்னும் கருத்திற்கும் வேற்றுமை பெரிதாம்ர்

இவ்வாறே உயிரும் இறையும் என்றும் வெவ்வேறே என்னும் மாத்துவர் கருத்திற்கும், உணர்த்த உணரும் இயல்பினதாய உயிருக்கு உணர்த்துவதற்காக வேருய் நிற்பன் இறைவன் என்னும் சைவ சித்தாந்தக் கொள்கைக்கும் வேற்றுமை பெரிதாம். இவ்வாறே உயிரும் உலகும் அடங்கி நிற்கும் நிலையில் இறைவன் ஒருவனே உளன் என்னும் பாஞ்சராத்திரிகர் கருத்திற்கும், உயி இன்பதுன்பங்களைத் துய்த்தற்கே அதனெடு உடனின்று செலுத்துவன் இறைவன் என்னும் சைவசித்தாந்தக் கொள்கைக்கும் வேற்றுமைப் பெரிதாம். உயிர் இறை உலகு ஆகிய மூன்றும் வெவ்வேறும் என்றும் உலகு ஒடுங்குங்கால் மாயையினடத்து ஒடுங்கிப் பின் அதனிடத்தினின்றுமே விரியும் என்றும் கூறும் சைவ சித்தாந்தம்.

**இரண்டாம் அதிகரணம்:-** முதல்வன் உயிர்களின் பொருட்டு உலகை மீளத்தோற்றுவிக்குங்கால் அம்முதல்வனுக்கு இருவினை மாயை முதலிய துணைக்காரணங்கள் வேண்டப்படா. படுமாயின் தன்வயத்தனுதலும் அளவிலாற்றலும் உடைய முதல்வனுக்கு அது

இழுக்காய் முடியுமே எனப் பரிணமவாதிகள் கருதுவர். இவர்களை மறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

ஒரு நகரைக் காக்கும் அரசன் பாசறையில் காவல் வைக்கும் ஒறுத்தல் தொழிலை உரியவனுகிய ஒருவன் மாட்டு வைத்துச் செய்வது போல இறைவனும் புதிதாக இவ்வுலகை மீளப்படைக்குங் கால் தனது ஆற்றலை இருவினைக் கிடமாக வைத்து நடத்துவனுதலின் உயிர்களுக்கு இருவினை முதல்வன் ஆணையில் வருவதாகும். வினை அறிவற்றதாதலின் தானேஉயிரைச் சென்று அடையாது. உயிர் சிற்றறிவுடைய தாதலின் தானே எடுத்துக் கொள்ளாது. இவ்வாற்ருன் இறைவனே அவ்வவ்வுயிர்கள் செய்த வினையை அவ்வவ்வுயிர்களுக்கும் கூட்டி நுகர்விப்பன் என்பதாம். மாயை என்பது இறைவனது வைப்புச் சத்தியாகும். அஃதாவது வேண்டும் பொழுது உதவுவதாய்த் தன்னுள் அடக்கியிருக்கும் சத்தியாகும். உலகு ஒடுங்கியிருக்கவும் தோற்றவும் இடனுய் இருப்பது இவ் வைப்புச் சத்தியேயாம். எனவே உயிர் செய்த வினையும் அதனை அது நுகர்தற்கேதுவாகிய இவ்வுலகும் இறைவன் ஆணைவழி நின்று இயங்குவனவாதலின் இவைகொண்டு உலகு இயற்றும் இறைவனது ஆற்றலுக்கு இழுக்கில்லையாம்.

**மூன்ரும் அதிகரணம் :–** குடம் உடைந்தவிடத்துக் குடத்தி லுள்ள வெளி விண்வெளியோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கிய வழி உயிர்பிரமத்தோடு கூடிவிடும். ஆதலின் உயிரின் பொருட்டு இறைவன் உலகை மீளத் தோற்றுவிக்க வேண்டுவதில்லை; இறந்த உயிரும் மீளப் பிறவாது என்பது கீரீடப்பிரமவாதிகள் கருத்து. இவர்களை மறுக்கு முகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

குடவெளி பெருவெளியோடு கலக்கும் உவமை உயிர் நுண் ணுடம்பை விடுத்து இறைவனேடு சேருவதற்கேயன்றி இப் பருவுடலை விட்டுப்போவதற்குக் கூறப்படுவதில்லை. அதுவன்றி உயிர் தான் செய்த வினைக்கேற்ப இம்மண்ணுலகத்தும் துறக்க நிரயங்களிலும் மாறி மாறிப் பிறந்து வரும் இயல்புடையதாம். ஆதலின் உயிர் மீளப் பிறவாதென்பது பொருந்தாததொன்ருகும்.

**நான்காம் அதிகரணம்:–** மேல் இருவினையைக் கூட்டுவிக்கு மெனக் கூறிய இறையாற்றலானது (சத்தியானது) இறைவனின் வேறு என்பர் மீமாஞ்சகர். இறைவனின் வேறன்று; அவ்விறை வனே என்பர் நையாயிகர் இவ்விருவர் கருத்தையும் மறுக்குமுக மாக இவ்வதிகரணம் எழுந்தது.

இறைவனும் அவனது ஆற்றலும் ஒன்றென்றே அன்றி வேறு என்றே எண்ணுதற்கின்றி அவ்விரண்டிற்கும் பொதுவாய் யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்றலின் அவ்வாற்றலொடு அவன் பிரிவின்றி இயைந்திருப்பன் கதிரவனும் அதன் ஒளியும் பிரிவின்றி இயைந்துள்ளவாறு இறைவனும் அவனது ஆணையும் இயைந்து நிற்கும் என இக்கருத்து மறுக்கப்படுகிறது. எனவே இந்நான்கு அதிகரணங்களாலும் தனை உண்மை கூறப்பட்டதாம்.

**மூன்றுவது நூற்பா**

இலது என்றலினும், எனது உடல் என்றலினும், ஐம்புலன்களை அறிதலினுலும், ஐம்புலன்களும் ஒடுங்கிக் காணும் கனவு நிலையை நனவின்கண் மயங்கி அறிதலினும், உறக்கத்தில் இன்பத்துன்பத்துய்ப்பும் உடல் தொழிற்படுதலும் இல்லாமையானும், உயிர் அறிவிக்க அறிதலாலும், மாயையின் வினைவாகிய உடல் முதலியவற்றுக்கு வேறுவேறு பெயர் இருத்தலானும், உயிர் இல்லை என்றே, அதுவே உடல் என்றே, அதுவே ஐம்பொறி என்றே, அதுவே நுண்ணுடம்பு என்றே, அதுவே உயிர்க்காற்று என்றே, அதுவே பிரமம் என்றே, அதுவே உடல் பொறிஉயிர்க்காற்றுமுதலியவற்றின்கூட்டமென்றே கூறலாகாது. இவ்வனைத்தினும் வேருய் உயிர் உண்டு என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இது ஏழுஅதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** உடல் முதலியவற்றைக் கண்டு இது உயிரன்று இது உயிரன்று என்று நீக்கியவிடத்து அவற்றின் வேருக உயிர் என்பதொன்று காணுமையில் உள்ளதும் இல்லது மாகிய ஒரு பெரும் பாழே (சூனியமே) உயிர் என்பர் சூனிய ஆன்ம வாதிகள். இவரைமறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

மேற்கூறியவாறு உடல்பொறி முதலியவற்றை இது உயிரன்று இது உயிரன்று எனக் கழித்துக் கொண்டு செல்வது எதுவோ அதுவே உயிர் என இவர் கருத்து மறுக்கப்படுகிறது,

**இரண்டாம் அதிகரணம்:-** உயிர் உடம்பின் வழி உளதென அறிவதன்றித் தனித்துக் காண்டற்கில்லை. அன்றியும் நான் நுணு கினேன் நான் பருத்தேன் என உடம்பையே நான் என்று வழங்கக் காண்கிறேம். ஆதலின் உடம்பே உயிர் என்பர் தேகான்மவா திகள். இவரை மறுக்கு முகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

நான் பருத்தேன் நான் சிறுத்தேன் எனப் பருத்தல் முதலிய உடற் பண்புகளை ஏற்றுரையால் (உபசாரத்தால்) உயிருக்கேற்றி

வழங்கப்பட்டு வருகின்றன. இவ்வாறு வழங்கினும் என் உடம்பு என் கை என் கால் என வேற்றுமைப்படவே யாவரும் வழங்குவ தன்றி யான் உடம்பு, யான் கை, யான் கால் என ஒற்றுமைப் பட எவரும் வழங்குவதில்லை. ஆதலின் இவ்வுடம்பின் வேருய் உயிர் உள்ளது என மறுக்கப்படுகிறது.

**மூன்ரும் அதிகரணம்:-** சுவை முதலாகிய புலன்களை மெய் முத லாகிய பொறிகள் அறிகின்றன, அவை உடல்போல் அறிவற்றன அல்ல. அன்றியும் செவி முதலிய பொறிகளின் தொழில்களை என் செவி கேட்டது என்கண் கண்டது எனச் சிறுபான்மை வழங்கப் படினும், நான் கண்டேன் நான் கேட்டேன் என வழங்குவதே பெருவழக்காக உள்ளது. ஆதலின் அவ்வைம் பொறிகளே உயிர் என்பர் இந்திரிய ஆன்ம வாதிகள். இவர் கருத்தை மறுக்கு முக மாக எழுந்ததே இவ்வதிகரணம்.

சுவை முதலிய புலன்களை மெய் முதலிய பொறிகள் அறிந் துணருங்கால் ஒரு பொறி அறிந்த தொன்றைப் பிறிதொரு பொறி அறிவதில்லை. ஆனல் இவ்வைம்பொறி வழி ஐம்புலன்களையும் ஒக்க அறிவதொரு பொருள் உளதாதலைக் காண்கின்ரேம். அவ் வாறு அறிவதே உயிராம் என இக் கருத்து மறுக்கப்படுகிறது.

**நான்காம் அதிகரணம்:-** மேற்கூறிய ஐம்பொறிகளையும் நுண்ணு டம்பே. உள்ளிருந்து செலுத்தி அறிகின்றதாதலின் அந்நுண் ணுடம்பே உயிர் என்பர் சூக்கும தேகான்ம வாதிகள். இவரை மறுக்கு முகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

கனவின் கண் உயிருக்குக் கருவியாக நின்று அறிவது இந்நுண் ணுடம்பே ஆம். இதுவே உயிராயின் கனவின் கண் நிகழ்ந்த வற்றை நனவின் கண்ணும் மயங்காது அறிதல் வேண்டும். அவ் வாறின்மையின் நுண்ணுடம்பின் வேருய் உயிர் உண்டு என்பது பெறுதும், அன்றியும் உயிர் நுண்ணுடம்பு போல என்றும் ஒரு தன்மைத்தாய் இராது சில கருவிகளை விட்டு அகத்துச் சேறலும், விட்ட அச்சில கருவிகளொடு கூடிப்புறத்துச் சேறலுமாகிய நிலை வேறுபாடு உயிருக்குண்டு. ஆதலின் அது கனவின் நிகழ்ந்த வற்றை நனவின் கண் மயங்கி அறிதற்கு ஏற்புடையதாகும் என இவர் கருத்து மறுக்கப்படுகிறது.

**ஐந்தாம் அதிகரணம்:-** கனவின் கண் அன்றி உறக்கம் பேருறக் கம் ஆகிய விடத்தும் தொழிற்படுவது உயிர்க்காற்றே (பிராண

வாயு) ஆகும். ஆதலின் அதுவே உயிர் என்பர் பிராணான்ம வாதிகள். இவரை மறுக்கு முகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

உறக்கத்தும் உயிர்க்காற்று இயங்கினும் அதுபொழுது யாதானுமொரு பொருள்வழி இன்பமோ துன்பமோ வரின் அறிய இயலுவதில்லை; அதுபொழுது உடம்பு தொழிற்படுவதுமில்லை. ஆதலின் அவ்வுயிர்க் காற்றினும் வேறாய் உயிர் உள்ளது என இவர் கருத்து மறுக்கப்படுகிறது.

**ஆறுவது அதிகரணம்:-** பிரமப் பொருள் என்பது மேற் கூறிய பொருள்களைப் போல அறிவற்ற பொருளன்று; அது அறிவுடையது. ஆதலின் அதுவே உயிர் என்பர் விஞ்ஞான ஆன்ம வாதிகள். இவரை மறுக்கு முகமாகவே அவ்வதிகரணம் எழுந்தது.

உயிர், கருவிகள் இல்லாது உயிர்ப்படங்கிய நிலையில் எதனையும் அறிவதில்லை. அனைத்துக் கருவிகளோடும் கூடிய விழிப்பும் நிலையில் எதனையும் அறிகின்றது. ஆனால் பிரமமோ கருவிகள் எவற்றது துணையுமின்றி என்றும் ஒரு தன்மைத்தாய் அறிதற்குரியது. அன்றியும் அப்பிரமம் பிறிதொன்று அறிவிக்க அறியும் இழிவுடையதுமன்று. ஆனால் உயிரோ ஒன்று அறிவிக்க அறிந்தும் அறிந்ததைப் பின் மறந்தும் நிற்கும் இழிவுடையது. ஆதலின் அக்கருத்துப் பொருத்தமின்று என மறுப்பர்.

**ஏழாம் அதிகரணம்;-** உடல் பொறி நுண்ணுடம்பு உயிர் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றே உயிரென்றல் பொருந்தாது எனினும், அவற்றுள் ஒன்று குறைந்தவிடத்து அறிவு நிகழாமையானும். அவை எல்லாம் கூடியவிடத்து அறிவு நிகழ்தலானும், அவை அனைத்தும் கூடியகூட்டமே உயிரென்றல் பொருந்தும் என்பர் சமூக ஆன்ம வாதிகள். இவரை மறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

இவ்வாறு அமைந்த சமுதாயம் உடம்பெனப் பெயர் பெறுதலின்றி உயிர் எனப்பெயர் பெறுதலின்று. இவ்வுடல் உயிருக்கு அறிதற் தொழில் நிகழ்தற்குக் கருவியாகவே அமைந்துள்ளது. அன்றியும் அக்கூட்டு மாயையாகிய அழிவற்ற பொருளால் ஆயது; அழிவுடையது. உயிரோ அன்னதன்றி அழியாதது, அறிவுடையைது. ஆதலின் அக்கூட்டத்தினும் உயிர்வேறும் என இவர் கருத்து மறுக்கப்படுகிறது. இவ்வாறு ஏழு அதிகரணங்களாலும் கூறப்பட்டது உயிருண்மையாம்.

## இலக்கணவியல்

மேற்கூறிய முப்பொருள்களிலும் இறுதியாகக்கூறியது உயிராம். எதிர் நிரல்நிறை முறையில் அவ்வுயிரையே முதலாகக் கொண்டு உயிர், தளை, இறை ஆகிய முப்பொருள்களையும் 4, 5, 6, நூற்பாக்கள் விளக்குகின்றன. மேல்உண்டு என்று அறிந்த முப் பொருட்கும் இலக்கணம் கூறலின் இவ்வியல் இலக்கணவியலா யிற்று.

**நான்காவது நூற்பா**

உயிரானது அகக்கருவிகளாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கனுள் ஒன்று அன்று. ஆயினும் அரசன் நுண்மாண் நுழைபுலம் மிக்க துணைவராகிய அமைச்சரோடு கூடி நின்று தன்னுட்சிச் செயலை நடத்துமாறுபோல, காலப்பழமைக்கு எட்டாத காலத்தேயே இயல்பாகக் கூடியிருக்கும் ஆணவமலத்தினுல் அறிவின்றிக் கிடக்கும் உயிர்க்குச் சட்டைபோன்ற கலைமுதலிய தத்துவங் களினுல் பொதுவகையால் உணர்வு நிகழினும் சிறப்புவகையால் உணர் வுநிகழாமையின் அதுநிகழுதற்குச் சூழ்ச்சித் துணையாகிய அவ் அகக்கருவிகளோடு கூடிநின்று நனவு முதலிய ஐம்பாட்டினைப் [ஐந்தவத்தை] பொருந்துகின்றது என்பது இதன் பொருளாகும். இது 3 அதிகரணங்களை உடையது

**முதல் அதிகரணம்:-** மேலை நூற்பாவில் கூறிய உடல், பொறி, நுண்ணுடம்பு போல்வனவெல்லாம் உயிரல்ல என்பது பொருந்தும். சிந்தையைச் சீவன் என்றும் சீவனைச் சிந்தை என்றும் சிவஞானசித்தியார் கூறுவதால் மனம் முதலிய அகக்கருவிகளை உயிரென்றல் பொருந்தும் என்பர் அந்தக்கரணான்ம வாதிகள்.

உயிர் அகக்கருவிகளைச் செலுத்த அவ்வகக்கருவிகள் பொறி வழிப்பொருள்களை உணர்கின்றது. இவ்வாற்ருன் பொறிகளை நோக்க அகக்கருவிகள் அறிவுடையவையெனினும் தம்மைத்தாம் அறியாமையானும், அறிவற்றதாய் இருத்தலானும் உயிர் அவற்றின் வேரும் என அவர்கருத்து மறுக்கப்பெறுகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** உயிர் அகக்கருவிகளுள் ஒன்றல்ல வாயின் அவ் அகக்கருவிகளொடு உயிர் சந்தித்து நிற்றற்குக் கார ணம் என்னை? என வினவுவர் அந்தக்கரணான்ம வாதிகள்.

உயிர் இறைவனைப்போல அறிவுடைய பொருளாயினும் செம் பினிடத்துக் களிம்பு இயல்பாகவே உடனுய் நிற்றல் போல உயிரி டத்து ஆணவமலமும் காரணமின்றி இயல்பாகவே உடனுய்

நிற்றலின் தன்னியல்பாய் எதனையும் உணர இயலாததாயிற்று. ஆதலின் அது மனம் முதலிய அகக்கருவிகளோடு கூடி நின்று உணர்வதாயிற்று என விடையிறுக்கப் படுகிறது.

**மூன்றும் அதிகரணம்:–** இருள் நீங்கப்பெற்ற கண் பொருள்களை ஒரே விதமாய் அறிகின்றது. அதுபோல அகக்கருவிகளோடு கூடி உணர்வு பெற்ற உயிரும் ஒரேவிதமாய் அறியாது, வேறு வேறு விதமாய் (ஐந்தவத்தை) உணர்வானேன்? என வினவுவர் அந்தக்கரணான்மவாதிகள்.

தன்னொடு கூடி நின்ற ஆணவமலத்தால் உயிரது அறிவு செயற்படாதிருந்தது; அக்கருவிகளொடு கூட அவ்வறிவு செயற்படத்தொடங்குகிறது எனினும் உயிர் ஓரிடத்து நிற்பதில்லை; ஒரு தன்மைத்தாகக் கருவிகளொடு கூடி நிற்பதுமில்லை. ஆதலின் தான் நிற்குமிடத்திற்கும் கருவிகளொடு கூடும் நிலைக்கும் ஏற்ப உணர்ச்சி வேறுபாடு உறுகின்றது; அதாவது ஐந்தவத்தை அடைகின்றதென அதற்கு விடைகூறப்படுகின்றது. உயிர் புருவநடு, கழுத்து, இதயம், உந்தி, உந்தியினடிப்பகுதி (மூலாதாரம்) ஆகிய ஐந்திடங்களுக்கும் சென்று வரும் இயல்பினது. உயிர் புருவநடுவில் நின்று செயல்படும் இடமே நனவாம். அதுபொழுது தொழிற்படும் கருவிகள் முப்பத்தைந்தாம். உயிர் கழுத்தினின்று செயல்படுமிடமே கனவாம். அதுபொழுது தொழிற்படும் கருவிகள் இருபத்தைந்தாம். உயிர் இதயத்தில் பொருந்திச் செயல்படும் இடமே உறக்கமாம். அதுபொழுது தொழிற்படும் கருவி மூன்றும். உயிர் உந்தியில் பொருந்தித் தொழிற்படும் இடமே பேருறக்கமாம். அதுபொழுது தொழிற்படும் கருவிஇரண்டாம். உயிர் உந்தியின் அடிப்பகுதியில் தொழிற்பாடின்றியிருத்தல் உயிர்ப்படங்கலாம். யாதொரு செயற்பாடும் இன்மையின் தான்மட்டுமே நிற்கும்.

கருவிகளோடு கூடியும் பிரிந்தும் வரும் செயற்பாடு கூறுதலின் இந்நூற்பா உயிரது இலக்கணம் கூறியதாயிற்று.

**ஐந்தாவது நூற்பா**

மேற்கூறப்பட்ட உயிரால் மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்பொறிகளும் தத்தம் புலன்களை அறியும். ஆனல் அவ்வாறறியும் தம்மையும் அறிதற்கேதுவாய உயிரையும் அவை அறிவதில்லை. அதுபோலவே உயிர்களும்தம் அறிவிற்குத் துணையாகிய முதல்வனின் அறிவாற்றலால் ஐந்தவத்தைகளில் நின்று வினைப்பயன்களை அறிந்து துய்க்கும். அவ்வாறு துய்ப்பினும் துய்க்கும் தம்மையும் தாம் துய்த்ததற்கு ஏதுவாக உதவும் மறைப்பாற்றலையும் அறியமாட்டாவாம்.

பொறிகளைச் செலுத்தி நிற்கும் உயிர் அப்பொறிவழி அறியப் பட்ட பொருள்களால் வேற்றுமைப்படும். அதுபோல உயிரைச் செலுத்தும் முதல்வனும் அவ்உயிர்ச் செயல்களால் வேற்றுமைப் படுவனோ எனில் படான் முதல்வன் உயிரைச் செலுத்துவ தெல் லாம் கருவியாலன்று; நினைவு மாத்திரையினாலேயாம். ஆதலின் காந்தத்தின் முன் இரும்பு இழுத்துக் கொள்ளப்படுமாறுபோல நினைவு மாத்திரையின் உய்க்கும் முதல்வனின் திருமுன்பும் உயிர் செயல்படுதற்கு ஏதுவாக நிற்கும். அவ்வளவின்றி முதல்வன் வேற்றுமை அடையான் என்பது இதன் பொருளாகும். இது இரண்டு அதிகரணங்களை உடையது

**முதல் அதிகரணம்:-** தாமரை இலையிலுள்ள நீர்போல உயிர் பற்றின்றி நிற்க அதன் முன்னிலையில் புத்தி தத்துவமே ஐந்தவத்தைப்படும்; உயிர் ஐந்தவத்தைப் படுமென்றல் பொருந்தாது என்பர் சாங்கியர். இவரை மறுக்குமுகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

பொறிகள் பொருள்களை உணர்தற்கு உயிரே இன்றி யமையாததாகும். பொறிகளோடு உயிர் ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்தாலன்றி அவை பொருள்களை அறியா என்பது கண் கூடு அன்றியும் பொறிகளைப் போன்றே புத்தியும் அறிவற்றதேயாம்; உயிரோ அறிவுடையது. ஆதலின் உயிர் ஐந்தவத்தைப்படும் என்றலே பொருத்தமென அவர் கருத்து மறுக்கப்பெறுகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** புத்தி முதலாகிய கருவிகள் அறி வற்றனவாதலின் அறிவுடைய உயிரது உதவி அவற்றிற்குத் தேவையானது. ஆனால் உயிர் அறிவுடையதென்பது அனைவருக்கும் ஒப்ப முடிந்தது. அத்தகைய அறிவுடைய உயிர்க்கு முதல்வனின் உதவி வேண்டப்படாதாகும். வேண்டப் படுவதாயின் உயிர்க்கு உதவும் முதல்வனுக்கும் பிறிதொன்றன் உதவி வேண்டப்படும் எனக்கொள்ளப்பட்டு வரம்பின்றி ஓடும் குற்றத்திற்கு இடனாகும்என்பர் ஈசுவர அவிகார வாதிகள். இவரை மறுக்கும் முகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

பொறிகள் அறிவற்றன: உயிர் அறிவுடையது. இவ்வாற்றான் வேற்றுமையுடைத்தாயினும் தம்மையும் தமக்குத் துணையாக நிற்கும் பொருளையும் அறிய இயலா வகையில்உயிரும் பொறிகளை போன்றதேயாம். ஆதலின் உயிர் உணர்தற்கு முதல்வனின் உதவி இன்றியமையாது வேண்டப்படுவதாம். அன்றியும்

பொறிகள் அறிவதெல்லாம், உயிரின் பொருட்டேயாம், உயிர் அறிவதெல்லாம் வினை நீக்கமாய தன்பொருட்டேயாம் என்பது உணரத்தக்கது, இறைவன் உயிர்க்கு உதவுதல் அவனது கருணைப் பெருக்காலன்றித் தன் பொருட்டன்று. எவ்வுயிர்க்கும் தான் முதல்வனாய் இருத்தலன்றித் தனக்கொரு முதல்வன் இல்லாதவனே இறைவன் ஆவன். ஆதலின் உயிர்க்கு முதல்வனுதவி வேண்டப் படுவது போல முதல்வனுக்குப் பிறர் அல்லது பிறிதொன்றன் உதவி வேண்டுவதின்றும் என இக்கருத்து மறுக்கப்படுகிறது.

இந்நூற்பாவில் கூறப்படும் அருள் ஏற்புழிக் கோடலால் மறைப்பு ஆற்றலைக் [திரோதான சத்தி] குறிக்கும். உயிர் வினைமாசு கழிதற் பொருட்டு உலகியல் நுகர்வில் தலைப்படும் அவற்றான் வரும் நலந்தீங்குகளை உயிர் அறியின் உயிர் உலகியல் நுகர்வில் தலைப்படாது. ஆதலின் அத்தகைய நலந் தீங்குகளை உயிர் அறியாதவாறு மறைத்தலின் இதுமறைப்பாற்றல் எனப் பட்டது. மாயை கன்மங்கள் வழியே இது செயற்பட வேண்டு தலின் அவையும் இதனுள் அடங்கும். எனவே இந்நூற்பா பாச இலக்கணம் கூறியதாயிற்று.

**ஆறாவது நூற்பா**

உயிர்களது அறிவிற்குத் துணையாய முதற்பொருள் அளவைகளால் அறியப்படும் தன்மையது எனின் அவ்வாறறியப்படும் உலகம்போல் அதுவும் அழிபொருளாம். எவ்வாற்றானும் அறியப்படாத தன்மை உடையதெனின் அவ்வாறறியப் படாத முயற்கொம்புபோல இல்பொருளாம். ஆதலின் அறியப்படுதல் அறியப்படாமை ஆகிய இவ்விருபகுதி யுமின்றி ஒருவாற்றானறியப் படாமையும் ஒருவாற்றான் அறியப் படுதலுமாகிய இருவகை இயல்பினையுடைய சிவசத்தே முதற் பொருளாகும் என மெய்யுணர்வில் நிலைபெற்ற உயர்ந்தோர் கூறுவர் என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இந்நூற்பா இரு அதிகரணங்களை உடையது.

முதல் **அதிகரணம்:-** உலகம் அறியப்படுவதுபோல முதல் வனும் அறியப்படும் பொருளேயாம் என்பர் நையாயிகர். அவ்வாறாயின் உலகுபோல முதல்வனும் அழிவனோ என்னும் ஐயம் நிகழாதவாறு சுட்டியறியப்படும் பொருளும் நிலையுடைய பொருளேயாம் என்பர் சாங்கியர். இவ்விருவரையும் மறுக்கு முகமாகவே இவ்வதிகரணம் எழுந்தது.

சுட்டியறியப்படும் உலகு முதலிய பொருள்களெல்லாம் ஒரு காலத்தில் காணப்படினும் பிறிதொரு காலத்தில் அழிதலுடைய அப்பொருள்கள் நீரில் எழுதப்படும் எழுத்தும் கனவும் கானல்

நீரும் போல மிகவிரைந்து அழிந்துபடும் இயல்பின ஆதலின் எல்லாப் பொருளும் நிலையுடையனவென்றல் பொருந்தாது. முதல்வன் யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்பவனுதலின் ஏனைய உலகியற் பொருள்கள் போல இவன் தான் முதல்வன் என்று சுட்டி உரைக்கப்படான் என இவ்விருவர் கருத்தும் மறுக்கப் படுகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** முதல்வனியல்பு அறியப்படுவது என்றோ அறியப்படாதது என்றோ கூற இயலாததாகும் என்பர் மாயாவாதிகள். இவரையும் இவரைத் தொடர்ந்து கூறும் சில சமயவாதிகளின் கருத்தையும் மறுக்கும் முகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

இறைவன் ஏனைய அறியப்படும் பொருள்களைப்போல அறிதற்குரியனுமல்லன்; அறியப்படாத பொருள்களைப்போல இல்பொருளும் அல்லன். உயிர் தன்னறிவானும் (பசுஞானத்தாலும்) தனக்குத் துணையாக உள்ள கருவிகரணங்களாலும் (பாசஞானத்தாலும்) அறிதற்கு உரியனல்லன். அவனேடு உடனுய் நின்று அவனருளே கண்ணுகக் காணுகின்ற பொழுது உணர்தற்குரியனுகின்ருன். ஆதலின் மாற்றம் மனம் கழிய நிற்பவனுகிய இறைவன் அவனருட் கண்ணல் காணும் தகைமை பெறின் விளங்கித்தோன்றுவன் என முதற்கண் விளக்கப்படுகிறது.

இறைவன் மாற்றம் மனம் கழிய நிற்போன் என்றல் பொருந்தும்; விளங்கித் தோன்றுவன் என்றல் பொருந்தாது என மீளவும் மாயாவாதிகள் கூறினர்.

ஒருவாற்ருனும் அறியப்படாத பொருள் உண்டு என்றல் பொருந்தாது. ஆதலின் முதல்வன் திருவருளில் அழுந்தியறியும் அனுபவஞானத்தால் அறியப்படுவன் என அவரை மறுத்தனர் ஆசிரியர்.

இவ்வாறு கூறவே இறைவன் விளங்கித் தோன்றுவனென்பது பொருந்தும்; மாற்றம் மனங்கழிய நிற்பவனென்றல் பொருந்தாது என்றனர் நையாயிகர்.

வாக்கினுலும் மனத்தினுலும் அறியப்படும் பொருள் அழிதல் மாலையவாதலின் அவ்விரண்டிற்கும் அப்பாற்பட்டே அவன் அறியும் பொருளாய் நிற்பன் ஆதலின் மாற்றம் மனம் கழிய நிற்பன் என்றலும் வேண்டும் என அவரை மறுத்தனர் ஆசிரியர்.

முதல்வன் தியானம் முதலிய பாவனைகளால் அறியப் படுவன் என்றனர் பாதஞ்சலர்.

தியானபாவனைகள் கருவிகளோடு கூடி நின்று செய்யப்படு மாயின் அக்கருவிகளால் அறியும் பொருள் அழியும் பொருளேயாம். கருவிகளை நீக்கிச் செய்யும் பாவனை என்ப தொன்று இன்றும். கருவிகளோடு கூடுதலும் கூடாமையுமாகிய இவ்விருதிறனுமின்றி வரையறுத்துச் சொல்ல இயலாத நிலையில் பாவிக்கப்படுவது எனில் அவ்வாறு பாவிப்பது இல்பொருளன்றி உள்பொருளாகாது பாவனைக்கு எய்தாப்பொருளை எய்தியதாக வைத்துப் பாவகம் செய்வதெனில் அது போலிப்பாவனையாம். எனவே திருவருளின் வழிப் பாவிக்கும்பொழுதே அவன் அறியப் படுவன் என அவரை மறுத்தனர் ஆசிரியர்.

உயிரது அறிவிற்கு இறைவன் விளங்கித் தோன்றுவனென்பர் சிவசமவாதிகள்.

முதல்வன் உயிரோடு கலந்து நிற்பவனுவன். கண்ணொளி யோடு கலந்து நிற்கும் உயிரைக்கண்ணொளி அறியாதவாறுபோல உயிரொடு கலந்து நிற்கும் இறைவனையும் உயிரின் அறிவு அறிய இயலாது என அவரை மறுத்தனர் ஆசிரியர்.

வீடுபேற்றில் உயிர் முதல்வனெடு வேறு நில்லாது ஒன்ருகி விடும் ஆதலின் அவனருளால் உயிர் அறியும் என்றல் சாலாது என்றனர் சிவாத்துவித சைவர்.

கதிரவனை அறியவிரும்பும் கண் அக்கதிரவன் ஒளியை ஊடுருவிச் சென்று அக்கதிரவன் ஒளியால் அதனை அறிவது போல, முதல்வனை அறியவிரும்பிய உயிரும் முதல்வனுடைய திருவருளில் திளைத்து நின்று அத்திருவருளால் அவனை அறியும் ஆதலின் அவனருளால் உயிர் அறியும் என்றல் பொருந்தும் என மறுத்தார் ஆசிரியர்.

உயிர், இறைவனைத் தன் அறிவாலும், கருவியின் வழியாலும் அறிய இயலுவதில்லை; அம் முதல்வன் அருள் வழியே அறிய இயலும் என இந்நூற்பாகூறலின் இது இறையிலக்கணம் கூறிய தாயிற்று.

## சாதன இயல்

முப்பொருள்களின் இலக்கணத்தை அறிந்த விடத்து உயிர் இதுகாறும் தொடக்குற்றிருந்த மலப்பிணிப்பினின்றும் நீங்கி

இறையருளை அடைவதே உய்தி தருவது என அறியும். அவ்வாறன நிலையில் உயிர் யாது செய்தல் வேண்டும் என்பதையும் அவ்வாறு செய்தலால் கிட்டும் குருவருளையும் அதன்வழிப் பெற்ற உணர்வை நிலைபெறுத்தற்குரிய வழிவகையினையும் 7, 8, 9 ஆம் நூற்பாக்கள் கூறுதலின் இவ்வியல் சாதனஇயல் ஆயிற்று.

## ஏழாவது நூற்பா

சிவசத்தாகிய முதல்வனின் திருமுன்னிலையில் அசத்தாகிய நிலையில் பொருள்களெல்லாம் பாழ் ஆகலின் சத்தாகியசிவம் அசத்தாகிய பாசத்தையறிதல் செய்யாது. பாசம் அறிவிலதா தலின் நிலையுடைய சிவத்தை அறிதல் செய்யாது. இவ்விரண்டும் ஒன்றையொன்று அறியதாகவே இவ்விரண்டையும் அறியும் அறிவுடைய பொருள் ஒன்று உண்டு என்பதும், அது மேற்கூறப் பட்ட முப்பொருள்களில் எஞ்சிநின்ற உயிரே என்பதும், அவ்வாறுதல் ஒழிந்தவற்றால் உணர்தற்குரிய பாரிசேட அளவையாலாம் என்பதும் பெறப்படும். அது நிலையுடை பொருள் நிலையில் பொருள் ஆகிய இரண்டுமின்றி அவ்விரண்டனையுமறியும் உரிமையால் சதசத்து என்னும் பெயர் பெறும் என்பது இதன் பொருளாகும். இது மூன்றுஅதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** இறைவனது திருமேனியாகக் கூறப்படும் உலகை இறைவன் முன்னர் முனைத்து நில்லாது என்றல் பொருந்தாது என்றும், இறைவன் உயிரின் பொருட்டு உலகை அறிவனென்றும் சிவாத்துவிதசைவர் கருதுவர். இவரை மறுக்குமுகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

உலகு இறைவன்முன் முனைத்துநில்லாது என்றது இதுகுடம் இது ஆடைஎனச் சிலபொருள்கள் நம்மால் சுட்டியறியப்படுதல் போல, இவ்வுலகு இறைவனால் சுட்டியறியப்படாது அவனின் வேறாகாது நிற்கும் என்பதேயாகும். எனவே உலகு முனைத்து நில்லாதென்றது அவனின் வேறாகநிற்காது என்பதன்றி அப் பொருள் இல்லை என்பது கருத்தன்று. முதல்வன் நிலையில் பொருளாகிய உலகை அறிய வேண்டின் உடனாய்நின்று எல்லாப் பொருள்களையும் ஒருசேர அறிவதன்றி நம்மனோர்போல வேறாய் நின்று ஒவ்வொன்றாக உணர்வான் அல்லன் என அவர்கருத்து மறுக்கப்படுகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** நிலையுடையபொருள் நிலையில் பொருளை அறியாதாயினும் நிலையில் பொருளாகிய கருவிகள் உயிர்முன்னிலையில் விளக்கின்முன் நிற்கும் கண்போன்று கட்டு நிலையில் அசத்தையும், வீட்டு நிலையில் சிவத்தையும் அறியும் ஆதலால் அசத்து சத்தையறியா தென்றல் பொருந்தாது என்பர் சிவசங்கிராந்த வாதியர். இவரை மறுக்குமுகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

பொதுவாகப் பார்க்குமிடத்துக் கருவிகட்கு அறிவு உளது போலத் தோன்றினும் ஐயத்தின் நீங்கித் தெளியக் காணும் அறிவுடையோர்க்கு அக்கருவிகட்கு அறிவில்லை என்பது விளங்கும். பொறிகளின் வழி உணருவன அகக்கருவிகள். அவற்றின்வழி உயிர்க்கு உளதாகும் ஞானத்தைப் பாசஞானம் என்பதல்லது பாசத்திற்கு உளதாய ஞானம் பாசஞானம் என்ப தன்று. எனவே கண்கண்டது மனம் நினைத்தது எனக் கூறுவன வெல்லாம் உயிரது செயலை அப்பொறிகளின் செயலாகக்கூறும் ஏற்றுரையேயாம். கருவிகளுக்கு அறிவு உண்டென்பது கானலில் நீர் உண்டென்றல் போலாம் என அவர் கருத்து மறுக்கப்படு கிறது.

**மூன்றும் அதிகரணம்:-** நிலையில் பொருள் நிலையுடைய பொருளையும் நிலையுடைய பொருள் நிலையில் பொருளையும் அறியாவாயின் அவ்விரண்டினையும் அறியும் பொருள்தான் யாது என்பார்க்கு விளக்கம்தர எழுந்ததே இம்மூன்றும் அதிகரணம் ஆகும்.

அவ்விருபொருள்களையும் அறிவதாயும், அவ்விருபொருள் களால் அறிவதாயும், அவ்விரு பொருள்களின்கண்ணும் அதுவதுவாய் நின்று அறிவதாயும் உள்ளபொருள் உயிரேயாம் என இவ்வதிகரணம் தெளிவு படுத்துகிறது.

இறை உயிர் தளை ஆகிய முப்பொருள்களுள் உயிர் ஒன்றே ஏனையிரண்டினையும் அறிதற்குரியது எனவே தளையை நீக்கவும், இறையை அணுகவும், உரிய முயற்சியை உயிர் செய்ய வேண்டும் என்பது பெறப்படுகிறது. அதற்குரிய முயற்சியில் தலைப்படுதற்கு இந்நூற்பா துணை நிற்றலின் சாதனஇயலுள் இது வைக்கப்படுவ தாயிற்று.

**எட்டாவது நூற்பா**

உயிரானது தான் முற்பிறவிகளில் செய்த புண்ணியப் பேற்றின்பயனாக இதுகாறும் உள் நின்றுபுற அக ஒன்றிய வழிபாடுகளைச் செய்யுமாறு உணர்த்தி வந்த பரம்பொருளே

இதுபொழுது அறிவுநெறியை அருளும்பொருட்டுக் குருவடிவு கொண்டு எழுந்தருளிவந்து தன்னைப்பார்த்து, 'அரசன் மகனுகிய நீ ஐம்பொறிகளாய வேடர் வழிப்பட்டு வளர்ந்து நின் பெருமை களை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய், நின்பெருந்தன்மை இத்த கையது' என்று அறிவிக்க அவ்வுண்மையறிந்து அறிந்த அப் பொழுதே வேடரைவிட்டு நீங்கி முதல்வனுகிய அரசனேடு பிரி வின்றி இயைந்து அம்முதல்வன் திருவடிகளை அணையும் என்பது இந்நூற்பாவின் பொருளாகும்.இது நான்கு அதிகரணங்களை யுடையது.

**முதல் அதிகரணம்:-** குருவருள்வழி வரும் மெய்யுணர்வு எதனுல் வரும் என்பார்க்கு விடையாக இவ்வதிகரணம் விளக்கம் தருகிறது.

புற(சரியை), அக(கிரியை), ஒன்றிய(யோகம்)வழிபாடுகளாய தவங்களே மெய்யுணர்வு பெறுதற்கு ஏதுவாகும், அவையன்றி வேள்விமுதலாயவெல்லாம் துறக்கம் முதலிய பதங்களைத் தந்து கெடுவதன்றி நிலைத்தபயனுகிய மெய்யுணர்வைப் பெற்றுஇறையடி அடைதற்கு ஏதுவாகாது என்பதும் இவ்வதிகரணம் விளக்குகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** மெய்யுணர்வை வழங்கும் குரு நம் மில்ஒருவரன்றி முதல்வன் அல்லன் எனச் சாங்கியரும் நையாயி கரும் கருதுவர். இவர்களை மறுக்கு முகமாக இவ்வதிகிரணம் அமைந்துள்ளது.

இறைவன் உயிர்க்கு உயிராக விளங்குபவன், எனவே உயிரது தகுதியையும் வேண்டுதலையும் அறிந்து உதவுபவன் இறைவனுதல் அன்றி ஏனையோர் அதற்கு ஆகார் என அவர் கருத்து மறுக்கப் படுகின்றது. அவ்வாறு உயிரது தகுதியறிந்து ஞானம் வழங்கும் இறைவன் ஒருமலமுடையார்க்கு உள்நின்றும், இருமலமுடை யார்க்கு தெய்வவடிவில் நின்றும், மும்மலமுடையார்க்கு அவர் போலும் வடிவுகொண்டும் உணர்த்துவன் என இவ்வதிகரணத்தில் மேலும் விளக்கம் தரப்படுகிறது.

**மூன்ரும் அதிகரணம்:-** உலகப் பொருளை விளக்கும் ஐம் பொறிகளே முதல்வனை அறியும் உணர்வையும் தரும். அவ்வு ணர்வை விளக்குதற்குக் குருவேண்டுவதில்லை என்பர் சிவசங் கிராந்தவாத சைவர். இவரை மறுக்குமுகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

ஐம்பொறிகளுள்ஒன்றறிந்ததைப்பிறிதொன்றுஅறியாது,அன் றியும் உயிரியல்பை மயக்குதற்கே அவை பெரிதும் முன்நிற்கும்.

அவ்வைம்பொறிகள் நீங்கினவிடத்து உயிர்க்குக் கேவல அவத்தையே கூடுமாதலின் அப்பொறிகள் உள்ள பொழுதே அப்பொறியுணர்வைப் பொய்யாகக் கண்டு நீங்கவேண்டும். ஆதலின் முதல்வனை அறிதற்கு அவை உரிய துணையாகா என அவர் கருத்து மறுக்கப்படுகின்றது.

**நான்காம் அதிகரணம்:-** பொறியுணர்வைப் பொய்யாகக் காண்டலே அமையும்; மேலும் செயத்தக்க தொரு செயல் வேண்டுவதில்லை என்பர் பேதவாத சைவர். இவரை மறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

ஒருவன் அமர்ந்து ஆடுதற்கு ஆதாரமான ஊசல், கயிறற்ற பொழுது தாங்குதற்குத் தாய்போல்அமைந்திருப்பது தரையன்றிப் பிறிதில்லை. அதுபோல ஐம்பொறிகளின் வேருகத்தன்னைக்கண்ட உயிருக்கும் தாயாக விளங்குவது முதல்வன் திருவடியன்றிப் பிறிதில்லை. ஆதலின் பொறிகளின் வேருகக் கண்டபின் உயிர் இறைவனடி அடையும் என அக்கருத்து மறுக்கப்படுகிறது. அவ்வாறு திருவடியை அணைந்த உயிர் மீண்டும் பொறிவழிச் செல்லாது என்றும், பழைய பழக்க வாசனையால் ஒரோவழிச் செல்லினும் இறைவன் திருவடியை நினைந்துஅப்புன்மையை மாற்றவேண்டும் என்றும் மேலும் இவ்வதிகரணம் விளக்கம் தருகின்றது.

உயிர் உய்தி பெறுதற்குரிய குருவருள் பெறுதலை இந்நூற்பா உணர்த்தலின் சாதன இயலில் வைக்கப்படுவதாயிற்று.

### ஒன்பதாவது நூற்பா

யாதொரு துணையுமின்றி அறிய முடியாத குறையுடைய உயிரறிவானும், துணையாகிய கருவிகரணங்களின் வழி உண்டாகும் ஒருவழியறியம் [ஏக தேசமாகிய] பாசஅறிவானும் முதல்வனை அறிய இயலாது. அவ்விரண்டானும் அறிய இயலாத முதல்வனை அவனுடைய திருவடி ஞானத்தால் உயிராகிய தன்னறிவின் கண்ணே ஆராய்ந்தறிக. அவ்வாறறிவதோடு நிலம் முதலாக உள்ள பாசக்கூட்டத்தை மிகவிரைந்துசெல்லும் கானல் நீரெனக்கண்டு அதனின்றும் நீங்கவே அத்திருவடி ஞானமாகிய பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அவ்வாறு கண்ட காட்சி சலியாது நிலைத்தற்பொருட்டு அப்பொருளை அடைதற்காகத் திருவைந் தெழுத்தை முறையாக எண்ணவேண்டும் என்பதுஇந்நூற்பாவின் கருத்தாகும். இது மூன்று அதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** இறைவன் பாச ஞானத்தால் அறியப் படானுயினும் பசு ஞானத்தால் அறியப்படுவன் எனில் வரும் இழுக்கென்னே? என்பர் சிவ சமவாத சைவர். இவரை மறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது. உயிர் பொறியின்றி ஒன்றும் புணராத புன்மை உடையது. உணர்த்த உணரும் சிறுமை உடையது. யான் எனது என்னும் செருக்கு உடையது. ஆதலின் உயிர் தன்னறிவால் இறைவனைக் காண்டற்கில்லை. முதல்வன் அருளாலேயே அவனை வணங்கவும் காணவும் தகுதி உடையதென அவர் கருத்து மறுக்கப்படுகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** இறைவனது திருவருள் ஞானத்தைப் பெறுதற்குச் செய்யவேண்டுவது என்ன? என்பதை இவ்வதி கரணம் விளக்குகிறது.

நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவைப் போக்குதல் வேண்டும். அவ்வாறு போக்கியவிடத்துத் தன்னறி வின்கண் தோன்றும் சிவத்தை ஆராய்ந்து அச்சிவம் நான் எனப் பாவித்தல் வேண்டும். அப்பாவனையால் ஆணவமலப்பற்று நீங்கும் என இவ்வதிகரணம் விளக்குகிறது.

**மூன்றாம் அதிகரணம்:-** உயிரைத் தூய்மைசெய்தற்கு நிலையில் பொருளை நிலையில் பொருளெனக் கண்டு கழிக்க அதன் வழித் தோன்றும் திருவடி ஞானமேயமையும் அதற்கு மேலும் செயத் தக்கதொன்று இல்லை என்பார்க்கு மேலும் செய்யத்தக்கதுஉண்டு என இவ்வதிகரணம் விளக்குகிறது.

இறைவனின் திருவடிஞானம் விளங்கித் தோன்றிய பின்னும் பழைய பழக்கவாசனையால் விட்ட உலகியலுணர்வை மீளப் பற்றவும் நேரும். அவ்வாறு பற்றுதிருத்தல் பொருட்டு முத்திப் பேற்றுக்குரிய திருவைந்தெழுத்தை அறிவால் எண்ணுதல் வேண்டும். உடம்பினுள் இதயத்தை வழிபடுதற்குரிய இடமாகவும், உந்தியைவேட்குமிடமாகவும், புருவநடுவைத் தியானத்திற்குரிய இடமாகவும் கருதிக் கொண்டு வழிபடுதற்குரிய இதயதாமரையில் முத்திப்பேற்றிற்குரிய திருவைந்தெழுத்தையே திருமேனியாகவுடைய சிவபெருமான் வீற்றிருப்பதாகப் பாவித்து அப்பெருமானைக் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் எண்வகை

மலர்களைக்கொண்டு முத்திப்பேற்றிற்குரிய திருவைந்தெழுத்தால் போற்றிசெய்து உந்தியில் உள்ள குண்டலினி சத்தியை ஞான மாகிய நெருப்பாலெழுப்பி அதனால் புருவ நடுவில் ஐந்தெழுத்தில் சிகர யகர வகரங்கள் நிற்கும் முறையை நினைந்து அம்முறைமை யால் சிவம் நானெனச் சிவோகம்பாவனை செய்யின் அப்பா வனையால் பாவிக்கப்படும் அம்முதல்வன் விளங்கித்தோன்றுவன். அதுபொழுது உயிர்முதல்வனாய்த் தான் அடியனாய் நிற்கும் நிலையைப் பெறுவன். இதனால் உயிர்க்குப் பழக்க வாசனையறும். கிரகணகாலத்தில் கதிரவனிடத்தும் மதியத்திடத்தும் இராகு கேதுக்களைக் காண்டல்போல இதயத்தில் இவ்வாறு எண்ணு தலால் முதல்வனைக் காணலாகும். அண்டத்தில் காணப்படும் முப்பத்தாறு தத்துவங்களையும் பிண்டத்துள் இதயத்தில் அம் முதல்வன் எழுந்தருளியிருத்தற்குரிய தாமரையாகக் கொண்டு அதன்கண் வீற்றிருக்கும் சிவபரம் பொருளைத் திருவைந் தெழுத்தால் போற்றி செய்தல் தக்கதாம்.

குருவருள் பெற்ற பின்பும் பழைய பழக்கவாசனையால் வரும் உலகிய லுணர்வைத் தூர்த்தற்கும்,பெற்ற பேற்றில் திளைத்தற்கும் உரிய சாதனையை இந்நூற்பா கூறுதலின் இது சாதன இயலாயிற்று

## பயனியல்

மேற்கூறிய சாதனையால் உயிர்பெறும் பேறு மலநீக்கமும் சிவப்பேறும் ஆம் என்பதையும், அப்பேறு பெற்றோர் மேற் கொண்டு ஒழுகத்தக்க முறையையும்,பெற்றோர் தம் இயல்பையும் 10,11,12ஆம்நூற்பாக்கள்கூறுதலின் இவ்வியல்பயனியல்ஆயிற்று.

### பத்தாவது நூற்பா

மேற்கூறியவாறு ஞானக்கண்ணால் காணப்படும் அம் முதல்வன் கட்டுநிலையில் உயிரொடு உடனாய்நின்று உயிர் அறியும் வண்ணம் தான் அறிந்தும் அவ்வுயிருக்கு முதல்வன் இருக்கிறான் என வேறு காணப்படாமல் உயிர் தானே அறிந்த தாக எண்ணுமாறு அவ்வுயிரொடு ஒற்றுமைப்பட்டு நின்றவாறு போல, வீட்டு நிலையில் உயிர் அம்முதல்வனொடு உடனாய் நின்று இன்பத்தைத் துய்ப்பினும் துய்க்கின்றதான் உண்டென வேறு காணப்படாமல் அம்முதல்வனொடு ஒற்றுமைப்பட்டு அம்முதல்

வனேயாய் அவன் அருள்வழியில் வழுவாது நிற்றல்வேண்டும். அவ்வாறு நிற்கவே ஆணவம் மாயை ஆகிய இருமலங்களோடு வலிய கன்மமலமும் ஒழியும் என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இந்நூற்பா இரு அதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** ஒன்பதாவது நூற்பாவில் கூறியவாறு ஞானக்கண்ணுல் முதல்வனைக்கண்டு உயிர்தூய்மை பெற்றதே அமையும்; அதன் மேல் வீடுபெறுதற் கெனச்செய்யவேண்டுவது ஒன்றில்லை என்பர் சிவசமவாதசைவர். இவரை மறுக்குமுகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

ஞானக்கண்ணுல் முதல்வனைக் கண்டவிடத்தும் அவ்வாறு கண்டோமென்னும் தனமுனைப்பு அருது. ஆதலின் அதன்வழி உளவாகும் யான் எனது என்னும் மயக்கம் நீங்குதற்பொருட்டு யான் என ஒருபொருள் இன்று என அறிந்து எல்லாப் பொருளும் இறைவனேயாம் எனக் காணும் தெளிந்த அறிவுடைமையும் வேண்டுமாதலின் அப்பொருண்மையுடைய ஏகனுகி நிற்றலும் வேண்டுமென இவர்கருத்து மறுக்கப்படுகிற து.

**இரண்டாம் அதிகரணம்:-** உடம்பு உள்ளளவும் நுகர்வினையும் அது பற்றி உண்டாகும் வருவினையும் நீங்கா. ஆதலின் ஏகனுகி நிற்றல் எங்ஙனம்? எனவினவுவர் சுத்தசைவர் முதலானேர். இவரை மறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது,

இறைவன் திருவருட் செயலின்றித் தன்செயலென்பது ஒன்றில்லை என அறிந்து எல்லாம் அவன்செயலே எனக்கருதி அவ்வருள் வழி நிற்பார்க்கு நுகர்வினை உயிரைத்தாக்காது; முதல்வன் திருமுன்னிலையில் அது உடல் ஊழாகக் கழிந்துவிடும். வருவினையும் வறுத்தவித்தென வலியின்றிக் கழியும். ஆதலின் ஏகனுகி நிற்றல் அமையும் என இவர்கருத்து மறுக்கப்படுகிறது. தன்னை வந்து அடைந்தோர்க்கு நுகர்வினையும் வருவினையும் கழித்தல் சார்ந்தாரைக்காத்தல் தலைவர் கடனுதல் பற்றி அமையும் என்றும், அச்செயல் ஒருபால்கோடுதல் ஆகாது என்றும், இறைபணியில் நிற்பார்க்கு நுகர்வினை தாக்குதல் ஒரோவழி அவர் மனம் பிறழ்தல் பற்றியேயாம் என்றும், அதனுல் ஊறு நேரினும் அதுபற்றிக் கவலுதல் இன்றி ஏகனுகி நிற்பதினின்றும் மீண்டும் திறம்பாது நிற்க வருவினையும் அவரைத் தாக்குதல் இல்லையாம்

என்றும், அந்நிலையில் இதுகாறும் மாறிநின்ற ஐம்புலன்களும் அம்மாறுபாடு ஒழிந்து அவர்வழி நிற்கும் என்றும் இவ்வதிகரணம் மேலும் விளக்குகிறது.

## பதினோராவது நூற்பா

காட்டக்காணும் தன்மையுடைய கண்ணுக்கு அப்பொருளைக் காட்டித் தானும் காண்கின்ற உயிர்போல, உணர்த்த உணரும் தன்மையுடைய உயிர்க்கு முதல்வனும் அப்பொருளை அறியுமாறு செய்து தானும் அறிந்து வருவன். அவ்வாறு ஒன்றுபட்டுநின்று உதவிவரும் முதல்வனது கருணையை மறவாது உறுதியாகப் பற்றி அன்புசெய்யவேண்டும். அவ்வன்பினுன் முதல்வன் திருவடியாகிய சிவப்பேற்றை உயிர் எய்தும் என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இஃது இரண்டு அதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** இறைவன் உயிர்களுக்கு அறிவித்தலாகிய காட்டும் உதவி மட்டுமே செய்வன் காணும் உதவியைச்செய்வன் என்றல் பொருந்தாது என்பர் ஒருசாரார். இவரை மறுக்கு முகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

விளக்கொளியானது கண்ணொளியோடு கலப்பதன்றி அது காணும் பொருளொடும் கலத்தல் வேண்டும். அப்பொழுதுதான் கண் பொருளைக்காண இயலும். அதுபோல முதல்வனுடைய அறிவு உயிராகிய தம்மறிவொடு கலந்து அது காணும் பொருளிலும் கலந்து நின்றால் மட்டுமே உயிர் விளக்கம் பெறும். ஆதலின் முதல்வன் காணும் உதவியும் செய்வன் என இவர் கருத்து மறுக்கப்படுகிறது.

**இரண்டாம் அதிகரணம்:-** கட்டுநீங்கி ஏகனாய் நிற்கும்பொழுது மறவாமையும் அன்பு செய்தலும் திருவடி அடைதலும் எவ்வாறு கூடும் எனவினவுவர் ஒருசாரார். இவரை மறுக்குமுகமாக இவ்வதிகரணம் எழுந்தது.

மறவாமையும் அன்புசெய்தலும் திருவடியடைதலும் ஆகிய மூன்றும் உடைமையே ஏகனாய் நிற்கும் நிட்டையாகும். அந்நிட்டையாகிய இறையடி அடைதல் இறைவன் மீது வைத்த அயரா அன்பால் உடம்பு உள்ளபொழுதே கூடும் என இவர் கருத்து மறுக்கப்படுகிறது.

மலநீக்கமும் சிவப்பேறும் உயிர் பெறும் நிலையாய பயனுதலின் அவ்விரண்டையும் கூறும் பத்து, பதினேராவது நூற்பாக்கள் பயனியலாயின.

## பன்னிரண்டாவது நூற்பா

மேற்கூறியவாறு அயரா அன்பின் அரன்கழல் அடைந்தகட்டு நீங்கியோன் (முத்தன்) வினைப்பயனைத் துய்க்கப் புறத்துச் செல்லுங்கால் சீவன் முத்தன் எனப்படுவான். அன்னேன் புறத்துச் செல்லுங்கால் செந்தாமரை போல விரிந்து விளங்கிய முதல்வனுடைய, யாவற்றையும் தாங்கும் தகைமையதாய திருவடியை அணையவொட்டாது அதனை மறக்குமாறு மும்மலங்களும் செய்விக்கும். அம்மலங்களை ஞானம் என்னும் நீரினல் கழுவி இறைவனிடத்து அயரா அன்புசெய்யும் மெய்ஞ் ஞானிகளொடு கலந்து கூட மலம் நீங்கும். மலம் நீங்க அம்மெய்யுணர்வுடையோரது திருவேடத்தையும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலையும் முதல்வன் எனவே கண்டு வழிபடுவன் என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இந்நூற்பா மூன்று அதிகரணங்களை உடையது.

**முதல் அதிகரணம்:-** சீவன்முத்தர் முதற்கண் செய்ய வேண்டுவது இதுவென இவ்வதிகரணம் உணர்த்துகிறது.

மெய்யுணர்ந்து நிட்டை கூடினரிடத்தும் முன்பு பத்தாவது நூற்பாவில் கூறியவாறு களையப்பட்ட மும்மலங்களும் யாதானும் ஒருவழியால் நுழைந்து தம்மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்தி பிறவிக்கு வித்தாகிய பழைய விபரீத உணர்வை மேற்படுத்த முனையும் அவ்வாறு முனையும் பொழுதே, இறைவனையே நோக்கி நிற்கும். காட்சியானும், அவனருள் வழிநிற்கும் மாட்சியானும், அவற்றைக் களைதல் வேண்டும் என்பதாம். நுகர்வினையின் காரணமாக விருப்பு வெறுப்புக்களும் அவற்றுல் உலகியலுணர்வும் அதனல் முனைப்பும் தோன்ற நேரும்பொழுது இறைவனையே கண்டு நிற்கும் காட்சியும் அவனருள்வழியே நிற்கும் கருத்தும் நிலைபெறின் அம்மலவாதனை ஏற்படாதென்பது கருத்து.

**இரண்டாம் அதிகரணம்:-** இவ்வாறு செய்த மலநீக்கத்தை நிலைபெறச் செய்வதற்கு இரண்டாவதாகச் செய்ய வேண்டியது என்ன என்பதை இவ்வதிகரணம் விளக்குகிறது.

தாம் மலநீக்கம் பெற்றதோடமையாது அவ்வாறு மலநீக்கம் பெற்ற ஞானிகளோடு இணங்கி வாழுதலே இரண்டாவதாகச் செய்யத்தக்கதென இவ்வதிகரணம் கூறுகிறது.

**மூன்ரும் அதிகரணம்:-** மேற்கூறியவாறு ஞானிகளோடு இணங்கிய இணக்கம் நிலைபெறுதற்கு மூன்ருவதாகச் செய்யத் தக்கதென்ன என்பதை இவ்வதிகரணம் விளக்குகின்றது.

சிவபெருமான் வெளிப்பட்டு விளங்கும் அடியவரது திருவேடத்தையும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோவிலையும் சிவபெருமானே எனக் கண்டு வழிபடுதல் மூன்ருவதாகச் செயத் தக்கதாம்.

**ஒழிபு அதிகரணம்:-** இந் நூற்பாவின் இறுதியில் மேற்கூறியமூன்று அதிகரணங்களின் ஒழிபாக இவ்வதிகரணம் அமைந்துள்ளது.

சீவன் முத்தராவர் இயல்பாகவே மலம் களைந்தும் சிவபத்தரோடு இணங்கியும் திருவேடத்தையும் திருக்கோவிலையும் வழிபட்டும் வாழ்பவராவர். அவ்வாருக இவற்றைக் களைக இவரோடு இணங்குக இவ்விடங்களை வழிபடுக என விதியாக வைத்து ஓதியது எற்றுக்கு? என்பார்க்கு இவ்வதிகரணம் விளக்கம் தருகிறது.

மேல் மூன்ருவது அதிதரணத்தில் வழிபடுக என்றுள்ளது. இவ்வதிகரணத்தும் வழிபடுக என்றுள்ளது. இனம் பற்றிக் களைக இணங்குக என்பவற்றையும் ஈண்டுக் கொள்ளல் வேண்டும். இவ்வாருகவே களைக என முதல் அதிகரணத்தும், இணங்குக என இரண்டாம் அதிகரணத்தும் கூறப்பட்டிருக்க, மீண்டும் கூறுதல் எற்றுக்கு? என்னும் வினு எழும். முன்மூன்று அதிகரணத்தும் கூறிய களைக இணங்குக வழிபடுக என்ற சொற்கள் படுத்தலோசையாக அதாவது மெதுவாகக் கூறுமாறு உள்ளன. ஈண்டுக் கூறுவன எடுத்தலோசையாக அதாவது வன்மையாக கூற உள்ளன. எனவே இம்மூன்றும் சீவன்முத்தர்க்கு இன்றியமையாதனவென வலியுறுத்தற்கு இங்கு விதித்தற்பொருட்டாக அதனைக் கூறினர் என்பதாம். இறைவன் எல்லாமாய் அல்லவுமாய் நிற்பினும் அவன் வெளிப்பட்டுத் தோன்றும் இடம் திருவேடமும் திருக்கோவிலுமாதலின் இவ்விடங்களில் வழிபடுதல் இன்றியமையாது வேண்டப்படும்.

காரிட்ட ஆணவக் கருவறையில் கட்டுண்டு கண்ணிலாக் குழவியைப் போல் மயங்கிநின்ற உயிரைப் படிப்படியாகப்

பல்வேறு பிறவிகளால் உயரச்செய்து மானுடப் பிறவியுந் தந்து அப்பிறவிவழித் தெய்வமென்பதோர் சித்தம் உண்டாகவும் செய்து அதன்வழி சிவத்தையடையுமாறு வாழ்வித்திருக்கும் இறைவனின் கருணை எண்ணற்குரியதாகும். அந்நன்றியை மறவாது வழிபடுதலே உயிர்க்கு மாண்பாகும்.

இந்நூல் மும்மலமுடைய சகலர்க்கு ஞானாசிரியனால் அருளத் தகுவதாம்.

## 6. அணிவகைகள்

ஆசிரியர் மெய்கண்டார் தாம் எடுத்துக்கொண்ட மெய்ப் பொருள் தெளிவாகவும் சோர்வின்றியும் விளங்குதற்கு அணி நலங்களைப் பெரிதும் கையாண்டுள்ளார் அவ்வகையில் நூற்பாவில்ய வரும் உவமைகள் ஏழாம், 1. அமைச்சரசேய்ப்ப, 2. விளம்பி உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு, அளந்தறிந் தறியா ஆங்கவை போல, 3. காந்தங்கண்ட பசாசத் தவையே, 4. உராத்துனைத் தேர்த்தென, 5. அவனே தானே ஆகிய அந்நெறி, 6. காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல், 7. செம்மலர்நோன்றாள்.

நூற்பாவில் வரும் உருவகம் இரண்டாம். 1. ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து, 2. தண்நிழலாம்பதி.

மேற்கோளில் வரும் உவமைகள் ஐந்தாம். 1. ஒருநகரியைக் காப்பான் பாடிகாவல் இட்டாங்கு, 2. என்பதி என்மனை என்றாற் போல, 3. பளிங்கில் இட்டவன்னம் போல், 4. ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாம் துணையாம், 5. வேம்பு தின்ற புழுப்போல.

வெண்பாவில் வரும் உவமைகள் நாற்பத்தெட்டாம், 1. வேட்டுவனும்அம்புழுப்போல், 2. கண்ட நனவுணர்வில் கண்ட கனவுணர 3. கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு உள்ளம் இட்டதொரு பேரழைக்க என் என்றாங்கு, 3. அக்கரங்களின்றும் அகரஉயிர் இன்றேல், 5. பண்ணையும் ஓசையும் போலப்பழமதுவும் எண்ணும், சுவையும் போல், 6. அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல் 7. செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய்யேபோல், 8. காந்த பசாசம் போல், 9. நெல்லிற் குமியும் நிகழ் செம்பினிற்களிம்பும் சொல்லிற் புதிதன்று தொன்மையே. 10 பொன் வாள் அலர்சோகம் செய்கமலத்தாம், 11. கண்ட நனவைக் கனவுணர்வில் தான் மறந்து

12. அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு பரகாயம் போய் வரும் அப்பண்பும், 13. குடாகாய ஆகாயக் கூத்தாட்டு, 14. பொன் ஒளிபோல், 15. தர்ப்பணம் போல், 16. தீபமே போல, 17. கடல் திரையை ஒத்து, 18. போது போல் ஆங்கு, 19. கடல் திரையே போன்று, 20. வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம் போல், 21. வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது வெய்யோனை ஆகாத மீன்போல, 22. இரவிபோல், 23. நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும் ஓரில் அவை இன்றுமாறு ஒப்பு, 24. கதிர் முன் இருள்போல, 25. பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு மற்றணைந்த பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின், 26. மலர் மணம்போல், 27. தண்கடல் நீர் உப்புப் போல், 28. பசித்து உண்டு பின்னும் பசிப்பானைப் போல், 29. இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழை பால் நல்லாய் உளவாமால், 30. நீர் நிழல் போல், 31. பன்னிறம் காட்டும் படிகம் போல், 32. சிறை செய்ய நின்ற செழும் புனலின் சிறை விட்டு அலைகடலில், சென்றடங்குமாறுபோல், 33. நீர்ப்பாசி போல், 34. காட்டிய கண்ணே தனைக்காண கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண்காணு, 35. ஒண்கருட சானத்தில் தீர்விடம் போல், 36. இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்கு, 37. கனல் சேர் இரும்பென்ன, 38. இங்குளி வாங்கும் கலம் போல, 39. நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் பண் அமர மாச்செலுத்தும் பாகரினும், 40. எரிகதிரின் முன் இருள் போல், 41. அருக்கன் நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு, 42. பகல் அலர்த்தும் தாமரை போல், 43. மன்னும் இருளை மதி துரந்தவாறு 44. தன்னில் வலித்து இரும்பைக் காந்தம் வசம் செய்வான், 45. அப்பணைந்த உப்பின், 64. பொன் வாள் முன் கொண்மூவில் புக்கொடுங்கப் போயகலத் தன் வாளே எங்குமாம் தன்மை போல், 47. ததி நெய் போல், 48. காட்டத்தில் அங்கிவேறு உண்டல் போல்.

இவையன்றிச் சிறப்புப் பாயிரத்தும் உரையின் கண்ணும் வரும் உவமைகளும் சிலவுள. அவையனைத்தும் நூற்பொருளை விளங்குதற்குப் பெருந்துணையாய் இருத்தலின் அவற்றின் பொருள் அறிதலும் ஈண்டுத் தக்கதாம்.

**உவமைகள்**

1. ''மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண் போல்''

கண்ணுக்கு இருட்கேடும் பொருட்காட்சியும் கதிரவனுல் உண்டா தல் போல, உயிருக்கு மலத்தீர்வும் சிவப்பேறும் சிவஞான போதத்தால் உண்டாகும் என்பது கருத்து.

2. ''மண்பால் குளிர்ந்து வித்துண்டாம்மூலம்''

நிலம் குளிர்ந்தவிடத்து வித்தினின்று முளை தோன்றுமாறுபோல, இறைவனுடைய நினைவு மாத்திரையின் மாயையினின்று உலகம் தோன்றும் என்பது கருத்து.

3. ''வேட்டுவனும் அப்புழுப்போல்''

குளவிகளில் ஓர் இனமாய வேட்டைவாளியாதலை விரும்பும் புழு விற்கு, அது விரும்பிய அவ்வடிவினை அப் புழுவை எடுத்து வைத் திருக்கும் குளவி கொடுக்குமாறுபோல, அவரவர்தம் வினைக்குத் தக விரும்பும் வடிவினையும் பயன்களையும் மாயையினின்று இறைவன் தோற்றுவித்துக் கூட்டுவன்.

4. ''காலத்தில் தாக்காது''

காவம் என்னும் அருவப் பொருள் இறப்பு, நிகழ்வு, எதிர்வு நாள், நாழிகை முதலியவையாய் வேறுபட்டு எல்லாத்தொழில் செய்தும் தனக்கு விகாரமின்றி நிற்கும், அதுபோல முதல்வனும் விகாரமின்றி நினைவுமாத்திரையில் இவ்வுலகைப் படைப்பன்.

5. ''உளத்தில் கண்ட நனவுணர்வில்
கண்ட கனவுணரக் கண்டளவில்''

நூலைப் பயிலும் ஒருவன் அதன்கண் வரும் துறக்கம் நிரயம் முதலிய சொற்களும் அவற்றிற்குரிய பொருள்களும் உள்ளத்தில் தோன்றினும் அவற்றில் தொடக்குறுவதில்லை, கனவில் அதற்குரிய பொருளைக் கண்ட ஒருவன். நனவில் அவ்வாறு கண்டதாக உணரும் காலத்துத் தான் முன்கண்ட அப்பொருள்களால் அச்சுறு வதில்லை. இவை போன்றே இறைவனும் நினைவுமாத்திரையில் இவ் வுலகைத் தோற்றுவித்தலின் அவ்வாறு தோற்றுவித்தலால் ஒரு விகாரமுமடைவதில்லை என்பது கருத்து.

6. ''கண் ஒளி''

இருள் நீங்கியவிடத்தும் கண்ணுக்குக் காணும் தொழில் ஞாயிற்றை இன்றி அமைவதில்லை. அதுபோல உயிருக்கு மலம்

நீங்கிய வீடுபேற்று நிலையிலும் உடனின்று அறிவிக்கும் முதல்வன் இன்றியமையாதவனும்.

7. ''உடலில் உயிர்போல்''

உடலில் உயிர் கலந்திருப்பதுபோல இறைவன் உயிரொடு கலந்து அவ் உயிர்களேயாய் நிற்பன், இது இறைவன் ஒன்ருய் நிற்றற் குரிய எடுத்துக் காட்டாகும்.

8. ''கண்ணின் அருக்கன்போல்''

கண்காண்டற்குக் கதிரவன்ஒளி தேவையாயினும் பொருள் தன்மையால் இவ்விரண்டும் வேரும். அதுபோல உயிர் இயக் கத்திற்கும் இறைவன் காரணமாய் இருப்பினும் இறைவனும் உயிரும் வேரும். இது இறைவன் வேருய்நிற்றற்குரிய எடுத்துக் காட்டாம்.

9. ''கண்ணொளியின் ஆன்மபோதம் போல''

கண்ணொளி பொருளைக் காண்டற்கு உயிரது அறிவு, உடன்நின்று கண்ணொளியோடு கூடப் பொருளில் செல்லுமாறுபோல, உயிர் கள் இன்பதுன்பங்களைத் நுகர்தற்கு அவ்வின்பதுன்பங்கட்டு முன்னிலையாகிய பொருள்களில் உயிரோடு கூட இறைவன் செல் லுவன். இது இறைவன் உடனுய் நிற்றற்குரிய எடுத்துக்காட்டாம்.

10. ''பொன்னும் மணியும் போல்''

பொன்னே அணியாவதுபோல பிரமமே உயிராகும் என்பர் ஏகான்ம வாதிகள்.

11. ''இருளும் ஒளியும் போல்''

இருளும் ஒளியும் வேறுவேறு ஆதல்போல உயிரும் முதல்வனும் வேறுவேரும் என்பர் மாத்துவர்.

12. ''சொல்லும் பொருளும் போல்''

சொல்லும் பொருளும் ஓராற்ருன் ஒற்றுமையும் பிறிதொரு வாற்ருன் வேற்றுமையும் உடையவாதல் போல, உயிரும் இறை யும் ஓராற்ருன் ஒன்ருயும் பிறிதொருவாற்ருன் வேருயும் நிற்கும் என்பர் பாஞ்சராத்திரிகர்.

13. ''கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு உள்ளம்
இட்டதொரு பேரழைக்க என்என்ருங்கு''

நரம்பு முதலியவற்ருல் கட்டப்படும் கருவிகளைக் கொண்டும் நிற்கும் உடலொடு கூடி உயிர் நிற்கிறது. அவ்வுடம்பிற்கிட்ட பெயரை அழைக்குங்கால் உயிர் என்னை? என்று கேட்கிறது. அவ்வாறு கேட்பதற்குக் காரணம் உடல்வேறு உயிர்வேறு என்பதன்றி அவ்விரண்டும் ஒன்ருய்க் கலந்துநிற்றல் பற்றியாம். அதுபோல முதல்வனும் உயிரோடு கலந்து நிற்பன். அவ்வாறு கலந்து நிற்றலால் ஒன்ருய் இருப்பினும் உயிர் முதல்வனுகாது முதல்வனும் உயிராகான். இது உயிர்களோடு இறைவன் ஒன்ருய் நிற்றற்குக் காட்டப்பட்ட உவமையாகும்.

14. ''அக்கரங்கள் இன்ரும் அகரஉயிர் இன்றேல்
இக்கிரமத்து என்னும் இருக்கு''

அகர உயிர் இல்லையாயின் ஏனைய எழுத்துக்கள் இல்லை. அது போல பிரமப்பொருள் இல்லையாயின் ஒருபொருளும் இல்லை என்று கூறும் வேதம், இது உயிர்களோடு இறைவன் வேருய் நிற்றற்குக் காட்டப்பட்ட உவமையாகும்.

15. ''பண்ணையும் ஓசையும்போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும் போல்''

பண்ணும் அதனேடு பிரிப்பின்றி நிற்கும் ஓசையும் போலவும், பழமும் அதனிற்பிரிப்பின்றிநிற்கும் சுவையும் போலவும்யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்கும் இறைவனும் உயிர்களோடு பிரிப்பின்றி இயைந்து நிற்பன் இது உயிர்களோடு இறைவன் உடனுய் நிற்றற்குக் காட்டப்பட்ட உவமைகளாம்.

16. ''அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல்''

உருக்கிய அரக்கினேடு சேர்த்த கற்பொடி பிரிக்கமுடியாமையால் ஒன்ருயும், பிரிக்க முடியாதாயினும் கற்பொடி எனத்தெரிதலால் அவ்வரக்கின் வேருயும், அரக்குமுழுதும் அக்கற்பொடி தெரிதலால் உடனுயும் நிற்குமாறுபோல, முதல்வனும் உயிர் களோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்பன் என்பதாம். இது முதல்வன் உயிர்களோடு ஒன்ருயும், வேருயும், உடனுயும் நிற்றற்குக் காட்டப்பட்ட உவமையாம்.

17. ''ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவல் இட்டாங்கு''

ஒரு நகரத்தைக் காக்கும் அரசன் பாசறையில் காவல் வைத்துத்

தண்டத் தொழிலை அதற்கு உரிய ஒரு அலுவலர் மாட்டுவைத்துச் செய்வதுபோல, முதல்வனும் உலகை மீளப் படைக்குங்கால் தனது ஆற்றலை (சத்தியை) இருவினையின் இடமாக வைத்து நடத்துவன் என்பதாம்.

18. "செய்பவர் செய்திப் பயன்விளைக்கும் செய்யேபோல்"

உழவர் செய்யும் தொழிற்குத் தக்கபயனை விளைநிலம் விளைவிப்ப தன்றி அத்தொழில் தானே விளைவிக்க மாட்டாது. அதுபோல உயிர் செய்யும் வினைக்குத் தக்கபயனை இறைவனே கூட்டு விப்பன் என்பதாம். இதற்கு முன்னைய எடுத்துக்காட்டில் முதல் வனுக்கு அரசனையும் வினைக்கு அலுவரையும் உவமையாகக் கூறினர். இவ்வெடுத்துக்காட்டில் முதல்வனுக்கு விளைநிலத்தையும் வினைக்கு உழவுத்தொழிலையும் உவமையாகக்கூறினர். முதல்வன் பல்வேறு வகைப்பட படைப்பு முதலிய தொழிலைச் செய்வதற்கு வினைவேண்டப்படுதலும், வினைதன் பயனைத் தருதற்கு முதல்வன் வேண்டப்படுதலும் பற்றி இவ்வாறு இரு உவமை கூறினர்.

19. "காந்த பசாசம் போல்"

காந்தத்தின் நேராக இரும்பைக் கூட்டினவிடத்து அது இழுத்துக் கொள்ளும். அதுபோல வினைப்பயனை உயிர்கட்கு இறைவன் நேராகக் கூட்டும் பொழுது உயிர் அதன் பயனைத் துய்க்கும் என்பதாம்.

20. "பொன்வாள் அலர்சோகம் செய்கமலத்தாம்"

தாமரைப்பூவானது கதிரவனுல் முன்விரியாதது விரிதலும் முன் விரிந்தது வாடுதலும் போல மும்மலங்களும் இறைவனுல் தத்தம் செயல்களைச் செய்யும் என்பதாம்.

21. "நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே"

நெல்லிடத்து உமியும் செம்பினிடத்துக் களிம்புமது எக்காலத்து உளவாயின என்று ஆராயின் அவ்விரண்டும் உள்ள அன்றே உள்ளனவன்றி இடையே வந்தன அல்ல. அதுபோல மும்மலங் களும் உயிர் உள்ள அன்றே உள்ளனவன்றி இடையே வந்தன அல்ல.

22. "குடம் உடைந்தவழிக் குடாகாயம் ஆகாயத்தோடு
கூடுமாறு போல"

குடம் உடைத்தவிடத்து குடத்தில் அடங்கியிருந்த வெளி பெரு வெளியோடு கூடுமாறுபோல, உடம்பு நீங்கியவிடத்து உயிர்



பிரமத்தோடு கூடும் என்பர் கிரீடாப்பிரமவாதிகள். இதனை மறுத்து உயிர் நுண்ணுடம்பை நீக்கி வீடடைதற்குரிய உவமையாக இதனைக் கொள்வர் உரையாசிரியர்.

23. ''கண்டநனவைக் கனவுணர்வில் தான்மறந்து''

உயிர் நனவின்கண் கண்டவற்றைக்கனவின்கண் மறந்து அறிவு வேறுபட்டாற் போல,உயிர் தான் செய்த வினைக்கேற்பப் பிறவி எடுக்குங்கால், முன் அவ்வாறு உடல் எடுத்தமையையும், அவ்வுடல் நீங்கியபின் நுண்ணுடம்பு கொண்டு துறக்கம் முதலிய இன்பங்களைத் துய்த்தமையையும் மறக்கும் என்பதாம்.

24. ''அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வரும் அப்பண்பும்''

பாம்பு முன் உள்ள தோலை உரித்துப் புதிதொரு தோலைப் போர்த்துச் செல்லுவது போலவும். உயிர் நனவுடலின் நீங்கிப் கனவுடலில் பொருந்துதல் போலவும், யோகியர் தம் உடம்பை விட்டு வேறு உடம்பிற் சென்று மீளுதல் போலவும், உயிர் பருவுடல் கெட்டவிடத்து நுண்ணுடமபில் நின்றும் துறக்கம் முதலிய இன்ப துன்பங்களைத் துய்த்தற்காம் உடம்புகள் தோன்ற அவற்றில் புக்கு அவ்வின்பதுன்பங்களையும் துய்த்து நிற்கும் என்பதாம்.முன்னை வெண்பாவில் கண்டநனவைக் கனவுணர்வில் தான் மறந்து எனக் கூறியது உயிரின் அறிவு வேறுபடு மாற்றிற்காம். ஈண்டு அக்கனவும் என்றது உடல் வேறுபடு மாற்றிற்காம்.

25. ''பொன்னொளிபோல்''

கதிரவனும் அதன்ஒளியும் ஒன்றுஎன்றோ இரண்டு என்றோ பிரித்தறியவாராது இயைந்து நிற்கும். அதுபோல இறைவனும் சிவம் என்றோ சத்தி என்றோ பிரித்தறிய வாராது இயைந்து நிற்பன்.

26. தீயின்சத்தி ஒன்றுதானே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அருச்சத்தி என்றல் தொடக்கத்து பல்வேறு வகைப்படுமாறு போல

சிவசத்தி ஒன்றே செயல் வேறுபாட்டால் பரை, அதி, இச்சை ஞானம், கிரியை என்றல் தொடக்கத்தும் பல்வேறு பெயர் பெற்று நிற்கும் என்பதாம்.

27. ''தர்ப்பணம் போல்''

கண்ணுக்குத் துணையாய் நின்று விளக்கும் கண்ணுடிபோலக் கட்டு (பெத்தநிலையில்) நிலையில் உயிர்க்கு மாயை அறிவை விளக்கி நிற்கும். தர்ப்பணம்-கண்ணுடி.

28. ''தலைமாத்திரையாய் நிற்கும் இராகுவை இராகுவினது தலை என்று வழங்குமாறுபோல''

உடலின்றித் தலைமட்டும் தனித்து நிற்கும் இராகுவை இராகுவினுடைய தலை என்று வழங்கப்படுமாறுபோல, உடலின்வேருய் உயிர் இல்லையேனும் என்னுடல் எனப் பிறிதின்கிழமைப் பொருள் பட வழங்கப்படுகின்றது. அதுபற்றி உடலின்வேருய் உயிர் உண்டு என்றல் சாலாது எனத் தேகான்மவாதிகள் கூறுவர்.

29. ''இவனும் இவளும் சிற்றில் இழைத்தும் சிறுபறை யறைந்தும் விளையாடுப என்ருற்போல''

''ஒன்றறிந்தது ஒன்றறியா தாகி உடன்மன்னி
அன்றும் புலன்ஆய் அவ்வஞ்செழுத்தை''

எனவரும் வெண்பாப் பகுதியில் ஆகி என்பது ஒவ்வொரு பொறிக்கும் தனித்தனியே உரியது ஆதலின் சிறப்புவினையாம்; அது ஐம்பொறிகளுக்கும் பொதுவாய ஆய் [தல்] என்னும் பொது வினையோடு முடிந்தது. இவ்வாறு முடிதல் மகனுக்குரிய சிறுபறை யறைந்தும் என்னும் சிறப்பு வினையும், மகளுக்குரிய சிற்றில் இழைத்தும் என்னும் சிறப்பு வினையும், இருவர்க்குரிய விளையாடுப என்னும் பொது வினையோடு முடிந்தது போலாம்.

30. ''தீபமே போல''

கண்ணுக்கு விளக்குக் கருவியாதல் போல, மாயை உயிருக்குப் பருமையாயதும் (தூல உடம்பு) நுண்ணிதாயதுமாய (சூக்கும உடம்பு) உடம்பைத் தந்து அவற்றின் வழி விளக்கம் தரும் என்பதாம்.

31. ''அமைச்சு அரசு ஏய்ப்ப''

அரசன் தனக்குச் சூழ்ச்சித்துணையாய அமைச்சரோடு கூடிநின்று தனது அரசியலை நடத்துமாறுபோல, உயிரும் மனம் முதலிய அகக்கருவிகளோடு கூடிநின்று நனவு முதலிய ஐந்தவத்தைப் படும் என்பதாம்.

32. "கடல் திரையை ஒத்து"

கடலின்கண் உண்டாகிக் கரையைப் பொருந்தும் அலைபோல, சுவை முதலாகிய புலன்களைப் பொறி உணர, அப்பொறிவழியாக அகக்கருவிகள் உணர அவற்றின்வழி உயிர் அறியும். புலன்வழி நேரும் இன்பதுன்பங்கள் அலைபோல்வன. கரை உயிர்போல்வது.

33. ''போதுபோல்''

காலதத்துவம் போல என்பது இதன் பொருளாகும். ஞாயிறு முதலியவற்றோடு கூடிநின்று, நாழிகை, நாள், திங்கள், ஆண்டு முதலியனவாகக் காலதத்துவம் பாகுபட்டு வேறுபடினும், அக் கதிரவன் மதியம் விண்மீன்கள் முதலியவற்றின் அது வேறானாற் போல, உயிர் அகக்கருவிகளோடு கூடிநின்று இன்பதுன்பங்களைத் துய்ப்பினும் அவ்வகக் கருவிகளினும் உயிர் வேறாம். முன் திரிபின்றி நிற்றல் பற்றிக் காலத்தைக் கடவுளுக்கு உவமை காட்டினர். ஈண்டும் காலத்தத்துவமாக விளங்கும் பொருள் களிலும், அக்காலம் வேறுதல் பற்றி உயிருக்கு உவமையாயிற்று

34. ''கடல் திரையே போன்று''

அகரம் அகங்காரத்தினையும், உகரம் புத்தியினையும், மகரம் மனத்தினையும், விந்து சித்தத்தினையும், நாதம் உயிரினையும் செலுத்த மனம் முதலியவற்றின் உணர்வு கணந்தோறும் புதிது புதிதாய்த் தோன்றியும் ஒடுங்கியும் வரும். அவ்வாறு வருதல் கடலின்கண் அலை புதிது புதிதாய்த் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போலவாம்; முன்னர்க் கூறிய கடலலை உவமை உயிரின்கண் ஒன்றன்பின் ஒன்றாய் உணர்வு தோன்றுதற்காம். இங்குக்கூறிய இவ்வுவமை உயிரின்கண் உணர்வு புதிது புதிதாய்த் தோன்றுதற்காம்,

35. ''வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றும்
காட்டம் போல''

கேடின்றி நிற்கும் நெருப்பை விறகு தனக்குள் மறைத்து வைத்து அந்நெருப்போடு ஒன்றேயாய் நிற்பதுபோல, கேடில்லாத உயிரை ஆணவம் தனக்குள் மறைத்து வைத்து அவ்வுயிரோடு ஒன்றேயாய் நிற்கும். (காட்டம் - விறகு).

36. ''படைகொடு பவனிபோதும் வேந்தன் கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டு அந்தப்புரத்தில் செல்லு மாறுபோல''

அமைச்சர் முதலிய படைகளுடன் உலாப்போன அரசன் தன் அரண்மனைக்குள் செல்லுங்கால் வாயில்தோறும்நிறுத்தவேண்டிய வர்களை நிறுத்திக் காவலும் வைத்து, அந்தப்புரத்தில் செல்லுமாறு போல நனவின்கண் நின்ற உயிரும் கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கல் ஆகிய நிலைகளை ஒன்றன்பின் ஒன்ருகப் பெறு கின்றபொழுது, அவ்வவ்விடத்தும் நிறுத்தவேண்டிய கருவிகளை நிறுத்தி உயிர்க் காற்றைக் காவலாக வைத்து உள்ளே செல்லும் எனபதாம்.

37. ''விளம்பிய உள்ளத்து மெய்வாய்கண்மூக்கு அளந் [தறிந்து
அறியா ஆங்கவை போல''

மேற்கூறிய உயிரால் மெய்முதலிய ஐம்பொறிகளும் தத்தமக் குரிய பொருளை இது இன்னதென அறியும். அவ்வாறறிந்தும் அறியும் தம்மையும் தம்மை அவ்வாறறிதற்குச் செலுத்தும் உயிரையும்அறியமாட்டா. அதுபோல, வினைப்பயன்களை அறிந்து துய்க்கும்உயிரும் தன்னையும் தான் துய்த்தற்குக் காரணமாய் நிற்கும் திருவருளையும் அறியாது என்பதாம்.

38. ''காந்தம் கண்ட பசாசத்தவையே''

காந்தத்தின் முன்னின்ற இரும்பு இழுத்துக்கொள்ளப்படுமாறு போல முதல்வன் முன்னிற்கும் உயிரும் வினைவழி உய்க்கும் செயல்படும் என்பதாம்.

39 ''வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல''

கதிரவன் ஒளியின் வேருய் விளங்கித்தோன்ருமலும் அக் கதிரவனே யாகாமலும் அதன் ஒளியில் அடங்கி விளங்கித் தோன்றும் விண்மீன்களைப் போல கண்டும், கேட்டும், உண்டும், நுகர்ந்தும், தீண்டியும் அறியப்படும் பொருள்களை முதல்வனுல் உணருங்கால் உயிர் அம்முதல்வனின் வேருதலும் ஒன்ருதலும் இன்றி முதல்வனின் அடங்கி அம்முதல்வனேடு உடனுய் நின்று அறியும் என்பதாம்.

40. ''இரவிபோல்''

கதிரவன் தன்னெளியோடு பிரிப்பின்றி நிற்றல் போல் இறைவ னும் உயிருக்கு அருளவேண்டும் என்னும் கருணையோடு

பிரிப்பின்றி நிற்பவனுவன். மாசற்ற கண்ணிற்குக் கதிரவன் விளங்கித் தோன்றுமாறு போல ஆணவமில்லாத உயிர்க்கும் இறைவன் விளங்கித் தோன்றுவன்.

41. ''நீரில்எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரின் அவை இன்ருமாறு ஒப்பு''

இவ்வுலகம் அழிதல் மாலேய என்பதற்கு நீரில் எழுதிய எழுத்தும் கனவும், கானல்நீரும் உவமையாகும். நீரில் எழுதும் எழுத்து, எழுதும் பொழுதே அழியும்; அதுபோல இவ்வுலகும் தோன்றும் பொழுதே அழியும். கனவில் காண்பவை நனவுவர முடிவுபெறு தலின்றி இடையே மறைந்து போதல்போல இவ்வுலகும் நிலேத்து இருப்பதுபோலத் தோன்றி இடையில் மறைந்து போகும். கதிர வனின் கடுமையானஒளிக்கதிரில் கானல் தோன்றும்; அக்கதிரவன் முகிற் படலத்தில் மறைந்தபொழுது அதுவும் மறைந்து போம். அது போல இவ்வுலகும் நோய் முதலிய யாதானும் ஒரு காரணம் காட்டி மறையும் என்பதாம்.

42. ''அப்பு அணேந்த உப்புப் போல''

நீரைச் சார்ந்த உப்பு அந்நீராகக் கலந்து விளங்குவதுபோல' வீடுபேற்றுநிலேயில் முதல்வன் உயிரின் வேறன்றி நிற்பன் என்பதாம்.

43. ''கதிர்முன் இருள்போல''

கதிரவன்முன் இருள் முனேத்துத் தோன்ருதவாறுபோல, இறைவன் திருமுன்னிலேயில் உலகம் விளங்கித் தோன்ருது.

44. ''கண்ணுடியின் நிழற்போல''

கண்ணுடியின் முன்னிலேயில் அதன் நிழலுக்கு ஒளி உண்டாவது போல உயிர் முன்னிலேயில் அகக்கருவிகளுக்கும் அறிவு உண்டாகும் என்பர் சிவசங்கிராந்தவாதிகள்.

45. ''பேய்த் தேர்நீர் என்றுவரும் பேதைக்கு மற்றணேந்த
பெய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின்''

அறிவில்லாதவனுக்குக் கானல், நீராய்த் தோன்றினுலும் அணுகிப் பார்த்தவிடத்து நீர் என்பது இல்லாதவாறுபோல, ஆராய்ந் தறியாத பொழுது அகக்கருவிகள் அறிவுடையன போலத் தோன்றினுலும் முழுமையாக ஆராய்ந்தவிடத்து அவை அறிவில்லாதனவேயாம்.

46. ''மலர் மணம் போல்''

மலரின்கண் உள்ள மணம் அம்மலர்போல் விளங்கித் தோன்றுது; அவ்வாறு விளங்காமையின் இல்பொருளுமன்று. எனவே அம்மணம் மலரின்கண் அடங்கி அதன் வாயிலாக அறியப்படுவ தொன்றும். அது போல உயிரும் நிலையுடையபொருளாகிய முதல்வனைப் போலவோ நிலையில் பொருளாகிய இவ்வுலகைப் போலவோ தனித்தறியப்படுவதன்றி அவ்விரண்டனையும் அறியும் வழியால் அறியப்படுவதாம்.

47. ''விண்ணிடத்துள்ள ஓசை துணையுள்ளவிடத்து விளங்கியும் துணையில்லாதவிடத்து விளங்காதும் இருப்பது போல''

உயிரினிடத்திலுள்ள அறிவும் அதற்கேற்ற துணையுள்ளவிடத்து விளங்கும், இல்லாதவிடத்து விளங்காதாம்.

48. ''தண் கடல்நீர் உப்புப்போல்''

குளிர்ச்சிபொருந்திய நீர்க்கு இடம் கொடுத்திருக்கும் வெளியில் (கடலில்) உப்பு உளதாகாது அக்கடலினிடத்து உளதாகிய நீரிடத்தே உப்பு உளதாகும். அதுபோல அறியாமையாகிய மயக்கமும் மெய்யறிவை வடிவாக உடைய இறைவனைப் பற்றுது மாறுக உயிரையே பற்றி நிற்கும்.

49. ''பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்''

பசியை நீக்கும் உணவினுல் உளதாகிய இன்பம் மீளப்பசி உண்டாகுங்கால் நிலைத்தலின்றிக்கெடும். அதுபோல வேள்வி முதலியவற்றுல் வரும் துறக்க இன்பம் மீள இவ்வுலகிற்கோ நரகிற்கோ வருங்கால் நிலைத்தலின்றிக்கெடும்.

50. ''பாலில் நெய் போல''

பாலினிடத்து நெய் வேருய் மறைந்து நிற்கும் அது போல மெய்ம்மையான குருவல்லாத உயிர்களிடத்து இறைவன் வேருக மறைந்து நிற்பன். ஞானகுருவிடத்துத் தயிரில் நெய் போல் அக்குருவாகவே விளங்கித் தோன்றுவன்.

51. ''இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால் நல்லாய் உளவாமால்''

பெண் ஒருத்திக்குத் தன் குழந்தையினிடத்து வைத்துள்ள அன்பு பிறர்க்கு வெளிப்படையாகத் தோன்ருது எனினும் அவ்வன்பின் வடிவாய் அவளிடத்து உண்டாகும் முலைப்பாலும் கண்ணீரும் அவ்வன்பைப் பிறர்க்கு அறிய வெளிப்படுத்தும். அதுபோல, உயிர்களது பக்குவம் கண்டவழி இறைவனும், குருவாய் வெளிப்பட்டுத் தோன்றுவன் என்பதாம்.

52. "நீர் நிழல் போல்"

நீரின் கண் உள்ள நிழல் வெளிப்பட்டு வேறு நில்லாது அதனுடன் கலந்து நிற்றல் போல, உயிரிடத்து உள்ள இறைவனும் வெளிப்பட்டு வேறு நில்லாது அவ்வுயிருடன் கலந்து நிற்பன் என்பதாம்.

53. "பளிங்கில் இட்ட வன்னம் போல்"

படிகக் கல்லினிடத்துப் பதிந்த பல்வேறு நிறங்களும் அப்படிக ஒளியைக் கீழ்படுத்தித் தத்தம் நிறங்களையே காட்டி நிற்கும். அது போல, உயிர் அறிதற்குக் கருவியாய் இருக்கும் ஐம்பொறிகளும் உயிர் அறிவைக்கீழ்ப்படுத்தித்தத்தமக்குரிய பொருளுணர்வையே மேற்படக்காட்டும்.படிகத்தில் காணப்படும்நிறங்களைஅப்படிகத்திற்கு வேருகக் காண்பது போல, உயிரிடத்துப் பொறிவழிக் காணப்படும் உணர்வையும் அவ்வுயிர்க்கு வேறென்றறிதல் வேண்டும்.

54. "ஊசல் கயிற்றற்ருல் தாய் தரையே ஆம் துணையான்"

ஒருவன் இவர்ந்து ஆடுவதற்கு இடனுன ஊசல், கயிறு அற்ற பொழுது அவனுக்குத் தாங்குமிடமாக அமைவது தரையன்றிப் பிறிதில்லை. அதுபோல, மாறிநின்று மயக்கிடும் வஞ்சப் பொறிகளின் வேருக உயிர் தன்னைக் கண்டவிடத்து அவ்வுயிரைத் தாங்குவது முதல்வனது திருவடியேயாம்.

55. "சிறை செய்ய நின்ற செழும்புனலின், சிறை விட்டு அலை கடலிற் சென்று அடங்குமாறு போல்"

அணையால் தடைப்பட்டு நின்ற நீர் போல, பாச ஞானத்தால் தடைப்பட்டு நிற்கும் உயிர், அணையை நீக்கின் அதன் அகத்திருந்த நீர் விரைந்து சென்று கடலுள் அடங்கி விடுவது போல, பாசஞானம் நீங்கியபின் இறைவனது திருவடியை அடையும்.

56. ''கண் போல் அவயங்கள் காணு''
ஐம்பொறிகளினும் உயிர் ஒப்பக்கலந்து நிற்பினும் கண் ஒன்றே தொலைவில் உள்ள பொருளையும் அறியவல்லது: ஏனைய தம்மிடத்து வந்த பொருளையே அறியவல்லன. அதுபோல பசு பாசங்களிடத்தில் இறைவன் கலந்திருப்பினும் உயிர் மட்டுமே இறைவனெடு கலந்து எதனையும் அறியும்; ஏனைப்பாசங்கள் அவ்வாறறிவன வல்லவாம்.

57. ''நீர்ப்பாசி போல்''
நீரில் கல்லெறிந்த விடத்துப் பாசி நீங்கும்; எறியாத பொழுது அதன் கண் பரந்து நிற்கும். அதுபோல உயிர் இறைவன் திருவடியை அடைந்துழி மும்மலங்கள் நீங்கும்: மறந்துழி அவை வந்தணையும்.

58. ''உராத்துனைத் தேர்த்துளன''
ஓரிடத்து நிலைபெறுதலின்றிப் பரந்து திரியும் மிகுவிரைவுடைய கானல் நீர் போல, உடல் உலகு முதலிய பொருள்களும் மிக விரைந்து அழிதற்குரியனவாம்.

59. ''காட்டிய கண்ணே தனைக் காணு கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண் காணு''
கண் பொருள்களைக் காணினும் காணும் தன்னையும் காட்டும் உயிரையும் அறிவதில்லை. அதுபோல, உயிரும் தன்னையும் தனக்கு அறிவித்து நிற்கும் முதல்வனையும் அறிவதில்லை.

60. ''ஒண்கருட சானத்தின் தீர்விடம் போல்''
ஒளிபொருந்திய கருடதியானம் செய்ய அத்தியானத்தால் தியானிப்பவன் மனதில் தெய்வத்தன்மைவாய்ந்த மந்திர கருடன் தோன்றும்; அதனுல் விடம் நீங்கும். அதுபோல் உயிர் சிவமாகப் பாவிக்கும் பொழுது அச்சிவம் அதன் அறிவில் தோன்றும்; அதனுல் ஆணவம் நீங்கும் என்பதாம்.

61. ''வேம்பு தின்ற புழுப் போல்''
வேம்புதின்ற புழுஅவ்வேம்பை நீக்கிக் கரும்பைக் கூடி அக்கரும் பின் சுவையை அறிந்து துய்த்த விடத்தும்முன்னைய பழக்கத்தால் வேம்பின் சுவையை நோக்கி அதனிடத்து மீளுமாறுபோல, உயிர்

உலகியலுணர்வை விடுத்துத் திருவருள் உணர்வைப் பற்றிய பின்னும் முன் பழகியபழக்கத்தால் மீளவும் உலகியல் உணர்வை நோக்கி நிற்கும்.

62. ''இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்கு''

நேரே அறியப்படாத, இராகு கேதுக்களைக் கிரகண காலத்தில் மதியத்திடத்தும் கதிரவனிடத்தும் காண்டல் போல, முதல்வனும் உயிர் தன் இதயமலரில் திருவைந்தெழுத்தைக் கொண்டு எண்ணின் அங்கு வெளிப்பட்டு நிற்பன் என்பதாம்.

63. ''காட்டாக்கின்''

விறகிடத்துத் தோன்றும் நெருப்பென்பது பொருள். விறகிடத்துக் கோலைநட்டுக்கயிற்றான் கடைய நெருப்புத் தோன்று மாறுபோல திருவைந்தெழுத்தைக் கொண்டு தியானிக்கில் இறைவன் தோன்றுவன்.

64. ''கனல் சேர் இரும்பென்ன''

நெருப்பைச் சேர்ந்த இரும்பு அந்நெருப்பின் தன்மையாய்க் கறையும் கடினமுமின்றி விளங்குமாறு போல, முதல்வனைக்கண்ட உயிரும், மலமும் முனைப்புமின்றி முதல்வனுக்கு அடிமையாய் விளங்கும்.

65. ''அவனே தானே ஆகிய அந்நெறி''

இறைவன் கட்டுநிலையில் உயிரொடு உடனாய் நின்று உயிர் அறியும் வண்ணம் தானறிந்தும் உயிர்தானே அறிந்ததாக எண்ணுமாறு அவ்வுயிரொடு ஒற்றுமைப்பட்டு நின்றவாறு போல, வீட்டுநிலையில் உயிர் முதல்வனொடு உடனாய் நின்று இன்பத்தில் திளைப்பினும் அம்முதல்வனேயாய் அவனுடன் ஒற்றுமைப்பட்டு நின்று அவனின் வேறன்றி நிற்றல் வேண்டும் என்பதாம்.

66. ''இங்குளி வாங்கும் கலம் போல''

பெருங்காயம் இருந்த கலத்தில் அதனை எடுத்துவிட்ட பொழுதும் அக்கலத்தில் அதன் வாசனை விடுவதில்லை. அதுபோல இறை பணியில் நிற்கும் தத்துவ ஞானிகளுக்கும் ஒரோவழி உடம்பைத் தான்என எண்ணும் எண்ணம் உண்டாகும். (இங்குளி -

பெருங்காயம். உளி ஏழன் பொருள்பட வந்த இடைச்சொல்; அது ஈண்டு ஐந்தனுருபின் பொருள்பட நின்றது)

67. "நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும்"

நெருப்பின் நடுவிருந்தும் அந்நெருப்பினால் சுடப்பெறாமல் இருப்பர் நற்றவம் உடையார். (இது சித்தி வகையினுள் ஒன்று. இதனை அங்கித்தம்பனம் என்பர்.) நடக்கும் கதியின்படி விரைவாக நடக்கக் கூடிய குதிரையின் மேல் ஏறிச்செல்லுவார் அதனை நடத்து முறைமை அறிந்தவராயின் அது எத்துணை விரைவாகச் செல்லினும் தளரார் இவர்களைப் போல, பொறி வழிச் செல்லும் புலமையன்றி இறைவன் நெறிவழிச் செல்லும் ஆற்றலுடையார் நுகர்வினையின் பயனாக ஒரோவழிப் பொறிவழிச்சென்று புலன்களை நுகரினும் தாம் வீடுபேறடைதலாகிய வெற்றிப் பாட்டினின்றும் நீங்கார் என்பதாம். (இன்னுருபுகள் போல வென்னும் பொருள் படநின்றனவாம்)

68. "எரிகதிர்முன் இருள் போல"

எரிகின்ற சுடரின்முன் இருள்முனைத்து நில்லாதவாறு போல, முதல்வன்முன் ஐம்புலன்வழிவரும் பயன்கள் முனைத்து நில்லா ஆதலின் இறையருள் வழிப்பட்டவர் ஐம்புலன்களைக் கூடினும் அவற்றில் கட்டுப்படார் என்பதாம்.

69. "காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல்"

காணும் தன்மையுடைய கண்ணிற்குக் கண்டும் காட்டியும் நிற்கும் உயிர்போல, உணர்த்த உணரும் தன்மையுடைய உயிருக்குப் பொருளை அறியும்படி முதல்வன் அவ்வுயிரொடு கலந்து நின்று அறிவித்தும் அறிந்தும் வருவன் என்பதாம்.

70. "அருக்கன் நேர்நிற்பினும் அல்லிருளே காணார்க்கு"

ஒளி மழுங்கிய கண்ணினர்க்குக் கதிரவன் இரவின் கண் உள்ள இருளாகவே தோன்றுவன், அதுபோல, மலப்பிணிப்புண்டு கட்டுநிலையில் உள்ளார்க்கு இறைவன் விளங்கித் தோன்றான்.

71. "பகல் அலர்த்தும் தாமரை போல்"

மலரும் பக்குவமில்லாத தாமரைகளும் அப்பக்குவமடைந்த தாமரைகளும் ஓர் இடத்திருப்பினும் கதிரவன் பக்குவமுடைய தாமரையை மட்டும் விரியச்செய்வன்: பக்குவமில்லாத

தாமரையை விரியச்செய்யான் அதுபோல வீட்டுநிலையில் இருப்பாரும் கட்டுநிலையில் நிற்பாரும் உடல் உடையராய் இருப்பினும் பக்தியினுல்மறவாது ஏத்தும் வீட்டுநெறியாளர்க்கு அம்முதல்வன் தன்னருள் நோக்கால் பாசத்தைநீக்கி அறிவுவிளக்கம் தருவன். அல்லார்க்கு அவற்றைச் செய்யான்.

72 ''மன்னும் இருளை மதி துரந்தவாறு.''
வளர்பக்கத்துமதி ஒவ்வொரு கலையால் இருள்நீக்கி நிறைவாக நிறைமதியில் அவ்விருளை அறவே நீக்கிவிடும்: அதுபோல இறைவனும் தனது அருளாற்றலால் உயிரின் மலத்தைச் சிறிது சிறிதாக நீக்கி முடிவில் அறவே நீக்கித் தன்வண்ணமாகச் செய்துகொள்வன் என்பதாம்.

73 ''காந்கம் இரும்பைத் தன்னின் வலித்து வசம்செய்வான் செய்தல்''

காந்தக்கல் தன்முன்னிலையினுள்ள இரும்பைத் தன்னிடத்து இழுத்துத் தன்வசமாகச்செய்யும்:அச்செயலால் காந்தம் சலிப்பு அடைவதில்லை. அதுபோல முதல்வனும் தன்முன்னிற்கும் உயிரிடத்திலுள்ள அழுக்கைச் சிறிதுசிறிதாக நீக்கி முழுமையும் அற்றபின் தன் வயமாக்கிக்கொள்வன்; அச்செயலால் அவனும் சலிப்படைவதில்லை.

74 ''அப்பணைந்த உப்பின்''
உபபு தன்னிடத்திலுள்ள கரிப்பு நீங்கிய விடத்து நீரோடு கூடி ஒன்ருகும். அதுபோல உயிரும் தன்னுடன் இருந்த ஆணவம் கெட்டுழி அரன் திருவடியோடு கூடி ஒன்ருக அவ்வரனுக்கு அடிமையாகி விடும்.

75 ''பொன்வாள்முன் கொண்மூவில் புக்கொடுங்கிப் போயகலத் தன் வாளே எங்கும் தன்மைபோல்''
கதிரவன், மேகத்துடன் கூடியபோழ்தும் மேகம் சிறிது நீங்கிய பொழுதும் மேகம் அறவே நீங்கியபொழுதும் தன் தன்மையில் கெடாதவாறுபோல, உயிரும் தன்னிலை, கூட்டுநிலை, தூயநிலை ஆகியமுவகைநிலையிலும் சார்ந்ததன் வண்ணமாகும் தன் தன்மையில் கெடாதாம்

76 ''காமக்கிழத்தியர் வடிவில் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பம் செய்யுமாறுபோல''

விலைமகளிர்தம் உடம்பில் காணப்படும் ஆடை, சந்தனம் அணிகலன் முதலாயின காட்சி மாத்திரையில் காமுகரை வசப்படுத்தி அவர்க்கு இன்பம் செய்யும். அதுபோல சிவபத்தர் அணிந்திருக்கும் திருவேடமும் சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் திருக்கோவிலும் காட்சியளவையில் மெய்யுணர்வுடை யாரை வசப்படுத்தி அவர்க்கு இன்பம் செய்யும் என்பதாம்.

77 ''செம்மலர் நோன்ருல்''

செங்கமல மலர்போல விரிந்து விளங்கும் இறைவனுடைய பொறுக்கும் (தாங்கும்) திருவடி.

78 ''ததி நெய் போல்''

தயிரின்கண் நெய் விளங்கித்தோன்றுவதுபோல், பத்தரது திருவேடத்திடத்தும் இறைவன் விளங்கித் தோன்றுவன் என்பதாம்.

79 ''காட்டத்தில் அங்கிவேறு உண்டல்போல்''

விறகிடத்துத் தீ எப்பொழுதும் இருப்பினும் கடைகோலினல் கடைந்தவிடத்து விளங்கியும் அல்லிடத்துவிளங்காதாயுமிருக்கும் அதுபோல இறைவனும் தாவரவடிவில் மந்திரச்செயல் உள்ள விடத்து விளங்கித்தோன்றுவன். அல்லாவிடத்து விளங்காது நிற்பன். இனி அம்மந்திரத்தால் காணும் தன்மையின்றி அவ் வுருவமே சிவபெருமானுகக் காணும் மெய்த்தவமுடையாருக்கு அவ்வடிவு தானுக விளங்கித் தோன்றுவன் என்பதாம்.

**உருவகம்:**

1 ஐம்புலவேடரின்: எட்டாவது நூற்பாவில் ஐம்பொறிகள் வேடராக உருவகம் செய்யப்பட்டுள்ளன. இறைவனை மன்னவ னுகவும் உயிரை மன்னவனின் மகனுகவும் உருவகம் செய்யா மையின் இஃது ஏகதேச உருவகமாய் அமைந்துள்ளது.

2 தண் நிழலாம்பதி: நிலையில் பொருள்களை நிலையிலவெனக் கருத அப்பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர் நிழலாய் வெளிப்பட்டு விளங்கும் எனக் கூறப்படுதலின் இதுவும் ஏகதேச உருவகமாம்.

**சொற்பொருட் பின்வருநிலை:**

முன்வந்த சொல்லும் பொருளும் அப்பாடலில் பின்னும்வரு மேல் அப்பாடலைச் சொற்பொருட் பின் வருநிலை அணி அமைந்த

தெனக் கூறுவர். அவ்வாறு வரும் பாடல்களாவன: 1. ஒன்றலா ஒன்ருல், 2. ஒன்றென்றது ஒன்றேகாண் 3. உள்ளதே தோற்ற உயிரணேயும், 4. அவ்விணயைச் செய்வதனில், 5. ஐம்பொறியை ஆண்டங்கு, 6. பாவகமேல் தானசத்தாம், 7. அது என்னும் ஒன்றன்று, 8. அந்நியம் இலாமை அரற்கொன்று உணர்வின்ரும், 9. அருவுருவம் தானறிதல், 10. ஐம்பொறியின் அல்லே எனும், 11. அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு, 12. ஐந்தையும் ஒக்க உணராது, 13. நசித்து ஒன்றின்.

## 7. நூலாசிரியர்

இந்நூலே அருளியவர் மெய்கண்டாராவர். இவர் திருமுனேப்பாடி நாட்டில் திருப் பெண்ணுகடத்தில் வேளாண் மரபில் தோன்றியவர். இவர் தந்தையார் அச்சுத களப்பாளர் என்பார். மக்கட் பேறின்றி வருந்திய தம் வருத்தத்தைத் தம் குல குருவாகிய அருணந்தி சிவாசாரியாரிடம் தெரிவிக்கலானுர் அவரும் இறைவன் திருவுள்ளம் இருந்தவாறு அறிய அடங்கன்முறையாகிய தேவாரத்தில் கயிறு சார்த்திப் பார்த்தார். ஞானசம்பந்தப்பெருமானுடைய திருவெண்காடடுத் திருப்பதிகத்தில் இரண்டாவது பாடல் காணக்கிடைத்தது.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளேயினேடு உள்ள நினேவு
ஆயினவே வரம்பெறுவர், ஐயுறவேண்டா ஒன்றும்;
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய் விணயார் அவர்தம்மைத் தோயாவாம் தீவிணயே

என்பது அத்திருப்பாடலாகும் இதுவே திருவருள் ஆணேயென அச்சுத களப்பாளரிடம் கூற அவரும் அப்பணி தலேநின்ருர் வாழ்க்கைத் துணே நலத்துடன் திருவெண்காடு சென்று வெண்காட்டு முக்குளத்தில் நீராடி வேயனதோள் உமைபங்கன் திருவடிகளே வணங்கி வாழும் நாளில் மனேவியார் கருவுற்று ஆண் மகவை ஈன்ருர். அவ்வூர்ப் பெருமானின் திருப்பெயர் திருவெண்காடர் (சுவேதவனப் பெருமாள்) ஆதலின் அப்பெயரையே அம் மகவுக்கு இட்டு வளர்த்தார். சில நாட்களுக்குப் பின் பெண்ணுகடத்துக்கு வந்தார். திருவெண்காடரின் மாமன் ஊர் திருவெண்ணெய் நல்லூராகும் ஆதலின் அக்குழந்தை அங்கு வளர்ந்து வருவதாயிற்று. அது பொழுது அக்கு'ழந்தைக்கு மூன்று வயது வந்தது.

பண்டை நற்றவத்தால் தோன்றி பரமனைப் பக்தி பண்ணும் பேறுடைய அக்குழந்தைக்குத் திருவருள் பதிவு நேரும் பேறு கிட்டிற்று திருக்கயிலையில் இறைவன்பால் பெற்ற ஞானம். வழி வழிவரும் முறையில் நான்காமவராக எண்ணப்பெறும் பரஞ்சோதி முனிவர் விண்வழி இயங்கிக் கொண்டிருக்கும் பொழுது இக் குழந்தை வீதியில் விளையாடிக் கொண்டிருக்க அவரது அருள் நோக்கம் இக்குழந்தை பால் சென்றது. விண்ணினின்று இழிந்து அக்குழந்தைக்கு மெய்யுணர்வு கைவரப்பெற அருளுரை வழங்கிப் பின் தாம்எண்ணியவாறு பொதிகை மலைக்குச்சென்றார். அருளுரை வழங்கிய பரஞ்சோதி முனிவர் தம் குருவின் திருப் பெயரான சத்தியஞானதரிசினி என்பதன் தமிழாக்கமாகிய மெய்கண்டார் என்னும் திருப்பெயரை அவருக்கு வழங்கி யருளினார். அவர்தம் குருமூர்த்திகள் வழங்கிய அத்திருப்பெயரே திருப்பெயராக அன்று முதல் வழங்கலாயிற்று.

ஞானவடிவாக விளங்கிய மெய்கண்டார் திருவெண்ணெய் நல்லூர் திருக்கோவிலில் உள்ள பொல்லாப் பிள்ளையாரின் திருமுன்பிலிருந்து ஒன்றிய வழிப்பாட்டினால் சிவஞானம்தழைக்கப் பெற்று, அதன் பயனாகச் சிவஞான போதம் என்னும் ஞானப் பனுவலைச் செய்தருளினார்.

ஒருநாள் மெய்கண்டார் தம்மாணக்கர்க்குப்பாடம் கற்பித்துக் கொண்டிருக்கும் அமையத்து அவர்தம்முடைய குல குருவான அருணந்திசிவாச்சாரியார் அங்கு வந்து ஆணவ மலத்தின் இயல்பு எது? என மெய்கண்டாரிடம் வினவினர். அவரும் அது அவராக அமைந்திருப்பதைச் சுட்டிக் காட்டினர். அந்நிலையில் மெய்யுணர்ந்த அருணந்திசிவாச்சாரியரும் அவர் அடி வீழ்ந்து அருளுணர்வு வரப்பெற்றார்.

மெய்கண்டாரின் மாணக்கர் நாற்பத்தொன்பதின்மர் என்ப. இவர்களுள் அருணந்திசிவாச்சாரியார் அருளிய சிவஞான சித்தியார், இருபா இருபஃது ஆகிய இரு நூல்களும், திருவதிகை மனவாசகம் கடந்தார் அருளிய உண்மை விளக்கமும் மெய் கண்ட நூல்கள் பதினான்கனுள் சேர்க்கப்பட்டுள்ளன.

முடிவிலாத சிவபோக முதிர்ச்சி முறுகி விளைய மெய் கண்டாரும் ஐப்பசிச்சுவாதியில் அண்ணலார் சேவடிக்கீழ் அணைந்திருக்கும் பேறு பெற்றார்.

## 8. காலம்

இவர் காலத்தை அறுதியிடுதற்கு இரு சான்றுகள் தெளிவாக உள்ளன ஒன்று திருவண்ணுமலேத் திருக்கோவிலிலுள்ள கல் வெட்டாகும். பிறிதொன்று உமாபதி சிவாசாரியார் அருளிய சங்கற்பநிராகரணம் என்னும் நூலாகும். திருவண்ணுமலேயில் உள்ளகல்வெட்டு மூன்ரும் இராசராச சோழனது பதினருவது ஆட்சியாண்டுக் கல்வெட்டாகும். இவ்வரசன் கி. பி. 1216 முதல் 1256 வரை அரசு செலுத்தியவனுவான். மேற்கூறிய கல்வெட்டில் திருவண்ணுமலேயைச் சேர்ந்த மாத்தூர் என்னும் இராசராச நல்லூரில் திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் என்பார் தம் பெயரால் மெய்கண்டதேவபுத்தேரி என்ற ஏரியை வெட்டுவித்தார் என்றும், அவ்விடத்தில் மெய்கண்டதேவேச்சுரம் என்ருெரு திருக்கோயிலேக் கட்டுவித்து அக்கோயில் நாள் வழிபாட்டிற்கென ஐந்து வேலி நிலத்தை இறையிலியாக வழங்கினுர் என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. அக்கல்வெட்டில் குறிக்கப் பெற்றிருக்கும் மெய்கண்டதேவரே சிவஞான போதத்தைச் செய்தருளிய அருளாளர் ஆவர் என்பது அறிஞர் களின் கொள்கையாகும். அக்கல்வெட்டின் காலம் கி. பி. 1232 ஆகும். மெய்கண்டார் மரபில் மூன்ரும் தலேமுறையில் நின் றருளுபவர் உமாபதிசிவம் ஆவர். சங்கற்பநிராகரணம் என்னும் நூலே அருளியவரும் இவராவர். அந்நூலில், 'ஏழஞ்சு இருநூறு எடுத்த ஆயிரம் - வாழும் நற்சகம் மருவா நிற்பத்' தம் நூலேச் செய்ததாக் கூறியருளுகின்ருர். இச்சக ஆண்டிற்கு ஏற்பது, கி. பி. 1313 ஆம் ஆண்டாகும். உமாபதிசிவத்தின் காலமும் இதுவாகவே இவருக்கு முன்னவரான அருணந்தி சிவாசாரியரின் காலமும் அவர் காலத்திலேயே வாழ்ந்த மெய்கண்டாரின் காலமும் அதற்கு முந்தியதாம் என்பது விளங்கும். இக்காலம் மேற்கண்ட கல்வெட்டின் காலத்தோடு ஒத்து வருகின்றது எனவே இவர்தம் காலம் கி. பி. 13ஆம் நூற்ருண்டின் முற்பகுதி என்பது தெள்ளிது.

## 9. உரை ஆசிரியர்

சிவஞான முனிவர், இவர் பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள விக்கிரமசிங்கபுரம் என்னும் ஊரில் ஆனந்தக்கூத்தர் மயிலம்மையார் ஆகிய இருபெரும் குரவருக்கும் தோன்றியவராவர், இவர்தம் இயற்பெயர் முக்களாலிங்கர் என்பதாகும்.

இளமையிலேயே நல்லறிவும் தூய ஒழுக்கமும் நிறைந்த இவர் இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூணும்பெருமை பெற்று இலங்கினர். திருவாவடுதுறையில் பதினொன்றுவது குருமூர்த்திகளாக விளங்கிய பின்வேலப்பதேசிகர்பால் துறவுநிலைபெற்ற இவர், அப்பேற்றின் வழிச் சிவஞான முனிவர் ஆயினர்' தமிழ் வடமொழி ஆகிய இருமொழிகளிலும் துறைபோய புலமைபெற்ற இவர், இலக்கியம் இலக்கணம் சமயம் ஆகிய முத்துறையிலும் வல்லமை உடையவராவர். பாடம் பயிற்றுவிப்பதில் மிகச் சிறந்த பேராசிரியராகவும் விளங்கினர். இவரிடம் பயின்ற பலரும் இவறைப்போன்றே பெருவல்லமை பெற்றிருந்தனர். இவர்தம் காலம் 18 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியாகும்.

இவர் அருளிய நூல்கள்பல. உரைகள் பல. அவையனைத்தும் இவர்தம் நுண்மாண் நுழைபுலத்தை அறிதற்கு நிலைக்களனாக விளங்குகின்றன. சோமேசர் முதுமொழி வெண்பா, திருவேகம்பர் அந்தாதி, வடதிருமுல்லைவாயில் அந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப் பத்தந்தாதி, செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், செப்பறை அகிலாண்டேசுவரி பதிகம் திருவேகம்பர் ஆனந்தகளிப்பு, திருத்தொண்டர் திருநாமக் கோவை, பஞ்சாக்கர தேசிகர் மாலை ஆகிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டனவாகும். தருக்கசங்கிரக அன்னப்பட்டியங்களின் மொழிப்பெயர்ப்பு, அரதத்தாசாரியார் செய்த சுலோக பஞ்சகத்தின் மொழிபெயர்ப்பு. அப்பைய தீட்சதர் செய்த சிவதத்துவ விவேகமூல மொழிபெயர்ப்பு, காஞ்சிப் புராண முதற்பாக மொழிபெயர்ப்பு, சித்தாந்தப் பிரகாசிகை மொழிபெயர்ப்பு என்பன இவர்தம் மொழிபெயர்ப்பு நூல்களாகும், இலக்கண விளக்கச் சூருவளி, மரபட்டவணை மறுப்பின் மறுப்பு, எழுத்து என்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம், சிவஞான சித்தியாருக்கு ஞானப்பிரகாச முனிவர் இயற்றிய சிவசமவாத உரை மறுப்பு என்பன இவர்தம் மறுப்பு நூல்களாகும். தொல்காப்பியச் சூத்திர விருத்தி, நன்னூல் விருத்தியுரை, கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தரவிருத்தி ஆகியன அரிய விரிவுரை நூல்களாகும். இவற்றிற்கொல்லாம் மேலாசு இவர் தம் பணியின் முடிமணியாய் விளங்கும் உரைகள் சிவஞானபோதச் சிற்றுரையும் பேருரையும் ஆகும்

## 10. உரைத்திறன்

சிவஞானமுனிவர் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லுனராதலோடு இலக்கணம், இலக்கியம், தருக்கம், சமயம் முதலிய பலதுறைகளிலும் தோய்ந்த புலமையுடையராதலே அவர்தம் நூல்கள் பலவும் விளக்கி நிற்கின்றன. இச்சிற்றுரையைப் பொறுத்த மட்டில் அவர்தம் நுண்மாண் நுழைபுலம் பல்லாற்றுனும் போற்றும் தகையதாய் உள்ளது. அவையனைத்தையும் குறிப்பிடல் அருமையுடைத்தாயினும் சிலவற்றையேனும் நினைவுகூரல் பொருந்துவதாகும். பாயிரத்தில் ஞாயிறுபடரின் காண்டல் செல்லும் கண் எனற்பாலதனை, எதிர்மறை முகத்தார் கூறினுர். இன்றியமையாமை விளக்குதற்கு எனக் கூறிய நயம் அறிதற்குரியதாம்.

அவையடக்கத்தில் தம்மையுணரார் எனப் பொதுப்படக் கூறிய அதனுல் உலோகாயதர், சாங்கியர், புத்தர், மாயாவாதிகள் உள்ளிட்ட சமயத்தார் பல்ரையும் கொண்டிருப்பது உணர்தற்குரியதாம்.

முதல் நூற்பாவில் இரண்டாமதிகரணத்தில் கூறப்பட்ட பொருண்மையை மூன்று அதிகரணமாக வகைப்படுத்தி உரைத்திருக்கும் திறம் எண்ணற்குரியதாம்.

முதல் நூற்பாவில் மூன்ருமதிகரணத்தில் சங்காரமேமுதல் என்னும் கருத்தை வேதப்பொருண்மையோடு ஒப்பிட்டு அதனெடு மலைவற உரைந்திருக்கும் திறம் உணர்தற்குரியதாம்.

இரண்டாவது நூற்பாவில் அவையேதானேயாய் என்ற தொடரை 'உலகெலாமாகி வேருய் உடனுமாய்' என வழிநூலாசிரியர் விளக்கியிருப்பதற்கேற்ப இரட்டுறமொழிந்து கொண்டு உரைத்திருக்கும் திறம் எண்ணற்குரியதாம்.

இரண்டாவது நூற்பாவில் இரண்டாவது அதிகரணத்தில் இறைவன் அரசனுக்கும், உழுதொழிற்கும் உவமையாதலைத் திட்பமாக விளக்கிபிருக்கும் திறம் அறிதற்குரியதாம்.

இவ்வாறே நான்காம் நூற்பாவின் முதலதிகரணத்தில் கடல் அலையை ஈரிடத்தில் உவமை காட்டியமைக்கு உரியவேறுபாட்டை மிக நுட்பமாக விளங்கியிருக்கும் திறமும் அறிதற்குரியதாம்.

ஐந்தாவது நூற்பாவின் மூன்றுமதிகரணத்தில் 'மன்னுசிவன்' எனத் தொடங்கும் வெண்பாவில் 'மன்னுசிவன்' 'சொன்னசிவன்' 'எண்ணுன் சிவன்' என மூவிடத்தும் அவ்வவ்வடைமொழியொடு கூட்டிக் கூறப்பட்டிருக்கும் திறத்தை விளக்கியிருக்கும் அருமை நினைவு கூரத்தக்கதாம்.

ஆறும் நூற்பாவின் முதலதிரணத்தில் உலகம் தோன்றி மறைதற்கு நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும் உவமையாதற்கு உரியகாரணத்தை விளக்கியிருப்பது நுண்ணியதும் சீரியதுமாகும்.

ஏழாவது நூற்பாவின் மூன்றுமதிகரணத்தில் 'இருதிறன் அறிவுளது' எனும் தொகைச்சொல், மூன்றுபொருளில் மயங்கி நிற்கு மாற்றை ஆசிரியர் கருத்தொடு தழுவி விளக்கியிருக்கும் நுட்பம் நுண்ணிதாகும்.

எட்டாவது நூற்பாவின் முதல் அதிகரணத்தில் ''கிரியா யோகங்கள்'' என்ற தொடருக்குத் தந்திருக்கும் இலக்கண வமைதியின் நயமும், ''மேல் சரியைகிரியாயோகங்களைச்செய்துழி'' என வரும் தொடரில் ''மேல்'' என்பதற்குக் கூறியிருக்கும் நயமும் அறிந்து இன்புறத்தக்கதாம். மெய்ஞ்ஞானம் தானே விளையும் என்ற தொடரில் விளையும் என்னும் சொற்கு, விளையும் என்பது அரசன் எடுத்த ஆலயம் என்புழிப் போல விவ்விகுதி தொக்கு நின்றது: இவ்வாறன்றி எளிதில் அடப்படுதல் நோக்கி அரிசி தானே அட்டது என்றாற் போல எளிதின் விளைவிக்கப் படுதல் நோக்கி மெய்ஞ்ஞானந் தானே விளையுமென்றார் எனினும் மையும் என இவர் தரும் விளக்கம் நுண்மையானதாம்.

இவ்வாறே பன்னிரண்டாவது நூற்பாவில் ''தொழுவமே'' என்ற சொற்குக் கூறியிருக்கும் நயமும் உணர்ந்து இன்புறத்தக்கதாம்.

இனி இவர்தம்உரை பரிமேலழகர், சேனுவரையர் ஆகியோரின் உரையமைப்போடு ஒப்பிடற்குரியதாய் விளங்கி நிற்கும் திறத்தையும் ஈண்டு எண்ணத்தகும்.

முதல் நூற்பாவின் முதலதிகரணத்தில் 'பேதாய்' என்னும் சொற்குக் 'காட்சி யளவைகளாலும் அறியப்படாத மடவோனே' என இவர் உரை கூறுகின்றார். இது 'ஒரு என்னும் சொற்கு மிகுதி என்னும் பொருளும் அறியாத மடவோனுயின்' எனவரும் சேனுவரையருரையொடு நினைவுகூர்தற்குரியதாம்.

இரண்டாவது நூற்பாவில் போக்குவரவு புரியஎன்னும் தொடரில் வரும் புரிதல் எனும், சொற்கு 'எப்பொழுதும் மேற்கோடல் என விளக்கம் காண்பர் இவர். இது 'இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார்மாட்டு' என்னும் தொடரில் 'புரிதல்—எப்பொழுதும் சொல்லுதல்' எனச் சொற் பொருள் விளக்கம் தரும் பரிமேலழகருரையோடு நினைவுகூர்தற்குரியதாம்.

'ஒன்றறிந்தது ஒன்றறியாதாகி...புலனுய்' என வரும் தொடரில் ஆகிஎன்னும் சிறப்புவினை ஆய் என்னும்பொது வினையொடு முடிந்தது. இவனும் இவளும் சிற்றிலிழைத்தும் சிறுபறையறைந்தும் விளையாடுப என்ருற் போல என விளக்கம் தருவர் இவர். இது சிவணிய என்னும் வினையெச்சம் உயர்திணைய என்னும் வினைக்குறிப்புக் கொண்டமைக்குச் சேனுவரையர் கூறியிருக்கும் உரையொடு நினைவு கூர்தற்குரியது. (தொல் - சொல் – 2)

ஆருவது நூற்பாவில் சிவசத்தென்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூல்முடிபு என விளக்கம் தருவர். இது ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூல்முடிபு என வரும் பரிமேலழகர் உரையொடு நினைவுகூர்தற்குரியது.

ஆருவது நூற்பாவில் அடியளந்தான் தாஅயது என்ருற் போல, அறிவறியா மெய் என்றது வாளாபெயராய் நின்றது என இவர் விளக்கம் தருவர். இது 'மடியிலா மன்னவன் எய்தும்' என்னும் குறட்குப் பரிமேலழகர்தரும் விளக்கவுரையொடு நினைவு கூர்தற்குரியதாம்.

அசத்தியல்பை அறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவாயல்லை என்பார் அசத்தறியாயென்றும், எந்தை—தாட்பால் வணங்குத் தலைநின்று கேட்க' என்பார் கேள் நீயென்றும், உபலத்திக்கு விடயமானவை எல்லாம் அநுபலத்திக்கு விடயமாதல் ஒருதலை என்பார் அறிவறிந்த வெல்லாம் அசத்தாகும் என்றும், சத்தினியல் புணர்ந்தார்க்கன்றி அசத்தினியல்புணர வாராதென்பார் மெய்கண்டானென்றும் ஆய்தற்கருமை நோக்கி ஆயினென்றுங் கூறினுர் எனவரும் உரைவிளக்கம் பரிமேலழகர் பலஇடங்களிலும் உரைத்திருக்கும் உரைநலத்தை நினைவுகூரச் செய்கிறது.

சொற்பொருள் விளக்கம்

மும்மை என்றது ஈண்டு எண்ணின் மேல் நின்றது, ''தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன் என்புழிப்போல. இது

இருமை வகைதெரிந்து என்னும் குறளுக்கு எழுதிய பரிமேலழகர் உரையை எண்ணச்செய்யும்,

சில சொற்களை எடுத்துக்கொண்டு அதற்குரிய விளக்கம் தரும் இவர் அதற்கேற்புடைய மேற்கோளையும் காட்டிச்செல்வர். அது இவர்தம் பரந்த இலக்கியப் புலமையைக் காட்டுவதாகும்.

நொடித்தல்—அழித்தல், அது நொடித்தான்மலை என்ப தனுனும் அறிக என்பர்.

'இன்ருங்கட்டு' என்பது 'அருங்கேடன்' என்பதுபோல நின்றது, என்பர். ஆகலான் என்பதற்கு ஆயிட்டு என்பது அக்காலவழக்குப் போலும்: அற்ருலிகன் அன்றே நீயோ செய்யாய் நின்மலனுயிட்டு என்ருர் வழிநூலாசிரியரும் என விளக்கம் தருவர்.

பாடிகாவலாவது களைகணுவா னெருவனைக்கொண்டு வேந்தன் செய்விப்பதொரு தண்டத்தொழில் விசேடம். அது "கோடி காவனைக் கூருத நாளெல்லாம்—பாடிகாவலிற் பட்டுக் கழியுமே" என்னுந் திருப்பாட்டானும் அறிக என்பர். அதனின்என்பது அத்தின் என மரீஇயிற்று; 'இத்தை மெய்யெனக்கருதி' (திருவா—அதிசய) என்புழிப்போல என விளக்கம் தருவர் (நூற்பா 3–அதி 7). அருவுருவாய் என்புழி ஆக்கச்சொல் உவமைப்பொருள் குறித்து நின்றது: ஆள்வாரிலாமாடாவேனு' என்ருற்போல என விளக்கம் தருவர். சத்தியுடையபொருள் சத்தம் அஃதில்பொருள் அசத்தம் ஆகலின் அவ்வடமொழிகள் ஈண்டம்முக் கெட்டுக் குற்றியலுகரஈருய் நின்றன. 'நாகணையான்' 'பெற்றென்றுஉயர்ந்தபெருமான்' 'பேதுசெய்து' வாதுசெயத்திருவுள்ளமே' என்புழிப்போல என விளக்கம் தருகிருர் இவர்.

நாடி–ஆராய்ந்தறிக; 'நன்றுமன் இது நாடாய் கூறி' என்ருற் போல் நாடி என்பது இகர ஈற்று முன்னிலை ஏவலாய் நின்றது என்பர் (நூற்–9: விளக்கம்) 'நோன் தாள்' வினைத்தொகை. நோன்றல்–பொறுத்தல்: 'எடுத்துச்சுமப்பானை' என்ருர் புடை நூலாசிரியரும் என விளக்கம் காண்பர் இவர். இவ்வாறு இவர் காட்டியிருக்கும் மேற்கோள் பகுதிகள் பலவாம், அவ்வாறு பல்குதலின் தொகைவகையான் குறித்துச் சொல்லல் தகும்.

## ஆராய்ச்சி முன்னுரை

*1.* **தொல்காப்பியம்:** இந்நூலிலிருந்து இவர் எடுத்துக் கொண்டிருக்கும் நூற்பாக்கள் பதினொன்றும். அகநானூறு, புறநானூற்றிலிருந்து வகைக்கு ஒரு மேற்கோள் உள்ளது.

**திருக்குறள்:** இந்நூலிலிருந்து 26 இடங்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

**நாலடியார்:** இந்நூலிலிருந்து மூன்றுமேற்கோள்கள் காட்டப் பட்டுள்ளன.

**ஆகமங்கள்:** பௌட்கரத்திலிருந்து ஓரிடமும், மிருகேந்திரத்திலிருந்து ஓரிடமும், வாதுளாகமத்திலிருந்து இரண்டு இடமும் காட்டப்பட்டுள்ளன.

**உபநிடதம்:-** சர்வஞானோத்திரத்திலிருந்து இரண்டுஇடமும் சாந்தோக்கிய உபநிடதத்திலிருந்து ஓரிடமும் காட்டப் பட்டுள்ளன.

**பன்னிருதிருமுறைகள்:-** காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதியிலிருந்து ஓரிடமும், திருவாசகத்திலிருந்து எட்டு இடங்களும், திருக்கோவையிலிருந்து இரண்டு இடங்களும்' சம்பந்தர், அப்பர், சுந்தரர் வாக்கிலிருந்து 23 இடங்களும் பட்டினத்துப்பிள்ளையார் வாக்கிலிருந்து ஓரிடமும் திருவிசைப்பாவிலிருந்து நான்கு இடங்களும், திருப்பல்லாண்டிலிருந்து ஓரிடமும் பெரிய புராணத்திலிருந்து நான்கிடங்களும், திருமுருகாற்றுப் படையிலிருந்து ஓரிடமும் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

**மெய்கண்டநூல்கள்:-** சிவஞானசித்தியார் சிவஞானபோதத்தை விளக்கும் உரைநூலாயும் விளங்குகிறது. ஆதலின் இந்நூலிலிருந்து 83 இடங்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன

திருவுந்தியாரிலிருந்து இரண்டு இடங்களும், திருக்களிற்றுப் படியாரிலிருந்து நான்கு இடங்களும், இருபா இருபஃதிலிருந்து ஓரிடமும், திருவருட்பயனிலிருந்து ஆறு இடங்களும், சிவப்பிரகாசத்திலிருந்து பதினைந்து இடங்களும். வினாவெண்பாவிலிருந்து ஓரிடமும் போற்றிப்பஃறொடையிலிருந்து ஈரிடங்களும் காட்டப்பட்டுள்ளன. இவையன்றித் துகளறு போதத்திலிருந்தும் இரண்டு இடங்கள் காட்டப்பட்டுள்ளன.

**பிறநூல்கள்:-** இவையன்றி இலிங்கபுராணத்திலிருந்து ஓரிடமும், உலகுடைய நாயனர் திருவிருத்தத்திலிருந்து ஓரிடமும்

ஞானமிர்தத்திலிருந்து மூன்று இடங்களும், பகவத்கீதையிலிருந்து ஓரிடமும், எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. நூற்பெயர் விளங்கா மேற்கோள் பகுதிகளாக நான்கு இடங்களும் உள்ளன.

இவற்றான் இவர்தம் அஃகி அகன்ற அறிவுடைமை விளங்கும்

வேதாகமப்பயிற்சி:-

சிவஞானமுனிவருக்கு வேதாகமங்களிலுள்ள பயிற்சி மிகப் பெரியதாகும். அப்பேரறிவு அவர் உரையில் ஆங்காங்கு மிளிர்வதைக் காணலாம்.

'வேதத்துள் காரணவாக்கியங்களிற்சுட்டுணர்வினராகியநாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன்முதலியோரைக் காரணமென்றது குயவன்போல் அவாந்தர காரணமாதல் பற்றியேயாகலின் அவையெல்லாம் ஆகுபெயராற் சங்கார காரணனாகிய முதற்கடவுளையே உணர்த்தி நிற்கும்' (நூற்-1 அதி-3).

அற்றேல் இவ்வாறு முத்தொழிற்படும் சேதனப்பிரபஞ்சம் வீடுபெற்றவழி சுட்டுணர்வின்றிச் சிவசமமாமென வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின் அவ்வழி அவையும் முதற்கடவுளா மென்றற்கு இழுக்கென்னை எனின், அச்சேதனப்பிரபஞ்சம் வீடு பேற்றின் கண்ணும் அடிமையாகவே நிற்கும். (நூற்-1 அதி-3: வெண்பாவின் பொருள்)

நாள்மீன் முதலியவற்றின் ஒளியெல்லாம் ஞாயிற்றினுடைய ஒளியே என்பது வேதநூல் துணிபாகலான் அஃது ஈண்டைக்கு உவமையாயிற்று (நூற்-5, அதி-4) என்பது காண்க.

ஆளுடைய பிள்ளையாரும் கண்ணனும்

அருளாளர்களின் திருவாக்குகள் பலவற்றையும் ஆங்காங்கு எடுத்துக் கூறிச் செல்லுதல் இவருக்கு இயல்பேனும் அவர்களின் பெயர்களை விதந்து கூறுதல் மிகச்சில இடங்களிலேயாம் அவற்றுள் இரண்டிடங்கள் குறிப்பிடத்தக்கன.

1. **ஆளுடைய பிள்ளையார்.**

புற அக ஒன்றிய வழிபாடுகளைச் செய்துழிவரும் ஞானத்தாலேயே உயிர் குருவருள் பெறஇயலும் என 8-வது நூற்பா

கூறுகின்றது. ஆனால் ஆளுடைய பிள்ளையார் மூன்றாண்டில் ஞானம் பெற்றமை அவர் வரலாற்றால் அறியமுடிகின்றது. இதனை நினைவு கூர்ந்து இவர் தரும் விளக்கம் மிகச் சுவையுடையதாகும்.

ஆளுடைய பிள்ளையார் முதலாயினார்க்குத் தவம் இன்றியும் ஞானம் நிகழ்ந்தவாறு என்னையென்னுங் கடாவை விடுத்தற்கு 'மேற்செய்துழி' என ஈண்டும் வலியுறுத்தார்.

இவ்விளக்கம் 'ஏடுடையமலரால் முனைநாட்பணிந்து ஏத்த அருள் செய்த பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மான்' எனவரும் ஆளுடைய பிள்ளையாரின் அருள்வாக்கோடு நினைந்து இன்புறத் தக்கதாம்.

2. **கண்ணன்:-**

இறைவன் ஒருவனே உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருத்தற்குரியவன் ஆவன் என்பது இரண்டாம் நூற்பாவின் கருத்தாகும். மாறாகக் கண்ணன் யானே உலகெலாம் ஆயினேன் எனக் கூறுவது கீதைவழி அறிய இயலுகின்றது. இதற்கு விளக்கம் தரும் முகமாக இவர் எழுதி இருக்கும் விளக்கம் அறிந்து இன்புறத்தக்கதாம்.

இவ்வொற்றுமை பற்றியன்றே [இறைவன் கண்ணன் உள்ளத்தும் புகுந்து வேற்றுமையின்றி நின்ற ஒற்றுமை பற்றி யன்றே] அர்ச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த கண்ணன் யானே உலகெலாமாயினே னென்றதூஉம், முதல்வனது விசுவ ரூபத்தைத் தான்காட்டியதூஉம், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக வென்றதூஉம், அதனை உறுதியாகக் கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்து நோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், கண்ணன் மேலிட்ட போதுகள் முதல்வன் திருமுடிமேல் கண்டதூஉமென்க. கண்ணன் உபமனிய முனிவர் பாற் சிவதீக்கையுற்றுத்தன்னையுந் தலைவனையு முணர்ந்தோனாகலிற் சிவோகம் பாவனையைத் தலைப்பட்டோனா தலறிக.

சமயக்கோட்பாடுகள்:

ஆசிரியர் மெய்கண்டார் தம்கருத்தை விளக்குதற்கு நூற்பாவும் ஏதுவும் மேற்கோளும் எடுத்துக்காட்டி விளக்கி யருளினர். அக்கருத்துக்கள் பலவும் பிறபிற சமயக்கருத்துக்களை மறுக்குமாறு அமைந்துள்ளன என இவர் விளக்குகின்றார்.

7-வது நூற்பாவின் மூன்ருவது அதிகரணம்,8-வதுநூற்பாவின் முதலதிகரணம்,9-வது நூற்பாவின்மூன்ருவது அதிகரணம்,11-வது நூற்பாவின் இரு அதிகரணங்கள் ஆகிய ஐந்து அதிகரணங்களும் குறிப்பிட்டதொரு சமயக் கருத்தை மறுக்குமாறமையவில்லை.

9-வது நூற்பாவின் இரண்டாவது அதிகரணம், 12-வது நூற்பாவின் மூன்று அதிகரணங்கள் ஆகிய நான்கு அதிகரணங்களும் தன்கோள் நிறுவுவதாகக் கூறப்பட்டுள்ளன. எஞ்சிய அதிகரணங்கள் அனைத்தும் பிறர்கோள் மறுக்குமுகமாகவே அமைந்துள்ளன.

இவ்வாற்ருன் இவ்வதிகரணங்களில் வரும் சமயக் கோட்பாடுகள் இருபத்தாரும். அவை உலகாயதம், மீமாஞ்சகம், பௌத்தம், சமணம், அனேகஈசுவரவாதம், ஏகான்மவாதம், பேதவாதம், பேதாபேதவாதம், பரிணுமவாதம் கிரீடாப்பிரம வாதம், நையாயிகம், சூனியான்மவாதம் தேகான்மவாதம், இந்திரிய ஆன்மவாதம், சூக்குமதேகான்மவாதம், பிராணுன்ம வாதம், விஞ்ஞான ஆன்மவாதம், சமூகஆன்மவாதம் அந்தக் கரணுன்மவாதம், சாங்கியம், ஈசுவர அவிகாரவாதம்,சிவாத்துவித வாதம். சிவசங்கிராந்தவாதம், பேதவாதசைவம், சிவசமவாத, சைவம்,சுத்தசைவம் என்பன.

இவர்களின் கருத்துக்களும் அவைமறுக்கப்படும் இடங்களும்.

*1ஆம் நூற்பா*

1ஆம் அதி-உலகாயதர், மீமாஞ்சகரை மறுத்தல்
2ஆம் அதி-புத்தரையும் சமணரையும் மறுத்தல்
3ஆம் அதி-அநேகசுவரவாதிகளை மறுத்தல்

*2ஆம் நூற்பா*

1ஆம் அதி-ஏகான்மவாதி, மாத்துவர், பஞ்சராத்திரிகர், ஆகியவர்களை மறுத்தல்

2ஆம் அதி-பரிணுமவாதிகளை மறுத்தல்
3ஆம் அதி-கிரீடாப் பிரமவாதிகளை மறுத்தல்
4ஆம் அதி-மீமாஞ்சகர், நையாயிகர் ஆகியவர்களை மறுத்தல்

*3ஆம் நூற்பா*

1ஆம் அதி-சூனிய ஆன்மவாதிகளை மறுத்தல்
2ஆம் அதி-தேகான்மவாதிகளை மறுத்தல்

3ஆம் அதி-இந்திரிய ஆன்மவாதிகளை மறுத்தல்
4ஆம் அதி-சூக்கும தேகான்மவாதிகளை மறுத்தல்
5ஆம் அதி-பிராணான்ம வாதிகளை மறுத்தல்
6ஆம் அதி-விஞ்ஞான ஆன்மவாதிகளை மறுத்தல்
7ஆம் அதி-சமுக ஆன்மவாதிகளை மறுத்தல்

4ஆம் நூற்பா

1ஆம் அதி-, 2ஆம் அதி-, 3ஆம் அதி- } அந்தக்கரணான்ம வாதிகளை மறுத்தல்

5ஆம் நூற்பா

1ஆம் அதி-சாங்கியரை மறுத்தல்
2ஆம் அதி-ஈசுவர அவிகாரவாதிகளை மறுத்தல்

6ஆம் நூற்பா

1ஆம் அதி-நையாயிகர் சாங்கியர் ஆகியவர்களை மறுத்தல்
2ஆம் அதி-மாயவாதிகளை மறுத்தல்

7ஆம் நூற்பா

1ஆம் அதி-சிவாத்துவிதசைவரை மறுத்தல்
2ஆம் அதி-சிவசங்கிராந்தவாதிகளை மறுத்தல்
3ஆம் அதி-பொதுப்பட அமைந்தது

8ஆம் நூற்பா

1ஆம் அதி-பொதுப்பட அமைந்தது
2ஆம் அதி-சாங்கியர், நையாயிகரை மறுத்தல்
3ஆம் அதி-சிவசங்கிராந்தவாதசைவரை மறுத்தல்
4ஆம் அதி-பேதவாத சைவரை மறுத்தல்

9ஆம் நூற்பா

1ஆம் அதி-சிவசமவாதசைவரை மறுத்தல்
2ஆம் அதி-தம்கூற்றுநிறுவல்
3ஆம் அதி-பொதுப்பட அமைந்தது.

10ஆம் நூற்பா

1ஆம் அதி-சிவசமவாதசைவரை மறுத்தல்
2ஆம் அதி-சுத்தசைவரை மறுத்தல்

11ஆம் நூற்பா

1ஆம் அதி-பொதுப்பட அமைந்தது
2ஆம் அதி

12ஆம் நூற்பா

1ஆம் அதி, 2ஆம் அதி, 3ஆம் அதி-தம் கூற்று நிறுவல்

இவர்தம் உரைத்திறனை மேலும் நுழைந்து அறிதற்கு வாய்ப் புண்டு. சிலவே மேற்காட்டப்பட்டன. இவ்வாறு அஃகி அகன்ற அறிவுடையதாக இவர் உரைத்திறன் விளங்கினும் இவர் உரையில் மேலும் எண்ணித் துணிதற்குரிய சில இடங்களும் உளவாதலைக் குறிப்பிடாமல் இருத்தற்கில்லை.

(1) சிவஞான போதம் தனித்தமிழ் முதல் நூலாயினும் இவர் வடமொழியின் வழியது எனக் கருதி ஆங்காங்கு வலிந்து கூறியிருப்பன.

(2) ஆசிரியர் மெய்கண்டார் திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தத்திறனை முழுமையாக விளக்கிக் கூற முற்பட்டனரே அன்றிப் பிறபிற சமயத்தவரின் கருத்துக்களை எல்லாம் எடுத்து மறுக்க வந்தாரல்லர் என்பது அறிஞர் சிலரது துணிபாகும். ஆனால் முனிவர் பெருமானோ ஒன்பது அதிகரணங்கள் நீங்கலாக எஞ்சிய அதிகரணங்கள் அனைத்தும் பிறர் கூற்றின் மறுப்பாகவே எடுத்துக் காட்டுவர்.

(3) கடவுள் வாழ்த்தில் வில்லார் அருளிய என்ற தொடரில் அருளிய என்பதைச் செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சமாகக் கொள்வது.

(4) முதல் நூற்பாவில் ஒடுங்கி என்பது பெயர் எனக் கொண்டு உரைப்பது.

(5) அந்ததர என்றவிடத்து ஆடூஉ முன்னிலையாகக் கொண்டவர். ஆயிழையாய் என வருமிடத்து அதனை ஆன்மா விற்கு உரிய அடைமொழியாகக் கொண்டு நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிர் என்றும், நல்லாய் என்பதற்கு அறிவால் நன்மையுடைய மாணுக்கனே என்றும் உரை கூறியிருப்பன. இவை போன்ற இடங்கள் எண்ணற்குரியனவாம்.

## 1. முடிவுரை

சிவஞான போதத்தையும் அதற்கு விளக்கமாய் அமைந்த இச்சிற்றுரையையும் ஓராற்றன் உணர்தற்கு இவ்வாய்வுரை உறுதுணையாகுமேயன்றி முழுமையாக உணர்தற்குப் போதிய தாகாது. ஆதலின் இதன்வழி மேலும் இந்நூலையும், உரையையும் நுண்ணிதாகவும் திண்ணிதாகவும் ஆய்ந்து அறிதல் அறிஞர் கடனாகும்.

பொல்லாப்பிள்ளையார் துணை
திருச்செந்திலாண்டவன் துணை

# மெய்கண்டார் அருளிய
# சிவஞானபோதம்

மூலமும்
சிவஞான முனிவர் அருளிய
சிற்றுரையும்



## சிறப்புப் பாயிரம்

சைவ ஆகமங்களில் உளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞான பாதத்து ஓதிய பொருள்களை ஆராயும் ஆராய்ச்சி இந் நூலின்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது. இதுகேட்டலுறுவார்க்கு இதனால் போந்த பயன் யாதோ எனவும், இது கேட்டற்கு உரியார் யாவர் எனவும், இதனால் நுவலப்படும் பொருள் யாது எனவும், இதனைப் பயப்பிக்கும் கருவியாய் இதற்கு முன் ஒரு தலையான் உணர்தற்பாலது யாது எனவும், இதனை வழங்குதற்கு இட்ட பெயர் யாது எனவும், இஃது யாண்டு வழங்குவது எனவும் இதன் முதனூல் யாது எனவும், இந்நூல் செய்தார்யாவர் எனவும் பலவாற்றான் ஆசங்கை நிகழும் அன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூல் முகத்து உரைக்கப்படுவ தாகிய சிறப்புப்பாயிரம் :

**மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்**
**பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்**
**காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய**
**பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருள்தீர்ந்(து)**
**அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி**
**மயர்வற நந்தி முனிகணத்து அளித்த**
**உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்**
**பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்**
**பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன்**
**பவநனி வன்பகை கடந்த**
**தவரடி புனைந்த தலைமை யோனே.**

எனவரும்.

**இதன் பொருள் :** மலர் தலைஉலகின் மா இருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண் போல் - விரிந்த இடத்தை உடைய **ஞாலத்தின் கணே**

துன்னிய பெரிய புறவிருள் கெடும்படி பல சமயத்தாரானும் புகழப்படுகின்ற பரிதியங் கடவுள் உதயகிரியினின்றும் போந் தால் அன்றிக் காட்சி எய்தமாட்டாத கண்ணொளி போல, அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி—பொறுத்தற்கரிய துயரங் களுக்கு எல்லாம் ஒரு நிலைக்களமாய்ச் சத்த தாதுக்களாற் பொத்திய குரம்பையாகிய காணப்பட்ட உடம்பானேக்ாணப் படாத ஆன்மாவையும் பரமான்மாவையும் அனுமான அள வையான் வைத்து ஆராய்ந்து அவற்றது தடத்த இலக்கணம் எனப்படும் பொதுவியல்பு உணர்ந்து, கண் இருள் தீர்ந்து— அவ்வுணர்ச்சியானே கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவ மலத்தினின்று நீங்கி, ஈண்டிய பெரும் பெயர்க்கடவுளிற்கண்டு— அது நீங்கிய வழி எல்லா நூல்களும் தன் பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும் பெயர் எனப்படும் ஒரு வார்த்தையாகிய மகாவாக்கியத்தால் எடுத்தோதப்படும் முதற்கடவுளது திருவரு ளானே அப்பொருள்களது, சொரூப இலக்கணம் எனப்படும் சிறப்பியல்பை அநுபூதியில் கண்டு உணர்ந்து, மயர்வு அற — இம் முறையானே மயக்கவாசனை அற்றுச் சிவாநுபவம் பெறுதற் பொருட்டு, நந்தி முனி கணத்து அளித்த — சீகண்ட தேவர்பால் கேட்டருளிய நந்திபெருமான் சனற்குமார முனிவன் முதலிய முனிவர் கணங்கட்கு முறையானே அளித்து அருளப்பட்ட, உயர் சிவஞான போதம்—சரியை முதலிய மூன்று பாதப்பொருள் களை ஆராயும் நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதம் என்னும் வடநூலை. உரைத்தோன் — மொழிபெயர்த்துக்கூறி வார்த்திகம் எனப்படும் பொழிப்புரை செய்தோன், பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்—பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரில் அவதரித்தருளிய சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத்திருநாமம்உடையான், பொய்கண்டு அகன்ற மெய்கண்டதேவன் — பொய்ச் சமயங்களின் பொருள் இது இது என்று கண்டுகழிப்பித்த காரணத்தால் பெற்ற மெய் கண்டதேவன் என்னும் சிறப்புத் திருநாமம் உடையான். பவம் நனி வன்பகை கடந்த தவர் அடிபுனைந்த தலைமையோன் — பிறவியாகிய மிக்க வலிய பகையினை வென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்துகோடற்கு ஏதுவாகிய தலைமைப் பாட்டினை உடையோன் என்றவாறு.

படரிற் காண்டல் செல்லும் கண் எனற்பாலதனை எதிர்மறை முகத்தால் கூறினர்; இன்றியமையாமை விளக்குதற்கு. இப் பொருள்பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினரேனும், உவமேயப் பொருட்கேற்பக் காண்டல் சேறற்குப் படர்ந்த ஞாயிறு போல என்பது கருத்தாகக் கொள்க.

இருள் கேட்டிற்கும் நிருவிகற்பம் சவிகற்பம் என்னும் இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்று யவாறு போல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதி என்னும் இருவகை உணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றுயது இந்நூல் என்பர், 'துமியப்படரின் அல்லதைக் காண்டல் செல் லாக் கண்போல் நாடித் தீர்ந்து கண்டு மயர்வற அளித்த சிவ ஞானபோதம்' என்ருர்.

தலைமைபற்றி அருந்துயர்குரம்பையின் என்ருரேனும்,இனம் பற்றிக் கரணம் புவனம் முதலியனவும் உடன் கொள்ளப்படும். அருந்துயர்க் குரம்பையில் நாடப்படுவதாகிய பொதுவியல்பு முன் ஆறு சூத்திரத்தானும், பெரும் பெயர்ப்பொருளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு பின் ஆறு சூத்திரத்தானும் ஓதுப. நாடியெனவே அநுமான அளவையான் என்பதூஉம் கண்டெனவே அநுபூதியில் என்பதூஉம்தாமே போதரும்.

பொதுவியல்பு அளவை முகத்தானும் இலக்கண முகத்தானும் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தான் உணரப்படும்; சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன்முகத் தானும் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நான்குதிறத்தான் உணரப்படும்.

இஃது என் சொல்லியவாறே எனின் :- இவ்விருவகை இயல்பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருள் ஒருமை உணரமாட்டாது ஒரோவொன்றேபற்றி ஐக்கியவாதம் முதல் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முள் மாறுகொண்டு மயங்கு வார்க்கு அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருள் ஒருமை உணர்தற்கு எழுந்தது இந்நூல் என்றவாருயிற்று. சிவஞான போதம் என்பதூஉம் இக்காரணத்தால் பெற்ற பெயரென்பது வடமொழிச் சிவஞானபோதத்து இறுதிச் சூத்திரத்து ஓதியவாறு பற்றி உணர்க.

சரியை முதலிய மூன்று பாதப்பொருளை ஆராயும் நூல்க ளாவன சோமசம்புபத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற் பட்ட சிவஞானபோதம் எனவே அந்நூல்கள் உணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்பது பெறப்பட்டது. படவே 'முன்னர்த் தீக்கை உற்றுச் சிவாகமங்களையோதி அதன் பின்னர்ச் சரியாபாதம் முதலியவற்றை ஆராயும் நூல்களை முறையே கேட்டு அவ்வாறு ஒழுகி மனந்தூயராய் நித்தியா நித்திய உணர்வு தோன்றிப் பிறவிக்கு அஞ்சி வீடுபேற்றில் அவாமிக்கு உடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூல் உணர்த்துக என்பது போந்தது எனக் கொள்க.

உயர் சிவஞானபோதம் எனவே யாப்பும், கேட்போரும், நுதலிய பொருளும், நூற்பெயரும்; ''நாடித் தீர்ந்து கண்டுமயர்வற' எனவே நுதலிய பொருளின் வகையும், பயனும்; 'நந்திமுனிகணத்து அளித்த' எனவே வழியும்; வெண்ணெய்சுவேதவனன் மெய்கண்ட தேவன் எனவே ஆக்கியோன் பெயரும், தமிழ் வழங்கும் நிலமே இந்நூல் வழங்கும் நிலம் என எல்லையும் போந்தவாறு உணர்க.

வடநூலார்யாப்பை ஆனந்தரியம் என்றும், நுதலிய பொருளை விடயம் என்றும், கேட்போரை அதிகாரிகள் என்றும் பயனைப் பிரயோசனம் என்றும் கூறுப. யாப்புச் சம்பந்தம் என்பாரும் உளர்.

**நுண் பொருள் விளக்கம்**

ஆகமம்: இறைவன் அருளாளர்களுக்கு உணர்த்திய மெய்ப் பொருள், ஆகமம் எனப்படும். வேதம் பொதுவென்றும், ஆகமம் சிறப்பென்றும் ஞான நூல்கள் கூறும். சைவ ஆகமங்கள் 28 என்ப.

நாற்பாதங்கள்: புற (சரியை), அக (கிரியை), உள் (யோகம்) அறிவு (ஞானம்) வழிபாடுகள்.

ஆசங்கை: தாமே எழுப்பிக்கொள்ளும் ஐயம். ஒருநூல் கேட்கும் பொழுது அதன் பெயர், அதனை ஆக்கியோன் பெயர் அது எவ்வழி வந்தது, எந்நூலைப் படித்தபின் இதனைப் படிக்க வேண்டும், அந்நூல் வழங்கும் எல்லை, அதன்கண் கூறப்படும் பொருள், அதனைக் கேட்கத் தக்கார், அதனாலாய பயன், அது இயற்றப்பட்ட காலம், அதற்குரிய காரணம், அந்நூல் செய்த இடம் ஆகிய பதினொன்றும் அறிந்தாலன்றி அந்நூல் கேட்டற் கண் மனவூக்கம் செல்லாது. ஆதலின் அப்பதினொன்றையும் முதற்கண் ஒருதலையாக உணர்தல் வேண்டும். இலக்கண நூலார் இப்பதினொன்றையும் சிறப்புப் பாயிரம் என்பர்.

சத்ததாது-எழுவகைத் தாதுக்கள்: அவையாவன: தோல், குருதி, இறைச்சி, மேதை, என்பு, மச்சை, சுக்கிலம் என்பனவாம். தடத்தயிலக்கணம்-பொது இயல்பு. சொரூப விலக்கணம்-சிறப் பியல்பு. அனுபூதி-அழுந்தி அறிதல்.

கதிரவன் ஒளி பெறின் கண் காணும் இயல்பினைப் பெறும். இதனை இவ்வாறு கூறுது கதிரவன் ஒளி பரவின் அல்லது கண் காண இயலாது எனக் கூறியது எதிர்மறை முகத்தால் கூறிய தாகும். இவ்வாறு கூறியது கதிரவன் ஒளி இல்லாமல் கண்காண இயலாது என்னும் இன்றியமையாமையை விளக்குவதற்காகும். கண் காணுதற்குக் கதிரவன் ஒளி இன்றியமையாதது போல, உயிர் மெய்யுணர்தற்குச் சிவஞான போதம் இன்றியமையாத தாம்.

நிருவிகற்பம் ஒரு பொருளைப் பிண்டமாய்க் காண்பது, சவிகற்பம்—அதனைச் சிறப்பாகக் காண்பது. அதாவது அப்பொருளின் பெயர், சாதி, குணம், தொழில், பொருள் எனப் பகுத்துக் காண்பது.

**பெயர் சாதி குணமே கன்மம் பொருள்என ஐந்து**
**உண்டு அவ்விகற்ப உணர்வினுக்குப் பொருளின்**
**உண்மை மாத்திரத்தின்**
**விண்டலில்லா அறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே**

(அளவையியல்—3)

எனவரும் சித்தியார் பாடற்பகுதி இவ்விலக்கணத்தை விளக்கும் உயிர், இறை, தளை ஆகிய முப்பொருள்களின் உண்மையை ஆராயும் அறிவிற்கும், அப்பொருள்களின் இயல்பினைத் திருவருளால் சிறப்பாக அறிதற்கும் இந்நூல் இன்றியமையாத தாகும்.

கரணம் - கருவிகள்: அவை மனம் முதலிய அகக்கருவிகளும், மெய் வாய் முதலிய புறக்கருவிகளுமாம். புவனம் உலகம் அனுமானம்—இங்ஙனமன்றாயின் இது கூடாது என்று உணரும் உணர்ச்சி. புகையுள்வழி நெருப்பு உண்டு என்று அறிதல். அளவை முகத்தான்—காண்டல் கருதல் உரை முதலிய அளவைகளின் வாயிலாக. சாதனம்-பயிற்சி.

இருவகை இயல்பு: பொது இயல்பு, சிறப்பியல்பு. ஆகமங்கள் தாம் கூறும் பொருள்களை வரையறுப்பதில் வேறுபடுகின்றன. சுவாயம்புவம் பொருள்கள் ஏழென்னும். அவையாவன—சிவம், பதி, பசு, ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை, என்பனவாம். பௌக்கரம் முதலிய ஆகமங்கள் பொருள்கள் ஆறு என்னும். அவையாவன—பதி, பசு, ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை என்பனவாம். பராக்கியை முதலிய ஆகமங்கள் பொருள்கள் ஐந்து என்னும். அவையாவன—பதி, பசு, ஆணவம், கன்மம், மாயை என்பனவாம். சர்வஞானோத்தரம் முதலிய ஆகமங்கள் பொருள்கள் நான்கு என்னும்.

அவையாவன சிவம், பதி, பசு, பாசம் என்பனவாம். இரௌரவம், மிருகேந்திரம் முதலிய ஆகமங்கள் பொருள்கள் மூன்று என்னும். அவையாவன பதி, பசு, பாசம் என்பனவாம். இவ்வாறு ஆகமங்கள் பொருள் பற்றிய வரையறையில் வேறுபட்டு விளங்குகின்றன. அவ்வாறு அவையிருப்பினும் அவற்றின் பொருள் ஒருமை உணர்தற்கு இந்நூல் எழுந்தது என்பதாம். சிவஞானம் — ஆகமம்; போதம் — உணர்த்துவது. எனவே ஆகமங்களின் பொருள் ஒருமையை உணர்த்துவது சிவஞான போதம் என்றாயிற்று. இவ்வாறு உரை கோடலின் இதனைக் காரணத்தால் பெற்ற பெயர் என்றார். வடமொழிச் சிவஞான போதத்தின் இறுதிச் சூத்திரத்தில் ''ஏவம்வித்யாச் சிவஞான போதே சைவார்த்த நிர்ணயம்'' என்று உள்ளது. இவ்வாறே சிவஞான போதமென்னும் (தமிழ்) நூலில் சைவ ஆகமங்களின் பொருள் நிச்சயத்தை அறிக என்பது இதன் பொருள் ஆகும். எனவே வடமொழிச் சிவஞான போதத்தினின்றும் இந்நூல் எழுந்தது என்பது சிவஞான முனிவரின் கருத்தாகும். இக்கால ஆய்வாளர் இதனை வன்மையாக மறுப்பர்.

நித்யா நித்ய உணர்வு—நித்திய அநித்தியங்களின் உணர்வு அஃதாவது நிலைபேறுடைய பொருள்கள் இவை, நிலைபேறு அற்றன இவை என உணரும் உணர்வாம்.

யாப்பு: இன்னது கேட்டபின் இது கேட்டற்குரியது எனக் கூறுவது ஆகும். சரியை கிரியை யோகமாகிய மூன்றையும் தெளிவாக அறிந்தபின் இந்நூல் கேட்கவேண்டும் என்பார், 'உயர் சிவஞான போதம்' என்றார். ஈண்டு உயர்வு சரியை முதலிய நான்கனுள் மேலாவதாகிய நான்காம் நிலையில் இருக்கும் ஞானத்தைக் குறிப்பதாகும்.

சம்பந்தம்—நூலுக்கும் நுவலப்படும் பொருளுக்கும் உள்ள இயைபு, எனவே யாப்பு என்பதும் சம்பந்தம் என்பதும் வேறு வேறு பொருளனவாம்.

## மங்கல வாழ்த்து

காமிகம் முதலிய சைவாகமங்களுள் ஞானபாதத்தின் உளதாகிய ஆசங்கை நீக்கி அவற்றின் பொருளுண்மை பொது வியல்பு சிறப்பியல்பு என்று இருவேறு வகைப்படுத்துக் காட்டிப் போதித்தற்கு இரௌரவ ஆகமத்தின் எழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலகம் உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந்தமக்கு இடையூறு சிறிதும் அணுகாமை அறிந்தார் ஆயினும், ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணுக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

**கல்லால் நிழல்மலை**
**வில்லார் அருளிய**
**பொல்லார் இணைமலர்**
**நல்லார் புனைவரே**

**இதன் பொருள்:** கல்லால் நிழல்–அருள்வடிவாகிய கல்லால் நிழலின்கண்ணே எழுந்தருளி இருந்து, மலைவு இல்லார்–நந்தி பெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், அருளிய–மேன்மேற் கருணை கூர்ந்து அருளுதற்பொருட்டு, பொல்லார் இணைமலர்–பொல்லாதபிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தி என்னும் இரண்டு திருவடித் தாமரைகளை. நல்லார்–கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர், புனைவரே–தம்முடைய ஞானசத்தி கிரியா சத்திகட்கு வியாபகமாகக்கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர் எ–று.

நல்லார் புனைவர் எனவே, ஏனையோர்க்கு அது கூடாது என்ற வாறாயிற்று. மூவகை வாழ்த்துள் இது பொருளியல்பு உரைத்தது எனக்கொள்க. அருளிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; அது புனைவர் என்னும் பிறவினை முதல்வினை கொண்டது. இல்லார் இல்லாகச் செய்தார் எனப் பண்படியில் பிறந்த வினைப்பெயர். அருளிய பொல்லார் எனப் பெயரெச்ச முடிபாக வைத்து உரைப்பினும் அமையும்.

மலைவில்லார் அருளப் பொல்லார்தாள் புனைவர் எனவே, அவ் விருவருந் தம்முள் வேற்றுமையின்மை பெற்றும். உலகத்துப் புதல்வர்கள் மாட்டுச் செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் களிபேரு வகைபயப்பிக்கும் ஆகலின் அந்நயம் பற்றி அங்ஙனம் கூறியதூஉம் ஆம்.

(நு-வி) சாக்கிரத்தே அதிதத்தைப் புரிந்தவர்கள்-நனவுநிலையில் இருந்தே தம் கருவி கரணங்கள் அனைத்தையும் சிவகரணங்களாம் படித் திருவருளில் தோய்ந்து நிற்கும் அருளாளர்கள். மலைவு தீர்த்து அருளிய-மயக்கத்தைத் தீர்த்து அருளிய, ஞானசத்தி-அறிவாற்றல். கிரியா சத்தி - தொழிலாற்றல். விநாயகப் பெருமானுடைய திருவடிகளுள் ஒன்று அறிவாற்றலைத் தருவது. பிறிதொன்று தொழிலாற்றலைத் தருவது. அவ்விரண்டு திருவடிகளிலும் மெய்யன்பர்களின் அறிவாற்றலும், தொழிலாற்றலும் அடங்கி நிற்கும். தாள் + தலை = தாடலை. தாள்தலை ஆகிய இரு சொற்களும் தாடலை என்னும் ஒரு சொல்லாய் அடங்கி ஒன்று பட்டு நின்றவாறு போல, மெய்யன்பர்களின் அறிவாற்றல் தொழிலாற்றல் ஆகிய இரண்டும் பெருமானின் இரு திருவடிகளிலும் அடங்கி ஒன்றுபட்டு நிற்கும் என்பதாம். அவ்வாறு ஒன்றுபட்டு நிற்பதாவதும் தம் அறிவுக்குப் பெருமானின் அறிவையன்றி அறியும் தன்மை இன்று எனவும்; தம் தொழிற்கு அப்பெருமானின் தொழிற்பாடு இன்றித் தமக்கெனத் தொழிற்பாடு இல்லை என்றும் உணர்ந்து தன் முனைப்பின்றி அவரருள் வழிநிற்பதாம். பொல்லாப் பிள்ளையார்-கருவியால் போழ்க்கப்படாத பிள்ளையார்: எனவே சுயம்புமூர்த்தி என்பதாம். திருவெண்ணெய்நல்லூரிலும் திருநாரையூரிலும் உள்ள விநாயகப் பெருமானின் திருவடிவங்கள் சுயம்புவாக அமைந்தனவாம்.

மூவகை வாழ்த்தாவன-வாழ்த்து, வணக்கம் பொருளியல்பு உரைத்தல் என்பனவாம். அவற்றுள் இது பொருளியல்பு உரைத்தல் என்பதனால் இந்நூல் நுவலும் பொருள் அனைத்தையும் குறிப்பால் தந்து நிற்கும் இயல்பினது என்பது பெறுதும். 'இது கல் என்பது முதல் ஏ என்பது இறுவாய்ப் பன்னிரு சொற்களால் கூறவே, இந்நூல் பன்னிரு சூத்திரத்தால் செய்யப்பட்டது எனவும், அவற்றுள் மும்மூன்று சொற்கள் ஒவ்வோர் அடியாக வைத்து நான்கடியாகக் கூறவே இந்நூலும் அவற்றுள் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாக வைத்து நான்கியலால் செய்யப்பட்டது எனவும், அவற்றுள் முன்ஈரடியும் ஒருவினைமுடிபும் பின்ஈரடியும் பிறிதோர் வினைமுடிபும் ஆக இருவகைப்படுத்துச் செய்யவே, முன்ஆறு சூத்திரமும் ஓரதிகாரமும், பின்ஆறு சூத்திரமும் வேறோர் அதிகாரமுமாக இந்நூல் இரண்டு அதிகாரத்தால் செய்யப்பட்டது எனவும் குறிப்பால் உணர்த்தியவாறு காண்க. இரண்டாம் ஓத்தின் முதற் சூத்திரம் "இதுவுமது" எனமுதலோத்தின் இறுதிச் சூத்திரத்தோடு மாட்டெறியப்படுவது என்பது உணர்த்துதற்கு மலைவு என்பதனை ஈரடியினும் சாரவைத்தார். 'கல்லானிழல்' என முதலடியில் இடங்கூறவே முதலோத்துப் பிரமாணம் கூறுவது என்பதூஉம், இரண்டாம் அடியில், 'மலைவில்லார்

அருளிய' எனச் செய்கை கூறவே இரண்டாம் ஓத்து இலக்கணம் கூறுவது என்பதூஉம், மூன்றும் அடியில் 'பொல்லார் இணை மலர், எனத்திருவடிகூறவே மூன்றும் ஓத்துச்சாதனம் கூறுவது என்ப தூஉம், நான்காம் அடியில் 'நல்லார் புனைவர்'எனப்பேறு கூறவே நான்காம் ஓத்துப்பயன் கூறுவது என்பதூஉம் குறிப்பால் பெறப்படும். பிறவும் இவ்வாறு ஓர்ந்து உணர்க. இங்ஙனம் நூல்நுதல் பொருள் எல்லாம் குறிப்பால் தன்னகத்தடக்கி நிற்றல் மங்கல வாழ்த்துக்கு இலக்கணம் என்றுணர்க'' என்பது சிவஞான போதப் பேருரை.

சிவபெருமானின் திருவருளுக்கு இலக்காக்கும் பொல்லாப் பிள்ளையாரின் இணைமலர்களுக்கு, இடையூற்றை நீக்கி இந்நூலை முற்றுப்பெறச் செய்தல் அருமையன்று. ஆதலின் இது மங்கல வாழ்த்தாயிற்று.

அருளிய-அருள் செய்தற்பொருட்டு. செய்யிய என்னும் வினையெச்சம் காரண காரியப் பொருளில் வருவதாம். அது தன்வினை கொண்டும் முடியும்; பிறவினை கொண்டும் முடியும்; இங்கு அருளிய என்னும்வினை சிவபெருமானுக்கு உரியதாகும். ஆயினும் அது நல்லார் புனைவர் என்னும் பிறவினை கொண்டு முடிந்துள்ளது. சிவபெருமான் அருள் புரிதற்பொருட்டுப் பொல்லாப் பிள்ளையாரை வணங்குவன் என்பதாம்.

மலைவு இல்லார் என்பது மலைவினை இல்லையாகச் செய்தவர் என்னும் பொருள் பயந்து நிற்றலின் பண்படியாகப் பிறந்த வினைப்பெயர் என்றார். அருளிய என்பதைச் சிவபெருமான் அருளுதற் பொருட்டு என வினையெச்சமாக்காது, அருளிய பொல்லார் எனப் பொல்லார் என்பதோடு கூட்டின் அது பெயரெச்சமாகின்றது. அவ்வாறு கூறின் சிவபெருமான் கொடுத் தருளிய பொல்லாப் பிள்ளையார் என்பது பொருளாகும்.



## அவையடக்கம்

**தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்**
**எம்மை யுடைமை எமையிகழார்—தம்மை**
**உணரார் உணரார் உடங்குஇயைந்து தம்மில்**
**புணராமை கேளாம் புறன்.**

இஃது அவையடக்கம் கூறுமுகத்தானே ஈண்டுஎடுத்துக் கொண்ட சித்தாந்த சைவத்தின் உயர்வும் ஏனைச்சமயத்தார்களது இழிபும் கூறுகின்றது.

**இதன் பொருள்:** தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார்-உடைப்பொருளாகிய தம் இயல்பினை உணர்ந்து தம்மை உடையானாகிய தலைவனை உணரும் சிந்தாந்த சைவர், எம்மை உடைமை எமை இகழார்-தமக்கு உடைப்பொருளாகிய எம்மை உடையர் ஆகலின், எம்மைக் குற்றங்கள் நீக்கிக் குணம் கொண்டு கோதாட்டுவது அன்றி இகழ்தல் செய்யார்; (ஆகலான் எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வர்). தம்மை உணரார் உணரார்-அங்ஙனம் தம்மை உணராதார் தம்மை உடையானாகிய தலைவனையும் உணரார், ஆகலான், உடங்கு இயைந்து தம்மின் புணராமை-அவர் ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மில் தாமே சேராது முரணுதலால், புறன் கேளாம்-அவர் எம்மையும் எம்மாற் செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைக்கும் மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம். எ—று.

ஆகலான், எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக் கொள்வர் என்பது குறிப்பெச்சம். தன்னை என்னும் இரண்டன் உருபு விகாரத்தால் தொக்கது. உடைமை புணராமை என்புழி இன்னுருபும் ஆனுருபும் விரித்துரைக்க.

தம்மையுணரார் எனப்பொதுப்படக்கூறுதலானே, தாமொரு பொருள் உண்டு என்பதே உணராத உலோகாயதரும், தம்மைக் குணிப்பொருள் என்றுஉணராத புத்தர்சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு உடைப்பொருள் என்று உணராத ஏனைச் சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும், தம்மை உடைப்பொருள் எனக்கொள்ளினும், அவருள் பாஞ்சராத்திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணுப்பரி மாணம் கோடலானும், உடையானுக்குப் பரிணமம் கூறுதலானும், உடையான் அல்லாதானை உடையான் என மயங்கிக் கோட லானும், சிவாத்துவித சைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணமம் கூறுதலானும், பிறவாற்றானும் அவரும் தம்மை உணராரே என்பது.

புறன் புறச்சமயம் பற்றி இகழ்ந்துரைக்கும் மொழியும், புறங்கூற்று மொழியும் என்பது இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால் கொள்க. புறங்கூற்று மொழியாவது முக்கூற்றுப் புறச்சமயங்களின் வேறான பாடாணவாதசைவர் முதலியோர் முன் அன்றிப் புறத்தே இகழ்ந்து கூறும் மொழி என்க.

(நு - வி): கோதாட்டுவதன்றி - பாராட்டுவதன்றி. உடங்கு-ஒருங்கு. எம்மை உடைமை எமை இகழார் என்பதன்றி எம்மால் செய்யப்படும் நூலையும் அவ்வாறு இகழார் எனச் செய்யுளில் இல்லை. எனினும் அக்கருத்தைக் குறிப்பெச்சமாக உரையாசிரியர் வருவித்து உரைக்கின்றார். தன் உணர்வார் என்பதில் ஐ விகாரத்தால் தொக்கு நின்றது. தன்னை - தலைவனை.

தம்மியல்பை உணரார் என்றோ தாம் ஒரு பொருள் உண்டென்று உணரார் என்றோ கூறாமல் தம்மை உணரார் எனப் பொதுப்படக்கூறியதால், அத்தொடர் உலகாயதர் முதலிய பல சமயவாதிகளையும் குறிப்பதாக உரையாசிரியர் கூறுகின்றார். உலகாயதர் உடம்பிற்கு வேறாக உயிர் உண்டு என்பதும், வினை உண்டு என்பதும், கடவுள் உண்டு என்பதும் பொய் என்பர் ஆதலின் தாம் ஒரு பொருள் உண்டென்பதே உணராதவராகிறார். குணத்தை உடையது குணி ஆகும். உயிர்க்குக் குணம் அறிவு, இச்சை, செயல்களாகும். எனவே உயிர் குணியாம். அறிவு இச்சை செயல்கள் குணமாம். ஆனால் புத்தர் முதலியோர் குணமே உயிரென்பர். புத்தர் சாங்கியர் மாயாவாதிகள்ஆயினோர் தம்மைக் குணிப்பொருள் என்று உணரார். பரிணாம வளர்ச்சி-பாஞ்சராத்திரிகள் உயிர் வளர்ச்சி அடைவதொன்று என்பர். அவ்வாறே தம்மை உடையவனாகிய நாராயணனே பல அவதாரம் எடுத்தான் என உடையானுக்கும் பரிணாமம் கூறுவர். அன்றியும் அவர் 25வது தத்துவமாக வாசுதேவனைக்கொண்டு அப்பெருமானையே பரம்பொருள் என்பர். சித்தாந்த சைவம் தத்துவம் 36 எனக்கொண்டு சிவபெருமானின் ஆணைவழி நின்று வாசுதேவன் காத்தல் தொழில் செய்வான் என்னும். ஆதலின் அவர் உடையான் அல்லாதானை உடையான் என மயங்கிக் கூறியவராவர். சிவாத்துவித சைவர் சிற்சத்தியின் பேதமே பசு பாசங்களாகின்றன என்பர்.

புறன் என்பது புறச்சமயத்தார் இகழ்ந்துரைக்கும் மொழியையும் புறங்கூறுதலையும் குறிப்பது இரட்டுற மொழிதல் என்னும் உத்தியாலாம். முக்கூற்றுப் புறச் சமயமாவன புறப்புறம், புறம், அகப்புறம்ஆகியசமயங்களாம்.முன்னன்றி-தம்முன்புஅல்லாமல்.

சித்தாந்த சைவத்தின்உயர்வு ஏனைய சமயங்களைப் படிமுறையில் வைத்துக் காண்பதன்றி அவற்றைப்புறங் கூறாமையாம்.

# பொதுவியல்பு

## பிரமாண இயல்



### முதல் நூற்பா

ஈண்டு ஆசிரியர், முதல்நூலில் கூறியவாறே சிவாகமங்களில் ஓதப்படும் ஞானபாதப் பொருள் எல்லாவற்றையும் பொது உண்மை என்று இரண்டாகத் தொகுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நால்வகைப் படுத்து, பிரமாணவியல் மூன்று பாதத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் உலகிற்கு முதற்கடவுள் சிறப்பு வகையால் உண்டென்னும் ஆகமப்பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப் பிரமாணம் கூறுகின்ருர்.

**அவன் அவள் அதுஎனும் அவைமு வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கிமலத்து உளதாம்**
**அந்தம் ஆதி என்மனுர் புலவர்.**

என்பது சூத்திரம். என்னுதலிற்றேஎனின், சங்காரகாரணனய் உள்ள முதலையே முதலாக உடைத்து இவ்வுலகம் ' என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இது சூத்திரக் கருத்து உரைக்கின்றது.

(இ-ள்) நிவர்த்திகலை முதலிய பஞ்சகலைகளுள் பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக் கண்ணதாகிய மகாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலாய் உள்ள முதல்வனையே தனக்கு முதற் கடவுளாக உடைத்து அவன் அவள் அது என்று இவ்வாறு சுட்டி உணரப்படுவதாய உலகம் என வேதாகமங்களுள் கூறப் படுவதனை அநுமான அளவையான் உணர்த்துதலைக் கருதிற்று இச்சூத்திரம் என்க.

ஏகாரம்: இயைபின்மை நீக்குதற்கும், பிறிதின் இயைபு நீக்கு தற்கும் பொதுவாய் நின்ற பிரிநிலை.

இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க.

இஃது இவ்வுரைமுகத்துக் கேட்போரால் உரைவகைபற்றிச் செய்து கோடற்பாலது ஒன்றனை அறிவுறுத்துகின்றது,

**(இதன் பொருள்)** இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு, முன்னர்க் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரை பற்றிஉரைத்துக் கொள்க எ-று.

எனவே, இங்ஙனம் இருவகைப்படும் பொழிப்புரையுள் கண்ணழித்துக் கடாவிடைகளான் உரைக்கும் வார்த்திகமாகிய பொழிப்புரை மாத்திரையே யாம் ஈண்டுரைக்கின்றேம்; பிண்டமாகக் கொண்டு உரைப்பதாய பொழிப்புரை இதுபற்றி யுணர்ந்து கோடல் எளிதாகலின், அஃது யாம் உரைக்கின்றிலம் என உரை முகத்து மாணுக்கர்க்கு அறிவுறுத்தவாருயிற்று.

இஃது ஏனைச் சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டுணர்தற் பொருட்டு முதற்கண் வைக்கப்பட்டது.

இவ்வாறு ஆசிரியர் ஆணை தந்தமையின், கண்ணழித்துரை பற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும்.

**(இ-ள்:) அவன் அவள் அது எனும் அவை** — அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டி உணரப்படும் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத் தொகுதி ; **மூவினைமையின்** — தோற்றம் நிலை இறுதி யென்னும் முத்தொழில் உடைமையால் **தோற்றிய திதியே** – ஒருவனுல் தோற்றப்பட்டதாய உள்பொருளேயாம் ; **ஒடுங்கி** — அது தோன்றுங்கால் தான் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும்; **மலத்து உளதாம்** - சகசமலம் நீங்காமையால் அது நீங்குதற்பொருட்டு மீளத்தோன்றுவதாம். **அந்தம் ஆதி** – இவ்வாருகலின் சங்காரத் தொழிலைச் செய்யும் கடவுளே உலகிற்கு முதற்கடவுள். ஏனையோர் அன்னர் அல்லர் ; **என்மனுர் புலவர்** – எனக் கூறுவர் அளவை நூல் உணர்ந்தோர் என்றவாறு.

**அவை**, தொகுதி. சுட்டுப் பெயர் எனக் கொள்ளின். **உள** எனப் பிரித்துப் பயனிலையாக்கித் **தாம்** என்பதனை அசைநிலையாக வைத்துரைத்து. **ஆக்கச் சொல்** வருவித்துக்கொள்க. **வினைமை** வினையுடைமை.

**தோன்றிய** என்னுது **தோற்றிய** எனப் பிறவினை வாய்பாட்டான் ஓதுதலின் அதற்குரிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. **தோற்றிய** வென்னும் பெயரெச்சம் திதியென்னும் செயப்படுபொருட் பெயர்கொண்டது. திதியாய் ஒருவனுல் தோற்றப்பட்ட தென்பார், **தோற்றியதிதி** யென்ருர். **திதி**யென்றது, ஈண்டு உள்பொருள் என்னும் துணையாய் நின்றது.

மூவினை உடைமையான் உள்பொருளாதலும், அவ்விரண்டும் உடைமையான்நிமித்தகாரணனை உடைத்தாதலும் துணியப்படும் என்பார், **மூவினைமையின் தோற்றிய திதியே** என்ருர்.

ஏகாரம் தோற்றம். **ஒடுங்கி** யென்பது பெயர். உருபுகள் தொக்கு நின்றன.

அந்தத்தைச் செய்யுங் கடவுளை **அந்தம்** என்றது உபசாரம், பிரிநிலை ஏகாரம் விகாரத்தால் தொக்கது.

காணப்பட்ட உலகால் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின் **தோற்றிய திதியே** யெனவும், **ஒடுங்கியுளதாம்** எனவும் உலகின்மேல் வைத்துக் கூறினர் ; கருத்துரையுட் கூறியதும் அது நோக்கி.

இச்சூத்திரத்துள் "அவனவளதுவெனு மவை மூவினைமையின்" என்பது ஓர் அதிகரணம்; தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம் என்பது மூன்றதிகரணத்தை யுள்ளடக்கி நிற்பதோர் அதிகரணம்; "அந்தமாதி யென்மனர்" என்பது ஓர் அதிகரணம்; ஆக முக்கூற்றது இச்சூத்திரமென்று உணர்க.

இம்மூன்றும் முறையே, ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒரு பொருள்மேல் வருதலின் ஒரு சூத்திரத்தாற் கூறினர்.

தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபும், இயைபும் என்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டு அதிகரணம் எனப்படும்.

**(நு - வி)** ஆகமங்களில் காணப்படும் பொது இயல்பாவது ஒரு பொருளின் பருப்பொருளாய நிலையாம். அதாவது அப்பொருள் பிற பொருளொடும் தொடர்புபட்டு நிற்கும் நிலையாம். சிறப்பியல்பாவது ஒரு பொருளின் நுண்ணிலையாம். அஃதாவது அப்பொருள் பிறபொருளொடு தொடர்பின்றித் தனித்திருத்தலாம். இந்நிலையில் இறை உயிர் தளை ஆகியவற்றின் பொது இயல்பை முன் ஆறு சூத்திரங்களும் நுவலுகின்றன. அம் முப்பொருள்களின் சிறப்பியல்பைப் பின் ஆறு சூத்திரங்களும் நுவலுகின்றன. இறையின் பொது இயல்பு உயிர்களொடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பதாம். அதன் சிறப்பியல்பு என்றும் அழியாததாயும் அறிவு இன்பமாயும் நிற்பதாம். உயிருக்குப் பொது இயல்பு கருவி கரணங்களுடன் கூடி நிற்பதாம். அதன் சிறப்பியல்பு அவற்றின் நீக்கிச் சிவமாய் நிற்பதாம். தளைக்குப் பொது இயல்பு செயற்பாடாய் நிற்பதாம். அதன் சிறப்பியல்பு காரண வடிவாய் நிற்பதாம். இம்முப்பொருள்களின் பொது இயல்பு அளவையினாலும் இலக்கணத்தினாலும் அறியப்படுதலின் பிரமாண இயல் இலக்கண இயல் ஆகிய இரண்டும் பொது அதிகாரம் எனப்பட்டன. இவற்றின் சிறப்பியல்பு பயிற்சியினாலும் (சாதனத்தினாலும்) பயனாலும் அறியப்படுதலின் சாதன இயல் பயனியல் ஆகிய இரண்டும் உண்மை அதிகாரம் எனப்பட்டன. பொது இயல்பு ஆராய்ச்சி அறிவியலால் அறியப்படுவது. சிறப்பியல்பு பட்டறிவால் ( அனுபவ அறிவால் ) அறியப்படுவது. உலகிற்கு முதற்கடவுள் உண்டு என்பது

பொதுவகையில் கூறுவதாகும். அம்முதற் கடவுள் சிவபெருமானே என்பது சிறப்பு வகையில் கூறப்படுவதாகும்.

நிவர்த்திகலை முதலிய பஞ்சகலைகளாவன : 1 நிவர்த்திகலை (நீக்கல்), 2, பிரதிட்டாகலை, (நிலைபெறச் செய்தல்) 3. வித்யா கலை (நுகர்வித்தல்)4. சாந்தி கலை(அமைதியை ஆக்கல்)5.சாந்திய தீத கலை (அமைதிக்கும் அப்பாலதான) அருளில் அழுத்துதல்,இவ்வைங்கலைகளிலும்தத்தமக்குரியநிலையில்தத்துவங்களும் புவனங்களும் அமைந்துள்ளன.அவற்றுள் நிவர்த்திகலையில் உள்ளனவற்றை அழிப்பவர் நான்முகன் ஆவர். பிரதிட்டா கலையில் உள்ளனவற்றை அழிப்பவர் மால் ஆவர். வித்யா கலையில் உள்ளனவற்றை அழிப்பவர் உருத்திரர் ஆவர். சாந்தி கலையில் உள்ளனவற்றை அழிப்பவர் அனந்த தேவர் ஆவர். சாந்தியதீத கலையில் உள்ளனவற்றை அழிப்பவர் சதாசிவர் ஆவர். இவர்கள் சிவபெருமானின் ஆணைவழி நின்று இவ்வழித்தற் தொழிலைத் தத்தம் எல்லையளவும் நடத்துவர். இவருள் சதா சிவரை நிலைக்களமாகக்கொண்டு செலுத்தும் சிவபெருமானே முதற்கடவுளாவர்.

இயைபின்மை நீக்கல்-தனக்குரிய இயைபு இல்லாமையை நீக்குதல்; எனவே தனக்குரிய இயைபு உடைமையைச் சொல்லுதல். சங்கார காரணனுய் உள்ள முதலையே என்ற இடத்திலுள்ள ஏகாரம் அப்பெருமானுக்கு ஒடுக்கத் தொழில் உண்டு என்பதனைக் குறித்தற்கேயாம். ஆதலின் அது இயை. பின்மை நீக்கலாயிற்று. அவ்வொடுக்கத் தொழிலைச்சிவபெருமான் ஆணைவழி அல்லது பிற கடவுளர்க்குத் தம்மியல்பில் செய்தற் கில்லை என அவர்களை விலக்குங்கால் பிறிதின் இயைபு நீக்கலு மாயிற்று. ஒடுக்கல் தொழிலை நிகழ்த்துதற்குத் தனக்கோ தம் ஆணைவழி நிற்பவர்க்கோ அன்றிப் பிறருக்கு அவ்வாற்றல் இல்லை எனப் பிறரினின்றும் பிரித்தலின் பிரிநிலை ஆயிற்று.

உரைவகை பிண்டமாகக் கூறும் பொழிப்பும், சூத்திரச் சொற்களை நிறுத்தி உரைக்கும் பொழிப்பும் என இருவகைப்படும். இவற்றுள் சொற்படு பொருளாக உரைக்கும் (கண்ணழித்து உரைக்கும்) உரையினின்றும் பிண்டப்பொழிப்பை உரைத்துக் கொள்க என ஆசிரியர் கூறுகின்ருர்.

அவை-சொல்லும் பொருளுமாய இருவகை உலகத் தொகுதி. எனவே அவன் அவள் அது ஆகிய மூன்றையும் இச்சொல் குறிக்க வில்லை என்பது உரையாசிரியர் கருத்து. அன்றி அச் சொல் அம்மூன்றையும் குறிக்கும் பெயராகக்கொள்ளின் புன்மைப் பொருளவாம். அங்ஙனம் கொள்ளின் உளதாம்

என்னும் ஒருமைப் பயனிலையோடு முடியாதாம். ஆதலின் உளதாம் என்பதில் உள்ள தாம் என்பதை அசைநிலையாகக் கொண்டு ஆம் எனும் ஒரு ஆக்கச் சொல்லை வருவித்துக் கொண்டு உளதாம் என உரைக்க எனக்கூறினர். இவ்வாறு கொள்ளின் ஒருமை பன்மை மயக்கம் இலதாகின்றது.

தோற்றிய திதியே என்னும் தொடர்க்குரிய உரையில் ஒருவனல் என்னும் சொல் வருவித்து உரைக்கப்பட்டது. அங்ஙனம் வருவித்தது அவாய்நிலையினல் ஆம் என உரையாசிரியர் கூறுகின்ருர். தன்வினை என்பது தானே தொழிற்படுவதாம். பிறவினை என்பது பிறரால் தொழிற்படுவதாகும். தோன்றிய என்பது தன்னல் தோன்றிய எனப்பொருள் கொள்ளின் தன் வினையாம். தோற்றிய என்பது தன்னல் பிறரைக்கொண்டு தோற்றுவிக்கப்பட்ட எனப்பொருள் கொள்ளின் பிறவினையாம். அதற்குரிய வினைமுதல் என்றது ஒருவனல் என்பதாகும். அவாய் நிலையாவது ஒருசொல் தன்கருத்தை முடிப்பதற்குப் பிறிதொரு சொல்லை விரும்பி நிற்பதாகும். தோற்றிய் திதி என்பது தோற்று விக்கப்பட்ட உள்பொருளாம் என்னும் பொருள்படும். இங்குத் தோற்றிய என்பது பெயரெச்சமாக உள்ளது. திதி என்பது அம்முதல்வனல் தோற்றுவிக்கப்பட்ட பொருளாதலின் செயப் படுபொருள் ஆயிற்று.

அவ்விரண்டும் மூவினை உடைமை, உள்பொருளாதல் ஆகிய அவ்விரண்டுமாம். நிமித்த காரணம்-செய்பவன். திதியே என்பதிலுள்ள ஏகாரம் என்றும் உள்பொருளே எனப்பொருள் படுதலின் தோற்றமாயிற்று. ஒடுங்கி என்பது, ஒடுங்குதற்கு நிலைக்களனுக உள்ள கடவுளைக் குறித்தலின் பெயர் என்ருர். ஒடுங்கி மலத்து என்னும் சொற்களில் முறையே இன்னுருபும், ஆல் உருபும் விரித்து உரைசெய்யப் பெறுகின்றன. ஆனல் அவை நூற்பாவில் இல்லை. ஆதலின் உருபுகள் தொக்குநின்றன என்ருர். இறைவன் தான் அழிவில்லாதவன் ஆனல் பிறவற்றை அழிப்பவன். இவ்வாறு பிறவற்றிற்கு அந்தத்தை (அழிவை)ச் செய்யும் கடவுளை அந்தம் என்றது உபசாரமாம். உபசாரமென்றது ஒன்றற் குரியதைப் பிறிதொன்றிற்கு ஏற்றி உரைப்பதாம்.

அதிகரணம் – கூறு. ஒவ்வொரு அதிகரணத்திலும் ஐந்து கூறுகள் உள. ஒன்று தன்னல் கூறப்படும் பொருள். அதாவது மேற்கோள். இரண்டு அதன்கண் தோன்றும் ஐயப்பாடு. மூன்று அதற்குப் பிறர் கூறும் கருத்து. நான்கு அதனை மறுத்துரைக்கும் தம்முடிபு. ஐந்து அதற்குக் காட்டப் பெறும் இயைபு. அஃதாவது எடுத்துக்காட்டாம்,

## முதலதிகரணம்

மேற்கோள்

ஈண்டு, உளதாய், ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் உடைத்து என்றது.

என்பது மேற்கோள். என்னுதலிற்றோ வெனின், மூவினை உடைத்தோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை மூவினை உடைத்து என்றால் பொருந்தாது என மீமாஞ்சகரும் உலகாயதரும் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

**இதன் பொருள் வெளிப்படை.**

ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப் பகுப்புடைத்தாயும், பலவேறு வகைத்தாய்ச் சடமாயும் சுட்டியறியப்படுவதாயும் இருத்தலின், இம் மூன்றேதுவானும் பிர பஞ்சம் தோன்றி நின்று அழியும் என்பது துணியப்படும் என்பார், **உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று** என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் என உடம்பொடு புணர்த்தோதினர்.

**உளதாய்ச் சுட்டப்பட்ட** என இயையும். உளதாகச் சுட்டப் படுதல் முயற்கோடு முதலியனபோலத் திரிபு ஐயங்களானன்றி மெய்யாகச் சுட்டப்படுதல்.

ஏது

**தோற்றமும் ஈறும் உள்ள தன்பாலே கிடத்தலின்**

என்பது ஏது. என்னுதலிற்றோ வெனின், காட்சியளவைக்கு எய்தாது உரைப்பனவெல்லாம் பிரமாணமாகா என உலோகாயதர் கூறும் கடாவை ஆசங்கித்துக் காட்சியளவை பற்றியும் மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) உற்பத்தியும் நாசமும் காணப்பட்டதிதியின் பக்கத்தே காணக் கிடத்தலின் உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் உடைத்து என மேற்கொண்டது எ-று.

### எடுத்துக்காட்டு

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையின்—ஓதாரோ
ஒன்றுஒன்றில் தோன்றி உளதாய் இறக்கண்டும்
அன்றுஎன்றும் உண்டென்ன ஆய்ந்து.

என்பது உதாரணம். என்னுதலிற்றோவெனின், உள்ளதன்பால் அவ்விரண்டும் கிடத்தல் யாங்ஙனம் என்னும் கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) பேதாய்—காட்சி யளவைகளானும் அறியப்படாத மடவோனே; பூதாதி—பூத முதற் காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு; திதி ஈறும் முதலும் துணையாக ஆகும்—திதி நிகழ்வுழி நாசமும் உற்பத்தியும் தனக்குத்துணைக்காரணமாகக் கொண்டே நிகழாநிற்கும்; அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்று அழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே அழியக் கண்டிலமால் எனின், ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக்கண்டும்-ஒவ்வொரு காலவிசேடத்தில் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவதனைக் கண்டுவைத்தும்; என்றும் அன்று உண்டு என்ன பூதாதிக்கும் ஆய்ந்து ஓதாரோ—என்றாயினும் அதற்குரிய காலம் வருமென்று உலகத்திற்கும் அங்ஙனம் ஆதல் உண்டு என்று அக்காட்சிபற்றி ஆராய்ந்து சொல்லார்களோ உன்னைப்போலும் மடமையில்லாதோர் எ-று.

பூதாதி, அன்மொழித்தொகை, பூதத்துக்கு மேல் உளவாய தத்துவங்கள் உலோகாயதருக்கு உடம்பாடு அன்மையின் பூதமுதலாய தத்துவங்கள் என உரைத்தல் ஈண்டைக்கு ஏலாமையறிக; பூதாதிக்கு என நான்கனுருபு விரித்துரைக்க அது பின்னரும் சென்று இயையும். ஆகும் என்பது முற்றுவினை.

ஈண்டுப் பெற்றிமை என்றது சாதியை. ஓகாரம், எதிர்மறை. ஒன்றொன்றின் என்பது "ஒன்றொன்றாப் பார்த்துணர்வது உள்ளமே என்றாற்போல அடுக்குமொழி. அது கால விசேடமாதல் என்றும் அன்று எனப் பின்வருதலாற் பெற்றாம்.

ஒருங்கே என்பது சொல்லெச்சம். ஒன்று ஒன்றில் தோன்றி உளதாய் இறுதலாவது, "பயில்வித் தெல்லாம், காரிட மதனிற் காட்டும் அங்குரம் கழியும் வேனில்" என்பதனாலறிக. கண்டும், உம்மை சிறப்பு.

**(நு - வி:)** உற்பத்தி – தோற்றம். திதி–நிலை பேறு. நாசம் – அழிவு. கடா–வினா. ஆசங்கித்து–தாமே எழுப்பிக்கொண்டு.

திதியின் பக்கத்தே–இருப்பினிடமாக. காணப்படும் பொருள் என்றோ ஒருகால் தோன்றியிருக்க வேண்டும். அவ்வாறு தோன்றிய தெனவே, அது தோன்று முன் அழிந்திருக்க வேண்டும். எனவே காணப்படும் இருப்பைக்கொண்டே தோற்றமும் அழிவும் உண்டென உணர இயலும்.

உடம்பொடுபுணர்த்தல் ஒன்றற்குரிய இலக்கணத்தை விதி யாகக் கூறுவதன்றி ஆசிரியர் தாம் எடுத்து மொழிவதனாலேயே பெறப்பட வைப்பதாம். உலகம் ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் முப்பகுப்புடையது. இதனை இலக்கணமாகக் கூறாது தாம் எடுத்து மொழியும் வகையினாலேயே பெறப்பட வைத்தலின் உடம்பொடுபுணர்த்தலாயிற்று.

திரிபு – ஒன்றை யொன்றாகக் கருதுவது; கயிற்றைப் பாம் பென்றால் போல. ஐயம் – இதுவோ அதுவோ எனஐயுறுவது கயிறோபாம்போ என்றாற் போல.

அறியப்படாத–அறியாத. ஒவ்வொருகாலவிசேடம் – மாரிக் காலம், வேனிற்காலம் முதலியன. மழைக்காலத்துத் தோன்றும் உயிர்கள் சில வேனிற்காலத்து அழிந்துவிடுகின்றன. அவ்வாறே வேனிற் காலத்துத் தோன்றுவன சில மாரிக்காலத்து அழிந்து விடுகின்றன. இவற்றால் இவையனைத்தும் ஒருங்கு அழியும் காலமும் உண்டென உணரலாமன்றோ என்பது கருத்து. ‘ஓரிடம் அழியப் பின்னும் ஓரிடம் நிற்கும் ஒக்கப், பாரிடம் அழிவ தின்றாம் என்றிடில் பயில்வித்தெல்லாம், காரிடம் அதனிற் காட்டும் அங்குரம் கழியும் வேனில், சீரிடத் துலகு காலம் சேர்ந் திடப் பெயர்ந்து செல்லும்’ என்னும் சிவஞான சித்தியாரும்.

பூதாதி – நிலம், நீர், தீ. வளி, விண் என்னும் பூதங்களைக் காரணமாகவுடைய: ஈண்டு அவற்றைக் காரணமாகவுடைய உலகைக் குறித்தலின் அன்மொழித் தொகையாயிற்று.

பெற்றிமையின் – தன்மையால் எனவுரை காண்டற்கியல்வ தேனும் தாம் உரைத்த உரைக்கு ஏற்பச்சாதியை என்றார்.

ஒன்று ஒன்றின் – ஒவ்வொரு காலவிசேடத்தின். அளவை மூன்றனுள் காட்சி சிறந்ததாகலின்கண்டும் என்பதிலுள்ள உம்மை சிறப்பும்மையாயிற்று.

## இரண்டாமதிகரணம்

மேற்கோள்

இனி, இல்லதற்குத் தோற்றமின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின், ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தி இல்லை என்றது.

என இங்ஙனம் சொற்பல்காமைப் பொருட்டுத் துணிந்ததாக வைத்து உரைத்தாராயினும், பொருள் இயைபிற்கு ஏற்ப, இதனை மூன்று அதிகரணமாக வைத்துரைப்பது ஆசிரியர் கருத்து எனக் கொள்க. அஃதாமாறு காட்டுதும்.

மேற்கோள்

**அ. இனி உலகம் உள்ளது என்றது.**

என்பது மேற்கோள். என்னுதலிற்றோ வெனின், "உலகம் இல்பொருளாய் தத்தம் சார்பிலே தோன்றி அழிதல் இயல்பு என்றலே அமைவுடைமையின், அது மூவினை உடைத்தாயினும், தோற்றுவான் ஒருவனை உடைத்தாதல் செல்லாது" எனப் பத்த நூலார் சொல்லும் கடாவை ஆசங்கித்துத் திதி யென்னும் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

**இதன்** பொருள் வெளிப்படை.

ஏது

**இல்லதற்குத் தோற்றமின்மையின்**

என்பது ஏது. என்னுதலிற்றோவெனின், உள்ளதால் யாங்ஙனம் என்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்:) இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்தும் உற்பத்தி இன்மையின். ஈண்டு உற்பத்தி காணப்படுதலான் உலகம் உள்ளது என மேற்கொண்டது எ - று.

மேற்கோள்

**ஆ. இனி, உலகம் செய்வோனையுடைத்து என்றது.**

என்பது மேற்கோள். என்னுதலிற்றோவெனின், "உள்பொருள் எனப்பட்ட பிரபஞ்சம், தத்தம் முதற்காரணத்தினின்றும் தானே தோன்றி யழியும் இதற்கொரு நிமித்த காரணமாய் ஒரு கருத்தா வேண்டா," எனச் சாங்கியர் கூறும் கடாவை ஆசங்கித்துத் தோற்றிய என்னும் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற் கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை,

ஏது

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை யின்மையின்

என்பது ஏது. என்னுதலிற்றோவெனின், அதற்குப் பிரமாணம் என்னை என்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) மண் முதலியவற்றின் உள்ளதாகிய கடமுதலிய பொருட்குக் குயவன் முதலிய செய்வோரையின்றி வனைதல் முதலிய செய்தொழில் நிகழாமையின், உலகம் இவ்வியல்பிற் றாகலான், இனி இவ்வுலகம் செய்வோனையுடைத்து என மேற் கொண்டது எ-று

மேற்கோள்

இ. இனி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை

என்பது மேற்கோள்.என்னுதலிற்றோவெனின், "இத்துணையும் கூறியவாற்றான், உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டு எனப் பட்ட கருத்தா, திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனேயாதல் அமையும்'' எனப் பாஞ்சராத்திரி முதலியோர் கூறும் கடாவை ஆசங்கித்து, ஒடுங்கி யுளதாம் என்னும் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) உலகம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின் றன்றி உளதாகாது எ-று.

ஒடுங்கின வென்னும் பெயரெச்சம், சங்காரம் என்னும் இடப் பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை யென்று எதிர்மறை முகத்தாற் கூறியது, ஏனைக் கடவுளரின் உளதாகாமை யாப்புறுத்தற் பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்த குறிப்பேதுவைப் புலப்படக் காணுமாறு:—

**ஏது**

**ஆண்டு ஒடுங்குதலின்**

என்பது ஏது. என்னுதலிற்றோவெனின், அதற்குப் பிரமாணம் என்னை என்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) "யாது யாண்டொடுங்கும், அஃது அதனில் உற்பத்தி யாம், மண்ணிற் குடம்போலும்" என்னும் அவினாபாவத்தாற் பிரபஞ்சம் சங்கார காரணன் மாட்டு ஒடுங்குதலின், மீளத்தோன் றுங்கால், ஆண்டு நின்றும் தோன்றுதலே பொருத்த முடைமையின், அவ்வாறு மேற்கொண்டது எ-று.

இவ்வாறு மூன்று அதிகரணப் பொருளும் இதன்கட் போந்தவாறும், இவ்வாறு உரையாக்காற் பொருளியையு படாமையும் நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

**எடுத்துக்காட்டு**

**இலயித்த தன்னில்இல யித்ததாம் மலத்தால்**
**இலயித்த வாறுஉளதா வேண்டும்—இலயித்தது**
**அத்திதியில் என்னின் அழியா தவையழிவது**
**அத்திதியும் ஆதியுமாம் அங்கு**

என்பது உதாரணம். **இலயித்த தன்னில் இலயித்ததாம் மலத்தால் இலயித்தவாறு உளதா வேண்டும்** என்பது என்னு தலிற்றோவெனின், "உலகம் உள்ளதாயின், உள்ளதற்கு உண்டாகவேண்டுவதில்லை,ஆகலான் சற்காரியவாதம் அடாது," எனப் புத்தர் கூறும் கடாவை ஆசங்கித்து "இல்லதற்குத் தோற்ற மின்மையின்" என்ற ஏதுவை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ-ள்) **இலயித்தது இலயித்த தன்னில் ஆம்**—உள்ளதாயினும் சங்கார காலத்தின் ஒடுங்கியதாகலான் அவ்வொடுங்கிய உலகம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின்றும் படைப்புக் காலத்தில் மீளவுளதாம். அற்றேல், ஒடுங்கியது ஒடுங்கியவாறே ஒழியாது மீளவுண்டாக வேண்டா; வேண்டு மாயின் முன்னொடுங்காது நிலைபெறவே அமையும்; அவ்வாறன்றி ஒடுங்கி மீள உளதாவது எற்றுக்கெனின்; **மலத்தால் (ஆம்)** — உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாக மாதற் பொருட்டு மீளவும்

உண்டாம்; அற்றேல், முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறு தோன்றும் என்னுமல், அதுவே ஒடுங்கி நின்று மீளவுளதாம் என்றற்குப் பிரமாணம் என்னை யெனின், **இலயித்தவாறு உளதா வேண்டும்** — யாது எவ்வாறு நின்று ஒடுங்கிற்று, அஃது அவ்வொடுங்கியவாறே உளதாதல் எல்லாரானும் விரும்பப்படும் எ-று.

எனவே, அந்நியம மில்லையாயின், நெல் முகமாய் விடாது நெல்லாய் நீளுதற்கு ஏது என்னையென்னும் தருக்கமே அதனை அறிவுறுத்தும் என்றவாறாயிற்று. சற்காரிய வாதத்தின் இயல்பு "தந்து முதல காரகம்" என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க.

இதனுனே, இல்லதும் உள்ளதும் அல்லாத பொருள் தோன்றும் என்னும் **சூனியவாதிகளும்** இல்லதும் உள்ளது மாய் பொருள்தோன்றும் என்னும் **அநேகாந்த வாதிகளும்** மறுக்கப்பட்ட வாறு அறிக.

— **இலயித்தது**

**அத்திதியில் என்னின் அழியாது அவையழிவது**
**அத்திதியும் ஆதியுமாம் அங்கு**

என்பது என்னுதலிற்றோவெனின், "இனிச் சற்காரிய வாதத்தின் அவ்வக் காரியங்கள் தத்தம் முதற்காரணத் தொடுங்கு மெனவே கோடலின், உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவன் உருவாகலான், உலகம் அவன்மாட் டொடுங்கும் என்றலே அமைவுடைத்தன்றி, முதற்காரணத்தின் வேருய் நிமித்த காரணமெனக் கொண்ட சங்கார கருத்தாவின்மாட்டு ஒடுங்கும் என்றல் பொருந்தாது" எனப் பாஞ்சராத்திரிகள் கூறும் கடாவை ஆசங்கித்து ஒடுங்கின சங்காரத்தின் எனவும், **இலயித்த தன்னில்** எனவும் கூறிப்போந்த குறிப்பேதுவை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ-ள்) **இலயித்தது அத்திதியில் என்னின்**-உலகம் ஒடுங்கியது அந்தமூலப் பகுதி வடிவாய திதிகருத்தாவின்கண் என்பையாயின் **அவை அழியாது** — நீ அங்ஙனம் கொள்ளினும் மூலப் பகுதிக்கு மேலுள்ளபுவனங்கள் அதனல் வியாபிக்கப்படாமையின் கீழுள்ள ஏகதேச மாத்திரையே ஆண்டு ஒடுங்குவதன்றி மாயாகாரியத் தொகுதி முழுவதும் ஆண்டு ஒடுங்காது; அற்றேல், மாயாகாரியத் தொகுதி முழுவதும் யாண்டொடுங்கு வதெனின்; **அத்திதியும் ஆதியுமாம் அங்கு அழிவது** — அந்தத் திதிக்கடவுளும் படைப்புக் கடவுளும் தோன்றுவதற்குக் காரணமாகிய அச் சங்காரக் கடவுளிடத்தே அவ்விருவரோடுங் கூட அழிவதாம் அத்தொகுதி எ-று.

இவ்வெண்பாவினை,

“செய்யுட்கள் ஓசை சிதையுங்கால் ஈரளபும்
ஐயப்பா டின்றி யமையுமாம் — மைதீரொற்று
இன்றியுஞ் செய்யுட் கெடின்ஒற்றை யுண்டாக்கு
குன்றுமேல் ஒற்றளபுங் கொள்’’

என்பதுபோல, இரண்டு அதிகரணப் பொருள்படுமாறு இரு தொடராக வைத்து உரையாக்கால் பொருள் இயைபு படாமையறிக.

இலயித்த என்னும் பெயரெச்சம் **தன்னென்னும்** இடப் பெயரொடு முடிந்தது. **இலயித்த** தென்றது, ஏதுப் பொருண்மை யுணர நின்ற பெயர். இலயித்ததெனச் சற்காரிய வாதம் கூறவே, இலயித்த வவத்தையின் அவ்வக் காரிய சத்தி சமுகமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன்று உண்டு; **அதுவே முதற்காரணம்** எனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய **மாயையுண்மையும்** பெறப் பட்டது.

ஆவென்பது முதனிலைத் தொழிற் பெயர். **வேண்டும்** என ஃ. செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறினர்.

**அவை**, தொகுதி; அஃறிணைப் பன்மைப்பெயர் என்பார்க்கு **அழியாது, அழிவது** என்னும் ஒருமைகளோடு இயையாமையும் உத்தரமாகாமையும் உணர்க.

**திதியும் ஆதியும்** ஆகுபெயர். **ஆமங்கு**, பெயரெச்ச முடிபு.

**இரணிய கருப்ப மதத்தையும்** மறுத்தற்பொருட்டுப் படைப்புக் கடவுளையும் உடன் கூறினர்.

நிமித்த காரணமாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரணன் அல்லனுயினும், முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின், உலகம் ஆண்டொடுங்கி ஆண்டு நின்று தோன்றுதல் அமையும் என்பது வருகின்ற வெண்பாவிற் பெறப்படும்.

எடுத்துக்காட்டு

வித்துண்டாம் மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் —வித்தகமாம்
வேட்டுவனும புழுப்போல் வேண்டுருவைத்தான் கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், "உலகம் தனக்கு முதற்காரணமாகிய மாயையின் ஒடுங்குவதன்றி நிமித்த காரணன் ஒருவன் உண்டெனக் கொள்ளினும், அவன்மாட்டு ஒடுங்கு மென்றல் பொருந்தாமையின், யாது யாண்டொடுங்கும், அஃது அதனில் உற்பத்தியாமென்னும் அவினுபாவத்தான், மாயையில் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும்; இதற்கோர் இறைவன் வேண்டா" எனச் **சாங்கிய** நூலார் மதம் பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்து, ''உள்ளதற்குச் செய் வோரின்றிச் செய்வினையின்மையின்" என்னும் ஏதுவை வலியு றுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) **(தாரகமாம்) மண்போல் குளிர்ந்து வித்து உண்டாம்**— மாயையும் உலகமும் வித்தும் அங்குரமும் போலு மாகலின் வித்துக்கு ஆதாரமாகிய நிலம் குளிர்ந்தவழி அதன்கண் வித்துளதாக; **மூலம் முளைத்த**வா—அதனினின்றும் அங்குரம் தோன்றியவாறுபோல; **தாரகமாம் அத்தன் தாள் நிற்றல்**—மேலை வெண்பாவின் **இலயித்த** தென்பதனுற் பெறப்பட்ட மாயை தனக்கு ஆதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவனது சத்தியின்கண் உள்ளதாய் நிற்றலால்; **அவர் வினையால்**-அச்சத்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீடாக; **வித்தகமாம்**-அவ்வக் காரியங்களை அவ்வவ் வியல்பிற் பிறழாமற் பயக்கும் சதுரப் பாடுடைத்தாம், அல்லுழிஉடைத்தன்று. நிலம் குளிர்ந்தவழி அதன்கண் கிடந்தன்றி வித்து முளையைத் தோற்றுதவாறுபோலும் ஆகலான் மாயையின் ஒடுங்கித் தோன்றிய உலகம் அதற்கு' ஆதாரமாய் நின்ற இறைவன் சத்தியின் ஒடுங்கித் தோன்றிய தேயாம் என்க.

**ஆகலான்** என்பது முதல் குறிப்பெச்சம். இது கிழங்கினின்றும் தோன்றிய தாமரையைப் பங்கயம் என்பதனுனும் அறிக. **வழிநூலாசிரியர்**, உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதென் னரன்பால்" எனவும், ''உலகவனுருவிற் றோன்றி யொடுங்கிடும்'' எனவும் ஓதியதூஉம், உலகவனுருவிற் றோன்றி யொடுங்குமாறு **வாதுளாகமத்தில்** வகுத்தோதியதூஉம் இவ்வியல்பு நோக்கி யென்க. இஃதறியாதார் இன்னோரன்னவற்றைத் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப.

உவமவினை பொருளினும் பொருளடை உவமையினும் சென்று இயையும்.

உண்டாகவெனச் சற்காரியத்தை வலியுறுத்துதல், வித்து இல்வழி நிலத்தினின்றும் அங்குரம் தோன்றுதவாறுபோல, மாயை

இல்வழிப் பிரமத்தினின்றும் உலகம் தோன்றுதெனப் **பரிணும வாதிகளையும்**, மாயை அநிர்வசனம் என்னும் **மாயாவாதிகளையும்**, வித்தும் நிலனும் போல் என்றதனுல், மாயை முதல்வனின் வேறு பொருளன்று என்னும் **சிவாத்துவித சைவர், பாஞ்சராத்திரிகளையும்** மறுத்தவாருயிற்று.

முதல்வன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்தவாறு என்னை என்னும் கடாவை ஆசங்கித்து அவர் **வினையால்** என்ருர்.

**வித்தகம்**, விசித்திரம் என்று உரைப்பினும் அமையும்,

போல், அசை. **மூலம்**, காரணம். குளிர்ந்தவழி யென்பது குளிர்ந் தெனத் திரிந்து நின்றது.

**நிற்றலின்** என்னும் ஐந்தாவது விகாரத்தால் தொக்கது.

அற்றேல், தன்வயத்தானன்றி வினைவயத்தால் தோற்று விப்பான் இறைவனுகான் எனின்:—

**வேட்டுவனும் அப்புழுப்போல்** — வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு; **வேண்டு உருவைத் தான்கொடுத்துக் கூட்டானே**— வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறுபோல இறைவனும் அவரவர் வேண்டும் உருவினைக் கொடுத்து அவ் வினைக்குத் தக்க பயன்களையும் கூட்டுவன்; ஆகலான், அது கொண்டு சுதந்திரத்திற்கு இழுக்கென்னையென்க.

**ஆகலான்** என்பது முதல் குறிப்பெச்சம்.

ஏகாரம், எதிர்மறை.

எடுத்துக்காட்டு

**நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தின்**
**தாக்காது நின்றுளத்திற் கண்டிறைவன்—ஆக்காதே**
**கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்**
**கண்டவனி லிற்றின்ருங் கட்டு.**

என்பது உதாரணம், என்நுதலிற்றோ வெனின், மேலை உதாரணத்திற் கூறியவாற்ருன் உலகிற்கு முதற்கடவுள் உண்டெ னக்கொள்ளினும் அவன் படைப்பு முதலிய தொழில் செய்வானு யின், விகார மெய்தி அதனிற் பந்தமுறுவான் என்னும் அவர் மதம்பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) **இறைவன்**—முதல்வன்; **காலத்தின் தாக்காது நின்று**— இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலும் செய்தும் தனக்கு விகாரமின்றி நிற்கும் காலம் போல விகாரப்படாது நின்று. **ஆக்காதே கண்டு** — பிரபஞ்சத்தைக் கரணத்தாற்படையாது சங்கற்ப மாத்திரத்தானே படைத்து; **நோக்காது நோக்கி நொடித்து** — அவ்வாறே காவாது காத்து அழியா

தழித்தலால்; **இன்றும் கட்டு**—இவ்வமலனுக்குப் பந்தம் இன்றுதல்; **உளத்தில்**—கற்றநூற் சொல்லும் பொருளும் உள்ளத்தில் தோன்றுங்கால் உள்ளம் அவற்றில் தொடக்குண்ணுதவாறு போலும்; **கனவு கண்ட நனவுணர்வில் உணரக் கண்டவனில் இற்று** கனவின்கண் கண்டவற்றைப் புறத்துவிடயங்களை அறிந்துவந்த நனவுணர்வின் கண்ணே விளங்க அறிந்தவன் அப்பொழுது அவற்றில் தொடக்குண்ணுதவாறு போலும் இத்தன்மைத்து என்க.

எனவே, இஃதிவ்வாருக என்று எண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வதூஉம், கரணத்தாற் செய்வதூஉமென வினை முதல் இருவகைப்படுமென்பதூஉம், காரணத்தானன்றிச் செய்யமாட்டாத குயவன் முதலியோர், சங்கற்ப மாத்திரையாற் செய்யும் முதல்வனுக்கு வினைமுதலாற் பொதுமைபற்றி, ஒருபுடையுவமையாதலன்றி, முற்றுவமையாதல் செல்லாமையானும், சங்கற்ப மாத்திரையாற் செய்யும் செய்திக்குக் கட்டுண்டல் முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானும், அவை ஆண்டு ஊளவாதற்கு ஓர் இயைபின்று என்பதூஉம் கூறி ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

**ஆக்குதல்**, படைத்தல்; **காண்டலும்** அது. **நோக்குதல்**, காத்தல். **நொடித்தல்**, அழித்தல்; அது, ''நொடித்தான்மலை'' என்பதனுலுமறிக.

**ஆக்காது நோக்காது** என்றமையால், நொடியாதென்பது வருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலாலென்பது **நொடித்தெனத்** திரிந்தது.

**அன்றே**, அசை; அநாதியே யெனினும் அமையும். **இல்** மூன்றும். உவம வுருபுகள். **உளத்தி** லென்பதற்குச் சங்கற்பத்தால் என்றுரைப்பினும் அமையும். **இன்றுங் கட்டு** என்பது ''அருங் கேடன் என்பது போல நின்றது.

(நு. வி.) இல்லதற்குத் தோற்றம் இன்மையின் என்பதும், உள்ளதற்குச் செய்வோர் இன்றிச் செய்வினையின்மையின் என்பதும் ஏதுக்களாம். இவ்விரண்டிற்கும் மேற்கோள் இல்லை. ஒடுங்கின ஒடுக்கத்தினல்லது உற்பத்தியில்லை என்பது மேற்கோளாகும். இதற்குஏது இல்லை. இவ்வாறு மேற்கோள் இரண்டும் ஓரேதுவும் இல்லாதிருப்பது சொற்பல்காமைப் பொருட்டாகும் எனவே விரிவஞ்சி விடுக்கப்பட்டனவேயன்றிக்குன்றக்கூறலன்று என்பது போதரும். இம்மூன்றையும் உரையரசிரியர் ஈண்டுப் பெய்து விளக்கியுள்ளார்.

கடம்-குடம். குடம் உருவாதற்கு மண், திகிரி, குயவன் முதலிய காரணம் வேண்டுதல்போல, இவ்வுலகம் முத்தொழிற் படுதற்கும் மாயை, திருவருள், இறைவன் முதலிய காரணங்கள் வேண்டும் என்பதாம்.

திதி கருத்தா—காத்தல் தலைவன். சிருட்டிகருத்தா-தோற்று வித்தற்குரிய தலைவன். சங்காரகருத்தா-அழித்தற்குரிய தலைவன்.

சங்காரம்- அழித்தல்; ஈண்டு அதற்குரிய தலைவனைக் குறித் தலின் ஆகுபெயராயிற்று. அத்தலைவன் இவ்வுலகம் ஒடுங்குதற் குரிய இடமாக யிருத்தல் பற்றி இடப்பெயர் என்றார்.

ஒடுங்கின சங்காரம் என்பதால் உலகம் ஒடுங்கும் என்பதும், அது அவ்வழித்தல் தன் தலைவனிடத்தாதலால் அவனே தலைவன் என்னும் ஏதுவும் பெறப்படுகின்றன. இவ்வாறே காரணம் அதனிடத்துக் குறிப்பாகப் பெறப்படுதலின் குறிப்பேது என்றார்.

அவினாபாவம் - விட்டு நீங்காமை. குடம் உடைந்துழி அத் தன்மை மண்ணிடத்து ஒடுங்கும்; மீளத்தோன்றுங்கால் அம்மண்ணிடத்தினின்றே தோன்றும். அதுபோல உலகம் ஒடுங்குங்கால் அழித்தல் தலைவனிடத்து ஒடுங்கிப் பின் தோன்றும் கால் அவனிடத்துத் தோன்றும் என்பதாம். மண்ணிடத்தி னின்றும் குடம் விட்டு நீங்குவதில்லை. அவ்வாறே இறைவனிடத் திலிருந்தும் இவ்வுலகம்விட்டு நீங்குவதில்லை.

சற்காரியவாதம்-யாதொரு செயற்பாடும் முன் உள்ள தொன்றிலிருந்து விளையுமேயன்றி இல்லதொன்றிலிருந்து விளையாது என்பது. எப்பொருள் எதனுள் ஒடுங்கிற்றோ அவ்வாறு ஒடுங்கினதிலிருந்தே அப்பொருள் தோன்றவேண்டும் என்னும் முறைமைக்கு இதுவே ஏதுவாகும்.

உயிர்க்கு அறியாமை விளைவிப்பது ஆணவமாம். அது தனித்து இருக்கும் (கேவல நிலை) உயிரின், அறிவு இச்சை தொழில்களைத் தடைபடுத்தி நிற்கும். பிறப்பு நிலையில் (சகல நிலை) உயிர்க்கு அத்தடை நீங்கும். எனவே தோற்றம் என்பது ஆண வமலம் பரிபாகம் பெறுதற்காயிற்று. கருமமலம் என்பது நல் வினையும் தீவினையுமாகும். இவை பரிபாகமாவது இவற்றின் காரியமாகிய இன்பதுன்பங்களை ஒருபடித்தாகக் காண்பதாம் அவ்வாறுஒப்பக்கருதுதலால்அவ்விரண்டினும்கைப்புத் தோன்றும் இன்பதுன்ப நுகர்விற்குக் காரணமாகிய இருவினைகள் பயன் தருங்காலத்து அந்நுகர்விற்கு ஏற்ப உடல் முதலியவற்றை மாற்றிக்கொடுக்க வேண்டியது இறைவனின் கடமையாகும். அவ்வாறு மாற்றுங்கால் உளவாகும். ஒடுக்கம் பக்குவமாய்

இருக்கும் கன்மபலனைத் துய்த்துத் தொலைப்பதற்கு ஏது வாதலால் ஒடுக்கம் கன்மமலம் பரிபாகத்தின் பொருட்டா யிற்று. மாயை-மயக்கந்தருவது: நில்லாதவற்றை நிலையென்றுணரும் புல்லறிவு இதுவாகும். இதனை உணர்தற்கு உலகில் சிறிதுகால மேனும், நிலைத்தல் வேண்டும், ஆதலின் நிலைத்தல் மாயாமலபரி பாகத்தின் பொருட்டாயிற்று இலயித்தது-ஒடுங்கியது. திதிகர்த்தா -காத்தல் தலைவன். பாஞ்சராத்திரிகள் தத்துவம் இருபத்திநான்கு என்றும், இவ்வுலகத் தோற்றத்திற்கு மூலப்பகுதியே முதற்காரணம் என்றும், அதுவே வாசுதேவன் உருவம் என்றும் இவ்வுலகம் அவனிடத்துத் தோன்றி மீண்டும் அவனிடத்து ஒடுங்குமென்றும் கூறுவர். சைவசித்தாந்திகள் இவ்விருபத்திநான்குதத்துவங்களையும் ஆன்மதத்துவமென்றும் இவற்றிற்கு மேலும் வித்தியாதத்துவங்கள் ஏழு, சிவதத்துவங்கள் ஐந்து ஆகிய பன்னிரண்டு தத்துவங்கள் உண்டென்றும், இவ்விருதத்துவங்களுக்கும் ஆதாரமாகிய மாயையே உலகிற்கு முதற்காரணமென்றும் கூறுவர்

பாஞ்சராத்திரிகள் கூறுமாறு இருபத்துநான்கு தத்துவத்தினிட மாக விளங்கும் வாசுதேவனிடத்தில் உலகம் தோன்றி ஒடுங்கு மாயின் அதற்கு மேலுளதாய தத்துவப் பகுதி அவனால் தோன்றி ஒடுங்காதாம். ஆதலின் இவ்வனைத்திற்கும் மூலகாரணனாய சிவபெருமானிடத்துத் தோன்றி ஒடுங்கும் என்பதே உண்மையும் பொருத்தமுமாகும்.

செய்யுட்கள் ஓசை சிதையுங்கால் எனத்தொடங்கும் பாடல் இருதொடராகக் கொண்டு பொருளுரைக்கப்படுவது போல இப்பாடலும் இருதொடராகக் கொண்டு பொருளுரைத்தல் வேண்டும். தன் என்பது ஒடுங்குதற்கு இடனாகிய இறைவனைக் குறித்தலின் இடப்பெயரென்றார். இலயித்து-இலயித்தாகலான் எனப்பொருள்படுதலின் ஏதுப் பொருண்மைப்பட நின்றதாயிற்று. சத்திசமூகம்-சத்திக்கூட்டம்.

ஆ-ஆதல் எனப் பொருள்படுதலின் முதனிலைத் தொழிற் பெயரென்றார்.

அவை என்பது நிலவுலகத் தொகுதியைக் குறித்தது. அவன், அவள், அது எனும் மூன்றையும் குறிக்கும் அஃறிணைப் பன்மையாகக் கொள்ளின் பின் அழியாது அழிவது என்னும் ஒருமையோடு இயையாதாம். காத்தல் தலைவனிடத்து ஒடுங்கும் என்னும் கூற்றிற்கு மறு மொழியுமாகாதாம்.

திதி- காத்தல். அதனைச் செய்யும் திருமாலுக்காயினமையின் ஆகுபெயராயிற்று. ஆதி-பிறப்பு: அதனைச் செய்யும் பிரமனுக்காயினமையின் ஆகுபெயராயிற்று. அங்கு என்பது

அழித்தல் தொழிலைச் செய்யும் இறைவனைக் குறிப்பது. ஆதலின் அதனொடு முடிந்த ஆம் என்பது பெயரெச்சமுடிபாயிற்று.

அங்குரம்-முளை. சங்கற்பித்தல்- நினைவு கொள்ளல்.

உலகம் அறிவற்றதொன்று. எனவே அதற்கு முதற் காரணமாய் இருப்பதும் அறிவற்றதொன்றேயாதல் வேண்டும். எனவே அதுமாயையாவதன்றி இறைவனாவதில்லை. இவ்வாறு மாயையினின்றும்தோன்றிய உலகை இறைவனின்றும் தோன்றியது என்றல் கிழங்கினின்றும் தோன்றிய தாமரையைச் சேற்றினின்றும் தோன்றியது எனக் கூறுவது போலாம். அநிர் வசனம்-உறுதியாய்ச் சொல்ல இயலாதது. வித்தகம்-சதுரப்பாடு (சாமர்த்தியம்). தன்வயத்தான்-தன்னிச்சை வழியே யாவும் செய்பவன்.

வேட்டுவன்-குளவிகளில் ஓரினம்.

இறைவன் உயிர்களை முத்தொழிற் படுத்துவது நினைவு மாத்திரையில் அல்லது கருவுகளைக் கொண்டு அல்லவாம். அவ்வாறு செய்தலின் உயிர்கள் முத்தொழிற் படுங்கால் இறைவன் அவற்றில் தொடக்குறுவதில்லை. அதற்கு இரு உவமைகள் காட்டப் படுகின்றன. 1. நிரயம், துறக்கம் முதலிய சொற்களைப் படிக்கின்ற பொழுது அவற்றிற்குரியபொருள்கள்உள்ளத்தில்தோன்றுகின்றன ஆனால் அவற்றைப் பொருந்துதலோ துய்த்தலோ இல்லை. 2. கனவில் அஞ்சத்தக்க பொருள்களைக் கண்ட ஒருவன் நனவில் அவ்வாறு கண்டதாக உணருங்காலத்து அதனால் அச்ச முறுவதில்லை. இவ்விரு உவமைகளுள் முன்னையது இவ்வெண்பாவில் கூறபட வில்லை. ஆயினும் அதனைக் கூறியிருப்பது, 'கற்றநூற் பொருளும் சொல்லும் கருத்தினில் அடங்கித் தோன்றும், பெற்றியும்சாக் கிராதி உயிரினிற் பிறந்தொடுக்கம், உற்றதும் போல, வெல்லா உலகமும் உதித்தொடுங்கப்பற்றொடு பற்ற தின்றி நின்றனன் பரனுமன்றே' எனவரும் சித்தியாரை உளங்கொண்டதாகும்.

இன்ருங்கட்டு- கட்டில்லாதவன்; தொடக்கில்லாதவன்.



# மூன்றும் அதிகரணம்

## மேற்கோள்

**இனிச் சங்காரமே முதல் என்றது.**

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யெனவே, சங்கார கருத்தா உலகிற்கு முதற் கடவுள் என்பது போந்ததாயினும், தேர் முதலாயின பலர் கூடிச் செய்யக் காண்டலின் அவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு மற்றும் அத்தன்மையராய முதற் கடவுளர் உண்டெனக் கோடும் என்னும் அநேகேசுரவாதிகள் முதலியோர் மதம் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்து அந்தமாதி யென்னும் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) சங்கார கருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுள் என்றது என்க.

சங்காரம் ஆகுபெயர். ஏனையோர் முதல்வராகார் எனப் பிரித்தமையின், ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

ஏது

**சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.**

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், அதற்குப் பிரமாண மென்னையென்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச்சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) ஒன்றொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவும் என்று இருவகைப்பட்ட பிரபஞ்சம், அவ்வாறு சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றாய் அறிந்து நின்ற சங்கார கருத்தாவின் வழிப் பரதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திர முடைத்தாய் நிற்பதன்று; ஆகலான், சங்கார காரணன் ஒருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுளரல்லர் என மேற்கொண்டது என்க.

பிரபஞ்சத்திற்குச் சுதந்திரம் இன்மையும், சங்கார காரணனுக்குச் சுதந்திரம் உண்மையும் ஏதுமுகத்தாற் காட்டுவார் **"சுட்டுணர்வாகிய பிரபஞ்சம்"** எனவும் **"சுட்டுணர்வின்றி நின்ற சங்காரம்"** எனவும் ஈரிடத்தும் உடம்பொடு புணர்த்தோதினார்.

சுட்டுணர் வுடையதனைச் சுட்டுணர்வு என்றது உபசாரம். ஈண்டுப் பிரபஞ்சம் என்றது சேதனப் பிரபஞ்சத்தை; பிரிநிலை யேகாரத் தான் விலக்குதற்குரியது அதுவே யாகலின்.

தேர்முதலாயின பலராற் செய்யப்படினும், அப்பலரும் ஒருவன் ஏவல்வழி நின்றே செய்பவாகலானும், வேதத்துட்காரண வாக்கியங்களில் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணிய கருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோரைக் காரணம் என்றது குயவன் போல் அவாந்தர காரணமாதல்பற்றியே யாகலின், அவை எல்லாம் ஆகுபெயரால் சங்கார காரணனாகிய முதற் கடவுளையே உணர்த்தி நிற்குமாகலானும், செய்தும் செய்வித்தும் எல்லாத் தொழிற்கும் வினை முதலாய் நிற்கும் முதற் கடவுள் சங்கார கருத்தா ஒருவனே என்பது கருத்து.

எடுத்துக்காட்டு

**ஒன்றலா ஒன்றால் உளதாகி நின்றவாறு**
**ஒன்றலா ஒன்றில் அவை ஈறுதல் — ஒன்றலா**
**ஈறே முதல் அதனின் ஈறலா ஒன்றுபல**
**வாறே தொழும்பாகும் அங்கு**

என்பது உதாரணம்.

என்னுதலிற்றோ வெனின், அங்ஙனமாயினும் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற் போலச் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமும் பலவுள எனக்கோடும்; ஒன்றே என்றற்குப் பிரமாணம் என்னை என்னும் கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) **அவை**—சேதனப் பிரபஞ்சத் தொகுதி; **ஒன்றலா ஒன்றால்**-உருவும் அருவும் என்னும் அவ்விரு கூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே; **உளதாகி நின்றவாறு**—சிருட்டிப் பட்டுத் திதிப்பட்டவாறே; **ஒன்றலா ஒன்றில் ஈறுதல்**—அந்தப் பரம்பொருளின் கண்ணே சங்காரப் படுதலால்; **ஒன்றலா ஈறே முதல்**—அச்சங்காரக்கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுள்; (அற்றேல், இவ்வாறு முத்தொழிற்படும் சேதனப் பிரபஞ்சம் வீடுபெற்றவழிச் சுட்டுணர்வின்றிச் சிவசமமாம் என வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின், அவ்வழி அவையும் முதற்கடவுளாம் என்றற்கு இழுக்கென்னை? எனின்,) **அதனின் ஈறலா ஒன்று**-அப்பரம்பொருள் போல் அழிவின்றி நித்த மாய சேதனப் பிரபஞ்சம்; **அங்கு**—வீடுபேற்றின் கண்ணும்; **பலவாறே தொழும்பாகும்**—பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாம் எ-று.

இது சொற்பொருட்பின் வருநிலை.

காரியப் பிரபஞ்சம் சடமாகலானும், சேதனப் பிரபஞ்சம் அவிச்சையால் கட்டுற்றுச் சுட்டுணர்விற்ருய் நிற்றலானும், இவற்றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின் வேருய் ஒரு முதற் கடவுள் உண்டு என்பது பெற்ரும். பெறவே, பிரபஞ்சம் விசித்திர காரியமாய்க் காணப்படுதலின், இவ்வாறு நடாத்தும் முதற் கடவுள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளும் சுதந்திரமும் முதலிய நிரதிசய குணங்களுடையன் என்பதூஉம் பெறப்பட்டது படவே, இத்தன்மையனுகிய முதற்கடவுள் ஒருவனே அமையு மாகலின். வேறும் அத்தன்மையர் உண்டெனக் கொள்ளின் மிகை என்னும் குற்றமாம். அல்லதூஉம் இலக்கணத்துள் ஒருவாற்ருனும் வேற்றுமை இல்வழி இலக்கியம் பலவாதல் செல்லாது என்னும் கருத்தால் ஒன்றலா ஒன்று எனவரையறுத்து. ஓதினர்.

ஈறே முதல் என்றது முடிந்தது முடித்தல். ஈறு; ஆகுபெயர். இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது.

பலவாருவன: இருள் நீங்கிய வழியும் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றை இன்றியமையாதவாறு போல, மலம் நீங்கிய முத்தி நிலையினும், ஆன்மா அறிவுக்கு வியஞ்சகமாய் உடனின்று அறிவிக்கும் முதல்வனை இன்றியமையாதவாரும். கண், படிகம், ஆகாயம் போலச் சார்ந்ததன் வண்ணமாயன்றி, முதல்வன் போலத் தனித்து நிற்கும் இயல்பு இல்லாதவாறும், முதல்வன் போல் ஐந்தொழிற்கும் வினை முதலாம் உரிமையின்றிச் "சிவானுபவம் ஒன்றினுக்கே'' உரித்தாயவாறும், சம வியாபக மாயினும் முதல்வனை நோக்கத் தூல அறிவாகலான், விளக் கொளியுள் கண்ணொளி போல முதல்வனின் வியாப்பியமாயன்றி நில்லாதவாறும் முதலாயின.

அற்றேல், முத்தி நிலையின்கண் ஆன்மாச்சிவசமமாம் என்னும் சுருதிக்குப்பொருள் என்னையெனின், அஃது உண்மையதிகாரத்துட் பெறப்படும். இதனுனே சிவசம வாதி, சங்கிராந்த வாதி, உற்பத்தி வாதி, ஆவேச வாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

பதியுண்மைக்குப் பிரமாணம் கூறுவார் மலத்துளதாம் எனப் புனருற்பத்திக்கு ஏதுக் கூறு முகத்தான் மலத்தது உண்மைக்குப் பிரமாணமும் உடன் கூறினர். அதனை ஈண்டு வேருேர் அதிகரண மாக வைத்து உரையாராயினர், அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியனவெல்லாம் சகசமலத்துணராது என அதன் இலக்கணம் கூறும் வழிப்பெறப்படுதலால், ஈண்டு மிகைப்பட வேறு ஓதல் வேண்டாமையின்.

இச்சூத்திரத்து அதிகரணங்களாற் போந்த தொகைப் பொருளாவது:

தோற்றக் கேடுகளது உண்மை, காட்சி முதலிய அளவைகளான் அறிய வாராமையின் பிரபஞ்சம் நித்தப் பொருளேயாம்; அன்றித்தோன்றி அழியும் எனக்கொள்ளினும், இல்பொருள் தத்தம் சார்பின் தோன்றி நின்று அழிதல் இயற்கை என அமையும் செயற்கைஎன்றற்குஓர்ஏதுஇன்மையின்.மற்றுஉள்பொருளாயின், அதுவே அமையும். இறைவன் வேண்டா, இரண்டு உள்பொருள் கோடல் மிகையாகலின்; வேண்டுமாயினும், மாயோன் முதலிய கடவுளரில் ஒருவனே அமையும்; அவரை ஒழித்துச் சங்கார கருத்தா முதற்கடவுள் என்றற்குப் பிரமாணம் என்னை?பிரமாணம் உண்டாயினும், அதிவிசித்திரமாய பிரபஞ்சம் ஒருவனுல் செய்தல் கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராய முதற் கடவுளர் உளராதல் வேண்டும் என முறையே உலகாயதர், மீமாஞ்சகர், புத்தர், சமணர், சாங்கியர், பாஞ்சராத்திரிகள், அநேகேசுர வாதிகள் மதம் பற்றிப் பூருவபக்கம் நிகழ்ந்த வழி அவரை மறுத்துச் சித்தாந்தம் செய்து முதற் கடவுளது உண்மை பொது வகையானும் சிறப்பு வகையானும் கருதலளவையின் வைத்து உணர்த்தியவாறு என உணர்க.

இவ்வாறு சூத்திரந்தோறும் உணர்ந்து உரைத்துக்கொள்க.

(நு. —வி.) சங்காரம் என்பது அதனைச் செய்யும் தலைவனைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று.

சுட்டுணர்வு-ஒவ்வொன்ருகக் குறித்து அறியும் அறிவு.

சேதனப் பிரபஞ்சம் — அறிவுடைய உயிர். உயிரினங்களுள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், தேவர் ஆகியோர் நுண்ணுடம்புடையோர்,ஏனையோர் பருவுடம்புடையர்.நுண்ணுடம்பு காணப்படாதது. ஆதலின் அவ்வுடம்புடையாரை அருவுயிர் என்றனர். ஏனையோரின் உடல் காணப்படுதலின் அத்தகையோரை உருவுயிர் (வடிவுடைய உயிர்) என்றனர்.

உபசாரம்—ஏற்றுரை. இரணிய கருப்பன் — பிர்மன்.அவாந்தர காரணம் — இடைப்பட்ட காரணம். முதற்காரணம் இவரைக் கொண்டு இயற்றுவிக்கும் இறைவன் ஆவன்.

வீடுபேறடைந்த உயிர் சிவசமம் என்றது சிவம் முத்தொழிற் படாதிருத்தல் போல இதுவும் முத்தொழிற்படாதிருத்தலாம். சிவத்தோடு ஒத்து அதற்குரிய ஐந்தொழிலையும் இதுவும் நடத்தும் என்பதன்று.

வெண்பாவில் ஒன்று என்ற சொல்லும் அதன் பொருளும் பின்னும் பலவிடத்தும் வருதலின் சொற்பொருட்பின் வருநிலையாயிற்று.

அவிச்சையால் - அறியாமையால்; ஈண்டு அதனைச்செய்யும் மலத்தைக் குறித்தது. நிரதிசயகுணம் - மாறுதலின்றி நிலைபெற்றிருக்கும் வியப்பான குணம். தன்வயத்தனுதல் முதலிய எண் குணங்களும் இறைவனுக்கே உரியவாதல் தெள்ளிது.

ஈறு: ஈண்டு அதனைச் செய்யும் இறைவனைக் குறித்தலின் ஆகு பெயராயிற்று. அங்கும் (வீடுபேற்றின் கண்ணும்) எனற்பாலது அங்கு என நின்றது: கட்டுநிலையின்கண்ணும் என்பதைத் தழுவிநிற்றலின் இறந்தது தழீஇய எச்சவும்மை என்ருர்.

வியஞ்சகமாய் - துணையாய் (விளக்கமாய்). வியாப்பியம் அடங்கியிருப்பது.

புனர்உற்பத்தி—மீளத்தோன்றல், பூருவபக்கம் - பிறர் கொள்கை.

———

### இரண்டாவது நூற்பா

**அவையே தானே யாய்இரு வினையின்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்க மின்றி நிற்கு மன்றே**

என்பது சூத்திரம்.

என்நுதலிற்றோ, வெனின் புனருற்பவம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.
என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக்கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உலகம் ஒடுங்கியினின்றும் மீள உளதாமாற்றை வகுத்து உணர்த்துமுகத்தானே துணைக் காரண முதலியன இல்வழி இறைவன் உலகிற்கு நிமித்த காரணனாதல் சாலுமாறு யாங்ஙனம்? என்னும் கடாவை ஆசங்கித்து அவற்றது உண்மைக்குப் பிரமாணம் உணர்த்துதல் நுதலிற்று இக்சூத்திரம் எ-று.

சூத்திர வியைபும் இதனானே விளங்கும்.

ஒடுங்கியுள்ளதாம் என்ற வழி ஒடுங்கியினின்றும் மீளவுள தாவது எவ்வாறு என்று அவாய் நிற்றலின் அவ்வவாய் நிலைபற்றிப் புனருற்பவமே ஈண்டுக் கூறப்பட்டது.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:-

மேலைச் சூத்திரத்து எடுத்துக்கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன், கலப்பினால் உடலின் உயிர்போல் அவ்வுயிர் களேயாய், பொருட்டன்மையால் கண்ணின் அருக்கன்போல் அவற்றின் வேறுமாய், உயிர்க்குயிராதல் தன்மையால் கண்ணொளி யின் ஆன்ம போதம் போல் உடனுமாய் நின்று, ஆணை என்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியான் வரும் இருவினைகளான் அவை இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் அவ்வாணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன் எ-று,

அவையே தானேயாய் என்பதனை இரட்டுற மொழிந்து கொண்டு உரைக்க. இக்கருத்தே பற்றி, "உலகெலாமாகி வேறாய் உடனுமாய்" என்றார் வழிநூலாசிரியரும்.

மேலைச் சூத்திரத்தின் **அந்தமாதி** என்புழி விகாரத்தால் தொக்க பிரிநிலை யேகாரத்தான் விலக்கப்பட்டு நின்ற சேதனப் பிரபஞ்சத்தை ஈண்டு **அவை** எனச் சுட்டிக் கூறினர்.

**ஒடுங்கியுளதாம்** என்றற்கு ஏற்பஈண்டுப் **போக்கினை** முதற் கூறினர். புரிதல் எப்பொழுதும் மேற்கோடல்.
ஆணையின் என்பதுசிங்கநோக்காய் **இருவினையி**ன் என்பதனோடும் **நீக்கமின்**றி என்பதனேடும் இயைந்துபொருள்தந்து நின்றது ஆண்டு இன்னுருபு, முன்னர் ஏதுப் பொருட்கண்ணும், பின்னர் நீக்கப் பொருட்கண்ணுமாய் நின்றது. இன்னென்பது சாரியை எனக்கொண்டு, ஈரிடத்தும் ஏற்கும்உருபுகள் விரித்துரைத்தலும் ஒன்று.

**அன்**றே; அசை. அனுதியே இவ்வாறு நிற்கும் எனினும் அமையும். **ஆய்ப்புரிய நிற்கும்** எனவே, அச்செயல்களெல்லாம் முதல்வன் கரணத்தானன்றிச் சங்கற்ப மாத்திரத்தால் செய்வன் என்பது பெறப்பட்டது.
இதனனே மேல் **அந்தம்** என்று **உத்தேசமாய்** எடுத்துக்கொண்ட முதல்வனுக்கு **இலக்கணம் கூ**றியவாறுமாயிற்று. இது **தடத்தலக்கணம்** எனப்படும் பொது வியல்பு.

**ஆணையின் இருவினையின்** எனவே, தனது சிற்சத்தி துணைக் காரணம்; இருவினையும் அதன் வழித்தாகிய துணைக் காரணம். **இருவினையின்** எனவே, அதற்குப் பற்றுக்கோடு உண்டு என்பதூஉம் பெற்றும்; ஆகலின், அது முதற்காரணம் என்பதூஉம், **இருவினையின் போக்குவரவு புரிய** எனவே, **ஒடுங்கியின்** மீளவுள தாங்கால், இருவினைகட் கேற்பப் பல்வேறு வகைப்பட்டு விரியும்; என்பதூஉம் போந்தவாறு காண்க.

இதனுள் **அவையே தானேயாய்** என்பது ஓரதிகரணம் **ஆணையின் இருவினையின்** என்பது ஓர் அதிகரணம்; **போக்கு வரவு புரிய** என்பது ஓர் அதிகரணம்; **ஆணையின் நீக்கம் இன்**றி **நிற்கும் அன்**றே என்பது ஓர் அதிகரணம் ஆக நாற்கூற்றது இச்சூத்திரம் எனக் கொள்க.

(நு-வி) அவாய் - அவாவி: ஆசைப்பட்டு

அருக்கண் - கதிரவன். ஆன்ம போதம் - உயிர் அறிவு. பரியாயப் பெயர் - பிறிதொரு பெயர், சிற்சக்தி - அறிவாற்றல் இறைவனின் ஆணை. சமவேதம் - ஒற்றுமைப்பட நிற்பது. சம வாயம் - ஒற்றுமை: நெருப்பிற்கும் அதன்கண்ணுள்ள வெப்பத் திற்கும் உள்ள ஒற்றுமை. நெருப்பிடத்து வெப்பம் இருக்கும். அதுபோல இறைவனிடத்துச் சிற்சத்தியிருக்கும். அவ்வாறு இருக்கும் சிற்சத்தி சமவேதம் எனப்படும்.

இரட்டுற மொழிதல்-இருபொருள்பட மொழிதல். அவையே தானே ஆய் என்பதை அவையேயாய்த் தானேயாய் அவையே தானேயாய் என இயைத்துப் பொருள் விரித்தலின் இரட்டுற மொழிதலாயிற்று.

அவையேயாய் - இறைவன் உயிர்களேயாய். உடலில் உயிர்கலந்து நிற்பது போல உயிரிடத்து இறைவன் கலந்து நிற்கும் நிலையிதுவாம். இதனை ஒன்ருய் நிற்றல் என்பர். இவ்வாறு நிற்பது உயிர் உடல் முதலியவற்றுடன் நின்று நிலைத்தற்காம். தானேயாய் - இறைவன் தானேயாய். கண்காண்டற்குக் கதிரவன் துணையாயிருத்தல் போல, உயிர் எதனையும் அறிதற்கு இறைவன் துணையாகின்ருன். எனினும் அக்கண்ணிலும் கதிரவன் வேருதல்போல, இறைவனும் உயிரினும் வேருவன். இதனை வேருய்நிற்றல் என்பர். இவ்வாறு நிற்பது உயிர் எதனையும் அறியத்தான் அதற்கு அறிவித்தற்குரிய துணையாய் நிற்பதற்காம் அவையே தானேயாய் - இறைவன் உயிர்களோடு உடனுய் கண்ஒளி பொருளைக் காண்டற்கு உயிரின் அறிவு உடனுய் நிற்பது போல, உயிரும் இன்ப துன்பங்களைத்துய்த்தற்கு அதனெடு உடனுய் நின்று செலுத்துவன். இதனை உடனுய் நிற்றல் என்பர். இவ்வாறு நிற்பது உயிர் இன்பதுன்பங்களைத் துய்த்தற்காம். எனவே இறைவன் உயிருடன் ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்பது, உயிர் உடலொடுநிலைத்தற்கும், அறிதற்கும், தொழிற்படுதற்குமேயாம் என்பது புலனுகும். இறைவன் தன்நிலையில் சிவம் எனவும், உயிர்களோடு இம்மூவகையிலும் நிற்கும் பொழுது சக்தி எனவும், ஐந்தொழில் இயற்றும் நிலையில் பதி எனவும் பெயர் பெறுவன்.

சேதனப் பிரபஞ்சம் - உயிர்த்தொகுதி. உயிர்கள் பலவாதலின் அவை என்ருர்.

'இருள் சேர்........மாட்டு' (குறள்) என்புழியும் புரிதல்- எப்பொழுதும் சொல்லுதல் எனப் பரிமேலழகர் உரைத்தவாறு காண்க.

ஆணையின் இருவினையின் போக்கு வரவு புரிய என்றும் ஆணையின் நீக்கமின்றி நிற்கும் என்றும் ஈரிடத்தும் கூட்டப்படுதலின் சிங்கநோக்காயிற்று.

கரணத்தாலன்றி - கருவிகளினலன்றி. உத்தேசமாய் - ஒரு பொருளைப் பெயரளவில் எடுத்துக் கூறுவது.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்தானேயாய் நிற்கும் என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், மேற் கடவுள் அல்லவென விலக்கப்பட்டு நின்ற சேதனப் பிரபஞ்சமும் முதல்வனும் பொன்னும் பணியும்போல் அபேதமோ, இருளும் வெளியும் போற் பேதமோ, சொல்லும் பொருளும்போற் பேதாபேதமோ என்னும் ஐயப்பாட்டின்கண், அம்மூன்றனுள் ஒரோவொன்றே பற்றி அவ்வம்மதத்தார் கூறும் கடாவை ஆசங்கித்துச்சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

ஈண்டும் இரட்டுற மொழிந்துகொள்க.

இதனுனே, ஒரு விடயத்தைக் காணுங்கால், ஆன்மபோதம் கண்ணொளியெனத் தான் என வேறின்றி **உடனாய்** நின்று காணுமாறுபோல,முதல்வன் புனருற்பவஞ் செய்யுங்கால் உயிர்களோடு **உடனாய் நின்று** செய்வனென்பதூஉம் பெறப்பட்டது.

### ஏது

அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில், ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு.

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், முதல்வன் அவ்வாறு மூவகையையுமாய் நிற்பன் என்றற்குப் பிரமாண மென்னை யென்னுங் கடாவை ஆசங்கித்து மோற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

**இதன் பொருள்:** அத்துவிதமென்ற சொல்லின் நகரம், இன்மை, அன்மை, மறுதலை என்னும் முப்பொருளுணர்த்து மன்றே; அவற்றுள் இன்மைப் பொருள்பற்றி அத்துவிதம் என்ற மொழி மாத்திரையானே ஒரு பொருள் என்றல் பொருந்தமுடைத்தெனின், தானே தன்னை ஒன்று எனக் கருதுதல் வேண்டாமையின், அவ்வாறு கருதும் பொருள் வேறுண்டு என்பது பெறப்படுதலானும், எண்ணுப்பெயர் மேல் வந்த நகரம், அன்மைப் பொருள் மாத்திரையே யுணர்த்திப் பொதுமையின் நிற்பதன்றி. ஏனைச்சொற்களின் மேல் வந்த நகரம் போல, இன்மை மறுதலைப் பொருள்களை யுணர்த்துதல் வழக்கின்கண் இன்மையின் அத்துவிதமென்கின்றமொழிதானே, பிறிது காரணம் வேண்டாது,

வேறன்மையை உணர்த்தி நிற்குமாதலாலும். ஈண்டு. **இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்ருனேயாய் நிற்கு**மென மேற்கொண்டது.

ஆகலான் என்பதற்கு **ஆயிட்டென்**பது அக்கால வழக்குப் போலும். அற்ருகலினன்றே, ''நீயோ செய்யாய் நின்மவனுயிட்'' டென்ருர் வழி நூலாசிரியரும். இனி, "மழை பெய்து குளம் நிறைந்தது'' என்புழிப்போல, ஆயிட்டெனத்திரிந்து நின்ற தென்றலுமொன்று.

எண்ணும்மை விரித்துரைக்க.

வேறின்றி யுடனுதல் பெறப்படவே, பொருண்மையாற் பேதமென்பதூஉம், கலப்பினுல் அபேதமென்பதூஉம் தாமே போதருமெனபது கருத்து.

எடுத்துக்காட்டு

**கட்டும் உறுப்புங் கரணமும் கொண்டுள்ளம்**
**இட்டதொரு பேரழைக்க என்னென்ருங்கு — ஒட்டி**
**அவனுளம் ஆகில்லான் உளம்அவனு மாட்டாது**
**அவன்உளமாய் அல்லனுமாம் அங்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்ருே வெனின், ஒரு பொருள் மூவகை யியல்பையுடைத்தாதல் யாங்ஙனம் என்னும் கடாவை ஆசங்கித்து, அவற்றுள் அவையே யாதலே உவமை முகத்தான் வலியுறுத்தல் நுதலிற்று.

(இ-ள்) **உள்ளம் கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு** — உயிர் நரம்பு முதலியவற்ருற் பிணிக்கப்படும் உடம்பினையும் ஐம்பொறி முதலிய கருவிகளையும் கைக்கொண்டு நின்று, **இட்டது ஒரு பேர் அழைக்க என் என்ருங்கு** — சாத்தா கொற்ரு என உடம்பிற்கிட்ட பெயரால் பிறர் அழைத்தவழித் தான் 'என்னை யென வந்து நிற்றல் காண்டுமன்றே, இருவர் கைகோத்து நின்றுழியும் அவருள் அழைக்கப்பட்டானே யன்றி, ஏனேன் 'என்னை' யென்றல் உலகத்தின்மையின், அவ்வாறன்றி, உடம்பின் பெயரான் அழைத்தவழி, உயிர் என்னென்றற்குக் காரணம் பிறிதோராற்ருற் பெறப்படாமையின், அருத்தாபத்தி யளவையானே, அவ்வுயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் நிற்றல் பெற்ரும்: அதுபோல, **ஒட்டி** — முதல்வன் உயிர்களின் அபேதமாய் ஒட்டி நிற்போனும்;

**அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம் அவனுமாட்டாது அவன் உளமாய் அல்லனுமாய்**—அவ்வாறு ஒட்டிய வழியும் உயிர் உயிரே, உடம்பு உடம்பே, உயிர் உடம்பா யொழியாது, உடம்பு உயிராகமாட்டாது; அவ்வாருயினும், உயிர் உடம்பாயும் அதனின் வேருயும் நிற்கும். உடம்பு அங்ஙனம் நில்லாது; அதுபோல் முதல்வன் உயிராயொழியான், உயிர் முதல்வனுக மாட்டாது. அவ்வாருயினும் முதல்வன் உயிராயும் அதனின் வேருயும் நிற்பன்; உயிர் அங்ஙனம் நில்லாது எ-று.

**அவன் உளமாகில்லான் உளம் அவனுமாட்டாது அவன் உளமாய் அல்லனுமாம் அங்கு** என்றது, ஒன்ருயும், ஒன்றன்மைக்கு அனுபவம் காட்டியவாறு.

உறுப்பு, ஆகுபெயர். எவனென்பது என்னென மரீஇயிற்று.

**ஒட்டி** யென்பது பெயர்; வினையெச்சமாகக் கொள்ளின், சிறப் பும்மை விரித்துரைக்க. ஒட்டுதல், பொருந்துதல்.

எடுத்துக்காட்டு

**ஒன்றென்றது ஒன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்**
**ஒன்றென்ற நீபாசத் தோடுளை காண்—ஒன்று இன்ருல்**
**அக்கரங்கள் இன்ரும் அகரவுயிர் இன்றேல்**
**இக்கிரமத்து என்னும் இருக்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றேவெனின், வேதத்துள் அத்துவித மென்றதூஉ மன்றி, ஏகமெனவும் ஓதுதலின். அதற்கு மறுதலையாய் உயிர்களோடு ஒட்டி நிற்பன் எனப் பேதப்படக் கூறுவதென்னை என்னும் கடாவை ஆசங்கித்து அச்சொற்குத் தாற்பரியங் கூறுமுகத்தால், தானேயாதலை வலியுறுத்தல் நுதலிற்று

(இ-ள்) **இருக்கு ஒன்று என்றது ஒன்றேகாண்**—வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வேறு பொருள்படாது; **ஒன்றே பதி**—அதற்குத் தாற்பரியம் பதிப்பொருள் ஒன்றே; இரண்டில்லை என்பதாம்; **ஒன்று என்ற நீ பசுவாம் காண்**—இஃதறியாது ஒன்றென்று சொல்லுகின்ற நீ அப்பதிப்பொருளின் வேருய பசுவென்றறிவாயாக; **பாசத்தோடு உளை**—பதியும் சேதன மாக யானும் சேதனமாக என்னைப் பசுவென்ற தென்னையெனின், நீ மலத்தோடு கட்டுற்று நிற்கின்ருயாகலின் பசுவெனப்பட்டனை; அற்றேல்; இவ்வாறு வேற்றுமை கூறிற் பிரமமில்லையாயின் ஒரு பொருளும் இல்லை யென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னை யெனின்; **அகரவுயிர் இன்றேல் அக்கரங்கள் இன்ரும் இக்கிரமத்து ஒன்று இன்று என்னும்**—அகரவுயிரில்லையாயின் அக்கரங் களில்லையாமென்றும் இம்முறை பற்றி வேதம் பிரமப்பொருள் இல்லையாயின் ஒரு பொருளுமில்லை யென்றும் ஓதும் அத்துணை எ-று.

**ஒன்றின்ருல் அக்கரங்கள் இன்ரும் அகரவுயிர் இன்றேல் இக்கிரமத்து** என்னும் என்றது, வேருகியும் வேறன்மைக்கும் அநுபவம் காட்டியவாறு.

**இக்கிரமத்தா**லென உருபு விரித்துரைக்க. இன்றென்னு மொருமை அப் பண்பின்மேல் நின்றது. **காண்** என்பதனை மேலே கூட்டுக. ஆல், அசை.

எடுத்துக்காட்டு

**பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்**
**எண்ணுஞ் சுவையும்போல் எங்குமாம்—அண்ணல்தாள்**
**அத்துவித மாதல் அருமறைகள் ஒன்றென்னது**
**அத்துவிதம் என்றறையும் ஆங்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்ரே வெனின், வேதம் ஏக மாய பிரமத்தை ஏகமென்ஞெழியாது, பிரமம் அத்துவிதமெனவும் ஓரோரிடங்களின் ஓதுதலின், அத்துவிதம் இரு பொருட் கண்ணது என்பார்க்கு, ஏகமாய பிரமத்தை அத்துவிதமென்றல் பொருந்தா தாய் முடியும் என்னும் கடாவை ஆசங்கித்து, அதனை நீக்குமுகத் தானே அவையே தானே யாதலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) **பண்ணையும் ஓசையும்போலப் பழமதுவும் எண்ணும் சுவையும் போல் எங்கும் ஆம் அண்ணல்தாள் அத்துவிதமாதல்**_ பண்ணும் அதனின் வேறன்ருய் எண்ணப்படும் இசையும் போலவும், பழமும் அதனின் வேறன்ருய் எண்ணப்படும் சுவையும்போலவும் யாங்கணும் வியாபகமாய முதல்வன் திருவருள் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான்; **அருமறைகள் ஒன்றென்னது அத்துவிதம் என்று ஆங்கு அறையும்**— வேதங்கள் ஏகம் என்னது பிரமம் அத்துவிதம் என்று அவ்விடங் களிற் கூறும் எ-று.

ஆண்டுப் பிரமம் அத்துவிதம் என்றது, பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்கும் என்னும் பொருட்டாகலான், அஃது ஏகமென்பதோடு முரணுமாறில்லையென்பதாம், **பண்ணை** என்னும் ஐகாரம் பகுதிப் பொருள் விகுதி, பண், பாலைப்பண் முதலியன.

எங்குமாம் **அண்ணல்தாள்** என விசேடித்து, குணகுணிகள் போல் உடனுயும், அவ்வாறு உடனுகாமைக்கு அனுபவம் காட்டியவாறு. வியாப்பிய வியாபகமாதலொப்புமை மாத்திரையே பற்றிக் குணகுணிகளை உவமை கூறினுரென்பது.

எடுத்துக்காட்டு

**அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போல்**
**உருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்**
**தானே யுலகாம் தமியேன் உளம்புகுதல்**
**யானே யுலகென்பன் இன்று.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், இங்ஙனம் வெவ்வேறுவகை யெடுத்துக்காட்டின் **அநேகாந்தவாதமா** மென்னும் கடாவை யாசங்கித்து அஃது ஆகாமை உவமை முகத்தான் விளக்கி, மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) உருக்கி **அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற் போல் உடங்கு இயைந்து நின்று பிரிப்பின்றித் தானே உலகு ஆம்** — அரக்கையுருக்கி அதனொடு சேர்த்து அணைத்த கற்பொடி அவ்வரக்கினோடு ஒன்றாய் ஒருங்கியைந்து நீக்கமன்றி நின்றாற் போல, முதல்வன் உயிர்களின் ஒருங்கு கூடி நின்று நீக்கமின்றி யுடனாதலால் தானேயாம்; உலகேயாம்; தானே உலகேயாம்; அற்றேல் **வாமதேவ** முனிவன் முதலியோர் "யானே உலகெல்லா மாயினேன்" எனக் கூறுதலானும், **சர்வஞானோத்தரத்தில்** "யானே யெல்லாமாயினேன்" எனக் கூறுதலானும், "யானே எல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றேன்" என்று உயிர்கள் மேல் வைத்து ஓதலானும், உயிர்களும் இவ்விலக்கணத்தனவாவான் செல்லும் போலும் எனின், **தமியேன் உளம்புகுதல் யானே உலகென்பன் இன்று**—அம்முதல்வன் பாசக்கூட்டத்தின் நீங்கித் தனியாய் நின்ற என்னகத்துச் சோகம்பாவனையாற் புகுந்து வேற்றுமையின்றித் தோன்றலான், யானே உலகெல்லாம் ஆயினேன் இம்முத்திக் காலத்து;ஆகலின், அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்று எ-று.

அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்று என்பது குறிப்பெச்சம்.

இவ்வொற்றுமை பற்றி யன்றே அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த **கண்ணன்**, "யானே உலகெல்லாமாயினேன்" என்றதூஉம், முதல்வனது விச்சுவரூபத்தைத் தான் காட்டியதும், "ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக" என்றதூஉம் அதனை உறுதியாகக் கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்து நோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், கண்ணன் மேலிட்ட போதுகள் முதல்வன் திருமுடிமேற்கண்டதூஉமென்க. கண்ணன் உபமன்னிய முனிபால் சிவதீக்கையுற்றுத் தன்னையுந் தலைவனையும் உணர்ந்தோனாகலிற் சிவோகம் பாவனையைத் தலைப்பட்டோனுவன் என அறிக.

கலப்பாய் நிற்றலான் உலகேயா மென்பார் "உடங்கியைந்து" எனவும், பொருட்டன்மையால் வேறு நிற்றலால் தானேயா மென்பார் "நின்று" எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானே யுலகாமென்பார், "பிரிப்பின்றி" எனவும் கூறினர்.

ஈண்டும் இரட்டுற மொழிந்துகொண்டு உரைக்க,

இன்றி யென்னும் செய்தெனெச்சக் குறிப்பு "மழை பெய்து குளம் நிறைந்தது" என்புழிப்போலக் காரண காரியப் பொருட்டாய் நின்றது.

இவ்வதிகரணத்தானே பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேதமென்றும் பிணங்குஞ் சமயிகளையெல்லாம் மறுத்து, அம்மூவகையியல்பும் தன்கண் தோன்ற நிற்கும் அத்துவிதத் துண்மை ஏதுக்களானும், உவமைகளானும் உணர்த்தியவாறு. புடைநூலாசிரியரும் இவ்வதிகரணப் பொருளேபற்றிப்,

"புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும்சொற் பொருள்போல்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனல் விளைவதாய் உடலுயிர்கண் ணருக்கன்
அறிவொளிபோல் பிறிவரும்அத் துவிதமாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றும்"

என வகுத்தோதினர்.

(நு-வி) பொன்னும் மணியும்-பொன்னும் அதனலாய அணியும். அபேதம்-ஒன்றாய் நிற்பது. பேதா பேதம்-ஒருவாற்றான் ஒன்றாயும் பிறிதொருவாற்றான் வேறாயும் நிற்பது. உயிரும் இறைவனும் வேறென்பர் மாத்துவர். ஒன்றென்பர் ஏகான்மவாதிகள். ஒருவாற்றான் ஒன்று என்றும், பிறிதொருவாற்றான் வேறு என்றும் கூறுவர் பாஞ்சராத்திரிகள்.

இம்மூன்றனுள் ஒருநிலையே கொள்ளின், ஏனையிருநிலையினின்றும் உயிர் தன்வயத்ததாய்ச் செயற்படற்குரியதாகும் என்பது பட்டு இழுக்காம். ஆதலின் சைவசித்தாந்திகள் இம்மூவகை நிலையும் கொள்வர்.

நத்துவிதம் என்னும் வடமொழிச் சொல்லிலுள்ள நகரமெய் கெட்டுத் தமிழில் அத்துவிதம் என்றாயிற்று. வடமொழியில் எண்ணுப் பெயரின் மேல் வரும் நகரம் அன்மை, இன்மை, மறுதலை ஆகிய மூட்டொருளையும் உணர்த்தும். அப்பிராபணன் என்புழி அக்குலத்தில் பிறந்தும் அதற்குரியதன்மையையுடையவனல்லன் எனக்குறித்தது. அகத்தம் என்புழித்தூய்மை இன்மையைக் குறித்தது. அதன்மம் என்புழி அறத்தின் மறுதலைப் பொருளைக்குறித்தது. அந்நிலையில் அத்துவிதம் என்பது இன்மைப் பொருள் உணர்த்தின் இரண்டில்லை ஒன்றே எனப்படும். அவ்வாறு ஒன்றாகிய தானே தன்னை ஒன்று எனக் கருதவேண்டுவதன்று. ஆதலின் அவ்வாறு கொள்ளலாகாது. எண்ணுப் பொருளில் வரும் அகரம் அன்மைப்பொருள் உணர்த்துமேயன்றி ஏனைய இன்மை, மறுதலைப் பொருள்களையுணர்த்தாது என்பது இலக்கணம். எனவே இரண்டு அல்லாதது எனப் பொருள்படும். அந்நியநாத்தி - வேறன்மை. ஆயிட்டு-ஆகலான் என ஏதுப் பொருளில் வந்தது.

வழிநூலாசிரியர் அருள்நந்திசிவம். சுட்டுவதுண்மையின் என்னுமிடத்தும், உணர்த்துமாயிட்டு என்னுமிடத்தும் எண்ணும்மைகள் விரிக்கப்பட்டன.

உள்ளம்-உயிர். அருத்தாபத்தி-சொல்லியதைக் கொண்டு சொல்லாததை உணர்வது. உறுப்பு-அதனையுடைய உடம்பிற் கானமையின் ஆகுபெயர் என்றார். ஒட்டி-ஒட்டி நிற்போனும் என உரைத்தலின் பெயர் என்றார். ஒட்டி நிற்பினும் என உம்மை விரித்துரைப்பின் அது வினையெச்சமாம்.

தாற்பரியம்-கருத்து. இக்கிரமத்தால்-இம்முறையில். அக்கரங்கள் என்னும் பன்மையோடு இன்று என்னும் ஒருமை இயையாமையின் அது பண்பு குறித்து நின்றது என்றார். பண்பு - இன்மையாகிய பண்பு. பசுவாம் காண் எனக் கூட்டப்பட்டது.

பண்ணை என்பதிலுள்ள ஐகாரம் பண் என்னும் பகுதிப் பொருளையே உணர்த்தி நிற்கும். ஆதலின் அதனைப் பகுதிப் பொருள் விகுதி என்றார். அங்ஙனமாகவும் ஐகாரம் விரித்தது செய்யுள் நோக்கியாம்.

உயிரும் முதல்வனும் குணமும் குணியும் போல் பிரிக்க இயலாது உடன் நிற்பினும் உயிர் செல்வுழியெல்லாம் இறைவன் செல்வானல்லன். முதல்வன் எங்கும் வியாபகமாக இருத்தலின் அங்கங்குள்ள உயிர்கள் அதனிடத்து வியாப்பியமாய் (அடங்கி) நிற்கும் என்பது கருத்து.

அநேகாந்தவாதம்-பல்வேறு முடிவுகளையுடைய கொள்கை. சிவோகம்பாவனை-சிவமாக நினைத்த பாவனை. விச்சுவரூபம்-பெரு வடிவு. கண்ணன் சிவதீக்கை பெற்றதை 'யாதவன் துவரைக்கு இறையாகிய, மாதவன் முடிமேல் அடிவைத்தவன், பூதநாதன்' பொருவருந் தொண்டினுக்கு, ஆதியந்தம் இலாமை யடைந்தவன்' எனச் சேக்கிழார் கூறுமாற்றானும் உணரலாம்.

தானே உலகாம் என்பதனைத் தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம் எனப்பிரித்துக்கூட்டுதலின் இரட்டுற மொழிதலாயிற்று.

பிரிப்பின்றி - பிரிப்பின்றி இருத்தலான் எனப்பொருள் படுதலின் காரணகாரியப் பொருட்டாய் நின்றது என்றார்.

புடைநூலாசிரியர்-சார்பு நூலாசிரியராகிய உமாபதி சிவம்.

# இரண்டாம் அதிகரணம்

## மேற்கோள்

இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், முதல்வன் அவ்வாறு உயிர்களோடு இயைந்து நின்று புனருற்பவம் செய்யுங்கால், உலகத்துக்குப்போல், அவனுக்குத்துணைக்காரணம் முதலியன வேண்டப்படுமோ? படாவோ? என்னும் ஐயப் பாட்டின்கண் முதல்வனது சுதந்திரத்துக்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய்முடியுமாகலின், அவனுக்கு அவைவேண்டப்படாஎனப் பரிணாம வாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள்: வெளிப்படை

ஈண்டு இருவினை யென்றது, முற்பிறவிகளின் ஈட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணிய பாவங்களை யென்க. எனவே, மாயையின் உண்மையும் பெறப்பட்டது. இவை வேண்டப்படுதல் பற்றி முதல்வன் சுதந்திரத்திற்கு இழுக்கில்லை யென்பார், ''முதல்வன் ஆணையின் வரும்'' என்றார்,

ஏது

ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனது ஆக்கினை யாகலான்,

என்பது ஏது, என்நுதலிற்றோ வெனின், ஆணையே யமையும் இருவினை யெற்றுக்கு என்னும் கடாவை ஆசங்கித்து மேற் கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) ஒரு பட்டணத்தைப் புரக்கும் வேந்தன், பாடிகாவல் தொழிலைக் களைகணுவான் ஒருவன்மாட்டு வைத்தாற்போல, எல்லா அறிவு முதன்மை அனுக்கிரகங்களுமுடைய அம்முதல்வன் புனருற்பவத்தைச் செய்வதாகிய தனது ஆணையை அவ்விரு வினைகண் மாட்டு வைத்து நடாத்துதலே முறையாகலான். இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என மேற்கொண்ட தென்றவாறு.

முதல்வன் செய்யும் செய்தியெல்லாம் உலகத்தோடு ஒப்ப நிகழ்வன வாகலின், ஈண்டைக்கு அரசன் செய்தி உவமை யாயிற்று. பாடிகாவலாவது களைகணுவா னொருவானைக்கொண்டு வேந்தன் செய்விப்பதாய ஒரு தண்டத்தொழில் விசேடம். அது, "கோடிகாவனைக் கூருத நாளெலாம், பாடிகாவலிற் பட்டுக் கழியுமே" என்னுந் திருப்பாட்டானுமறிக. தத்தமக்கு வேண்டிய வாறெல்லாம் உரைப்ப.

எடுத்துக்காட்டு

**உள்ளதே தோற்ற உயிர் அணையும் அவ்வுடலின்**
**உள்ளதாம் முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்**
**செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோல்**
**செய்வன் செயல் அணையா சென்று.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், வினை உண்டு என்பதற்கும், உயிர்க்குப் பயனுய் வரும் என்றதற்கும், மேல் வினை ஏறுமாற்றிற்கும் அது முதல்வனை இன்றியமையாமைக்கு பிரமாணமென்னை என்னும் கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ-ள்) **உள்ளதே தோற்ற** —இல்லது தோன்றுதென்று மேற் கூறிப்போந்தமையான், முன்உள்ளதாய புண்ணிய பாவமென்னும் இருகூற்றுச் சஞ்சித வினையே தன்பயனுகிய இன்ப துன்பங்களை யும் அவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பினையும் தோற்றுவிப்ப; **உயிர் அவ்வுடலின் அணையும்**—அவ்வின்ப துன்ப

நுகர்ச்சிசடத்துக்குக்கூடாமையின், சித்தாகியஉயிரே அவ்வுடம்பில் பொருந்தி, அவற்றை யனுபவிக்கும்; முன்வினையை ஈண்டு அனுபவித்தொழிந்தால், மேலைக்கு வினையுண்டாமாறு யாங்ஙனம் எனின், **முன் செய்வினை உள்ளடைவே உள்ளதாம்**—முன் செய்த வினையை அனுபவித்தற் கேதுவான முறைமையிலே மேலைக்கு வினையுளதாம்; அற்றேல், அவ்வினையே பயனாக வரும் என அமையும்; முதல்வன் எற்றுக்கு? எனின், **செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய்யே போல்** - உழவர் செய்யுந் தொழிற்குத் தக்க பயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழில் தானே விளைவிக்கமாட்டாது போல; வள்ளல் **அவன் செய்வன்**— உணவும் வித்துமாய்த் தொன்றுதொட்டு வரும் அவ்வினைகளை வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன்; **செயல் சென்றுஅணையா**— அவ்வாறன்றி வினைதானே உயிர்கட்குப் பயனாய் வந்து பொருந்தமாட்டாது. எ.று.

வள்ளலென்றார், தற்பயன் குறியாது "வேண்டுவார் வேண்டிய" வாறே நல்கும் அருளுடைமைநோக்கி.

**உள்ளடைவு**, உள்ளதற்கேதுவாகிய அடைவு என விரியும். ஏகாரம் ஏழாவதன் பொருட்கண் வந்தது. உள்ளுதல், ஈண்டு அனுபவித்தல். அதற்கேதுவாகிய முறைமையாவன அனுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்புவெறுப்புகள். அவற்றின்கண் உண்டாமாறு முன்னர்க்காட்டுதும்.

மேல், முதல்வனுக்கு வினைவேண்டப்படும் என்பதற்கு அரசனையுவமை கூறினார்; ஈண்டு, வினை, முதல்வனை இன்றியமையாதென்பது உணர்த்துதற்கு உழவுத்தொழிலை புவமை கூறினாரென வுணர்க.

எடுத்துக்காட்டு

**அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாம்சென்று அங்கு**
**அவ்வினையைக் காந்த பசாசம்போல்—அவ்வினையைப்**
**பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்**
**ஆர்தாம் அறிந்துஅணைப்பார் அங்கு**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், இருவினைசடமாகலின் சென்றணையமாட்டா வாயினும். உயிர்கள் சேதனமாகலின், அவையே அவற்றது பயனையறிந்து எடுத்துக்கொண்டு நுகரும்; வள்ளல் எற்றுக்கு? என்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) **காந்த பசாசம்போல்** - ஒருவன் எடுத்து நேரொக்கப் பிடித்த வழி இரும்பினை வலித்துக்கொள்ளும் காந்தம் போல; **அவ் வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின்** - அவ்வினைப் பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கும் முதல்வனால், **அவ்வினைஞர்தாம்** - அவ் வினைகளைச் செய்யும் ஆன்மாக்கள்தாம்; **அவ்வினையைச் செய்வதனில் சென்று அங்கு அவ்வினையை நுகராரேல்**-அவற்றைச் செய்தற் குரிய நிலைக்களமாகிய உடம்பின்கட் பொருந்தி அவற்றது பயனை அனுபவிப்பர், அவ்வாறு அனுபவியாராயின்; **ஆர்தாம் அறிந்து அணைப்பார்** - வேறே எவர்தாம் அவற்றை யறிந்து கூட்டுவார்; **ஆங்கு** - சுதந்திரமுமின்றி மலத்தில் மறைப்புண்டு கிடக்கும் அப் பெத்த காலத்து எ - று.

ஒருவரும் இல்லை யென்பதாம்.

ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், வினை சடமாகலானும், ''மாயை தாரகமாம் அத்தன்ருள் நிற்றல்'' எனப் போந்தமையானும், முதல்வனே அறிந்தணைப்பன் எனப் பாரி சேடவளவை கூறுவார், ''**பிரானின் நுகராரேல் ஆர்தாம் அறிந் தணைப்பார்**" என்றார்.

இது சொற்பொருட்பின் வருநிலை.

எடுத்துக்காட்டு

**நெல்லிற்கு உமியும் நிகழ்செம்பினில் களிம்பும்**
**சொல்லின் புதிதன்று தொன்மையே — வல்லி**
**மலகன்மம் அன்றுளவாம் வள்ளலால் பொன்வாள்**
**அலர்சோகம் செய்கமலத் தாம்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அவ்வினை ஆதியோ? அனாதியோ? ஆதியெனின், முன்பில்லது இடையே தோன்றுமென்பது சற்காரிய வாதத்துக் கேலாது; அனாதியெனின், ஒருவர் கூட்டவேண்டுவதில்லை யென்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) **நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லின் புதிதன்று தொன்மையே** — நெல்லின்கண் உமியும் செம்பின்கண் களிம்பும் எக்காலத் துளவாயின என்று ஆராய்ந்து சொல்லுங்கால், அந்நெல்லும் செம்பும் உளவாயின வன்றே உள்ளனவன்றி இடையே வந்தனவல்ல, அதுபோல; **வல்லி மலகன்மம் அன்று உளவாம்** — மாயை மலம் கன்மமென்னும் மும்மலங்களும் அனாதியே யுள்ளனவாம்; **கமலத்து அலர் சோகம்**

**பொன்வாள் செய் வள்ளலால் ஆம்** - முன்னே உள்ளதாய தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினுற் செய்யப்படு மாறுபோல, அவை தத்தம் காரியங்களைச் செய்தல் முதல்வனுலே யாம் எ - று.

இஃது எடுத்துக்காட்டுவமை. **புதிதன்று** என்பதனைத் தனித் தனிக் கூட்டுக. தொன்மையின் உள்ளவற்றைத் **தொன்மை** யென்று உபசரித்தார். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாகலின் **"வல்லி"** யென்ருர். வினைக்குத் தொன்மை கூறுவார், இனம்பற்றி மாயை மலங்களுக்கும் தொன்மை கூறினர்.

மூலமலத்தின் காரியம் மோகம் மத முதலாயின. இருவினை யின் காரியம் இன்பத் துன்ப முதலாயின. மாயையின் காரியம் தனுகரண முதலாயின. **வள்ளலால் ஆம்** எனவே, திரோதான சத்தியது உண்மையும் பெற்ரும். அது பாகம் வருவித்தற் பொருட்டு மலத்தின் வழி நின்று மோக முதலியவற்றைத் தொழிற் படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாதல் பற்றி **மலம்** என் றும் உபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மலம் கன்மம் மாயை திரோதானம் மாயாகாரியம் என்னும் ஐவகைப் பாசமும் கண்டுகொள்க.

இவற்றுள், மாயை, சுத்த மாயை, அசுத்த மாயை யென்று இருவகைப்படும். இவ்விரண்டினுள், சுத்த மாயையின் காரியமே அசுத்த மாயை யென்பாரும், சுத்த மாயை போல அசுத்த மாயை யும் அனுதியேயாம் என்பாரும், ஒன்றுதானே ஊர்த்துவ மாயை அதோமாயை யென்று இருவகைப்படும் என்பாரும் எனப் பல திறத்தர் ஆசிரியர். இனி, முதல்வனது கிரியா சத்தியே சுத்த மாயையெனப்படும் என்பாருமுளர்; அது முதல்வனுக்குத் தாதான்மிய சத்தியாகலின், பரிக்கிரக சத்தியாகிய சுத்த மாயை யாதல் யாண்டையது என்று ஒழிக.

சுத்த மாயையினின்றும் பஞ்சகலைகளும், நால்வகை வாக்கும் சிவதத்துவமைந்தும், சுத்தகாலமுதற் சுத்த நிலம் ஈருகிய முப்பத் தொன்றுந் தோன்றும்; அசுத்த மாயையினின்றும் அசுத்த கால முதல் அசுத்த நிலமீருகிய முப்பத்தொரு தத்துவங்களும் தோன்றும். இந்தத் தத்துவங்களெல்லாம் பொதுவும் சிறப்பும் பொதுச்சிறப்பும் எனத் தனித்தனி மூவகைப்பட்டு, உயிர்கள் தோறும் வெவ்வேறுளவாம்.

கன்மமும் " நாசோற்பத்தி பண்ணிவரு மாதலால் அநாதி" என்பதுபற்றிப் பிரபஞ்சம் போலப் பிரவாகாநாதி யென்பாரும், "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயையிரண், டாகவிவை யாருதியில்" எனவும், "ஆணவ முதலன் றதுபோற் கருமமும்" எனவும் ஒப்ப வோதுதல்பற்றி மூவகை வினைக்கும் முதற்காரண மாய **மூலகன்மம்** ஒன்று அநாதி நித்தமா யுண்டென்பாரும்என்று இருதிறத்தர் ஆசிரியர் என்க,

இவ்வினை ஈட்டப்படுங்கால், மந்திர முதலிய அத்துவாக் களிடமாக, மனம் வாக்குக் காயமென்னும் மூன்றுன் ஈட்டப் பட்டு, **தூலகன்மமாய் ஆகாமிய**மெனப் பெயர்பெற்று, பின்னர்ப் பக்குவ மாங்காறுஞ் **சூக்கும கன்மமாய்ப்** புத்தி தத்துவம் பற்றுக் கோடாக மாயையிற்கிடந்து, சாதி ஆயுள் போகமென்னும் மூன் றற்கும் ஏதுவாய் முறையே, சனகம் தாரகம் போக்கியம்என்னும் மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணிய பாவமென்னும் பரியாயப் பெயர் பெற்று, பின்னர்ப் பயன்படுங்கால், ஆதிதை விகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகமென்னும் முத்திறத்தாற் பல திறப்பட்டுப் **பிராரத்த**மெனப் பெயர் பெறும். ஆதிபௌதிக மாவது சடவாயிலாக வருவது. ஆத்தியான்மிகமாவது சடத்தோடு கூடிய சேதனம் வாயிலாக வருவது. ஆதிதைவிகமாவது ஒரு வாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாக வருவது. இன்னும் இவ்வினைகள், உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்று ஐவகைப்பட்டு, ஒன்றற்கொன்று ஏற்றமுடைத் தாய், முறையே நிவர்த்தி முதலிய பஞ்சகலைகளில் அடங்கி அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும்போகங்களைப் பயப்பிக்கும் என்று அறிக.

(நு-வி) பரிணமவாதிகள்: பால் தயிராதல் போலப் பிரமமே உலகமாயிற்று என்பவர், பரிணமம்-ஒன்று பிறிதொன்றுதல்.

பாடிகாவல்-சிறைக்காவல் செய்தல். களைகணுவான்-முறை செய்தற்குப்பற்றுக்கோடாயிருப்பவன். உள்ளடைவு-துய்த்தற்கு ஏதுவாகிய முறைமை. தற்பயன்-தனக்கென ஒருபயன். சடமா கலின்-அறிவற்றதாதலின். சேதனம்-அறிவுடையது. பசாசம்-இரும்பு.

காரிட்ட ஆணவக் கருவறையில் கண்ணில்லாக் குழவியையப் போல் உயிர் கிடந்து உழலும் நிலையைப் பெத்தநிலை என்பர் பெத்தம்-கட்டுப்பட்டு நிற்றல்.

பாரிசேடம்-ஒழிந்தவற்றுல்உணருவது. உயிரோ தனக்கென அறிவுடையதன்று. வினையோ அறிவற்றது. மாயையோ

இறைவனது ஆற்றலில் அடங்கியிருப்பது. இவ்வாற்றுன் இறை, உயிர், தளை ஆகிய மூன்றனுள் உயிருக்கும் தளைக்கும் வினைப் பயனைக் கூட்டும் உரிமையில்லை. எனவே, இறைவனுக்கே அவ் வுரிமையுண்டு என்பது விளங்குகிறது. இவ்வாறு உணர்வது பாரிசேடமாம்.

அவ்வினை என்னும் சொல்லும் பொருளும் பலவயின் பின் னரும் வருதலின் சொற்பொருட் பின்வரு நிலையாயிற்று.

அலர்-அலர்தல். சோகம்-கூம்புதல். பொன்வாள் செய்-அழகிய ஒளியைத் தருகின்ற. வள்ளலால் - கதிரவனல்.

உவமையும் பொருளும் கூறி அவற்றிடையே உவம உருபு இலதாயின் அது எடுத்துக்காட்டுவமையாம்.

உமியும் புதிதன்று களிம்பும் புதிதன்று எனக்கூட்டுக. உபசரித்தல்-ஏற்றியுரைத்தல். அன்று என்பது ஒருமையாதலின் இவ்வாறு தனித்தனியே கூட்டி முடித்தார்.

பரிக்கிரக சத்தி-வைப்புச்சத்தி. வேண்டுழி உதவுவதாய் இறைவனிடத்து அடங்கியிருக்கும் சக்தி. இவ்வாருதல்பற்றி வல்லி எனப் பெண் பாலாற் கூறினர்.

மோகம்-தீயனயென்றறிந்தவிடத்தும் அவற்றில் பற்றுக் கொள்வது. மதம்-தன்னைத்தானே தருக்கி நிற்றல். மூலமலம்-ஆணவமலம். தனு-உடம்பு. கரணம்-கருவிகள்.

திரோதானம்-மறைப்பு; உயிர்துய்த்துத் தொலைக்க வேண்டிய வினைப்பயன்களை நுகருங்கால் அந்நுகர்விற்கேதுவாகிய பொருள்களின் நன்மை தீமைகளை அறிய வொட்டாது மறைக் கும் ஆற்றல். மயக்கத்தைத்தரும் நிலையில் மாயை என்பர். அதன் விளைவாகிய உடல், உலகு, கருவிகளை மாயாகாரியம் என்பர். இவ்வைந்து மலங்களில் மாயாகாரியத்தை மாயையிலும் திரோதானசத்தியை ஆணவத்திலும் அடக்கி மும்மலங்கள் எனக் கூறுவர்.

மாயை இருவகைப்படும். 1. சுத்தமாயை-இதுமல கன்மங் களோடு விரவாமையின் இப்பெயர் பெற்றது. 2. அசுத்தமாயை மலகன்மங்களொடு விரவியது ஆதலின் இப்பெயர் பெற்றது. மாயை என்ற ஒன்றிலேயே மேற்பாகம் சுத்தமாயை எனவும், கீழ்ப்பாகம் அசுத்தமாயை எனவும் கூறுவாரும் உளர். இவற்றை முறையே ஊர்த்துவமாயை' அதோ மாயை என்பர்.

கிரியாசத்தி-தொழிலாற்றல். இவ்வாற்றல் இறைவனிடத்து ஒன்றுபட்டிருப்பது. மாயை அவனிடத்து அடங்கியிருப்பதாகும். ஒன்று பட்டுக்கலந்து நிற்கும் கிரியாசத்தியை அவனிடத்து அடங்கியிருக்கும் வைப்புச்சத்தியாகக் கூறலமையாது என்பதாம் தாதான்மியசத்தி-ஒன்றுபட்டுக் கலந்து நிற்கும் ஆற்றல்.

பஞ்சகலை-ஐவகைக்கலை. நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்பன. நால்வகைவாக்கு-சூக்குமை (நுண்ஓசை), பைசந்தி (நினைவோசை), மத்திமை (மிடற்றோசை), வைகரி (செவியோசை) என்பன. முப்பத்தொரு தத்துவங் களாவன-காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் வித்தியா தத்துவங்கள் ஏழும்; மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் அறிகருவி ஐந்தும்; கை, கால், சொல், எருவாய், கருவாய் என்னும் தொழிற்கருவி ஐந்தும்; நிலம், நீர், தீ, வளி, விண் என்னும் பூதம் ஐந்தும்; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரை ஐந்தும்; மனம். புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் உட்கருவி நான்கும் ஆக ஆன்மதத்துவம் இருபத்து நான்குமாம்.

சுத்ததத்துவம் முப்பத்தொன்றும் சுத்தமாயையினிடமாக வுள்ள உலகில்வதியும் விஞ்ஞானகலர், பிரளயாகலர் ஆகிய இருவர்க்கும் உரிய. அசுத்ததத்துவம் முப்பத்தொன்றும் அசுத்த மாயையினிடமாகவுள்ள உலகில்வதியும் சகலர்க்கு உரிய. சிவதத்துவத்தைத் தொழிற்படுத்தும் கடவுள் சிவபெருமான் ஆதலால் அதில் சுத்தம் அசுத்தம் என்னும் பாகுபாடில்லை.

உலகவடிவாய தத்துவங்கள் அனைவர்க்கும் பயன்படுதலின் பொதுவெனப்படும். நுண்ணியவடிவாகவுள்ள தத்துவங்கள் தனக்கு மட்டும் பயன்தருதலின் அவை சிறப்பெனப்படும். பருவுடம்பு வடிவாயுள்ள தத்துவங்கள் தாம் துய்த்தற்கும், மனைவி முதலியோரால் துய்க்கப்படுதற்கும் உரியவாதலின் அவை பொதுச் சிறப்பெனப்படும்.

பிரவாகாநாதியாகக் கன்மம் வருதலாவது இடையறாது ஒழுகும் நீரோட்டத்தில் முன்வந்தநீர், பின்வந்தநீர் எனப்பிரித் தறிய இயலாதவாறு போல, முன்செய்த கன்மம் இது, பின் செய்த கன்மம் இது, எனப் பிரித்தறிய இயலாதவாறு தொடர்ந்து வருவதாம்.

மூவகை வினைகளுள் மேற்கூறிய கன்மமே நீரோட்டம் போல இடையீடின்றித் தொடர்ந்து வருகிறது என்பர் ஒருசாரார்.

இம்மூவகை வினைகளுக்கும் மூலமாக மூலகன்மம் என்பது ஒன்றுண்டு என்பர் ஒருசாரார். மூலகன்மமாவது காலப்பழமைக் கெட்டாது உயிரோடு கூடியுள்ள விருப்பு வெறுப்புக்கள்.

அத்துவா-வழி. அது மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை என்னும் ஆறுவகைப்படும். மந்திரம்-தொடராய் இருப்பது. பதம்-சொல்லாயிருப்பது. வன்னம்-எழுத்தாயிருப்பது இம்மூன்றும் சொல்வடிவானவை. புவனம்-உலகு. தத்துவம் - உயிர் வீடுபேற்றை அடைதற்காகக் கூட்டப்படும் கட்டு. கலை - உயிர் வினை நீக்கம் பெறும் வழிகளைப் படிப்படியாகப் பெற வைப்பது. இம்மூன்றும் பொருள் வடிவானவை. காயம்-உடம்பு. உயிர் செய்த இருவினைகளும் பக்குவம் அடையும் வரை புத்தி தத்துவத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு மாயையில் கட்டுப் பட்டுக் கிடப்பது சூக்கும கன்மமாம். இதனைச் சஞ்சிதமென்ப. இக்கன்மம், முற்பிற்பாடு கூற இயலாமையின் அபூர்வ மெனவும், இன்ப துன்பங்களைத் தருதற்குக் காரணமாயிருத்தலின் புண்ணிய பாவமெனவும் பெயர் பெறும். சனகம்-பிறப்பது. தாரகம் - வாழ்நாள் பெருக்கமும், சுருக்கமும் உடைய உடலை அடிப் படையாகக் கொள்வது; போகம்-இன்ப துன்பம். போக்கியம் - பொருள் வடிவாய் நின்று துய்க்கப்படுவது,வினை பயன்படுங்கால் பிராரத்தம் (நுகர்வினை) எனப்படும். சடவாயிலாக-உயிரற்ற மின்னல், இடி, காற்று, மழை, தீ முதலிய பொருள்களின் வாயிலாக இடர் வருவது. பூதங்கள் வழி இவ்விடர் வருதலின் ஆதி பௌதிகமாயிற்று. சடத்தோடு கூடிய சேதனம்-உடலோடு கூடிய உயிர். மனிதர், விலங்கு முதலிய வாயில்களால் இடர் வருவதை ஆத்தியான்மிகம் எனப. பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு முதலியவற்றுன் இடர் வருவதை ஆதிதைவிகம் என்ப. இவை முறையே தெய்வத்தைப் பற்றி வருவன, பிறவுயிர்களைப் பற்றி வருவன, தன்னைப் பற்றி வருவன எனக் கூறப்படும்.

ஐவகை வினைகளாவன: உலகம் (நல்வினை), வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என்பன. உலகவினை-காவளர்த்தல், குளந்தொட்டல் முதலாயின. இது நிவர்த்தி கலையிலடங்கும். வைதிகவினை- வேள்வி முதலியன. இது பிரதிட்டா கலையிலடங்கும். அத்தியான்மிகம்-சிவபூசை முதலியன செய்தல். இது வித்தியா கலையிலடங்கும். அதிமார்க்க வினை - யோகம் செய்தல். இது சாந்தி கலையிலடங்கும். மாந்திர வினை - மந்திரங்களை இடையறுது எண்ணுதல், ஞானநூல்களை ஓதல் முதலாயின. இது சாந்தியதீத கலையிலடங்கும். உலக வினையும்,

வைதிக வினையும் இவ்வுலகியலின்பங்களைப் பயக்கும். அசுத்த போகம்—உலகியலின்பம். அத்தியான்மிக வினையும் அதிமார்க்க வினையும் இம்மை—மறுமை இன்பங்களைப் பயக்கும். மிச்சிரம் — சுத்தமும் அசுத்தமும் கலந்த கலப்பு. மாந்திரவினை வீடுபேற்றை தரும். சுத்தம்—வீடுபேறு.

## மூன்றும் அதிகரணம்

### மேற்கோள்

இனி, இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரும் என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், புனருற்பவம் சடத்துக்கன்றிச் சித்துக்கும் உளதாயினன்றே, முற்செய்வினையே ஈண்டைக்கு வருமென மேற்கூறியதமையும்; அஃது உண்டோ இல்லையோ என்னும் ஐயப்பாட்டின்கண், குடம் உடைந்த வழிக்குடாகாயம் ஆகாயத்தோடு கூடுமாறுபோல, உடம்பு நீங்கிய வழி உயிர் பிரமத்தோடு கூடும் என்னும் சுருதி பற்றி இறந்தவுயிர் மீளப்பிறப்பதில்லை யெனக் கிரீடாப் பிரமவாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றுங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள்: வெளிப்படை.

வருதல், தொன்றுதொட்டு அவ்வாறு ஆதல். மாறுதல், ஈண்டு இறத்தல் என்பது, "போக்கு வரவு புரிய" என்னும் மூலத்தானும், ஏது உதாரணங்களோடு உளதாகிய இயைபானும் உணர்க. இஃது உணராது அச்சு வேறுபடுதல் என்று உரைப்பாருமுளர்; அஃது ஈண்டைக்கு யாதும் இயையாமை யுணர்க.

### ஏது

தோற்றமும் ஈறும் உள்ளதற் கல்லதுஉளதாதல்இன்மையான்

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின் அதற்குப் பிரமாண மென்னை யென்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ—ள்) உற்பத்தியும் நாசமும், தொடர்ச்சியாய் உள்ள பொருட்கன்றி ஏனைப் பொருட்கு உற்பத்தி கூடாமையான், இனி இவ்வான்மாக்களே மாறிப் பிறந்து வரும் என மேற் கொண்டது என்க.

தோற்றமும் ஈறும் என்னும் உம்மைகளை எதிரதுதழீஇயின வாகக் கோடலின் "தொடர்ச்சியாய்" என்பது போந்தவாறறிக. **உளதாதல்**, ஈண்டுத் தோன்றுதல்.

இனி, இவ்வாறன்றிக் குடாகாய வுவமையே பற்றி இருவினையான் வரும் புனருற்பவம் உயிரின் பொருட்டுச் சிவத்துக்கேயாமெனச் **சிவாத்துவிதிகள்** கூறும் கடாவை ஆசங்கித்தும், மூலப்பகுதியில் தோன்றும் புத்தி தத்துவத்துக்கே அதுவெனச் **சாங்கியர்** கூறும் கடாவை ஆசங்கித்தும் மேற்கோடல் நுதலிற்று இவ்வதிகரணம் எனக்கொண்டு, தோற்றமும் ஈறும் அவ்வுரிமை உள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாதலின்மையான், இவ்வான்மாக்களே மாறிப்பிறந்து வரும் என மேற்கொண்டது என்று உரைப்பினுமாம். இப்பொருட்கு உரிமை யென்பது அவாய் நிலையான் வந்தது.

உளதாதல் என்னும் ஒருமை, தோற்ற ஈறுகளோடு தனித்தனி சென்றியையும். ஆன்மாக்களே யென்னு பிரிநிலை யேகாரம் விகாரத்தால் தொக்கது.

இனி, மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற் பொருட்டு மேற்கொண்டது என்பாரும் உளர்; அத்துவிதம் என்ற சொல்லானே அவரை மறுத்துஆன்மாக்களைப்பெறுவித்தமையின் ஈண்டு, அவர் மதம் பற்றிக் கடா நிகழ்தற்கு ஓர் இயைபின்மை யுணர்க.

## எடுத்துக்காட்டு

**கண்ட நனவைக் கனவுணர்வின் தான்மறந்து**
**விண்படர்ந்துஅத் தூடு வினையினல் — கண்செவிகெட்டு**
**உள்ளதே தோற்ற வுளம் அணுவாய்ச் சென்றுமனம்**
**தள்ளவிழும் கருவில் தான்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின் புனருற்பவம் ஆங்கால்படும் இயல்புகளுணர்த்தி, அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற, உளம் அத்தூடு விண்படர்ந்து, கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து மனம் தள்ள, வினையினல் அணுவாய்ச் சென்று கருவில் விழும் எனக்கொண்டு கூட்டுக.

(இ-ள்) **கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற**— கண் செவி முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவழித் தனக்குக் கேடின்றிப் படைப்புக் காலந் தொடங்கிச் சங்கார காலமளவும் நிலைபெற்றுள்ளதாகிய சூக்கும தேகம் பூதசார வுடம்பு முதலியனவாய்க்காரியப்பட; **உளம் அத்தூடு விண் படர்ந்து**– முதலிய உடம்பின்கட் பொருந்தித் துறக்க நிரயங்களிற் சென்று அனுபவித்து; **கண்ட கனவைக் கனவுஉணர்வின்மறந்து**— பின்னர் நனவின்கட் கண்டவற்றைக் கனுக்காணுங் காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற் போல, முன்னைக் கண் செவி கெட்டவாறும், உள்ளதேதோற்ற அத்தூடு விண்படர்ந்தவாறும் ஆண்டனுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றை மறந்து அறிவு வேறுபட்டு; **மனம் தள்ள வினையினால் அணுவாய்ச் சென்று கருவில் விழும்**—முன்னுடம்பு இறக்குங்கால் அடுத்தவினை காட்டும் கதி நிமித்தம் பற்றி உயிர் அவாவுமாறு மனம் செலுத்துதலான் அக்கதிக்கட் சேறற்கு ஏதுமாய் எஞ்சி நின்ற புண்ணிய பாவ சேடத்தால் சூக்கும தேக மாத்திரையாய்ச் சென்று அம்மனம் தள்ளிய கதிக்கு அமைந்த அக்கருவின்கண் படும் எ-று.

இன், உவமவுருவு. தான், அசை. மறத்தற்குச் செயப்படு பொருள் அவாய் நிலையான் வதந்து. விண்படர்ந்தென்னும் உபலக்கணத்தால் நிரயம் படர்ந்து என்பதூஉம் பெறுதும். படர்ந் தெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். அத்தூடென்புழி, அன்சாரியை விகாரத்தால் தொக்கது. பொருந்தி என்பது சொல்லெச்சம். வினை, ஆகுபெயர்.

உடம்பு நீங்கிப் போங்கால், முதற்கண் கெடுவன கண்ணும் செவியுமாகலின், அச்சிறப்பு நோக்கிக் கண் செவி கெட்டு என்று உபசரித்தார். கெட்ட வழி யென்பது கெட்டுஎனத் திரிந்து நின்றது.

ஐம்பெரும் பூதத்தின் காரியம் எனப்பட்ட தூலவுடம்பு சூக்குமவுடம்பின் காரியம் ஆமாறு என்னை யென்னும் ஐயம் நீக்குதற்கு உள்ளதே தோற்ற என்றார். ஏகாரம் தேற்றம்

ஆகாயமுதலியதூலபூதங்கள்சத்தமுதலியசூக்குமபூதங்களின் காரியமாதலின், அது பற்றியே, தன்மாத்திரை மயமாகிய சூக்கும வுடம்பில் தோன்றுவதாய தூலவுடம்பு ஐம்பெரும் பூதமயம் எனப்பட்டதன்றிப் பிறிதில்லை யென்பது; ''பூதனு சரீரம் போனாற் புரியட்டரூபந்தானே, யாதனு சரீரமாகி'' (சிவ-சித்தி.36) என்றும், ''சூக்குமவடி வேதன்னில் தூல காரணமதாகும்'' (சித்தி 4-10) என்றும், ''தூலமாம் உருவினுக்குச்சூக்கும முதல்'' (சித்தி 2-50) என்றும், ''மாறியிவ்வுருவமெல்லாம் வருவதெங்கே

நின்று என்னில், கூறிய சூக்குமத்தாம்'' (சித்தி 2–47) என்றும் ''விதிப்படி சூக்குமத்தே யுருவரும்,'.(சித்தி 2–47) என்றும்,' ''மனுதி தரும் உடல்'' (சித்தி11–9) என்றும் வழிநூலாசிரியரும் இவ்வாறே கூறியவாறு காண்க. இஃது அறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப.

அது தோன்றுங்கால்,''காலமுற்றும் நீங்கிடமரம்பின் வேரூர் நீண்மரம் நிகழ்த்து'' (சித்தி 2–48) மாறுபோலச் சூக்குமவுடம்பு கெடாது நிற்பத் தூலவுடம்பு ''வேரூரு குறியாம் ஆரம் வீர சங்கிலியுமா'' (சித்தி 2–47) தல் போல வருவது போவதாம்'' (சித்தி 2–49) என்பதூஉம் வழிநூலாசிரியர் கூறியவாற்றான் அறிக

அணு சூக்குமவுடம்பு தள்ள, தள்ளுதலானென்க, அக்கருவில் எனச் சுட்டு வருவிக்க. தான், அசை.

உள்ளதே தோற்ற என்றதனால், உடற்றிரிவும், விண்படர்ந்து என்றதனால் இடத்திரிவும், கண்ட நனவைக் கனவுணர்வில் தான் மறந்து என்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன.

உள்ளதே தோற்ற வென்றதனால், புதிதுபுதிதாய்த் தோன்றுதற் பற்றிச் சற்காரிய வாதத்திற்கு இழுக்கின்மையும், அத்தூடு விண்படர்ந் தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமெனவும் கூறியதனால், போக்குவரவு பற்றி வியாபகத்துக்கு இழுக்கின்மையும், வினைச்சேடத்தாலென்றதனால், துறக்க நிரயங்களின்கண் அனுபவித்தொழிந்தமை பற்றிப் புனருற்பவ காரணத்துக்கு இழுக்கின்மையும், மனம் தள்ள வென்றதனால், அஃது எஞ்சுதற்கு ஏதுவும் காட்டியவாறு.

வேதத்துட் கூறப்படும் பஞ்சாக்கினி வித்தையின் இயல் புணர்த்துவார். கண் செவி கெட்டவழி, விண்படர்ந்து மறந்து அணுவாய்ச் சென்று கருவில் விழும் என்றார். பஞ்சாக்கினி வித்தையின் இயல்பு நீலகண்டபாடியத்துட் காண்க.

மறந்து விண்படர்ந்து எனக் கூட்டி யுரைப்பாருமுளர். துறக்க நிரயங்களிற் படர்ந்து அனுபவிப்புழி, அறிவு திரியாமை புராணங்களுட் காண்க.

எடுத்துக்காட்டு

**அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு**
**பரகாயம் போய்வரும்அப் பண்பும் - பரவின்**
**குடாகாய வாகாயக் கூத்தாட்டாம் என்பது**
**அடாதுஉள்ளம் போமாறு அது.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், உயிருக்குப் புனருற்பவம் ஆகாமைக்கு வாதிகளான் எடுத்துக்காட்டப்படும் குடாகாய ஆகாய வுவமைக்குப் பொருள் கூறி மேலதனை வலி யுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்:) அரவுதன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போய் வரும் அப் பண்பும் பரவில்வேறு-கண்செவி கெட்டவழி உள்ளதே தோற்ற அத்தூடு விண்படர்தற்குப் பாம்பு தோலுரித்துப் புதி தொருதோல் போர்த்துச் சேறலும், புருடன் நனவுடம்பின் நீங்கிக் கனவுடலிற் சேறலும், யோகிகள் தம்முடம்பு நீங்கிப் பரகாயத் திற்சென்று மீடலுமாகிய இவ்வுவமைகள் மிக்கு வழங்குதற்கண் இவற்றிக்கு மாறுக; குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது - குடஆகாயம் குடமுடைந்த வழி ஆகாயத்தோடு கூடுமாறு போல்வதோர் கூத்தாட்டாம் என்று நீ கூறுதல் பொருந் தாது; உள்ளம் போம் ஆறு அது - சூக்கும வுடம்பு விட்டுப் போமாற்றிற்கே அவ்வுவமையாகலான் எ - று.

எனவே, உடல்விட்டுப் போமாற்றிற்கு இவ்விருவகை யுவமை களும் ஆகமங்களிற் கூறுதலின், அவை தம்முள் முரணுதவாறு. அரவு தன் தோலுரிவு முதலியன தூலவுடல் விட்டுப் போமாற் றிற்கும், குடாகாய வுவமை சூக்கும வுடம்பு விட்டுப் போமாற் றிற்கும் எனக்கோடல் பொருத்தமுடைமையின், அவ்வேறுபாடு உணராது குடாகாய வுவமையும் தூலவுடம்பு விட்டுப் போமாற் றிற்கே போலும் என மலையற்க என மேலதனை வலியுறுத்தவாறு காண்க.

மேலைவெண்பாவில் "கண்ட நனவைக் கனவுணர்வில் தான் மறந்து என்றது, அறிவு வேறுபடு முறைமைக்கு எடுத்துக்காட்டி யது எனவும் ஈண்டு அக்கனவும் என்றது, அதனையே உடல் வேறு படும் முறைமைக்கு எடுத்துக்காட்டியது எனவும் தெரிந்து கொள்க.

பரவு, முதனிலைத் தொழிற்பெயர். இல்லுருபு தொழில் நிகழ்ச் சிக்கண் வந்த ஏழாவது. பரவுதல், எல்லார்க்கும் புலனுமாறு

மிக்கு நிகழ்தல். ஈண்டு **உள்ளம்** என்றது சூக்குமவுடம்பைப் போமாற்றிற்கென்னும் நான்காவது விகாரத்தால் தொக்கது; ''ஐந்தவித்தான் ஆற்றல்'' என்புழிப்போல.

குளம் ஆம்பல், குளாம்பல் என மருவினாற்போல, குடம் ஆகாயம், குடாகாயமென மரீஇயிற்று. ஆகாயக் கூத்தாட்டு என்பது உவமத்தொகை. இதனை உம்மைத் தொகையாகக் கொண்டு குடாகாய ஆகாயமும் கூத்தாட்டும் போல் என்று உரைப்பாருமுளர்.

(நு-வி) சடத்திற்கு-அறிவற்றதற்கு: அதாவது உடல், கருவி உலகு முதலியன. சித்திற்கு-உயிர்க்கு. குடாகாயம்-குடத்துள் அடங்கியிருக்கும் வெளி.

அச்சு-உடம்பு. இவ்வாறு கொள்ளின் சிறந்தவுடலே மீளப் பிறக்கும் என்பது பட்டு வழுவாம்.

ஏதுவிலுள்ள தோற்றமும் என்னும் உம்மை பின்னுள்ள ஈறும்என்பதையும், அதிலுள்ள உம்மைபின்வரும்தோற்றத்தையும் குறித்தலின் எதிரது தழீஇய எச்சவும்மை யாயின.

குடத்தது வெளி உலகிலுள்ள வெளியினும் வேறு ஆகாத வாறு போல, உயிரும் சிவத்தின் வேருகாமையின், உயிர்க்குரிய தோற்றக்கேடுகள்சிவத்திற்கேயாம் என்பர் சிவாத்துவிதவாதிகள். தோற்றமும்ஈறும்அவ்வுரிமையுடையஉயிர்க்கேயன்றிச்சிவத்திற்கு ஆகாது என்பது அதற்குரிய மறுப்பாம். புத்தி தத்துவத்திற்கே தோற்றமும் ஈறும் உளது என்பது சாங்கியர் கொள்கை. இதற்கும் முன்னைய மறுப்பே பொருந்தும்.

தோற்ற ஈறுகள் என்னும் பன்மையோடு உளதாதல் என்னும் ஒருமை இயையாமையின் தனித்தனியே கூட்டுக என்ருர். உடல் கருவி முதலியவற்றினின்றும் பிரித்தலின் பிரிநிலை ஏகாரமாயிற்று.

அத்துவிதம்-இரண்டு எனப்படாது; ஒன்றே என்பது மாயா வாதிகளின் கொள்கை. அது முன்பே மறுக்கப்பட்டது. ஆதலின் மீண்டும் கூறுதற்கோர் இயைபின்ரும்.

சூக்குமதேகம்-நுண் ணுடம்பு, அதுபூதவுடம்பு, பூதசாரவுடம்பு யாதனுவுடம்பு என மூவகையாகி இன்பதுன்பங்களை உயிர் நுகர் தற்கு ஏதுவாகும். பூதவுடம்பு-டருவுடம்பு: இதுகாணப்படும் உடம்

பாகும். மண்ணுலகில் காணும் உடல் இதுவாகும். பூதசாரவுடம்பு- பருவுடம்பிற்குக் காரணமாய நுண்ணுடல். இது துறக்கவுலகிற் சென்று இன்பம் நுகர்வது. யாதனுவுடம்பு- இதுவும் பருவுடம் பிற்குக் காரணமாய நுண்ணுடலாம். இது நிரயவுலகில் சென்று துன்பம் நுகர்வது. கதி-மக்கள், தேவர், நரகர், விலங்கு ஆகிய நால்வகைப் பிறப்பு.

மறந்து-எதனை மறந்து என்றில்லாமையால் அதற்கு ஏற்ப முன்னைக் கண் செவி கெட்டவாறு முதலாய செய்யப்படு பொருளைக் கூறினர், உபலக்கணம்-ஒன்றைக் கூறியவழி அதனோடு இயைபுடைய பிறவற்றையும் உய்த்துணர்வது. படர்ந்து-சென்று; ஈண்டுச் சென்று அநுபவித்ததைக் குறித்தலின் ஏற்றுரையாயிற்று. உபசரித்தல்- ஒன்றைப் பிறிதொன்றில் ஏற்றிக் கூறல். செல்லல் காரணம். அநுபவித்தல் காரியம். வினை என்பது அதன் எச்சத் தைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று.

உள்ளதே தோற்ற-நுண்ணுடம்பே தோற்ற.

உடல் திரிவு-உடல்வேறுபாடு; பிறப்பிற்கு ஏற்ப அமைவது. பஞ்சாக்கினி வித்தையாவது பார்ப்பனச்சாதி முதலியவற்றில் பிறந்து வேள்வி முதலிய நல்வினை செய்த உயிர்கள், அவ்வினை யின்பயன் நுகர்தற்பொருட்டு, இவ்வுடம்பின் நீங்கிச் சூக்கும தேகத்தோடும் துறக்கத்திற் சென்று இன்பம் அனுபவித்தற்கு உரிய பூதசாரவுடம் பெடுத்து, ஆண்டு வைகும் கடவுளரோடு வாழ்ந்து, நல்வினைப் பயன்கள் அனுபவித்துத் தொலைந்தவழி, மீள நிலத்தின் வந்து பார்ப்பனச்சாதி முதலியவற்றில் தோன்றி, வினைகளையீட்டுதற்கு ஏதுவாய் எஞ்சி நின்ற வினைச்சேடத்தால் அவ்வுடம்பின் நீங்கிச் சூக்குமதேகத்தோடு மேகமண்டலத்தினை எய்தி, ஆண்டு நின்று மழைத் தாரையினோடு கூடி நிலத்தினை அடைந்து நெல் முதலிய பைங்கூழின் விரவிநின்று, அவை உணவாய்ப் பரிணமித்தவழி அவற்றோடு கூடித் தந்தையின் வயிற்றுட் சென்று, ஆண்டுச் சுக்கிலமாய்ப் பரிணமித்து அதனோடு கூடித் தாய் வயிற்றுட் சென்று ஆண்டுக் கருவாய்ப் பரிணமித்து, பார்ப்பனச்சாதி முதலியவற்றிற் குரித்தாகிய தூலதேகத்தோடு நிலத்தில் தோன்றும் என்று உணர்க; ஆன்மாத் தூலவுடம் பின் நீங்கியவழித் துறக்கமும், மேகமண்டலமும், நிலனும், தந்தையும், தாயும் என்னும் ஐந்து நிலைக்களத்தும் வைகித் தோன்றுதலின், இவ்வைந்தின் இடமும் அங்கியாகவும், இவற்றின் எய்திய ஆன்மா ஆகுதியாகவும் இங்ஙனம் தியானிப்பதொரு சாதகமாகலின் இது பஞ்சாக்கினி வித்தையெனப்பட்டது”-சிவஞானபாடியம். துறக்கம் புக்கு மீளத்தோன்றும் உயிர்க்கே இவ்வியல்பாம் நிரயம்புக்கு மீளத்தோன்றும் உயிர்க்கன்று.

கூத்தாட்டு ஆம் என்பது காண்போர் குழாம் கூத்தாட்டுக் காரணமாக அரங்கின் கண் பல்திறத்தால் தாமே வந்து அக்காரணம் போயவழித் தாமும் போமாறுபோல, வினைவயத்தால் உடலொடு கூடிய உயிரும் அவ்வினைபோயுழி அவ்வுடலைவிட்டு நீங்கும் என்பதாம்.

மலையற்க-மயங்கற்க.

உயிர் ஒரு பருவுடல் விட்டுப் பிறிதொரு பருவுடலைப் பற்றுதற்குப்பாம்பு தோலுரித்துப் பிறிதொரு தோல்போர்த்துச் சேறல் உவமையாம். உயிர்பருவுடல் விட்டு நுண்ணுடம்பொடு நிற்றற்குப் புருடன் நனவுடம்பை விட்டுக் கனவுடல் சேறல் உவமையாம், உயிர் நுண்ணுடல் விட்டு நண்ணரிய சிவானந்த ஞானவடிவாய காரணவுடம்பில் நிற்றற்குக் குடத்திலுள்ள வெளி அக்குடம் உடைந்தவிடத்துப் பெருவெளியோடுகலத்தல் உவமையாம். இவ்வாறு உயிர் அவ்வந் நிலையில் உளதாகும் உடலை விடுத்துப் பிறிதொரு உடலொடு கூடிநிற்றல் யோகியர் தம்முடல் விடுத்துப் பிறவுடல் பெற்று மீளல் போல்வதாம்.

பரவுதல் என்பது தல் விகுதி குன்றி நிற்றலின் முதனிலைத் தொழிற் பெயராயிற்று. பரவுதலாகிய தொழில் நிகழ்ச்சியை இல்லுருபு குறித்தது. திருக்குறளில் ஐந்தவித்தான் ஆற்றற்கு எனற்பாலது. ஆற்றல் எனநின்று நான்கனுருபு தொக்கது போல ஈண்டும் தொக்கது.

குடாகாய ஆகாயம் போல்வதொரு கூத்தாட்டாம் என விரிதலின் உவமத்தொகை என்றார்.

## நான்காம் அதிகரணம்

### மேற்கோள்

**இனி நீக்கமின்றி நிற்குமன்றே என்றது,**

என்பது மேற்கோள். என்னுதலிற்றோ வெனின், அங்ஙனம் புனருற்பவமாதற்கு ஏதுவாய் இருவினைகளைச் செலுத்த நிற்பது எனப்போந்த ஆணை யெனப்படும் சத்தியாவது முதல்வனின் வேறோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் பொருட்குச் சத்தி வேறு என்னும் மீமாஞ்சகர் முதலியோர் மதமும்,

அன்றென்னும் நையாயிகர் முதலியோர் மதமும் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) முதல்வன் தனது ஆணையாகிய சிற்சத்தியோடு சம வேதமாய் நிற்பன் எ-று.

அந்நிய யோக வியவச்சேதம் அயோக வியவச்சேதம் என்றற்றொடக்கத்து வடசொற்கள், பிறிதினியைபு நீக்குதல் இயைபின்மை நீக்குதல் என்றற் றொடக்கத்தனவாக மொழி பெயர்த்து வழங்கப்படுமாறுபோல, சமவாயமென்னும் வடமொழி, தமிழின்கண் நீக்கமின்றி நிற்றல் என மொழிபெயர்த்து வழங்கப் படும் என்று உணர்க. வடமொழி இரண்டாஞ் சூத்திரத்து இறுதியில் ஆணை முதல்வனோடு சம வேதமாய் நிற்கும் என ஆணை மேல் வைத்தோதி யதனை ஈண்டு முதல்வன்மேல் வைத்து ஓதினர்.

கண்ணழிப்புழி, இருவினை முதல்வன் ஆணையின் வருமெனக் கூறிப்போந்த ஆணை, ஈண்டுக் கூறுமையே இனிது விளங்கு மென்னும் கருத்தால், சொற் பல்காமைப் பொருட்டு அதனை யொழித்து எடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொருள்காண மாட்டாதார் சருவவியாபியாய் நிற்றலால் என்னும் ஏதுவின் பொருளே மேற்கோளுக்கும் பொருளாகக் கொண்டு உரைப்ப. அது கூறியது கூறலாதலுமன்றி மொழிபெயர்த்தல் யாப்பிற்கு ஏலாமையும் அறிக.

ஈண்டுச் சமவாயமென்றது தாதான்மிய சம்பந்தத்தை; அஃதாவது பொருளான் ஒன்றேயாகியும் ஒருவாற்றான் பேதமாதற்கு உரிமையுடைமை.

ஏது

**அவன் ஏகாநேகம் இரண்டும் இன்றிச் சருவ வியாபியாய் நிற்றலான்.**

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், அதற்குப் பிரமாண மென்னை யென்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளை வலியுறுத் துதல் நுதலிற்று.

(இ-ள்) அம்முதல்வன் ஒன்றே வேறே யென்னும் இருதன்மை யுமின்றி, அவ்விரண்டிற்கும் பொதுவாய் எங்கணும் வியாபியாய் நிற்றலான், இனி, ஆணையின் நீக்கமின்றி நிற்கும் அன்றேயென மேற்கொண்டது.

அவினுபாவம் உணர்த்துவார் ஏகாநேகம் இரண்டும் இன்றி யென மேற்கோளிற் போந்த பொருளை அநுவதித்துச் சருவ வியாபியாய் நிற்றலான். என ஏதுக் கூறினர். **சருவ வியாபியாய் நிற்றல்**, அவையே தானேயாய் என்னும் அதிகரணத்தாற் சாதிக் கப்பட்டமையின் அதனை ஈண்டு, ஏதுவாக வைத்து **ஆணையின் நீக்கமின்றி நிற்கும்** என்று மேற்கோளைச் சாதித்தவாறு.

எடுத்துக்காட்டு

> **எங்கும்உளன் என்றளவை ஒன்றன்று இரண்டு எனில்**
> **எங்கும் உளன்அன்று எவற்று எவனும் – அங்கண்**
> **அவையவன் அன்றிஇல்லைப் பொன்னொளிபோல் ஈசன்**
> **அவையுடைமை ஆளாம்நாம் அங்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், ஏதுவும் மேற் கோளும் தம்முள் அவினுபாவம் ஆமாறு யாங்ஙனம் என்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்தல் நுதலிறறு.

(இ-ள்) **எங்கும் உளன் என்ற அளவை ஒன்றன்று**— யாங்கணும் அவையே தானே யென மேற்கூறிய அளவையானே முதல்வன் ஒரு பொருளாதல் கூடாது. ஒன்றாயின் கங்கைக் கரையில் நின்ற ஒரு மானுடனே காவிரிக் கரையினும் ஒருங்கு நிற்கமாட்டான்; அதுபோல ஒரு பொருள் ஓரிடத்து உளதாதலன்றி யாங்கணும் வியாபித்து நிற்கமாட்டாது என்பதாம்; **இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று**—அற்றேல் முதல்வன் இருபொருளாய் நிற்கும் எனக் கோடும் எனின் யாங்கணும் அவையே தானேயாய் உளனுதல் கூடாது, (தன்மாட்டே வேற்றுமையுடையானுக்குப் பிற பொருளின்கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் சாலாது என்பதாம்; அற்றேல் இவ்விரண்டோடு முரணுதலின், எங்கும் உளன் அல்லன் எனக்கோடும் எனின்,) **எவற்று எவனும் அங்கண் அவை அவன் அன்றுஇல்லை**—எவ்விடங்களிலுள்ள எத்திறப் பொருளுமாகிய அவ்விடத்து அவைகளெல்லாம் ''அகரவுயிர் இன்றேல் அக்கரங்கள்'' இல்லையா மாறுபோல அம்முதல்வனை யின்றி அமையா; (ஆகலான் எங்கும் உளன் அல்லன் என்றல் பொருந்தாது என்பது குறிப்பெச்சம் அற்றேல், வேறு விடுக்குமாறு என்னையெனின்,) **ஈசன் பொன் ஒளி போல்** — எங்கும் உளனுகிய முதல்வன் ஞாயிறும் ஒளியும் போல ஒன்றுதற்கும் இரண்டாதற்கும் பொது வாய்த் தாதான்மியத்தால் சிவமும் சத்தியும் என்று இயைந்து நிற்கும். (அற்றேல், பசுபாசங்களும் **வியாபகம் எனக்**

கோடலின். அவையும் இம்முறைமை பற்றி ஏகாநேசம் இரண்டும் இன்றி, முதல்வன் போலத் தத்தம் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்கும் என்பது பெறப்படுதலால் முதல்வனோடு சமமாவான் செல்லுமே யெனில்), **அவை உடைமை நாம் ஆளாம் அங்கு**— அவ்வாறாயினும் முதல்வனது வியாபகத்தை நோக்க வியாப்பிய மாகலின் அப்பாசங்கள் உடமையாம்; பசுக்களாகிய **நாம்** அடிமையாவோம் அம்முதல்வன் மாட்டு எ-று.

**எங்குமுளன் அன்று** எனப் பாடமோதுவாருமுளர்.

பாசங்கள் உடைமையாமாறும், பசுக்கள் அடிமையாமாறும், ''தாரகமாம் அத்தன் தாள்நிற்றல்'' எனவும், "அதனின் ஈறலா ஒன்று பலவாறே தொழும்பாகும்' எனவும் மேலே பெறப்பட்டமை யின், அவற்றை ஈண்டு எடுத்துக்காட்டி ஆசங்கை நீக்கியவாறு.

என்ற வென்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது; ''புகழ்புரிந்த'' என்புழிப்போல. அளவையான் என ஆனுருபு விரிக்க. ஒன்றன்று உளனன்று என்புழி, ஒன்று உளன் என்னுந் தருமி வாசகங்கள் ஆகுபெயரால் **அத்தருமங்களின்** மேல் நின்றன வாகலான், உளனென்பதும் அஃறிணையொருமையோடு முடிந்தது. **அன்மை**, கூடாமைப்பொருட்டு. **எவற்றெவனுன்** என்பது ஏழாம் வேற்றுமைத் தொகை; அஃறிணைக்கண் வரும் எவனென்னும் வினுவினைக்குறிப்புச்சொல். ஈண்டு பெயர்த் தன்மைப் பட்டு எவ்னும் என எஞ்சாமைப் பொருண்மை யுணர்த்தி நின்றது. **அன்றி**யென்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்று எனத் திரிந்தது. இன்மை, ஈண்டு அமையாமைப் பொருட்டு. **பொன்**, ஆகுபெயர். ஆம் என்பது உடைமையோடும் இயையும். **பொன்ஞெளிபோல் ஈசன்** என்பது தொகையுவமமாகலின், பொது வியல்பு விரித்துரைக்கப்பட்டது.

இவ்வதிகரணத்தாற் போந்த தொகைப்பொருள், —முதல்வன் வியாபகனுதலின், வியாபகப்பொருட்கு ஒன்ருய் நிற்றல் கூடாது; அது கூடாமைபற்றி, இரண்டாய் நிற்பன்எனின், வியாபகனுதல் கூடாது; வியாபியல்லன் எனின், பசுபாசங்கள் அவனையின்றி அமைதல் கூடாது; ஆகலான் முதல்வன் ஒருவனே ஞாயிறும் ஒளியும் போலச் சிவமும் சத்தியும் எனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுச் சருவ வியாபியாய்ப் பொதுமையின் நிற்பன் எனச் **சமவேதமாய்** நிற்குமாறு தெளிவிக்கும் முகத்தானே தாதான்மிய சத்தியுண்மைக்குப் பிரமாணங் கூறியவாரும் என்று உணர்க.

அஃதாமாறு,—தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉம் தானேயாகியஞாயிறுஒன்றுதானே விடயங்களை விளக்குழிக் கதிரெனவும், தன்னை விளக்குழிக் கதிரோன் எனவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட்டு இயைந்து நிற்றல் போல, புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பின் நிற்பதூஉம், புறப்பொருளை நோக்கி நின்று உணர்த்துவதூஉம் ஆகிய இரு தன்மையையுடைய பேரறிவாய [**சைதன்னியம்** ஒன்றே, அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் **சத்தி** யெனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையில் **சிவம்** எனவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும் என உணர்க.

இனி, தீயின் சத்தி யொன்று தானே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி யென்றல் தொடக்கத்துப்பலவேறு வகைப்படுமாறுபோலச் சிவசத்தி யொன்றே காரிய வேறுபாட்டால், பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை யென்று ஐவகைச் சத்திகளாயும், முறையே ஐந்தும், நான்கும், எட்டும், பதின்மூன்றும், எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானி முதலிய ஐவகைச் சத்திகளாயும், ஆரணி முதலிய மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி முதலிய ஐவகைச் சத்திகளாயும், வாமை முதலிய அட்ட சத்திகளாயும், பரவாகீசுவரி, அபரவாகீசுவரி மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணியென ஏழுவகைச் சிவபேதங்கட்கும் முறையே யெழுவகைச் சத்திகளாயும், அத்தியான்மிகமெனப்டும் உன்மனை முதலிய கலைகளாயும், இன்னும் பலவேறுவகைப்பட்டும் நிற்கும். அவ்வச்சத்திகளோடு புணர்ந்த சிவமும்அவ்வாறே பலவகைப் பெயர் பெற்று நிற்கும். அவ்வச் சத்திகட்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறு வகையான் விருத்திப்பட்டு அப்பெயர் பெறும். இவற்றின் இயல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

(நு–வி) சமவாயம்–நீக்கமின்றி நிற்கும் இயைபு. சமவேதம்–நீக்கமின்றி நிற்பது. எனவே ஆணை முதல்வனோடு சமவதேமாய் நிற்கும் என வடமொழிச் சூத்திரக் கருத்துப்படி ஆணை (திரோதானசத்தி) சமவேதமாம். முதல்வன் ஆணையொடு சமவேதமாய் நிற்பன் என்னும் தமிழ்ச் சிவஞானபோதக் கருத்துப் படி முதல்வன் சமவேதமாம்.

ஒரு பொருளுக்குள்ள அடைமொழி, மற்றவற்றிற்குள்ள இயைபை நீக்காது தனக்குரிய இயையை மட்டும் குறிக்குமேல் அது இயைபின்மை நீக்கலாம். ஒரு பொருளுக்குள்ள அடைமொழி தனக்கும் அப்பொருளுக்கும் உள்ள இயைபை மட்டும் குறியாது, அப்பொருளுக்கும் பிறபொருள்களுக்கும் உள்ள இயைபை நீக்குமேல் அது பிறிதின் இயைபு நீக்கலாம்.

இருவினை முதல்வன் ஆணையின் வருமென இரண்டாம் அதிகரணத்திலேயே கூறியிருத்தலின் இங்கு மீண்டும் ஆணையின் எனக் கூறவில்லை. காரணம் சொற்சுருக்கம் நோக்கியாம்.

முதல்வன் ஆணையொடு நீக்கமின்றி நிற்பன் எனப் பொருள் காணாது முதல்வன் யாண்டும் நீக்கமின்றி நிற்பன் எனப்பொருள் காண்பர் பிறர். இதனையடுத்து வரும் ஏதுவில் அப்பொருண்மை யிருப்பதால் ஈண்டும் கூறல் கூறியது கூறலாம் என்றார். அன்றியும் வடமொழிச் சிவஞானபோதத்து ஆணையொடு நீக்கமின்றி நிற்றலையே குறித்தலின், ஈண்டு அதனின் வேருகக்கூறல் மொழி பெயர்த்துரைக்கப்பட்டது என்பதற்கேலாதாம்.

சருவவியாபி-யாண்டும் நீக்கமற நிற்பவன்.

தாதான்மிய சம்பந்தம்-குணத்திற்கும் குணிக்கும் உள்ள ஒற்றுமைக்குரிய இயைபு.

அவினபாவம்-விட்டு நீங்காமை. யாண்டும் நீக்கமற நிற்றல் சருவவியாபகம் என்பதன் கருத்தாகும்.

தருமி வாசகங்கள்-குணியாக நிற்கும் சொற்கள். தருமத்தை யுடையது தருமியாம். தருமம் - குணம். தருமி-குணி. ஒன்று என்பது ஒன்றுதல் என்றும், உளன் என்பது உளனுதல் என்றும் பொருள்பட்டன. இவ்வாறு பொருள்படுதலின் ஆகுபெயராயின. அன்று என்னும் அஃறிணை வினையோடு உளன் என்பது இயையாமையின் உளனுதல் என உரை செய்யப்பட்டது. எவற்று-எவ்விடங்களிலுள்ள எனப் பொருள்படுதலின் ஏழாம் வேற்றுமைத்தொகையாயிற்று. பொன்-ஒளி: ஈண்டு அதனையுடைய ஞாயிற்றைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று.

ஈசானி முதலிய ஐவகைச் சத்திகள் ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்போர். ஈசானியின் கூறுகிய ஐவகைச்சத்தியர் சகுனி, அங்கதை, இட்டை, மரீசி, சுவாலினி என்போர். பூரணியின் கூறுகிய நால்வர் சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவருத்திஎன்போர். ஆர்த்தியின் கூறுகிய எண்மர் தமை, மோகை, சயை, நிட்டை, மிருத்தியு, மாயை, பயை, சரை என்போர். வாமையின் கூறுகிய பதின்மூவர் இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சம்மியமினி, கிரியை, புத்தி, காரி, தாத்திரி, பிராமணி, மோகினி, பவை என்போர். மூர்த்தியின் கூறுகிய எண்மர் சித்தி, இருத்தி, தியதி, இலக்குமி, மேதை, காந்தி, சுவதை, திருதி என்போர். ஆரணி

மூவகைச் சத்திகள் ஆரணி, செனனி, இரோதயத்ரீ என்போர், நிவர்த்தி முதலிய ஐவகைச் சத்திகள் நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்போர்.

வாமை முதலிய எண்மர்; வாமை, சேட்டை, இரௌத்திரி. காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரதமனி, சருவபூததமனி. ஏழுவகைச் சிவபேதம்; நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன், விட்டுணு, பிரமன்.

உன்மனை முதலிய கலைகள்: உன்மனை, சமனை, வியாபினி. சத்தி, நாதாந்தம், நாதம், நிரோதி, அர்த்தசந்திரம், விந்து, மகாரம், உகாரம், அகாரம்எனவட்டன்னிரண்டு.விந்து-சுத்தமாயை

மூன்றாவது நூற்பா

**உளதிலது என்றலின் எனதுஉடல்என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்**
**உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா**

**என்பது சூத்திரம். என்னுதலிற்றோ வெனின் ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.**

என்பது கருத்துரை: என்னுதலிற்றோவெனின் சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேல் "அவையே தானே" என்றெடுத்துக் கொள்ளப் பட்ட உயிர், சூனிய முதலியவற்றுள் ஒன்றாகற் பாற்று என அவ்வம் மதம்பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்து, உயிர் அவற்றிற்கு வேறாய் உண்டென்பது கருதலளவையான் விளக்கி, மேலைச் சூத்திரத்தின் உயிர்கள் மேல் வைத்தோதிய முதல்வனது இலக்கணத்தை வலியுறுத்துதல் மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

முதன்மையுடைமை பற்றி உலகிற்கு நிமித்த காரணமாகிய பப்தி பொருள் உண்டென்பது முதற் சூத்திரத்துட் கூறி, காரண மாதற் பொதுமையான் இயைபுடைமை நோக்கித் துணைக்காரண முதற் காரணங்களது உண்மையும், அவற்றான் உலகங் காரியப் படுமாறும் இரண்டாஞ் சூத்திரத்துட் கூறி, அவற்றான் ஆய பயன் கோடற்கு உரிய பசுக்களது உண்மைக்குப் பிரமாணம் ஈண்டுக் கூறுகின்றார் என உணர்க. இதனானே சூத்திர வியைபும் இனிது விளங்கும்.

**இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:** இலதென்றல் முதலிய அறுவகை யேதுக்களானும், மாயாவியந்திர தனு என்னும் பெயரடையால் பெறப்படும் குறிப்பேதுவானும், இவற்றின் வேருய் இவ்வுடம்பினுள் உயிரெனப்படுவது ஒன்றுண்டு என்க.

இதுபூட்டுவிற் பொருள்கோள். உளதென்றது, சாதியொருமை. அறிதலின் என்றது ஐம்புலனேடுஞ் சென்றியையும்.

தனுவினுள் ஆன்மாவுளதென்ருரேனும், காணப்பட்ட வுடம் பாற் காணப்படாத வுயிருக்கு உண்மை கூற வேண்டுதலின். இவ்வுடம்பு சூனிய முதலியவற்றின் வேருய ஆன்மாவை யுடைத் தென உடம்பின்மேல் வைத்தோதுதல் ஆசிரியர் கருத்து. அற்ருகலின் அன்றே, பதியுண்மை உலகின் மேல் வைத்தோதியதூஉம் என்பது.

ஈண்டு மேற்கோள் ஒன்ருயினும், எழுவகை மதங்களை வேறு வேறு மறுக்கும் ஏதுக்கள் ஏழாகலான், ஆன்மாவுளதென்றும் மேற்கோள் அவற்ருேடு தனித்தனியே சென்று இயைதலின், ஏழதிகரணத்ததாயிற்று இச் சூத்திரம் என்று உணர்க.

இதனுட் கூறிய ஏதுவே ஏதுவும் மேற்கோளும் ஆகலான், ஏனைச் சூத்திரங்களுட்போல, வேறு ஏதுக் கூறவேண்டாமையின், இவை ஏதுவா மாறும், இவற்ருன் மேற்கோளைச் சாதிக்குமாறும், இனிது விளக்கி வலியுறுத்துதல் மாத்திரையே ஈண்டு உரைக்கப் படுவது எனக்கொள்க.

(நு-வி) ஆத்மா-உயிர்ப்பது எனப் பொருள்படும். இது வட சொல். இதுவே அன் என்னும் வேர்ச்சொல் அடியாகக்கொண்டு தமிழில் ஆன்மா என்ருயிற்று.

ஆன்மப்பிரகாசம்-உயிர் உண்டு என்பது பற்றிய விளக்கம். கருதலளவை-இங்ஙனம் அன்ருயின் இது கூடாது என்று உணர்வது. இரண்டாவது நூற்பாவில் இறைவன் அவையேயாயும் தானேயாயும், அவையே தானேயாயும் நிற்பன் என்றது உயிர்கள் மேல்வைத்து ஓதிய முதல்வன் இலக்கணமாம்.

உலகத்தோற்றத்திற்குத் துணைக்காரணம் வினையும் முதற் காரணம் மாயையும் ஆகும். பசுக்கள்-உயிர்கள்.

இலது என்றல் முதலிய அறுவகை ஏதுக்களும் பின் விரித்துணர்த்தப் படுகின்றன. குறிப்பு ஏது-காரணத்தைக் குறிப்பாகவுடையது. மாயா இயந்திர தனு-மாயையின் காரியங்க ளாகிய தத்துவங்களால் கட்டப்பட்டுப் பொருந்திய சூத்திரப் பாவை போன்ற உடல். தனு-உடல். இதற்கு அடையாக

இருப்பது மாயா இயந்திரம் என்பதாகும். மாயையின் காரியங்களாகவுள்ள உடல் கருவி முதலியவற்றிற்கு வேறு வேறு பெயரிருத்தலின், அவற்றின் வேருய் உயிர் உண்டு என்பது பெறுதும். இக்காரணம் அப்பெயரடையாய்க் குறிப்பாகப் பெறப் படுதலின் குறிப்பேது என்ருர்.

வில் பூட்டப்பட்டிருக்கும் பொழுது அதனது அடியும் நுனியும் நாணில் இயைத்துக் கட்டப்பட்டிருப்பது போல, இந்நூற்பாவிலும் உளது என்னும் முதற்சொல் ஆன்மா என்னும் இறுதிச் சொல்லோடு இயைபுபட்டு ஆன்மா உளது என இயைதலின் இது பூட்டுவிற்பொருள் கோளாம்.

ஆன்மா என்பது ஈண்டுப் பன்மைப் பொருள்படுதலின் உளது என்பது சாதியொருமையாயிற்று.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

ஈண்டு இலது என்றலின் ஆன்மா உளது என்றது.

என்பது மேற்கோள், என்நுதலிற்ருே வெனின், சூனியான்ம வாதி, தேகான்ம வாதி, இந்திரியான்ம வாதி, அந்தக்கரணுன்ம வாதி, சூக்குமதேகான்ம வாதி, பிராணுன்ம வாதி, விஞ்ஞானுன்ம வாதி, சமூகான்ம வாதி யென்னும் எண்மருள், அந்தக்கரணுன்ம வாதிகள், ஆன்மாவினது இலக்கணங்கூறும் வழி, அனுவாத முகத்தான் மறுக்கப்படுதலின், அவரையொழித்து, ஒழிந்த எழுவர் மதங்களேயும் முறையே மறுத்து,உயிருண்மைசாதிப்பான் தொடங்கி,அவற்றுள்,இது சூனியமே ஆன்மா வென மாத்தியமிகர் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

ஆன்மா இலதென்றலின் என வருவித்து உரைக்க.

(பொ-ரை) எவற்றிஃனயும் அன்று அன்று எனவிட்டு, ஆன்மா இலது என்று நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

என்பது பொழிப்புரை. என்னுதலிற்றோ வெனின், ஆன்மா இலதென்றலே பற்றி, அஃது உண்டெனக் கோடல் முயற்கோடு இல்லை என்னும் ஏதுவால் அஃது உண்டெனச் சாதித்தலோ டொக்கும் என்னும் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல நுதலிற்று.

(இ-ள்) ஆன்மா இலதென்னும் **சூனியான்ம வாதிகளும்** இல்லை யென வாளா கூறுதல் அமையாமையின், உடல் பொறி விடயம் அனைத்தினையும் முறையானே இஃது ஆன்மா அன்று, இஃது ஆன்மா அன்று என ஒரோவொன்றாகக் கழித்து, இவ் வாறாகலின், ஆன்மா என்பது சூனியம் என்று அங்ஙனம் கூறுப வாகலான், அவற்றை ஒரோவென்றாகவிட்டு அங்ஙனம் கூறி நிற்பதோர் அறிவு உண்மையின், அவ்வறிவே மேல் "அவையே தானேயாய்" என்பதனுள், ஆகமவளவையாற் சாதித்துப் போந்த ஆன்மா **என்றவாறும். ஈண்டு இலதென்றலின், ஆன்மா வுளதென** மேற்கொண்ட தென்க.

அங்ஙனம் அறியும் அறிவும் சூனியமே யெனின், அஃது என்னை ஈன்றாள் மலடி யென்பதனோடு ஒக்கும் என்று ஒழிக வென்பது கருத்து. இன்மை, ஈண்டுச் சூனியப் பொருட்டு சூனியமாவது உள்ளதும் அன்று, இல்லதும் அன்று. இரண்டு மாவதும் அன்று, வெறும் அன்றெனப்படும் பாழ். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

எடுத்துக்காட்டு

**அன்றுஅன்றுஎன நின்று அனைத்தும் விட்டுஅஞ்செழுத்தாய்**
**நின்றுஒன்று உளதன்றதுவே நீயனைத்தும் - நின்றுஇன்று**
**தர்ப்பணம் போல் காட்டலால் சார்மாயை நீயல்லை**
**தற்பரமும் அல்லை தனி.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அவ்வறிவை உடல் பொறி விடய முதலியவற்றின் வேறாகப் பிரித்துக் காணுமாறும் அதுவே உயிராமாறும் தெரிந்து உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அனைத்தும் நின்று அன்று அன்று எனவிட்டு— உடல் பொறி விடய முதலிய அனைத்தினும் அதுவது தானாக நின்று முறையானே இது நான் அன்று இது நான் அன்று என ஒரோ வொன்றாகக் கண்டு நீங்கியவழி; அஞ்செழுத்தாய் ஒன்று நின்று உளது-அவ்விடத்து அகர முதலிய சூக்கும பஞ் சாக்கர ரூபமாய் அறிந்து வந்ததோர் அறிவு நிலை பெற்று உள தன்றே; அதுவே நீ — அதுவும் நான் அன்றெனக் கழிப்பின்

அங்ஙனம் கழித்த உணர்வு வேறுண்டு எனப்பட்டு மேலும் வரம்பின்றி யோடுமாகலின் சூக்கும பஞ்சாக்கரரூபமாய் நின்று அறிந்து வந்த அவ்வறிவு தானே நீ யென்பது அறிவாயாக அற்றேல், மாயேயமும் சிவமும் உளவென்பது மேலைச் சூத்திரங்களால் சாதிக்கப்பட்டமையின், அவையே அவ்வறி வினையும் அறிந்து நீக்கும் என அமையுமாகலான், வரம்பின்றி யோடுமாறு இல்லையாலெனின், சார்மாயை அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலால் நீ அல்லை - நிலமுதலிய காரியம் அனைத்துமாய் நின்றொடு விரவி நின்று இப்பெத்த காலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கு அறிவை விளக்கி நிற்றல் மாத்திரையே யன்றி அறிவது அன்று ஆக லான் நீ அம்மாயை யல்லை; தற்பரமும் அல்லை - மாயையான் விளங்கியறியும் நீ அதற்கு அதீதமாகிய சிவமும் அல்லை; தனி- அவற்றின் வேறு எ-று.

விட்டவழி யென்பது விட்டெனத்திரிந்து நின்றது. அவ்வறி வாவது இது என்று உணர்த்துவார், **அன்று அன்று** எனநின்று **அனைத்தும் விட்டவழி** யென ஏதுப்பொருளை அனுவதித்து அஞ் செழுத்தாய் ஒன்று நின்றுளது என அடையாளம் கூறினர். பிறரெல்லாம் கூறியது கூறலென்னும் வழுப்பட மேலுமோர் இயைபின்றி யுரைத்தார். **அனைத்தும் நின்று** என்புழி, முன்னர்க் கண்ணுருபும், பின்னர் ஆக்கச்சொல்லும் தந்துரைக்க. ஏகாரம் தேற்றம். **தற்பரம்** என்றது குறிப்பேதுவாய் நின்ற பெயர்.

**"அனைத்தும் நின்று தர்ப்பணம்போல் காட்டலாம் சார்மாயை நீயல்லை, தற்பரமும் அல்லை, தனி "**என்றதனானே வருகின்ற அதி கரணங்களுக்கெல்லாம் தோற்றுவாய் செய்தவாறும் ஆயிற்று.

(நு.வி) சூனியான்மவாதி - உயிர் என்பது ஒன்றில்லை அங்ஙனம் கூறுவது வெறும் பாழ் என்னும் கொள்கையுடை யோர்.

பொறி - ஐம்பொறிகள். விடயம் - பிறபொருள்கள். அதுவே என்பதிலுள்ள ஏகாரம் சூனியத்தினின்றும் பிரித்தலின் பிரிநிலை யாயிற்று.

அதுவது தானுக - அவ்வப் பொருளும் தானுக. சூக்கும பஞ்சாக்கரம்-அகரம், உகரம், மகரம், நாதம், விந்து இவ்வாறு நின்றறியுமாறு அடுத்த நூற்பாவில் விளக்கப்படும். மாயேயம்- மாயையின் காரியமாக விளங்கும் நிலம் முதலியன. தர்ப்பணம்- கண்ணாடி. தற்பரம் - உயிர்க்கு மேலானது: சிவம்.

இவ்வெண்பாவில் அனைத்தும் நின்று என ஈரிடத்து வருகின்றன. முன்னையதில் அனைத்தின்கண்ணும் நின்று எனப்பொருள் விரித்தலின் கண்ணுருபைத் தந்துரைக்க என்றார். பின்னையது அனைத்துமாய் நின்று எனப்பொருள் விரித்தலின் ஆக்கச்சொல் தந்துரைக்க என்றார். அதுவே நீ என்றவிடத்துள்ள ஏகாரம் ஐயமறுத்தலின் தேற்றம் என்றார். தற்பரம் என்றது உயிராகிய தனக்கு மேலாய் நிற்றலின் சிவம் எனப்பட்டது. இவ்வாறு ஏதுவைக் குறிப்பாகக் கொண்டிருத்தலின் குறிப்பேதுவாய் நின்ற பெயரென்றார்.

'அனைத்தும் நின்று........நீயல்லை' என்னும் தொடர் 2, 3, 4, 5 ஆகிய அதிகரணங்கட்குத் தோற்றுவாய் ஆகும். தற்பரமும் அல்லை என்பது ஆறும் அதிகரணத்திற்கும் தனி என்பது ஏழாம் அதிகரணத்திற்கும் தோற்றுவாயாக உள்ளன.

# இரண்டாம் அதிகரணம்

## மேற்கோள்

இனி, எனது உடல் என்றலின் ஆன்மா உளது என்றது,

என்பது மேற்கோள். என்னுதலிற்றோ வெனின், அவ்வறிவு உடம்பின்கண் ணன்றி நிகழக் காணாமையானும், நான் நுணுகினேன் பருத்தேன் என உடம்பினையே நானென்று வழங்கக் காண்டலானும் உடம்பே ஆன்மா எனத் தேகான்மவாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

நான் பருத்தேன், சிறுத்தேன், கரியேன், மனிதன், பார்ப்பான் என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும், யான் உடம்பு, யான் கை, யான் கால் எனவுடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி, எனது என வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக் காண்டலின், அதுவே உயிர் வேறு உண்டு என்பதனை அறிவுறுக்கும் என அவன் வழங்கு முறையே பற்றி அவனை மறுத்தவாறு.

(பொ-ரை) என் பதி என் மனை யென்றாற்போல என் கை என் கால் என நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

என்பது பொழிப்புரை. என்னுதலிற்றோ வெனின், எனதுடலென்பது பிறிதின்கிழமைப் பொருள்படாது, தலைமாத்திரையாய் நிற்கும் இராகுவை இராகுவினது தலையென்று வழங்குமாறுபோல, அபேதம் பற்றியே வழங்கப்படுமென அமையும் என்னும் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இராகுவினது தலையென்றாற் போல்வன சிறுபான்மை வழக்கமாதலின், ஆண்டு ஒற்றுமைப் பொருள் கோடல் அமையும்; ஈண்டு, அவ்வாறன்றி, என்பதி, என்மனைவி, என்பொருள் என்று வழங்குமாறு போல என் கை, என் கால் என்கண், என் செவி, என்பொறி, என்பிராணன் என் அறிவு எனப் பலவாற்றானும் பெரும்பாலும் உலகத்து வழங்கக் காண்டலின், இவ்வழக்க மிகுதிப்பாடு பிறிதின்கிழமைப் பொருட்கண் அன்றி, வாராமையான், அங்ஙனம் கூறிக்கொண்டு நிற்கும் பொருள் வேறொன்று உண்டென்பது பெறப்படுதலின், அதுவே மேல் உரையளவை பற்றிச் சாதித்த ஆன்மா வென்றவாறும்; எனதுடலென்றலின் ஆன்மா வுளதென மேற்கொண்டதென்க.

எடுத்துக்காட்டு

**எனதுஎன்ற மாட்டின் எனதுஅலாது என்னாது**
**உனதுஅலாது உன் கைகால் யாக்கை—எனதுஎன்றும்**
**என்னறிவது என்றும் உரைத்துநீ நிற்றிகாண்**
**உன்னில்அவை வேறும் உணர்.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், பதி, மனைவி முதலிய பொருள்கள் தம்மின் வேறுதல் கண்டு பிறிதின் கிழமைப் பொருள்பட எனதென்றாற் போலன்றிக் கைகால் முதலியவற்றைத் தற்கிழமைப் பொருள்பட எனதென்று கூறி நிற்றலின், அவ்விரு வேறு மொழியும் தம்முள் ஒக்குமாறு என்னை என்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) எனது அலாது என்னாது எனது என்ற மாட்டின் - நீ உலகாயத நூல் கேட்குமுன்னெல்லாம் பதி, மனைவி முதலிய புறப் பொருளையே உயிரெனக் கொண்டு மயங்கி நின்றாயன்றே. அக்காலத்து அவற்றை எனது அன்று என வேறு காணாது தனித் தனி எனது என்றே தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல; உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவதென்றும் உரைத்து நீ நிற்றிகாண் - உனதன்றாகிய உன் கை கால் யாக்கைகளைத் தனித்தனி எனதென்றும் அங்ஙனம் அறிந்த பாசவறிவை என்னறிவதென்றும் தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு, நீ ஒரு பொருள் வேறு நிற்கின்றாய் காண்; உன்னில் அவை வேறும் உணர் - உலகாயத நூல் ஆராய்ந்த பின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்கள் உனக்கு வேறுதல் கண்டாற்போலக் கை கால் முதலியவற்றின் இயல்புகளை ஏதுக்கள் முதலியவற்றான் ஆராய்ந்து பார்த்தியாயின், அக்கை கால் முதலியன உனக்கு அன்னியமாம்; அதனை அறிவாயாக என்க.

இன், உவமவுருபு. உனதலாது என்பதனைக் கை கால் யாக்கைகளோடு தனித்தனிக் கூட்டுக.

(நு-வி) தேகான்ம வாதிகள்-உடம்பே உயிர் என்னும் கொள்கையுடையவர்கள்.

ஒன்றற்குரியதொன்றைப் பிறிதொன்றற்கு ஏற்றி உரைப்பது ஏற்றுரையாம் (உபசாரமாம்) பருத்தல் சிறுத்தல் முதலாயின உடற்குரியன. அவற்றை உயிர்க்கு ஏற்றி உரைத்தலின் ஏற்றுரையாயிற்று. யான் என்பது தன்னைக் குறிக்கும். எனது என்பது என் வீடு, என்மனைவி என வருதலின் தன்னின் வேறாய பொருளைக் குறிக்கும். எனவே என்கை, என்கால் என உடலுறுப்புக்கள் குறிக்கப்படுதலின் அவ்வுடலின் வேறாக உயிர் உண்டு என்பது பெறுதும் என்றனர்.

ஒன்பான் கோள்களில் இராகுவிற்கு உடலில்லை. தலை மட்டுமே உண்டு. எனினும் உடலிருப்பதைப் போல இராகுவினது தலை எனக் கூறுகிறோம். தலைக்கு வேறாக உடலில்லையேனும் இருப்பது போலக் கூறப்படுகின்றது. அதுபோல என்உடல் என்றவிடத்தும் உடற்கு வேறாக உயிர் இல்லையேனும் அவ்வாறு கூறப்பட்டதாம் என்பது பிறர் கருத்தாகும்.

மாட்டின்-கூறிக்கொண்டு நின்றாற்போல என உரை காண்டலின் 'இன்' உவம உருபாயிற்று, உனதலாது என்பது ஒருமையாதலால் கை கால் முதலியவற்றோடு தனித்தனியே கூட்டுக என்றார்.

## மூன்றும் அதிகரணம்

### மேற்கோள்

இனி, ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது என்றது,

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ஐம்பொறிகள் ஐம்புலன்களை யறியும் என்றல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவை உடல்போல் சடமன்மை பெறப்படுதலானும், அவற்றை எனதென்னும் வழக்கம் பெரும்பான்மையன்று ஆகலானும், அவையே உயிராதல் அமையும் என இந்திரியான்மவாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்து மூன்றுங்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) வெளிப்படை,

(பொ-ரை) ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்று அறியாமையின், இவ்வைந்தினும் ஐம்பயனும் அறிவது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

என்பது பொழிப்புரை. என்னுதலிற்றோவெனின் ஐம்புலனறிதலின் ஆன்மா ஐம்பொறியின் வேறு எனச் சாதித்தற்கு ஏதுவாமாறு யாங்ஙனம் என்னும் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வெளிப்படை.

எடுத்துக்காட்டு

**ஒன்றுஅறிந்தது ஒன்றுஅறியா தாகியுடல் மன்னி**
**அன்றும் புலனாய்அவ் வஞ்செழுத்தை—ஒன்றறிதல்**
**உள்ளதே யாகில் அதுநீ தனித்தனி கண்டு**
**உள்ளல்அவை ஒன்றல்லை ஓர்.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோவெனின், இந்திரியங்கள் ஒன்றறிந்ததை ஒன்று அறியாது என்றது ஒக்கும்; ஐந்தும் ஐந்து உயிரெனக் கோடலின், அதனான் எமக்கு ஆவதோர் இழுக்கில்லை; இனி இவ்வைந்தையுங்கொண்டு ஐம்புலனையும் ஒரு பொருளே யறியுமெனின், அதற்குப் பிரமாணங் கண்டிலம்; குடத்தைக் கண்ட யானே அதனைத் தீண்டினேன் என மறித்துணர்வு நிகழ்தல் ஐந்தும் ஒருடம்பின்கண்ணே நிலைபெறும் ஒற்றுமை பற்றி யமையும் எனக் கோடும் என்னும் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி—உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒரு விடயத்தை யறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை யறியாதாய்; அன்றும் புலனாய் அவ் வைஞ்செழுத்தை—அங்ஙனம் தம் தம்முள் மாறுபடுஞ் சத்த முதலிய புலன்களைச் சூக்கும பஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்து அறிகின்ற அவ்வைம் பொறிகளின் தொழிற்பாட்டை; அறிதல் ஒன்று உளதேயாகில்—கண் உருவத்தை யறிவது செவி ஓசையை யறிவதென்று இவ்வாறு உணர்தலையுடையதோர் பொருள் இல்லதோ உள்ளதோ என வினாயினார்க்கு இல்லதெனின் அவ்வறிவுநிகழாதாதல் வேண்டுமாகலின் உள்ளதேயாம் எனின்; அது நீ — அவ்வாறு உணர்வது யாது அதுவே நீயாகிய ஆன்மா; அவ்வாறு உணர்வனவும் அவ்விந்திரியங்களே யென்றுறப்படும் இழுக்கென்னை யெனின்,

அவை தனித்தனி கண்டு உள்ளல் - அவ்விந்திரியங்கள் தத்தம் விடயங்களை வேறு வேறு கண்டறிதன் மாத் திரையே யன்றி இத்தொழிற்பாட்டையுடையேம் யாம் எனவும் அறியமாட்டாவா கலான்: ஒன்றல்லை ஓர் — அவ்வைந்தன் தொழிற்பாட்டையும் அறிந்து அவற்றின் வரும் பயன் கொள் வதாய நீ அவற்றின் வேருவை, அதனை ஆராய்ந்து அறிவா யாக என்க.

ஆகியென்னுஞ் சிறப்புவினை ஆய் என்னும்பொதுவினையோடு முடிந்தது; ''இவளும் இவனும் சிற்றிலிழைத்தும் சிறுபறை யறைந் தும் விளையாடுப'' என்றாற்போல. ஆய் என்பது வினைத்தொகை அவ்வஞ்செழுத் தென்க, அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்செழுத் தென்ருர். அஃது இரு ம்டியாகுபெயராய் ஐம்பொறியின் தொழிற்பாட்டை யுணர்த்தி நின்றது. உள்ளல் உள்ளலா லென்க.

இம் மூன்றதிகரணங்களாலும் சாக்கிரத்தின் நிகழும் இயல்பு பற்றி ஆன்மாவின் உண்மை சாதிக்கப்பட்டது.

(நு-வி) இந்திரியான்மவாதி-ஐம்பொறிகளே உயிர் என்னும் கொள்கையுடையார்.

சடம் அன்மை - அறிவற்றது என்று

சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் - ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்.

குடத்தைக் கண்ட யானே அதனைத் தீண்டினேன் என்ற தனுல் காண்டல், தீண்டல் ஆகிய ஈரிடத்தும் யான் என்னும் உணர்வு தொடர்ச்சியாய் நிகழ்தல்பற்றி ஐம்பொறிகளின் துணையைக்கொண்டு அறியும் உயிரும், அவற்றின் வேருகும் என்றல் சாலாது. ஐம்பொறிகளும் ஓர் உடம்பின் கண்ணே நிலைபெற்றிருத்தலின் அவ்வாறு உணரும் உணர்ச்சி ஏற்படுகிறது அன்றி இவற்றின்வேருய் உயிர் என்பது ஒன்றில்லை என்பது பிறர் கொள்கை.

அன்றும் புலன் - மாறுபடும் புலன்.

ஆகி என்றது ஒரு பொருளுக்குரிய வினையாதலின் சிறப்பு வினையாயிற்று. ஆய் என்பது ஐம்புலனின் வினையாதலின் பொது வினையாயிற்று. சிற்றிலிழைத்தலும் சிறுபறையறைதலும் முறையே பெண்ணுக்கும் ஆணுக்கும் உரியவாதலின் அவை சிறப்பு வினை யாம். இவ்வினைகள் ஆண்பெண் இருபாற்குமுரிய விளையாடுப என்னும் பொதுவினையோடு முடிந்தாற்போல், ஈண்டும் முடிந்த தென்ருர். ஆய் என்பது-ஆராய்ந்தறிகின்ற என உரைகண்ட மையின் வினைத்தொகை யென்ருர். இருமடியாகுபெயர் - ஒரு சொல்லின் ஆகுபெயராக நிற்பது, பிறிதொரு ஆகுபெயர்ப்

பொருளையும் உணர்த்தி நிற்றலாம். அஞ்செழுத்து என்றது ஆகுபெயராய் ஐம்பொறிகளைக் குறித்தது. அதுவே மீண்டும் அவற்றின் தொழிற்பாட்டை ஆகுபெயரால் குறித்தது.

சாக்கிரத்தில் நிகழும் இயல்பு - நனவுடன் விழுப்புநிலையில் நிகழும் நிகழ்ச்சி.

## நான்காம் அதிகரணம்

*இனி, ஒடுக்கம் அறிதலின் ஆன்மாவுள தென்றது*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், "நேசவிந்தி ரியங்கட்கு நிகழறிவு இதனாற் காண்டும்" என நீவிருங் கோட லின், அவ்விந்திரியங்களின் வேறாய் அங்ஙனம் அறிவது புரியட் டக வுடம்பேயாமென அமையும்; அது புறத்து நிகழாதாயினும், அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி அறியு மெனக் கோடும் எனச் சூக்கும தேகான்ம வாதிகள் கூறுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நாலாங்கூற்றைக் கண் ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) ஐம்பொறிகளும் ஒடுங்கின சொப்பனத் தானத்தின் நிகழ்ந்தவற்றை யறிதலின், ஆன்மா வேறுண்டு எ-று

ஒடுக்கம், ஆகுபெயர்.

(பொ-ரை) நனவின்கட் கனவு கண்டாம் என்றும் கண்டிலம் என்றும் நிற்பது உளதாகலின் அதுவே ஆன்மாவாம் என்றது.

என்பது பொழிப்புரை, என்நுதலிற்றோ வெனின், சொப்பனத் தின் நிகழ்ந்தவற்றை அறிவதும் சூக்கும தேகமே யாகலின், இது சித்தசாதனமாமால் என்னுங் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

இஃது என் சொல்லியவாறோ எனின், ஒடுக்கமறிதலின் என்றது ஒடுக்கத்தின் நிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கி யறிதல் என்னும் பொருட்டாதலாற் சித்தசாதனமாதல் யாண் டையது என விடுத்தவாறு என்பது.

கனவு கண்ட சூக்கும வுடம்பே நனவின்கண் அதனை யறியுமாயின் கண்டபடி யறியாது மயங்கி யறிதல் கூடாமை யின், உயிர்க்காயின் அதுபோல் ஒரு தன்மைத் தாதலின்றி

அகத்துச் சேறலும்புறத்துச் சேறலுமாகிய வேறுபாடுண்மையான், அதுபற்றி மயங்கியறிதல் கூடுமாகலின் அங்ஙனம் அறியும் உயிர் வேறுண்டென்பது கண்டுகொள்க.

எடுத்துக்காட்டு

**அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாம்கிடப்பச்**
**செவ்விதின் அவ்வுடலிற் சென்றடங்கி—அவ்வுடலின்**
**வேறென்று கொண்டு விளையாடி மீண்டதனை**
**மாறல்உடல் நீயல்லை மற்று.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், கனவின்கட் செல்லுமாறும் ஆண்டு நிகழுமாறும் மீளவருமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ – ள்) அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாம் கிடப்ப – மேல் உயிரன்று எனக் கூறிப் போந்த தூலவுடம்பி னின்று உயிர்ப்பனவாய ஐம்பொறிகள் ஆண்டே உயிர்ப் பொழிந்து கிடப்ப; அடங்கி அவ்வுடலில் செவ்விதின் சென்று– அவை அங்ஙனங் கிடந்த வழிப்புறத்து நிகழுந் தொழிற் பாடெல்லாம் அடங்கி அவ்வுடம்பினுள்ளால் வருத்தமின்றிச் சென்று; அவ்வுடலின் வேறென்று கொண்டு விளையாடி – அத் தூல வுடம்பு போல அதனின் வேறாய தோருடம்பை யெடுத்துக் கொண்டு வேறோர் ஆற்றால் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி மீண்டு அதனைமாறல் – மீளவதனை மாறி மேற் சேறலான்; நீ உடல் அல்லை–நீஅச்சூக்குமதேகமல்லை. அதனின் வேறுகுவை எ – று.

உயிர்ப்ப யென்றது அன் பெறாத அகரவீற்றுப் பலவறி சொல், உயிர்த்தல், தொழிற்படுதல். தாமும் மற்றும் அசை. மீண்டு, மீளமாறல், மாறலான் என்க. மற்று, வினைமாற்று.

இவ்வதிகரணத்தால் சொப்பனத்தின் நிகழும் இயல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

(நு – வி) சூக்கும தேகான்மவாதி – நுண்ணுடம்பே உயிர் என் னும் கொள்கையுடையவர். நேச இந்திரியங்கட்கு – விரும்பப் பெற்ற ஐம்பொறிகட்கு. நிகழ்அறிவு இதனால் காண்டும் – உண் டாகும் பொருளறிவு இத்தன்மாத்திரைகளால் ஆம் என்பது இதன் பொருளாம், புரியட்டக உடம்பு–சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், மனம், புத்தி. அகங்காரம் ஆகிய எட்டும் கூடியதாம்.

இதனை நுண்ணுடம்பு என்பர். இதுவே உயிர் என்பார் சூக்கும தேகான்மவாதிகள். ஒடுக்கம் - ஐம்பொறிகளும் ஒடுங்கிய கனவுநிலை. ஈண்டு ஒடுக்கம் என்பது அதன்கண் நிகழ்ந்த வற்றைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று.

சித்த சாதனம்-ஒரு கருத்தை மறுத்தற்கு எழுந்த பொருளையே எடுத்து ஓதி அதனால் தாம் கொண்ட கருத்தைச் சாதிப்பதாகும். ஈண்டு மறுத்தற்கு எழுந்த பொருள் நுண்ணுடம்பு உயிர் அன்று என்பது. அந்நுண்ணுடம்பு கனவு நிலையில் அறிதலின் அது கொண்டு அவ்வாறு அறிகின்ற நுண்ணுடம்பே உயிரன்று என்றல் எங்ஙனம் என்பது பிறர் வினாவாகும். ஒடுக்கம் அறிதலின் - (உயிர்) கனவின்கண் அறிந்தவற்றை நனவின்கண் மயங்கி அறிதலின் என்பது இதன் பொருளாகும். உயிர் நுண்ணுடம்போடு கூடிக் கனவுகாணும் நனவு நிலையில் பருவுடம்பைப்பற்றி யிருப்பினும் அதனைமயங்கி அறியும். நுண்ணுடம்பே உயிராயின் கனவின்கண் கண்டவற்றை நனவில் மயங்கி அறியவேண்டுவதில்லை. ஆதலின் நுண்ணுடம்பினும் உயிர் வேறாம். அகத்துச் சேறல் - புறக்கருவிகளை விடுத்து அகக்கருவிகளுடனேயே கனவுநிலை எய்தல். புறத்துச் சேறல் அகக்கருவிகளுடனன்றி புறக் கருவிகளையும் கொண்டு நனவு நிலையை அடைதல்.

அதனின் வேறாயதோர் உடம்பு-பருவுடம்பின் வேறாய நுண்ணுடம்பு. விளையாடி - இன்பதுன்ப நுகர்வுகளைப் பெற்று. உயிர்ப்ப - உயிர்ப்பன; அன்பெறுமையின் அகர ஈற்றுப் பலவறிசொல் என்றார். நுண்ணுடம்பினால் நுகர்வு பெற்ற உயிர் அதனின்றும் மீண்டு பருவுடம்பிற்கு வருதலைக் குறித்தலின் மற்று வினைமாற்று ஆயிற்று.

## ஐந்தாம் அதிகரணம்

இனி, கண்படில் உண்டின்வினையின்மையின் ஆன்மா உளதென்றது.

என்பது மேற்கோள்: என்நுதலிற்றோ வெனின், சொப்பனத்தான மாத்திரையி னன்றித் தொழிற்படாத சூக்கும தேகம் போலன்றிச் சுழுத்தி துரியங்களினும் தொழிற்படுவதாய பிராண வாயுவே அடங்குதல் விடுதல் செய்து அறிவதாகிய ஆன்மாவாதல் அமையும் எனப்பிராணான்ம வாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஐந்தாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

உண்டிவினை, உம்மைத்தொகை. அஃது 'உண்டியும் வினையும் இன்றிக் கிடந்து' (சிவ-சித்தி-4-30) என வழி நூலாசிரியர் கூறியவாற்றானும் உணர்க.

(பொ-ரை) ஒடுங்கினவிடத்து இன்பத் துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கு இன்மையின், ஒடுங்காதவிடத்து இன்பம் துன்பம் சீவியா நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

என்பது பொழிப்புரை. என் நுதலிற்றோ வெனின், கண்படை கொண்டவழி உண்டிவினையில்லை யென்றது உடற்கோ? பிராண வாயுவுக்கோ? என வினவினர்க்கு உடம்பு உயிரன்மையான் அதற்கு அவை இல்லாமை பற்றி ஈண்டைக்கு ஆவதோர் இழுக்கில்லை; இனிப் பிராணவாயுவுக்கு எனின், அது துயின்றெழுந்த பின்னர்ச் சுகமாகத் துயின்றேன் என்று அறிதல் பிறிதோராற்றால் பெறப்படாது என்னும் அருத்தாபத்தியான், ஆண்டும் இன்ப நுகர்ச்சி உண்டென்பது பெற்றாம்; விழித்துழிப்போல உறங்குழியும் பிராணவாயு இயங்குதலான், வினையுண்மையும் கண்டாமாகலின், அதற்கு அவை ஆண்டு இல்லை யென்றல் மாறுகோள் போலும் என்னுங் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஈண்டு உண்டியென்றது விடயங்களின் இடமாக வரும் இன்பத்துன்ப நுகர்ச்சியை; வினையென்றது உடம்பு சேட்டித்தலையாகலின்; இவையிரண்டும் பிராணவாயுவை யொழித்து ஒழிந்த கருவிகளெல்லாம் ஒடுங்கிய துயிலிடத்து அஃதியங்கா நிற்பவும், உடம்பின்கண்ணே நிகழ்தலின்மையின், அவை யொடுங்காத நனவினிடத்து அவையிரண்டும் அதன்கண் நிகழ்தலுண்மையின், அவ்வின்மை யுண்மைகட் கேதுவாகக் கருவிகளை யொடுக்கியும் ஒடுக்காதும் நிற்பது யாது அதுவே அவ்வான்மா என்றவாறாம். கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மாவுளதென மேற்கொண்டது எ-று.

பிராணவாயுவை யொழித்து ஒழிந்த கருவிகளென்பது ஆற்றலான் வந்தது. இன்பத் துன்ப நுகர்ச்சியை இன்பத் துன்பமென்று உபசரித்தார். சீவனம், சீவித்தல்; சேட்டித்தலென்றவாறாம். செவ்வெண்தொகை விகாரத்தால் தொக்கது. சீவியாநிற்பதென்பது, சீவியாநிற்ற லென்னுந் தொழிற்பெயர் மாத்திரையாய் நின்றது; "உறங்குவதுபோலும்" என்புழிப்போல. உளதென்றது, தனித்தனி சென்றியையும்.

துயின்றுழியும் விழித்துழியும் திரிபின்றி ஒரு தன்மைத்தாதல் பற்றி உடம்பு பிரகிருதியெனப்பட்டது. பிரகிருதிக்கென்றது உருபு மயக்கம்.

இரண்டு காலத்தும் ஒப்ப இயங்குதல் பற்றிப் பிராணவாயுவைப் பிரகிருதியெனக் கொண்டு அதற்கு அவையின்மையின் என்றுரைப்பாரும், பிரகிருதி விகாரமாகிய சித்தத்திற்கு அவை இன்மையின் எனவுரைத்துச் சுழுத்தியின்கண்ணுந் தொழிற்படுவ தாய சித்தமே உயிர் என்னுஞ் சித்தான்ம வாதிகளை மறுத்தற்கு எழுந்தது இவ்வதிகரணமென் றுரைப்பாரும் உளர்.

## எடுத்துக்காட்டு

**கண்டறியும் இவ்வுடலே காட்டுஒடுங்கக் காணுதே**
**உண்டிவினை யின்றி உயிர்த்தலால்—கண்டறியும்**
**உள்ளம்வே றுண்டாய் ஒடுங்காது உடல்நண்ணில்**
**உள்ளதாம் உண்டிவினை ஊன்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், துயிலிடத்துக் கருவிகளெல்லாம் ஒடுங்குதலின் இன்பத் துன்ப நுகர்ச்சியும் சேட்டையும் பிரகிருதிக்கு இல்லையாயினவாகலான், அதுபற்றிப் பிராணவாயுவை ஆன்மா என்றற்கு இழுக்கென்னை யென்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) கண்டறியும் இவ்வுடலே—கண்டறிதற்கு நிலைக்கள மான இவ்வுடம்பின் கண்ணே, காட்டுக் காணுதே ஒடுங்க-காட்டாய கருவிகள் தொழிற்படாதே ஒடுங்கவும்; உண்டி வினையின்றி —அவை ஒடுங்கியவழி உண்டியும் வினையும் பிரகிருதிக் கில்லையாகவும்; உயிர்த்தலால் —பிராணவாயு நிலைபெற்று இயங்கு தலான்; கண்டறியும் உள்ளம் வேறு உண்டு—கண்டறியும் உரிமையுடைய உயிர் பிராணவாயுவின் வேருயுண்டு; ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டிவினை உள்ளதாம்-அவ்வுயிர் ஒடுங்காது அவ்வுடலின்கண் எய்திற்றுயின் அவ்வுடம்பு கருவி களின் தொழிற் பாட்டானுய உண்டியும் வினையும் உடைத்தாம்; ஆய்-அதனையாராய்ந்தறிவாயாக எ-று.

இஃது அருத்தாபத்தியளவை.

கண்டறிதல், ஒரு பொருட் பன்மொழி. இன்றியென்பது வினைக்குறிப்புச் செயவெனெச்சத்திரிபு. சிறப்பும்மைகள் தொக்கன. அவை 'அறிந்திடாது உடல்உறக்கத்து அறிவின்மை கரண மின்மை, அறிந்திடு முதலியாகின் அதுநிற்கக் கரணம் போகாது', (சிவ-சித்தி 3;4) 'என்னும் பொருள் விளைத்துநின்றன.

ஊன், ஆகுபெயர். உயிர் வேறுண்டு என்றதனை வலியுறுத்துவார் உடம்பாட்டு முகத்தானும் ஓதினர்.

இவ்வதிகரணத்தானே சுழுத்தி துரியங்களின் இயல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறுஞ் ''சார்மாயை நீயல்லை'' என்றதனை வலியுறுத்தவாறு.

(நு-வி) பிராணன்மவாதி-உயிர்க்காற்றே உயிர் என்னும் கொள்கையுடையார். சொப்பனத்தான மாத்திரையினன்றி-கனவு நிலையில் மட்டும் இருப்பதன்றி. சுழுத்தி-உறக்கம், துரியம்-பேருறக்கம்.

உண்டி-சுவை ஒளி முதலியவற்றின் வழியாய் வரும் இன்ப துன்ப நுகர்வு. வினை-(உடம்பு) தொழிற்படுதல். உண்டியும் வினையும் என விரிதலின் உம்மைத்தொகையாயிற்று என்றார். வழி நூலாசிரியர்-அருணந்தி சிவாச்சாரியர்.

சீவனம்-தொழிற்படுதல். பிரகிருதிக்கு-உடம்பிற்கு. கண்படை- துயிலல். இன்பம் துன்பம் என்றவிடத்து உம்மை பெருமையின் செவ்வெண் என்றார். செவ்வெண் தொகைபெற்றல்லது நில்லாமையின் உரையில் இரண்டும் எனத்தொகை கொடுத்து விரித்தார். பிரகிருதிக்கு-உடம்பின்கண்: நான்கனுருபு ஏழன் பொருள்பட நின்றது. ஆதலின் உருபு மயக்கமாயிற்று.

இரண்டு காலத்தும்-நனவு, கனவு ஆகிய இரண்டு காலத்தும் இவ்விரு காலத்தும் உயிர்க் காற்று ஒரு தன்மையாக இயங்குதலின் உயிர்க்காற்றே பிரகிருதி எனக் கொண்டு அவ்வுயிர்க் காற்றுக்கு உறக்கத்தில் இன்பமும், துன்பமும், இயங்கலும் இல்லாமையின் அது உயிர் அன்று என உரைப்பாருமுளர் பிரகிருதி-உடம்பு. ஈண்டு அதன் விகாரமாகிய சித்தத்தைக் குறிப்பதாகக் கொண்டு உறக்கத்தின் கண்ணும் தொழிற்படுவதாகிய அச்சித்தத்திற்கு உறக்கத்தில் அவ்விரண்டும் இன்மையின் சித்தம் உயிராகாது என்பாருமுளர்.

பிரகிருதி என்பதற்கு உயிர்க் காற்றையும் சித்தத்தையும் பொருளாகக்கோடல்பொருந்துமேனும் பேருறக்கத்தில்சித்தமும், உயிர்ப்படங்கலில் உயிர்க் காற்றும் இன்மையின் அவ்வாறு கோடல் பொருந்தாது என்பது கருத்து.

சேட்டையும்-தொழிற்படுவதும். அருத்தாபத்தி- இங்ஙனம் அன்றாயின் இது கூடாது என்று உணர்வது. ஒன்று கூற அதற்கு

மறுதலைப் பொருள் கோடலையும் அருத்தாபத்தி என்பர். உயிர் ஒடுங்கியவிடத்து உடல் நுகர்தலும் இயங்கலும் இன்று. எனவே உயிர் ஒடுங்காவிடத்து அவை உண்டெனப் பெறப்படுதலின் அருத்தாபத்தி ஆயிற்று.

காண்டலும் அறிதலும் ஆகிய இரு சொற்களும் ஒரு பொருளையே குறித்து நிற்றலின் ஒரு பொருட்பன்மொழியாயிற்று.

இன்றி—இல்லையாக எனப் பொருள்படுதலின் செயவெனெச்சத் திரிபு என்றார். ஒடுங்க, இன்றி என்ற இடங்களில் உம்மை விரித்துரைத்தலின் அச்சிறப்பு உம்மைகள் தொக்கன என்றார்.

உடல் உறக்கத்தறிந்திடாது—உடம்பு உறங்கும் இடத்து அவ்வுயிர்க் காற்று இயங்கினும் அது நுகர்தற்குரிய பொருளை அறியமாட்டாது. அறிவு இன்மை கரணமின்மை—அவ்வறிவின் மைக்குக் காரணம் கருவிகள் தொழிற்படாமையென்று சொல்லின்; அறிந்திடும் முதலியாகின்—அவ்வுயிக் காற்றே அறியும் முதன்மை வுயுடையதாயின், அது நிற்கக்கரணம் போகா—உறக்கத்தில் அவ் வுயிர்க்காற்றுத் தொழிற்பட்டு நிற்க அக்கருவிகள் தொழிற்படாது நீங்கா என்பது இங்குக் காட்டப்பட்டிருக்கும் மேற்கோள் பகுதியின் பொருளாகும்.

ஊன்—அதனையுடைய உடம்பிற்கு ஆயினமையின் ஆகுபெயு ராயிற்று. உண்டி வினையின்மையின் என எதிர்மறை முகத்தால் கூறியவர் பின் உண்டி வினை உள்ளதாம் என உடன்பாட்டு முகத்தானும் ஓதியது உயிர்க்காற்றினும் வேறாக உடல் உண்டு என்பதை வலியுறுத்தற்காம்.

சார்மாயை நீயல்லை—உன்னால் பொருத்தப்பட்ட மாயை யானது உனக்குள்ள அறிவை விளக்குதற்குக் கருவியாகுவதன்றி நீ அம்மாயையயல்ல.

## ஆறும் அதிகரணம்

*இனி, உணர்த்த வுணர்தலின் ஆன்மா வுளதென்றது,*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின் பிரமப் பொருள் மேற்கூறிப் போந்த சடப்பொருள்கள் போலன்றிச் சித்தாகலான், அதுவே உயிராதல் அமையும் என விஞ்ஞான்ம வாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஆறுங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ – ள்) தொழிற்படுங் கருவிகள் ஒன்றும் இன்றிக் கேவலமாய் அதீதாவத்தையில் நின்றுழி அறியுமாறின்றிப் பின்னர்க் கலை முதலிய கருவிகளால் அறிவிக்க அறிந்துவருதல் உண்மையின் எக்காலத்தும் திரிபின்றி அறிந்தாங்கு அறிந்துநிற்கும் சித்தாகிய பிரமத்திற்கு இது தகாமையான் அங்ஙனம் உணரும் ஆன்மா வேறுண்டு எ–று.

உணர்த்த உணர்தலெனவே, முன் உணராதுகிடத்தல்பெற்றும்.

(பொ – ரை) அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

என்பது பொழிப்புரை. என்னுதலிற்றோ வெனின், அறிந் தாங்கறிவதாகிய பிரமப்பொருள் அவிச்சைக் காலத்துக் கருவிகளோடுங் கூடியன்றி அறியாதெனக் கோடுமாகலின், அது பற்றி உயிர் வேறுண்டென்றல் பொருந்தாது என்னும் கடாவை ஆசங்கித்து அவ்வளவில் அவன் மகிழுக என்னும் நியாயத்தால் மேலும் அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ – ள்) கருவிகளோடு கூடிய வழியும் தன்னியல்பு உணருமாறில்லாத ஆன்மாவைப் போல அம்முதல்வன் மறந்து மறந்தறிதலன்றி அறிந்தவாறே யறிந்து நிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களான் அறிவிக்க அறிந்து, குரவன் அறிவுறுக்கும் உபதேச மொழியைப் பெற்றுடையிதாய் நிற்பதொன்றுளதாகலின், அதுவே மேல் உரையளவையாற் சாதித்துப் போந்த ஆன்மா வென்றவாறும்; உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதெள மேற்கொண்டது, எ–று.

அறிந்தாங்கென்பது அப்பொருட்டாதல் "எண்ணிய வெண்ணியாங் கெய்துப" என்பதனுனுமறிக. இதற்குப் பிற வாறும் உரைப்ப; அவையெல்லாம் ஈண்டைக்குப் பொருந் தாமை ஓர்ந்துணர்க.

எடுத்துக்காட்டு

**அறிந்தும் அறிவதே யாயும் அறியாது**
**அறிந்ததையும் விட்டுஅங்கு அடங்கி-யறிந்தது**
**எதுஅறியும் அன்றுகும் மெய்கண்டான் ஒன்றின்**
**அதுவதுதா னென்னு மகம்.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், கருவிகளோடு கூடிய வழியும் அவிச்சை நீங்காமையின் விடயங்கண் மாத்திரையே அறியுமன்றித் தன்னியல்பு அறியுமாறில்லை; அஃது உபதேசத்தால் அறியற்பாலதேயாமாகலான், அது பற்றி யிழுக்கென்னை என்னும் கடாவை ஆசங்கித்து, அதனையும் மேற்கூறிய நியாயத்தான் உடம்பட்டு இன்னுமொரு தாற்பரியம்

உரைக்கு முகத்தானே விடயங்களையறிவுழியும் படும் வேறுபாடு கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று; அவன் அறிந்தாகறியுமாறும் உயிர் மறந்து மறந்து அறியுமாறும் தெரித்துணர்த்தி வலியுறுத்துதல் நுதலிற்றெனினும் அமையும்.

(இ - ள்) அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது - கருவிகளெல்லாவற்ருெடும் கூடிச் சாக்கிரத் தானத்தினின்று விடயங்களை யறியுமிடத்தும் ஒருங்கே யறியமாட்டாது ஒன்றனையே யறிந்தும் ஒன்றனையறியப் புகுவதாயும் முன்னறிந்த தொன்றனை அறியாதொழிந்தும்; அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி -இங்ஙனம் ஒரோவொன்ருக அறியப்பட்ட விடயத்தையும் இடையீடின்றி யறியமாட்டாது விட்டு விட்டு ஆங்கே ஐந்தவத்தைப் பட்டு அடங்கி; அறிந்தது எது - மீளவறிந்து வருதல் கண்கூடாகக் காணப்படுதலான் அங்ஙனம் அறிந்து வந்த பொருள் யாது அது சடமன்று என்பது மேற்காட்டப்பட்டது, முன்னரும் காட்டப்படும்; அறிவும் அன்று -ஒன்ருக இயல்பாக உணர்தலே பேரறிவாகலின் அதுவும் அன்ரும்; மெய் கண்டான் ஒன்றின்-இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினை யுணர்ந்தோன் வேறென்னையோவென மனம் ஒருங்கி ஆராயுமாயின். அது அது தான் என்னும் அகம் ஆகும் - காட்டும் ஒளிக்கு வேருய கண்ணொளிபோல அவ்வறிவிற்கு வேருய் அது வதுவே தானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியும் இயல்பையுடைய வுயிராம் எ-று.

அறிந்தும் அறிவதேயாயும் என்னும் உம்மைகள் எண்ணின் கண் வந்தன. அறியாதும் என்னும் எண்ணும்மை விகாரத்தாற் ருெக்கது. அறிந்ததையும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. அறிவும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது. ஏகாரம் அசைநிலை.

அங்கு, உணர்த்து முறைமைத் தானமாகிய இலாடத்தின் என்றவாறு. அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி யறியுமாறு வருகின்ற சூத்திரத் திறுதியினும் (சூத் - 4. அதி - 3. வெண்பா அதுவது தானெனச் சார்ந்ததன் வண்ணமாமாறு உண்மை யதிகாரத்தும் (சூத் - 7: அதி. 3) பெறப்படும்.

அறிந்தும் அறிவதேயாயும் அறியாது அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி யறிந்தது எது என்பதற்கு ஓதியதனை ஓதிய பொழுதே யுணர்ந்தும், பலகால் ஓதியுணர்வதாயும், பலகால் ஓதியும் உணர்தலின்றியும், உணர்ந்ததனையும் பின்னர் மறந்தொழிந்தும், இவ்வாறு ஓதியுணர்ந்தது யாது என்று உரைத்தலும் ஒன்று. இப்பொருட்கு அடங்கி யென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப் படுத்துரைப்பவே, உணர்த்த வுணர்தல் என்னும் ஏதுவான், முறையே அதீதத்தின்கண் நிகழுமியல்பு பற்றியும் சுத்தத்தின்கண் நிகழும் இயல்பு பற்றியும், உணர்த்து முறைமைக் கண் நிகழும் இயல்பு பற்றியும், உயிருண்மை சாதிக்கப்பட்டது. இது "தற்பரமுமல்லை" என்றதனை வலியுறுத் தவாறு காண்க.

விஞ்ஞானமே ஆன்மா வென்னும் புத்தரின் யோகசாரன் மதத்தை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணம் எனக்கொண்டு அதற்கு இயையவுரைப்பாருமுளர்.

(நு-வி) விஞ்ஞானன்மவாதி-பிரமமே உயிர் எனும் கொள்கை யுடையார். வி-மேலான, ஞானம்-அறிவு, அறிவாக விளங்கும் பிரமத்தைக் குறித்தது. பிரமப்பொருள் - இறைவன். சடப் பொருள்கள்-அறிவற்ற பொருள்கள். சித்தாகலான்-அறிவுடைய தாகலான்.

கேவலமாய்-கருவிகளின்றி உயிர் ஆணவத்தோடு கட்டுண்டு நிற்பதாய். அதீதாவத்தையில்-மூலாதாரத்தில் உயிர்ப்படங்கிய நிலையில். கலை முதலிய கருவிகள்-கலை வித்தை அராகம் முதலிய கருவிகள்.

அறிந்தாங்கு அறிவன்-அறிந்தவாறே அறிவன்: ஒவ்வொன் றுகவோ அன்றி, ஒருவன் உணர்த்த உணர்ந்தோ அறிவதன்றி ஒருபடித்தாக எஞ்ஞான்றும் அறிந்தவன் என்பதாம். அறிந்தாங்கு என்பது' எண்ணிய யெண்ணியாங்கு' என்பது போல வந்தது.

அவிச்சைக் காலத்து-அறியாமையோடு கூடிய காலத்து. குரவன்-அருளாசான். உரையளவை-ஆகம அளவை.

விடயங்கள்-பொருள்கள்.

மனம் ஒருங்கி-ஒரு முகமாக மனம் ஒன்றி.

அறிவும் அன்று என்பது முற்கூறிப்போந்த சடமும் அன்று என இறந்தது தழீஇ நின்றது.

இலாடத்தின்-நெற்றியில்.

மூவகைப் படுத்து உரைத்தல்: மூவகையாகப் பொருளுரைத்தல். (1) கலை முதலிய கருவிகளால் அறிவிக்க அறிதல் (2) கருவிகளோடு கூடிய வழியும் இறைவனை வேத ஆகமங்களினுலும் ஆசிரியனுலும் அறிவிக்க அறிதல். (3) நனவின் கண் கருவிகளோடு கூடி அறியும் போதும் ஒவ்வொன்ருக மறந்து மறந்து அறிதல். கலை முதலிய கருவிகளால் அறிவிக்க அறியும், எனவே அக்கருவிகளோடு கூடாத உயிர்ப்படங்கிய

நிலையில் (துரியாதீத நிலையில்) அறிவு நிகழாது என்பது பெறு கின்றது. உயிர் இறைவனை அடைதற்கு முயலும் நிலை தூய நிலை (சுத்தம்) ஆகும். இந்நிலையிலும் வேத ஆகமங்களும் அருள சானும் இன்றி உணர இயலாது என்பதால் அந்நிலையிலும் உயிரியல்பு இன்னதென விளங்கும். நனவின்கண் கருவிகளோடு கூடி நின்ற வழியும் ஒவ்வொன்ருக உணர்த்தவே உணர்வு நிகழும் என்றமையால் அந்நிலையிலும் உயிரின் உண்மை விளங்கும். தற்பரமும்-(உயிராகிய) தனக்கு மேலாய பொருளும்: பிரமம்.

## ஏழாம் அதிகரணம்

### மேற்கோள்

இனி, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மாவுளதென்றது,

என்பது மேற்கோள். என்நுதலிற்ருே வெனின், உடம்பு முதலியவற்றுள் ஒரோவொன்றே ஆன்மாவாதல் இன்று என்றது ஒக்கும்; அவற்றுள் ஒன்று குறைந்த வழியும் அறிவு நிகழாமை யானும், எல்லாங்கூடிய வழி அது நிகழ்தலானும் அனைத்துங் கூடிய சமுதாயமே உயிராதல் அமையும் எனச் சமுகான்மவாதிக ளாகிய சௌத்திராந்திகர் வைபாடிகர் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) மாயா காரியங்களான் யாக்கப்பட்டு இயன்ற சூத்திரப்பாவை போலும் உடம்பின்கண்ணே அவற்றிற்கு வேருய் ஆன்மாவுண்டு எ-று.

எனவே, அவையெல்லாம் மாயையின் காரியங்களாய் நிலை பெறுதன வாகலின் நிலைபே றுடைய உயிராகா என்றவாருயிற்று.

மாயை, ஆகுபெயர். இகரம், விரித்தல் விகாரம்.

### ஏது

அவை தாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்,

என்பது ஏது. என்நுதலிற்ருே வெனின், சித்தமும் சித்தப் பகுதியுமாகிய அகச்சமுதாயம் ஐந்தும் மாயா காரியம் என்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின், அதுபற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தல் அமையுமாறு என்னை என்னும் கடாவை ஆசங்கித்து "அவ்வளவில் அவன் மகிழுக" என்னும் நியாயம் பற்றி வேறும் ஓர் ஆற்றல் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) நீ ஐந்து கந்தமெனக் கொண்ட மாயா காரியங்கள் ஆன்மாவெனப் பெயர்பெறுமாறு இன்றி வேறு வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான், மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா வுளது என மேற்கொண்டது எ-று.

வேறு வேறென்பது வெவ்வேறென மரீஇயிற்று.

எடுத்துக்காட்டு

**கலையாதி மண்அந்தம் காணில்அவை மாயை**
**நிலையாவாம் தீபமே போல—அலையாமல்**
**ஞானத்தை முன்உணர்ந்து நாடில்அது தனுவாம்**
**தான் அத்தின் வேறுகுந் தான்.**

என்பது உதாரணம் என்நுதலிற்றோ வெனின், அவை தனித் தனி வெவ்வேறு பெயர் பெறினும், தொக்க சமுதாயத்தின்கண் ஆன்மாவெனப் பெயர் பெறுமெனக் கோடுமாகலின், அதுபற்றி இழுக்கென்னை யென்னுங் கடாவை ஆசங்கித்து, அவை வெவ்வேறு பெயர் பெறும் வழியும் அவர் கூறியவாறு பெயர் பெறுது, வேறு பெயர் பெறுமாறும், அவை மாயா காரியங்களே யாமாறும், அவை தொக்க சமுதாயத்தினும் ஆன்மாவெனப் பெயர் பெறுது வேறு பெயர் பெறுமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) காணின் கலையாதி மண் அந்தம்-அங்ஙனம் சமுதாய மாதற்குரியவை யாவை யென்று அளவைகளான் அறியப்புகின் கலை முதல் நிலமீறுகிய தத்துவங்களேயாம்; அவை மாயை நிலையாவாம்—அவையனைத்தும் மாயையின் காரியங்களாகலின் நிலையுதலின்றிச் சிலகாலம் நின்று அழிவனவாம்; ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில்-அவை தொக்க சமுதாயத்தின் விளங்கித் தோன்றுவதாய ஞானத்தின் இயல்பை அசையாமல் கருத்தை ஒருக்கி முன்னுணர்ந்து, பின் அச்சமுதாயத்தை யாதென்று ஆராயின்; அது தீபமே போலத் தனுவாம்—அச் சமுதாயம் கண்ணுக்கு விளக்குப்போல உயிருக்குத் தூல சூக்கும பரங்களாகிய உடம்பாம்; தான் அத்தின் வேறுகும் தான்—ஆதலால், கண் விளக்கின் வேறுயினுற்போல உயிர் அவ்வுடம்பின் வேறும் எ-று.

ஆமென்ப மேலுஞ் சென்றியையும், மாயை, ஆகுபெயர்து. தான் என்பது முன்னையது எழுவாய், பின்னையது அசை. அதனின் என் பது அத்தினென மரீஇயிற்று; ''இத்தை மெய்யெனக் கருதி'' (திருவா-அதிசயப்பத்து) என்புழிப் போல.

இதனானே 'தனி'(3வது நுற்பா;முதல் அதிகரணம்-வெண்பா) யென்றதனை வலியுறுத்தவாறு.

இவ்வாறு மூன்று சூத்திரத்தானும் சைவாகமங்களுட் கூறப் படும் பதி முதலிய பொருள்களது உண்மை அனுமான அளவை யான் வலியுறுத்தப்பட்டது. ஆகமவளவையே அமையுமாகலின் அனுமான அளவை மிகையாம்போலும் எனின், ஆகாது; மந்த வுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச்சமய நூல்களை நோக்கிய வழிச் சைவாகமப் பொருளில் மலைவு நிகழாமைப் பொருட்டும், கேட்டல் சித்தித்தல் தெளிதல் நிட்டை யென்னும் நான்கு வகை யானன்றி, ஆகமங்களைக் கேட்ட துணையானே அனுபவம் கூடாமையின்,சிந்தனை செய்து வன்மை மென்மைகளை உணர்ந்து தெளிந்து கோடற்பொருட்டும் கருதலளவையும் வேண்டப் படுமாகலான் என்க.

(நு-வி) சமுதாயம்—கூட்டம். மாயை; ஈண்டு அதன் காரியங்களைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று. காரியம்—உடல், உலகு, கருவி முதலாயின.மாயா,யந்திரம் என்பன வடசொற்கள் ''யவ்விற்கு இய்யும் மொழி முதலாகி முன்வருமே'' (நன் 148) என்னும் விதியால் இகரம் விரிக்கப்பட்டு மாயா இயந்திரம் என்ருயிற்று.

அகச்சமுதாயம் ஐந்தாவன: குணம், அந்தக்கரணம், புலன், ஞானேந்திரியம், கன்மேந்திரியம் என்பன. ஐந்துகந்தமாவன: உருவம், நுகர்ச்சி, ஞானம், குறி, பாவனை.

சமுதாயமென்பது கலைமுதல் நிலம் ஈருகவுள்ள தத்துவங் களேயாம், அவையனைத்தும் மாயையின் காரியங்களாம். அவை நிலைபேறு உடையன அல்ல. ஆனல் உயிரோ அறியவுடையதும் நிலையுடையதும் ஆகும். எனவே அத்தத்துவக் கூட்டுறவால் உளவாகும் உடம்பும், உயிரும் வேறுவேரும். கண்ணுக்கு விளக்கு ஒளி விளக்கம் தருவது போல அத்தத்துவக் கூட்டால் உளதாய உடம்பும் உயிர்க்கு விளக்கம் தருவதாம்.

நிலையாவாம்என்னும் தொடரில் உள்ள ஆம் என்பது அந்தம் என்றவிடத்தும் கூட்டப்பட்டது. மாயை: ஈண்டு அதன் காரியங்களைக் குறித்தலின் ஈண்டும் காரண வாகுபெயராயிற்று. தான்—உயிரைக் குறித்தலின் எழுவாய் என்ருர். பின்னையதாகிய தான் அசைநிலையாம். இதனை—இத்தை என மருவி நின்றது. 'சார்மாயை நீயல்லை தற்பரமும் அல்லை தனி, என இந்நூற்

பாவின் முதலதிகரணத்து உளதாய வெண்பாவின் கருத்தை இவ் வெண்பா வலியுறுத்தி நிற்கின்றது. தனி—அம்மாயையின் வேருய்த் தனித்து நிற்பது.

அநுமானம் - கருதலளவை மெய்யுணர்வு பெறுதற்கு ஆகம அளவையே அமையும். இக்கருதலளவை வேண்டா என்பார்க்கு இருவகையான் அமைதி கூறப்படுகின்றது.

(1) மாணுக்கருள் குறைந்த அறிவுடையரும் உளர். அவர்க்கு ஆகம அளவையின் கருத்தொன்றுமே தெளிவு தாராது.

(2) கேட்டல் முதலிய நான்கு வகையானுமே நிலையான மெய்யுணர்வைப் பெற இயலும். ஆதலின் இம்மூன்று நூற்பாக்களானும் கருதலளவையான் பொருள் உண்மை வலியுறுத்தப் பட்டது.

## இலக்கண இயல்

### நான்காவது நூற்பா

**அந்தக் கரணம் அவற்றின் ஒன்று அன்றுஅவை**
**சந்தித்தது ஆன்மாச் சகசமலத் துணராது**
**அமைச்சு அரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே.**

என்பது சூத்திரம். என் நுதலிற்ருே வெனின் இதுவுமது

என்பது கருத்துரை. என்நுதலிற்ருே வெனின், இச்சூத்திரக் கருத்துணர்த்தல் நுதலிறு.

(இ-ள்) பிரமாணம் இலக்கணம் இரண்டானும் பொருளுண்மை பெறற்பாற் றென்னும் முறைமை பற்றி, மேற்பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட பதி பாச பசுக்களுக்கு இலக்கணம் எதிர்நிரல் நிறையாக வைத்துக் கூறுவான் ருெடங்கி, அவற்றுள் இது மேல் அடுக்கிநின்ற ஆன்மாவின் இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

சொற் பல்காமைப் பொருட்டும், ஒத்து வேருய வழியும் இயை புடைமை யுணர்ந்து கோடற் பொருட்டும், ஈண்டு இதுவுமது எனமாட்டெறிந் துரைத்த ஆசிரியர், இங்ஙனம் உரைத்துக் கோடற் கேற்பவன்றே, ஆண்டு (3வது நுற்பாவின் கருத்துரை) ஆன்மாவின் உண்மை யுணர்த்துதல் நுதலிற்றெனச் சிறந்தெடுத்து

ஓதாது பொதுப்பட ஆன்மப்பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்றென்றதூஉ மென்க. இவ்வாறன்றி, மேலைச் சூத்திரத்தின்கண் ஆன்மாவினது உண்மை கூறுமுகத்தால் தொகுத்தோதிய அஞ்சவத்தை, ஈண்டு இலக்கணம் கூறுமுகத்தான் விரித்தோதப் படுதலின், இதுவுமது என்றது மேலைச் சூத்திரப் பொருளோடு மாட்டெறிந்தது என்று உரைப்பினுமாம். இதனுனும் சூத்திர வியைபு இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: ஆன்மா, அந்தக் கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தமென்னும் நான்கனுள் ஒன்றன்று ஆயினும், நுண்ணுணர்வின்மையின் சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சரோடு கூடி நின்று தன் தொழில் நடாத்தும் அரசன்போல, சகசமலத்தினுன் உணர்வின்றிக் கஞ்சுகம்போலும் கலாதிகளால் பொது வகையான் உணர்வு நிகழினும், சிறப்புவகையான் நிகழுமாறு அவற்ருற் பெறப் படாமையின், சிறப்புவகையான் உணருமாறு தனக்குச் சூழ்ச்சித் துணையாகிய அவ்வந்தக் கரணங்களோடு கூடிநின்று சாக்கிர முதலிய ஐந்தவத்தை யுடைத்தாம் எ-று.

எனவே, அங்ஙனம் நின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக்கு இலக்கண மென்றவருயிற்று. இஃது உயிர்க்குத் தடத்தவிலக்கணம் என்னும் கபாதுவியல்பு.

ஒன்றன்ருயினும் சகசமலத் துணராது அமைச்சரசு ஏய்ப்ப அவற்ருேடு சந்தித்து நின்று அஞ்சவத்தைத்தாம் என இயையும். உணராது சந்தித்தது என்பது காரண காரியப் பொருட்டாய் நின்றது, சந்தித்தது வினையெச்ச முற்று.

இவ்வாறன்றி, ஆன்மா அவற்றினென்று அன்ருயினும், சகச மலத்து உணராமையால் அவற்ருேடு சந்தித்தது; சந்தித்த வழி அவையுந் தானும் அமைச்சு அரசேய்ப்ப நிற்றலான் ஐந்தவத்தைத்தாயிற்று என அதிகரணம் பகுத்துக் கோடற்கேற்ப வேறு வேறு வினை முடிபு செய்து உரைத்தலும் ஒன்று.

வடமொழிச் சூத்திரத்து ஓதுதலின் ஈண்டும் ஆயினுமென வருவித்து ஒரு தொடராக வைத்துரைக்க. அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்ருயினும் எனவே, அவற்றின் ஒன்றன்ருதலும் அனுவாத முகத்தால் ஈண்டே பெற்ரும். இஃது உணராதார், அந்தக்கரணம் அவற்றினென்றன்று என்றதனை வேறு தொடராக வைத்துரைப்ப. அங்ஙனம் உரைப்பின், முன் வருவனவற்றை அவாய் நின்று ஒரு பொருள் மேல் வாராமையின் ஒரு சூத்திரமாதற்கு ஏலாமையறிக.

அவை சந்தித்தது என்புழி ஒடுவுருபு விகாரத்தால் தொக்கது; இரண்டாவது விரிப்பினும் அமையும். ஆன்மாவென்பது மேலைச் சூத்திரத்தினின்றும் வருவித்து உரைக்கற் பாலதாகவும், ஈண்டு வேறு ஓதியது ஓத்து வேறுதல் பற்றி யென்றுணர்க. ஆன்மா வென்னுஞ் சொற்குப் பொருள், வியாபகம் என்பதூஉம் சித்த சித்து என்பதூஉம் ஆம். மலத்து, மலத்தாலென விரிக்க. அமைச்சரசு, அமைச்சரோடு கூடிய அரசென உருபும்பொருளும் உடன்றொக்கன. காரணப் பொருட்டாய் நின்று என்னும் வினை யெச்சம் அஞ்சவத்தைத்து என்னும் வினைக்குறிப்பு முற்றோடு முடிந்தது.

இதனுள், அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று என்பது ஓரதிகரணம்; ஒன்றன் றுயினும் சகசமலத் துணராது அமைச்சர சேய்ப்ப அவை சந்தித்தது என்றது ஓரதிகரணம்; அமைச்சர சேய்ப்ப நின்று அஞ்சவத் தைத்தே என்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

(நு-வி) ஒருபொருளின் உண்மையை அளவை, இலக்கணம் ஆகிய இரண்டானும் அறியலாம். எடுத்துக்காட்டாக நெருப்பு உண்மையைப் புகையிருப்பதைக் கொண்டும் உணர்த்தலாம், வெப்ப மிருப்பதைக் கொண்டும் உணர்த்தலாம். முன்னையது அளவையால் உணர்த்துவதாம். பின்னையது இலக்கணத்தால் உணர்த்துவதாம். இறை, தளை, உயிர் ஆகியவற்றின் உண்மையை முறையே முதல், இரண்டு, மூன்றும் நூற்பாக்களால் அளவை வாயிலாக உணர்த்தினர். இனி அடுத்து வரும் மூன்று நூற்பாக் களால் இலக்கண வகையால் உணர்த்துகின்றார். அவ்வாறு உணர்த்துவார் முற்கூறிய முறையானன்றி இறுதியாகக் கூறியதை முன் வைத்து உயிர், தளை, இறை என உணர்த்துதலின் எதிர்நிரல் நிறையாக வைத்து உணர்த்தினர் என்றார்.

உயிர் உண்மை மூன்றும் நூற்பாவில் அளவை வகையால் உணர்த்தப்பட்டது. இந்நான்காம் நூற்பாவில் இலக்கணவகை யால் உணர்த்தவுள்ளது. எனவே இந்நூற்பாவிற்குக் கருத்துரை கூறுங்கால் இந்நூற்பா உயிர் உண்மையை இலக்கண வகையால் உணர்த்துதல் நுதலிற்று எனக் கூறியிருத்தல் வேண்டும். அவ் வாறன்றி இதுவுமது எனக் கூறியிருத்தற்குக் காரணம் இரண்டாம் (1) சொற்சுருக்கம் நோக்கி இதுவுமது என்றார். (2) முன்னைய நூற்பா அளவையியலிலும் இந்நூற்பா இலக்கண இயலிலும் இருப் பினும் உயிருண்மை உணர்த்தற்கு எழுந்த வகையில் ஒன்றற் கொன்று இயைபுடையதேயாம் என்பது. ஓத்து வேறுய வழியும்– இயல் வேறுயவிடத்தும்.

மாட்டெறிதல்-ஒன்றற்குரிய இலக்கணத்தைப் பிறிதொன்றற்கும் ஏற்றியுரைத்தல். உயிருண்மையை இலக்கண வகையால் உணர்த்த வந்த இந்நூற்பாவின் கருத்துரையை, முற்கூறிய மூன்ருவது நூற்பாவுக்கும் பொருந்த இதுவுமது எனக் கூறியது மாட்டெறிதலாம். மூன்ருவது நூற்பாவில் உயிரது உண்மை கூறும் முகத்தால் முதல் மூன்று அதிகரணங்களாலும் நனவும், நான்காம் அதிகரணத்தால் கனவும், ஐந்தாம் அதிகரணத்தால் உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் ஆகிய மூன்றும் தொகுத்து ஓதப்பட்டன. அவ்வாறு தொகுத்தோதியவற்றை இந்நூற்பாவில் இலக்கணம் கூறும் வகையான் விரித்தோதப்படுதலின் இதுவுமது என மாட்டெறிந்து கூறினுர் என்று கோடலும் அமையும்.

சகசமலத்திஞல்-இயல்பாகவே கூடியிக்கும் ஆணவ மலத்திஞல். கஞ்சுகம்-சட்டை. அறியாமையினின்றும் நீங்கிச் சிறிதளவு அறிவு விளக்கம் பெற்றுப் பகுத்தறிவின்றி நிற்கும் நிலே உயிர்க்குப் பொது வகையால் நிகழும் உணர்வாம். உறக்கத்தினின்றும் நீங்கி விழித்த அளவில் நிகழும் உணர்வு இவ்வகையான உணர்வாம். உயிர் மேலும் விழிப்பும் எழுச்சியும் பெற்றுப் பகுத்தறிவோடு கூடி நிற்கும் நிலே உயிர்க்குச் சிறப்பு வகையால் நிகழும் உணர்வாம். உயிர் உறக்கத்தின் நீங்கி நீராடி உணவுண்டபின் தொழிற்படும் நிலே இவ்வகையான உணர்வாம்.

அங்ஙனம் நின்று-அகக் கருவிகள் நான்கொடும் பொருந்தி நின்று.

உணராது-உயிர் ஆணவக் கூட்டால் யாதொன்றையும் உணராது. சந்தித்தது-அகக்கருவிகள் நான்கஞெடும் கூடியது உணராமையால் சந்தித்தது ஆதலின் உணராமை காரணமாயிற்று. சந்தித்தது காரியமாயிற்று. சந்தித்தது-சந்தித்து எனப்பொருள் படுதலின் வினேயெச்சமாயிற்று. அது அஞ்சு அவத்தைத்தே என்னும் வினே கொண்டு முடிந்தது. பொருளால் வினேயெச்சமாய் நிற்பினும் சொல்லால் முற்ருய் நிற்றலின் வினேயெச்ச முற்று என்ருர்.

இவ்வாறு ஒரு வினேமுடிபாகக் கொள்ளாது இந்நூற்பாவைப் பின் மூன்று அதிகரணமாகப் பிரித்திருப்பதற்கேற்ப மூவகையாகத் தனித்தனி வினேமுடிபு செய்து கொள்ளினும் அமையும்.

''அந்தக்கரணுத் அந்ய; அபி'' என வடமொழியில் ஓதப்பட்டுள்ளது. அபி-ஆயினும். ஆண்டு இவ்வாறு ஓதப்படுதலின் ஈண்டும் ஆயினும் என ஒரு சொல் வருவித்துரைக்க வேண்டும்

என்றார். வடமொழிச் சிவஞானபோதமே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதென்பது இவர் கருத்து. அது பொருந்தாமை ஆராய்ச்சி முன்னுரையில் காட்டப்பட்டுள்ளது.

அநுவாதம் - முன்னர்ப் பெறப்பட்டதொன்றை வேறொன்று விதித்தற் பொருட்டுப் பின்னும் எடுத்துக் கூறுவது. ஆதலின் ஒன்று அன்றாயினும் என்றதனாலேயே ஒன்று அன்று என்பது முன்னர்ப் பெறப்பட்டது என்றார்.

அவை சந்தித்தது - அவ்வந்தக் கரணங்களோடு கூடி நின்று என உரை காண்டலின் ஒடு உருபு விகாரத்தால் தொக்கது என்றார். அவ்வாறன்றி அவ்வந்தக் கரணங்களைச் சந்தித்தது என இரண்டனுருபு விரித்துரைப்பினும் அமையும். சித்தசித்து- அறிவுடைய பொருளொடு கூடின் அறிவுடையதாயும், அறிவற்ற பொருளொடு கூடின் அறிவற்றதாயும், விளங்கும் இயல்பினது. நின்று - நிற்றலால் எனப்பொருள்படுதலின் அது காரணப் பொருட்டாயிற்று.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி அகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ஏனைய வெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான் உயிராகா; ஆயினும் மனம் முதலிய அந்தக்கரணங்கள் "சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தை யென்றும்" இங்ஙனம் உயிரென்னும் பெயரானும் வழங்கப்படுதல் உண்மையானும், இந்திரிய முதலியவற்றை அவ்வாறு கூறாமையின் அஃது ஆகுபெயரென்றற்கு ஏலாமையானும், அவையே தனித்தனி ஆன்மாவாம் என்றல் அமைவுடைத்து என அந்தக்கரணான்மவாதிகள் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இது மேலைச் சூத்திரத்துள் ஓதற்பாலதேயாயினும், ஈண்டு இலக்கணங் கூறும் வழியும் அவற்றோடு சந்தித்து அமைச்சர சேய்ப்ப நிற்பது என அவத்தைக்கு ஏதுவாக எடுத்தோத வேண்டுதலின்ஈரிடத்தும் எடுத்தோதுதல், "சில்வகை யெழுத்தின்

செய்யுட்டாகிச் சொல்லுங்காலைப் பெரும் பொருள் அடக்கி நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத்தாகி'' (தொல் - மரபு; 100) என்னும் இலக்கணத்ததாய சூத்திரத்துக்கு ஏலாமையான், அது பற்றி விதிமுகத்தானன்றி அனுவாத முகத்தான் ஈண்டு உணர்த்தப்பட்டது.

இதன் பொருள் வெளிப்படை.

ஈண்டு அந்தக்கரணம் என்றது உள்ளந்தக் கரணமாகிய கலாதிகளினும் செல்லாமை பொருட்டு, மனோ புத்தி யகங்கார சித்தங்களில் எனக் கிளந்தெடுத்து உரைத்தார். கலாதிகள் உண்டெனக் கொண்டோரின், உயிர் வேறு உண்டெனக் கொள்ளாதார் இன்மையின், ஆண்டு ஆசங்கை நிகழாமையானும் அமைச்சரோடு உவமிக்கப்பட்டு அவத்தைக் கேதுவான அம் மனமாதியே யன்றிக் கஞ்சுகத்தோடு உவமிக்கப்பட்டு அதீதத்தினும் நீங்காது உடனிற்பனவாய கலாதிகளன்மையானும், அவற்றை ஈண்டு எடுத்து ஓத வேண்டாமையின் மன முதலிய புறவந்தக் கரணங்களே ஈண்டுக்கூற நின்றன என்பது கருத்து.

ஏது

*அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்,*

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், ''மனமும் புத்தி யகங் காரஞ் சித்த நான்கு, மருவி யான்மாவே யென்ன வரும்'' (சிவ ஞானசித்தி-4-2 என நீயிருங் கோடலி,ன் உயிர் அவற்றுள் ஒன்றுதல் அமையுமென்றுற் படும் இழுக்கு என்னை யென்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அவ் வந்தக்கரணங்கள் தாம் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய் நின்றே, தம்மை நோக்கி அசித்தாய் நிற்றலால் தன்னை நோக்கியுஞ் சித்தாய் நிற்கும் இவ் வான்மாவது அந்தக் கரணங்களாயுள்ள மனோ புத்தி அகங்கார சித்தங்களில் ஒன்றன்று என மேற்கொண்டது எ-று.

எனவே உயிரான் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகள் அறிந்த விடயங்களுள் ஒன்றனை இஃது யாதாகற் பாற்றெனச் சித்தம் சிந்தித்தறியும்; யான் சிந்தித்தேனென்று அறிய மாட்டாது மனம் அதனை இஃதுஇன்னதாகற்பாற்றெனவும், அஃதாமோ அன்றோ வெனவும் இவ்வாறு சங்கற்ப விகற்பம் செய்தறியும் யான்சங்கற்ப விகற்பஞ் செய்தேனென்று அறியமாட்டாது. அகங்காரம் அதனை இன்னதெனத் துணிவேன் யான் என்று ஒருப்பட்டெழுந்து அறியும்; யான்

மாட்டாது. புத்தி இதனை இன்னது இதுவென நிச்சயித்தறியும்; யான் நிச்சயித்தேனென்று அறிய மாட்டாது. ஆகலான், அவ்வாறின்றி அவற்றோடு கூடி, யான் சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந்தேன் நிச்சயித்தேன் என்றும், அதன் பின் அதுவதுவாய்ப் பரிணமித்துச் சுகதுக்க மோகரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்தி தத்துவத்தின் பரிணமங்களைக் கலாதிகளோடு கூடிநின்று, இது சுகம்; இது துக்கம்; இது மோகம் என்று அறிந்தும், யான் சுகித்தேன்: யான் துக்கித்தேன், யான் மோகித்தேன், என்று அறிந்தும், இங்ஙனம் பிறவற்றை நோக்கியும், தன்னை நோக்கியும், சித்தாகிய ஆன்மாத் தம்மை நோக்கிச் சித்தாகாத அந்தக்கரணங்களின் ஒன்ருமாறு யாண்டையதென மறுத்தவா ருயிற்று. 'இவன் தானும் புத்தியும் சித்து 'இவனுமோ புத்தி' (சிவஞான சித்தி – 11 – 11) என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்தென்னும் பொருளவாம்.

ஏனையோரை நோக்க, அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப் பற்றி அமைச்சர் அரசரென்று உபசரித்துக் கூறப்படுமாறு போல புறக்கருவிகளை நோக்க, ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்றற் சிறப்புப் பற்றி, ''மனம், புத்தி, அகங்காரம், சித்தம் நான்கும் மருவியான்மாவே யென்ன'' உபசரித்துக் கூறப்படும் அத்தனை யென்று ஒழிக. சூழ்ச்சித் துணையாதல் பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரை ஒக்கும்எனவே, ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களை ஒக்கும் என்பது பெற்ரும். அது ஞானமிர்தத்திற் (பாடல்-16) காண்க.

மேலைச் சூத்திரத்தின்கண் ஓதிய ஏதுக்களே ஈண்டைக்கும் அமையுமாயினும், சிறந்தமை பற்றி வேறு ஏதுக் கூறினர்.

எடுத்துக்காட்டு

**மனமாதி யால்உணர்தல் மன்னு புலன்கள்**
**மனமாதி மன்புலனின் அல்லன்—மனம்மேல்**
**உதித்துஒன்றை உள்ளம் உணர்தல் அதனின்**
**உதிக்குங் கடல்திரையை யொத்து**

என்பது உதாரணம். என்னுதலிற்ருே வெனின், அவ்வந்தக் கரணங்கள் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கச் சித்தாமாறும். தம்மின் மேலுள்ளவற்றை நோக்கவும் தம்மை நோக்கவும் அசித்தாமாறும் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள்-மனம் முதலிய அந்தக்கரணங்களால் உணரப்படுவன ஐம்பொறிகளால் தரப்பட்டுப் புறத்தே நிலைபெற்ற விடயங்களாம்; உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை—ஆன்மா உணர்வது மனத்துக்கு மேலெனப்படும்புத்தியில் தோன்றியதொன்றனையாம்; கடல் திரையை ஒத்து உதிக்கும்—அவ்விருவேறு உணர்வும் கடலிடையெழுந்து கரைசாரும் திரைபோலப் பரம்பரையின் ஆன்மாவின் மாட்டு வந்து தோன்றும்; அதனின் மனம் ஆதி மன்புலனின் அல்லன்-அதனானே மனம் முதலியன அவ்விடயங் களின் வேறாயினாற் போல,ஆன்மாவும் அம்மனம் முதலியவற்றின் வேறாம் எ-று.

உதிக்கு மென்னும் பயனிலைக்கு உணர்தல் இரண்டும் எழுவாய்' செவ்வெண்தொகை விகாரத்தால் தொக்கது.புலனின், இன் உவமவுருபு. மன், அசை. அல்லனென ஆடூஉவறி சொல்லாற் கூறியது வடமொழி மதம் பற்றி. உதித்த லென்னும் பெயரெச்ச வீறு விகாரத்தால் தொக்கது.

புத்தியில் தோன்றியது ஒன்றாவது சுகதுக்க மோகரூப விடயம். பரம்பரையில் தோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சி யுணர்வு தோன்றி, அதன்பின் மானதக் காட்சி யுணர்வு தோன்றி, அதன் பின்னர்த் தன்வேதனைக் காட்சி யுணர்வு உயிரின்கண் வந்து தோன்றுதல்.

இதனானே அந்தக்கரணம் கீழுள்ளவற்றை நோக்கச் சித்தா மாறும், மேலுள்ளவற்றை நோக்க அசித்தாமாறும் உயிர் அவ்வாறன்றி யாண்டும் சித்தாமாறுங் கண்டுகொள்க.

எடுத்துக்காட்டு

**சிந்தித்தாய்ச் சித்தம் தெளியாதால் ஆங்காரம்**
**புந்தியாய் ஆய்ந்து மனமாகிப்-பந்தித்து**
**வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறாம்**
**அவ்வேறும் போதுபோல் ஆங்கு**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், மேற் பொது வகையாற் கூறிப்போந்த அந்தக்கரணங்களின் இயல்பு சிறப்பு வகையாற் கூறுமுகத்தான் மானதக் காட்சியுள்ளும் கடல் திரை போலப் பரம்பரையின் வெவ்வேறாய் உணர்வு நிகழுமாறு உணர்த்தி உயிர் வேறாதலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) உள்ளம்—புருட தத்துவமென நின்ற உயிர்; ஆங்கு—வாயிற் காட்சியாற் கண்ட விடயங்களின் ஒன்றனை மனமாதி யான் உணரும் மானதக் காட்சியின் கண்ணும் ஒரு பெற்றித்தா தலின்றி; சித்தமாய்ச் சிந்தித்து—சித்தமாய் நின்று இஃது யாதாகற் பாற்று எனச் சிந்தித்தும்; மனமாகிப் பந்தித்து—அதன் பின் மனமாய் நின்று இஃது இன்னதாகற்பாற்று எனப் பற்றியும்; ஆங்காரமாய்த் தெளியாது—அதன்பின் அகங்காரமாய் நின்று இஃது ஆமோ அன்றோ, இதனை இன்னதெனத் தெளிவேன் யான் எனத் தெளிவு பிறவாது எழுந்தும்; புந்தியாய் ஆய்ந்து—அதன் பின்னர்ப் புத்தியாய் நின்று இஃது இன்னது எனத் தெளிந்தும்; வெவ்வேறு தானே துணிந்து இவ்வேறும் — இங்ஙனம் வெவ்வேறாகவே யுணர்தலான் அவ்வாறு உணரும் புருடன் இவ்வந்தக் கரணங்களின் வேறாம்; போது அவ்வேறும் போல்—ஞாயிறு முதலியவற்றோடு கூடி நின்று நாழிகை நாள் பக்கம் திங்கள் யாண்டு முதலியனவாய் பாகுபாடு செய்யப்படும் கால தத்துவம் அஞ்ஞாயிறு முதலிய வற்றின் வேறாயினாற்போல் எ-று.

ஆய்தல் ஈண்டு நிச்சயித்தற் பொருட்டு. துணிதலென்பது அறிதலென்னும் பொருண் மாத்திரையாய் நின்றது. தான், அசை. ஏகாரம் தேற்றம். இவ் அவ் என்பன வகரவீற்று அஃறிணைப் பன்மைச் சுட்டுப் பெயர்.

வேறாம் போது போல் எனவே, ஆண்டு நீக்கப் பொருள் ஞாயிறு முதலியன வென்பது தானே விளங்குமென்பது நோக்கி, அவ்வெனச் சுட்டி யொழிந்தார். சாரியையும் உருபும் உடன் தொக்கன. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

'ஆங்கும் வெவ்வேறு தானே துணிந்து' எனவே மானதக் காட்சியும் இங்ஙனம் நால்வேறு வகைத்தாய் ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய் கடற்றிரை போலப் பரம்பரையில் தோன்றும் என்றவாறாயிற்று. செய்யுளாகலின் முறை பிறழ வைத்தார்.

எடுத்துக்காட்டு

**அகார வுகாரம் அகங்காரம் புத்தி**
**மகாரம் மனம் சித்தம் விந்துப்—பகாதுஇவற்றை**
**நாதம் உளவடிவாம் நாடின் பிரணவமாம்**
**போதம் கடல்திரையே போன்று**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், அம்மானதைக் காட்சியின் நிகழும் சவிகற்ப உணர்வுக் கேதுவாய் அவற்றை

உடனின்று செலுத்தும் அக்கரங்கள் இவை யென்பதும் அவற்ருன் உணர்வு மாறிமாறித் தோன்றுமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

''மன்னு மகாரம் மனம் செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும்—முன்னுகும்
ஆங்காரம் தன்னை அகாரம் செலுத்தியிடும்
நீங்காத சித்தம் விந்துநேர்'' (துகளறு–14)

என்பவாகலானும், ஈண்டோதிய முறையே முறையெனவும், "அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம் புத்தி அகங்காரங்கள்' (சிவஞான சித்தி 4:3) என வழிநூலாசிரியர் ஓதியது எதிர் நிரனிறைப்பொருளெனவுங்கொள்க. ''அவ்வுடனுவ்வுமவ்வு மனம் புத்தியகங்காரங்கள்'' என்றதே முறையெனக் கொண்டு அதற்கு இயையக் கொண்டு கூட்டியுரைப்பாருமுளர்.

பகாது இவற்றை நாடின் பிரணவமாம் எனவும் போன்ரும் எனவும் கூட்டுக. அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறுவார், ஒப்புமைபற்றிப் புருடனைச் செலுத்தும் அக்கரமும் உடன் கூறினர். உடனின்று செலுத்துதல்பற்றி அபேதமாக வைத்தோதப் பட்டன.

''நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப்பற்றி'' (சிவஞான சித்தி 1–24) அகர முதலிய பஞ்சகலை வடிவாய் நின்று இவற்றை வேறு வேறு செலுத்துதல் பற்றிக் கணந்தோறும் நினைப்பும் மறப்புமாகிய சகல கேவலங்கள் அதிநுட்பமாய்க் கறங்கோலை போல மாறி மாறி நிகழும் எனவும், மாசகலத்தின் கண் கணந்தோறும் அங்ஙனம் உணர்வுதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தின்கண் புதிது புதிதாய்த் திரை தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போலும் எனவும் உணர்க. கடற்றிரை யுவமைமேற்பரம்பரையாய்உணர்வுவருதற்குஎடுத்துகாட்டினுர்; ஈண்டுப் புதிது புதிதாய் வருதற்கு எடுத்துக் காட்டினுர்; ஆதலாற் புனருத்தியன்மை யுணர்க.

எடுத்துக்காட்டு

**எண்ணிலவு ஓங்காரத்து ஈசர் சதாசிவமாம்**
**நண்ணிய விந்துவோடு நாதத்துக்—கண்ணில்**
**பகர் அயன் மாலொடு பரமன் அதிதெய்வம்**
**மகரவுக ரம்அகரத் தாம்**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அவ்வக்கரங் களும் சடமாகலின் அவற்றை யதிட்டிக்கும் அதிதெய்வங்கள் இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ–ள்) எண்ணிலவு ஓங்காரத்து நண்ணிய விந்துவொடு நாதத்து அதிதெய்வம் கண்ணில் ஈசரோடு கூடிய சதாசிவமாம் அகரவுகர மகரத்து அதிதெய்வம் கண்ணின் பகரயன் மாலோடு பரமனும் எ–று.

எண் நிலவு ஓங்காரம், எண்ணத்தின்கண் நிலவிய ஓங்கார மென வினைத்தொகை. எண்ணம் ஈண்டு மானதக்காட்சி, ஒடு, எண்ணின்கண் வந்தது.

ஈண்டு அயன் மால் பரமன் என்றது. சுத்த வித்தையின் வைகுவாரை. பரமன் உருத்திரன். மகர வுகரம் மகரத்தாம் என்புழி மகரம் இசைப்பொருட்டாய் ஒற்றில்வழி ஒற்ருய் வந்தது.

(நு–வி) அகக்கருவிகள் நான்கனுள் சித்தம் என்பதும் ஒன்று. அதனை உயிரென்றும், உயிரைச் சித்தமென்றும் கூறல் உண்டு. ஆதலின் அகக்கருவிகள் நான்கினுள் ஒவ்வொன்றும் உயிரெனப் பெயர் பெறும் என்பர் அகக்கருவிகளே உயிர் என்போர். மூன்ருவது நூற்பா உயிரென்பது யாது என்பதில் அவரவர்களும் கூறும் கருத்தைக் கூறி அவற்றை மறுத்துரைக்கின்றனர். அவ்வகையில் அகக்கருவிகளே உயிர் என்பார் கூற்றையும் அம்மூன்ரும் நூற்பாவிலேயே எடுத்துக் கூறவேண்டும். அவ்வாறன்றி இந்நான்காம் நூற்பாவில் எடுத்துக் கூறற்குரிய காரணத்தை உரையாசிரியர் விளக்குகின்ருர். ஈண்டு உயிர் அவத்தைப் படுமென உயிரது இலக்கணம் கூறப்படுகின்றது, அவ்வவத்தை தானும் உயிர் அகக் கருவிகளொடு கூடி நின்ற வழியே வருவதாதலின் ஈண்டு அவ்விலக்கணம் கூறியவிடத்தும் கூறுதல் இயைபுடைத்தாம் என்பது.

உயிர் தொழிற்படுவதற்கு அகக்கருவிகளும் புறக்கருவிகளும் இன்றியமையாதவையாகின்றன. மெய், வாய், கண், மூக்கு முதலியன புறக்கருவிகளாம். அகக்கருவிகள் இருவகைப்படும். (1). கலை, வித்தை, அராகம் முதலிய வித்யாதத்துவங்கள் ஏழுமாம். இவை உள் அகக்கருவிகளாம். (2) மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கும் அகக்கருவிகளுள்புறக்கருவிகளாம். அகக்கருவியெனப்பொதுப்பட ஓதின் இவ்விரண்டனுள் யாதென ஐயம் நிகழுமாதலின் அந்தக்கரணங்களாயுள்ள மனே, புத்தி, அகங்கார சித்தங்களில் ஒன்று அன்று என அவற்றை விதந்து கூறினர்.

மனம் முதலிய அகக்கருவிகள் நனவு, கனவு, உறக்கம் ஆகிய மூவகை நிலை வரையுமே தொழிற்படும்,ஏனைய பேருறக்கம் உயிர்ப்படங்கல் ஆகியவற்றில் அவை தொழிற்படா.கலைமுதலிய தத்துவங்கள் உயிர்ப்படங்களிலும் உயிரோடு உடன் நிற்பன ஆதலின் ஈண்டு மனம் முதலிய கருவிகளையே விதந்து கூறினர்.

பிரகாசமாய் நின்றே-(அகக் கருவிகள் நான்கும் தாம் உணர்தற்கு ஏதுவாய ஐம் பொறிகளை நோக்க) அறிவுடையதாய் நின்றே. அப்பிரகாசமாய்-அறிவற்றதாய்.

தம்மில் கீழ் உள்ளவற்றை-ஐம்பொறிகளை; சித்தாய்-அறிவுடையதாய்; அதிட்டிக்கப்பட்டு-செலுத்தப்பட்டு. அகக்கருவிகள் நான்கும் ஐம்பொறிகளைக் கொண்டு பொருளை உணரினும் தாம் தாம் உணர்ந்தனவாக அறிவதில்லை.எனவேஅவ் ஐம்பொறிகளைக் கொண்டு அறிதல் அளவில் அகக்கருவிகள் அறிவுடையனவே. எனினும் அவ்வாறறிந்த தம்மைத் தாம் உணராமையின் அறிவற்றனவே. ஆனால் உயிர் இவ்வகக் கருவிகளின்வழிப் பொறிகளால் பொருள்களைஉணரும் வகையிலும் அறிவுடையதே. அவற்றான் அறிந்ததாகவும் நுகர்ந்ததாகவும் தன்னைத்தான் அறியவும்படும். ஆதலின் உயிர் அகக்கருவிகளின் வேறாம் என்பது கருத்து. சங்கற்பம்-பொதுவாக நினைதல்; விகற்பம்-ஐயுறுதல்;

அதுவதுவாய்ப் பரிணமித்து-அவ்வப் பொருள்களாய் மாறி. சுக, துக்க, மோக, ரூபமாய்-சுக, துக்க, விருப்ப வடிவாய். புத்தி தத்துவத்தின் பரிணாமங்கள்-புத்தி தத்துவம் முக்குணவயத்தால் பெற்ற வேறுபாடுகள். அஃதாவது புத்தி தத்துவம் சாத்துவிக குணத்தொடு கூடியவழி அறியப்பட்ட பொருள் சுகவடிவாய் உயிருக்குத் தோன்றும்.இராசத குணத்தோடு கூடிய வழி அறியப்பட்ட பொருள் துன்ப வடிவாய் உயிர்க்குத் தோன்றும். தமோ குணத்தோடு கூடிய வழி அறியப்பட்ட பொருள் விருப்பமுள்ளதாய் உயிர்க்குத் தோன்றும். இவ்வாறு குணத்துக்கு ஏற்ப மாறுபட்டுத் தோன்றுவனவாகிய பொருள்களை உயிர் கலைமுதலிய தத்துவங்களுடன் கூடி நின்று, இது இன்பம், இது துன்பம், இது விருப்பம் என அறியும்.

இவன் தானும்புத்தியும் சித்து இவனுமோ—உயிரும் புத்தியும் அறிதல் பற்றி அறிவுடைப்பொருளே எனினும் புத்தி உயிராகாது வழிநூலாசிரியர்—அருள்நந்தி சிவாசாரியார்.

உபசரித்துக் கூறப்படும்— ஏற்றிக் கூறப்படும்.

அக்கருவிகள் நான்கும் அமைச்சரை ஒக்கும் எனவே ஏனைக் கருவிகள் ஏனைய உறுப்புக்களை ஒக்கும்.

உயிர்—அரசன்.

| | |
|---|---|
| மனம், புத்தி, சித்தம், அகங்காரம். | அமைச்சர்கள். |
| மெய், வாய், கண் மூக்கு, செவி, | வாயில் காப்பவர், ஒற்றர், தூதர், வேத்தவையோர், அந்தணர். |
| வாய், கால், கை, எருவாய் கருவாய் | நால்வகைப் படைகளும், படைத் தலைவர்களும். |
| அறிகருவியால் கொள்ளப் படும் புலன்களாய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவும், செய்கருவிகளால் கொள்ளப் படும் பேசல், நடத்தல், உழைத்தல், மலங்கழித்தல், மகப்பெறல் ஆகிய ஐந்தும். | ஏவலாட்கள் |
| உயிர்க் காற்று, மலக்காற்று, தொழிற் காற்று, ஒலிக்காற்று, நிரவுக்காற்று, தும்மற் காற்று, விழிக் காற்று, கொட்டாவிக் காற்று, இமைக் காற்று, வீங்கற் காற்று ஆகிய பத்து வளியும். | உறுதிச் சுற்றம் |

ஞானமிர்தம் இவ்வாறு உருவகித்துக் கூறும்

மூன்றுவது நூற்பாவில் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலால் எனவும், உண்டி வினையின்மையின் எனவும், ஒடுக்கம் அறிதலின் எனவும், ஐம்புலன் அறிதலின் எனவும், எனதுடல் என்றலின் எனவும், கூறிய ஏதுக்களே இவ்வதி கரணத்துக்கும் அமையுமாயினும், ஐம்பொறிகள், உடல், உயிர்க்காற்று முதலியவற்றை விட அகக்கருவிகள் சிறந்தமை பற்றி இவ்வேதுவினைக் கூறினர்.

புறத்தே நிலை பெற்ற விடயங்கள்–சுவை, ஒளி, ஊறு முதலியன. மனம் முதலின ஐம்பொறிகளின் வாயிலாகச் சுவை ஒளி முதலாயவற்றை உணரும். எனவே மனம் அப்பொறிகளின் வேருதல் தெளிவு. அதைப் போன்றே உயிர் அகக் கருவிகளின் வாயிலாகச் சுவை ஒளிஊறு முதலியவற்றின் விளைவான இன்ப துன்பங்களை உணரும். ஆயினும் உயிர் அவ்வக் கருவிகளின் வேறும்:

பொறிவழி அகக் கருவிகள் சுவை முதலியவற்றை அறியும். அவ் அகக் கருவிகளின் வழி உயிர் இன்ப துன்பங்களை அறியும். இவ்வாறு ஒன்றன் பின் ஒன்றாக உணர்வு நிகழ்தலின் கடல் திரை உவமையாயிற்று.

மனம் ஆதியால் உணர்தல், உள்ளம் உணர்தல் ஆகிய இரு எழுவாய்களுக்கும் உதிக்கும் என்பது பயனிலையாகும்.

இவ்விரண்டானும் உதிக்கும் எனத் தொகை கொடுத்துக் கூற வேண்டும். அவ்வாறு தொகை கொடாமையின் செவ்வெண்ணின் தொகை விகாரத்தால் தொக்கது என்றார். மன் அல்லன்—உயிர் அல்லன். உயிரை ஆண்பாற் சொல்லாகக் கூறியது வடமொழிக் கொள்கை பற்றியாம். உதித்தது ஒன்றை எனற்பாலது உதித்த தொன்றை என நிற்றலின் பெயரெச்ச ஈறு விகாரத்தால் தொக்கது என்றார்.

வாயிற் காட்சி—பொறிவழி அறியும் அறிவு. மானதக்காட்சி மனம் வழி உணரும் உணர்வு. தன்வேதனைக் காட்சி—அவ்வாறு உணர்ந்த தொன்றை இன்பமாகவோ அல்லது துன்பமாகவோ உணர்தல்.

உள்ளம்—உயிர்: கலை, வித்தை முதலிய தத்துவங்களைச் சட்டையாகப் போர்த்து அவற்றின் உள்ளிருத்தலின் உயிர் உள்ளமெனப் பெயர் பெற்றது.

காலமென்னும் அருவப்பொருள் உலகியற் நடத்தற்கு ஏதுவாக ஞாயிறு முதலியவற்றின் அளவைகளால், நாழிகை, நாள், பக்கம், திங்களென அளவிட்டு அறியப்படும். இவ்வாறு பாகுபடினும் இவற்றின் வேறாய் அக்காலதத்துவம் உளதாகும். அதைப் போன்றே ஒருபொருளைப் பிண்டப் பொருளாகச் சிந்தித்தும், அதன் இயல்பு யாதோ என நினைந்தும், அதன் இயல்பை நான் அறிவேன் எனத் துணிந்தும், அதன் வழி அதனை இன்னதென அறிந்தும் உயிர் உணர்வு கொள்ளினும், அவ்வுணர்வு கொள்ளுதற்கு ஏதுவாய உயிர் சித்தம், மனம், அகங்காரம், புத்தி ஆகியவற்றினும் வேறாம் என்பது கருத்து. ஆய்ந்து என்பது ஆராய்தல் எனப் பொருள் படினும் ஈண்டுத் துணிதல் என்னும் பொருள்பட நின்றது. இவ்வாறே துணிதல் என்பதும் ஈண்டு அறிந்த என்னும் பொருள் அளவில் நின்றது. இவ் அவ், என்பன இவற்றின் அவற்றின் எனப்பொருள்படுதலின் அஃறிணைப்பன்மை பற்றியசுட்டுப் பெயர் என்றார்.

இவ்வேறும்-சித்தம் முதலிய இவற்றின் வேறும் எனப்பொருள் விளங்க அறிய முடிகின்றது. ஆனல் அவ்வேறும் என்ற விடத்து நாழிகை, நாள், முதலியவற்றினும் காலதத்துவம் வேறும் எனப் பொருள் அறிதற்கு விளக்கமில்லாது இருக்கின்றது. ஆயினும் அது தானே விளங்குதலின் அவ்வாறு கூறினர் என அமைதி கூறு கின்ருர். வேறும்போல்-வேறு ஆயினுற்போல் எனப்பொருள் விரிக்கப்படுதலின் இன்சாரியையும் ஆல் உருபும் உடன் தொக்கன என்ருர்.

ஆங்கு-மானதக் காட்சியின் கண்ணும் எனச் சிறப்பும்மை கொடுத்துக் கூறப்படுதலின் அவ்வும்மை தொக்கது என்ருர். நால் வேறு வகைத்தாய்-சித்தத்தால் சிந்தித்தும், மனத்தால் பற்றியும், ஆங்காரத்தால் முனைத்தும், புந்தியால் தெளிந்தும் வருதல். சிந்தித்தல் பற்றுதற்கும், பற்றுதல் முனைத்துக் காண்டற்கும், முனைத்துக் காண்டல் தெளிதற்கும் காரணமாயினமையின் முறையே ஏதுவும் பயனும் ஆயினஎன்ருர். உயிர் உணர்தற்குச் சித்தம், மனம், அகங்காரம், புத்தி என்றநான்கு அகக்கருவிகளும் முறையாக நிற்கின்றன. அங்ஙனமாகவும் சித்தம், அகங்காரம், மனம், புத்தியென இம்முறையில் கூறியமைக்குக் காரணம் செய்யுளாகலின், என்ருர்.

சவிகற்ப உணர்வு-ஒரு பொருளின் பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்ற ஐந்தொடும் வைத்துக் காணும் உணர்வு.

அகரம் அகங்காரத்தினையும், உகரம் புத்தியினையும், மகரம் மனத்தினையும், விந்து சித்தத்தினையும், நாதம் உயிரினையும் செலுத் தும் கடலின்கண் புதிது புதியாய் அலைகள் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போல இவ்வாறு வரும் உணர்வும்தோன்றியும் ஒடுங்கியும் வரும். இவ் எழுத்துக்களை இவ்வாறு பகுக்காது ஒருங்கு கூட்டி ஆராயின் அது பிரணவம் ஆகும் என்பது இவ்வெண்பாவின் பொருளாகும்.

'மன்னும் மகாரம்' எனத் தொடங்கும் துகளறு போதத்தில் கூறப்பட்ட முறையே முறையாம். அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம் புத்தி அகங்காரங்கள்-அகரம் அகங்காரத்தையும், உகரம் புத்தியினையும், மகரம் மனத்தினையும் செலுத்தும் என எதிர்நிரல் நிறைப் பொருள்பட உரை காண்டலே ஆசிரியர் கருத்தாம். எனவே துகளறுபோதமும் இச்சிவஞான சித்தியார் வாக்கும் ஒன்றற்கொன்று முரண்படுமாறு இல்லை. எனினும் ஒரு சாரார் இச்சிவஞானசித்தியார் வாக்கிற்கு நிரல்நிறையாவே பொருள் கொண்டு அதற்கேற்ப இத்துகளறு போத வாக்கிற்கும் பொருள் காண்பர்.

பிரணவமாம் என்பதிலுள்ள ஆம் என்பதைப் போதம் என்ப தோடு கூட்டிப்போதமாம் என உரைக்க,

புருடன்-உயிர். அகக்கருவிகள் நான்கினையும் செலுத்தும் எழுதுக்களைக்கூறலே ஈண்டைக்கு வேண்டுவதாயினும், அகக் கருவிகளொடு உயிர் உடன் இயங்குதலானும், பிரணவம் நிறைவு பெறுமாறு கூறல் கருத்தாகலானும், உயிரைச் செலுத்தும் எழுத் தையும்ஈண்டுக் கூறினர்.

அகக்கருவிகளை எழுத்துக்கள் இயக்குகின்றன. எனவே அக் கருவிகள் வேறு. அவற்றைச் செலுத்தும் எழுத்துக்கள் வேறு என்பது விளங்கும். எனினும் எழுத்துக்கள் அக்கருவிகளொடு உடன்நின்று செலுத்தும் ஒற்றுமை பற்றி அகாரம் அகங்காரம், உகரம் புத்தியெனக் கூறினர்.

அபேதம் - ஒற்றுமை

வாக்கு நான்காவன:-சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பன. சூக்குமை-ஒலி அளவாய்க் கொப்பூழை இடனாகக் கொண்டிருப்பது. பைசந்தி-எழுத்துக்களின் தோற்றமாத்திரத் தோடு கூடிய ஒலியாய் உந்தியை இடனாகக் கொண்டு நிற்பது. மத்திமை-எழுத்துக்களின் பாகுபாட்டோடு கூடிய ஒலியாய் நெஞ்சை இடமாகக் கொண்டு நிற்பது. வைகரி, தூலம் சூக்குமம் என இருவகைப்படும். சூக்கும வைகரியாவது எழுத்துக்களினாலாய சொல் வடிவான ஒலியாய்த் தன் செவிக்கு மட்டும் கேட்கப்படு வதாய்க் கழுத்தினை இடமாகக் கொண்டு நிற்கும். தூல வைகரி யாவது சொல் வடிவான ஒலியாய்த் தனக்கும் பிறர்க்கும் கேட்கப் படுவதாய் வாயினை இடமாகக் கொண்டு நிற்கும். இவற்றுள் வாயிடத்திலிருந்து பிறருக்குத் தெரியவொட்டாத சொல்லின் தடையை நீக்கி நிவர்த்தி கலை பிறருக்குத் தெரியும்படி சொல்லச் செய்யும். கழுத்திலிருந்து வரும் சொல்லைப் பிரதிட்டாகலை, தனக்குக் கேட்கும்படி நிலைக்கச் செய்யும். நெஞ்சிடத்திருந்து சொல்லிற்குரிய எழுத்துக்களைப் பிரித்து வித்யாகலை அறிவிக்கும். உந்தியிலிருந்து சாந்திகலை எழுத்துக்களை அடக்கித் தோற்று விக்கும். உந்தியிலிருந்து எழுத்துக்களின் தோற்றத்திற்கு அடிப் படையாக விளங்கும் ஒலியைச் சாந்தி அதீதகலை தோற்றுவிக்கும்.

கறங்கோலை-காற்றில் சுழலும் ஓலை. மாசகலத்தின்கண்- விழிப்பு (சாக்கிரம்) நிலையின்கண்.

'மனமாதியால்' என்று தொடங்கும் வெண்பாவிலும், 'அகார உகாரம்' எனத்தொடங்கும் வெண்பாவிலும் கடல் அலை உவமை யாகக் கூறப்பட்டுள்ளது. எனினும் அது கூறியது கூறலன்றும்,

'மனமாதியால்' எனத்தொடங்கும் வெண்பாவில் வரும் கடல் அலை உயிர்க்கு அகக்கருவிகளால் ஒன்றன் பின் ஒன்றுகத் தோன்றும் உணர்விற்கு உவமையாகும். 'அகார உகாரம்' எனத் தொடங்கும் வெண்பாவில் வரும் கடல் அலை, உயிர்க்கு அகக் கருவிகளால் புதிது புதிதாகத் தோன்றும் உணர்விற்கு உவமையாகும்.

புனருத்தி – கூறியது கூறல்.

சடமாதலின் - அறிவற்றனவாதலின். அதிட்டிக்கும் – உடன் நின்று செலுத்தும்.

எண்ணத்தின்கண் நிலவிய பிரணவத்தின்கண் பொருந்திய நாதத்திற்கும் விந்துவிற்கும் அதி தேவதை, கருதுமிடத்துச் சதா சிவமும் மகேசுவரனும் ஆம்.மகரஉகரஅகரங்கட்குஅதிதேவதை யை நினையின் முறையே உருத்திரனும், மாலும், அயனுமாம் என் பது 'எண்ணிலவு ஓங்காரத்து' என்னும் பாடலின் பொருளாகும்.

நிலவு ஓங்காரம் என்பது முக்காலத்திற்கும் ஒப்ப விரிக்கப் படுதலின் வினைத் தொகையாயிற்று. விந்துவொடு, மாலொடு' என்ற விடங்களில் உள்ள ஒடு, எண்ணின்கண் வந்தன. விந்துவும் மாலும் என எண்ணப்படும். பரமன்–உருத்திரன். ஈண்டுக் குறிக் கப்பெற்ற மால், அயன், பிரமர் ஆகியோர் சுத்த வித்தையில் இருப்போராவர். நால்வகை வாக்கும் சுத்தமாயையின் விளைவு ஆதலால் அவற்றை இயக்குவோரும் அவ்விடத்து உள்ளவரேயாவர். இதனல் அசுத்தமாயையில் வைகும் மால், அயன், உருத்திரன் என்பார் இவரின் வேருவர் என்பது பெறுதும்"

'அகர உகரம் மகரத்தாம்' என வரும் தொடரில், உகரம் என்றவிடத்தில் மகரவொற்று இன்றியும் இருக்கலாம். எனினும் அங்கு ஒற்று இருப்பது பாவின் ஓயைது சிறப்புக் கருதியாம். ஆதலின் ஒற்று இல்வழி ஒற்ருய் வந்தது என்ருர்.

## இரண்டாம் அதிகரணம்

*இனி, இவ்வான்மா சகசமலத்திஞல் உணர்வின்று என்பது,*

என்பது மேற்கோள். என்நுதலிற்ருே வெனின், ஆன்மா அந்தக்கணரங்களின் ஒன்றன்ருயின் அவற்ருேடு சந்தித்து நிற்றற்கு ஏது என்னை? யென அவர் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை

ஆகந்துக மலங்களின் நீக்குதற்குச் சகசமலமென விசேடிக்கப் பட்டது; படவே, உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரண முதலியவற்றின் வேருய்ச்சேதனப் பொருளாயினும், செம்பிற்களிம்பு போல வேறு காரணமின்றி மூலமலம் தன்னேடு உடனுய் நிற்றலின் தன்னியல்பான் உணருமாறு இன்றிக் கருவிகளைக் கூடிநின்று உணர்வதாயிற்று என விடுத்தவாருயிற்று.

இதனுனே "மலத்துளதாம்'' என மேற்(சிவஞானபோதம்: 1சூத்) பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்திற்கு, ஈண்டு இலக்கணம் கூறினுரென்பது பெறுதும்; அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தின் நிகழும் இயல்பே மலத்திற்குத் தன்னியல்பு; கருவிகளோடு கூடி அவத்தை யுறுவதாகிய விபரீத வுணர்வைச் செய்யும் சகலத்தினிகழும் இயல்பே பொது வியல்பாகலான். மலத்திற்கு இருவகை இலக்கணமும் ஈண்டே பெறப்பட்டன.

ஏது

*அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்,*

என்பது ஏது. என்நுதலிற்றெ வெனின், சகசமலத்தினுல் உணர்வின்றி யொழியின் பின் கருவிகளோடு கூடிய வழி அறிவுண்டாமாறு யாங்ஙனம் எனச் சற்காரிய வாதம் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று,

(இ-ள்) அச் சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதகமாய் அதனை யில்லை யென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலான்' இனி இவ்வான்மாச் சகசமலத்தினுல் உணர்வின்றென மேற் கொண்டது எ-று.

மலத்தினது இலக்கணம் வடமொழி வழக்குப்பற்றிக் கூறுவார் ஞான திரோதகமா யெனவும், அதனைத் தமிழ் மொழியான் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலான் எனவும்கூறினுராகலான் அது கூறியது கூறலன்மை யுணர்க. திரோதக மென்னும் வடமொழி மறைத்தலைச் செய்வதென்னும் பொருட்டாய் வினை முதன்மேனின்ற வினைப்பெயர்.

இதனுனே ஞானபாவமே அஞ்ஞான மென்பார் மதமும் மறுக்கப்பட்டது, அபாவம் ஒருகாரித்தைச் செய்ய மாட்டாமையின்.

எடுத்துக்காட்டு

**மாயா தனுவிளக்காம் மற்று உள்ளம் காணுதேல்**
**ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய்—வீயாத**
**வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம்போல்**
**தன்னைமலம் அன்று அணைதல் தான்.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், ஆகந்துக மலமே ஞான திரோதகமாதலமையும், வேறுமோர் மலமுண்டென்றல் மிகை போலும் என ஐக்கியவாத சைவர் முதலியோர் மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்து ஆகந்துகமலத்தானும் சகசமலத்தானும் செயப்படுங் காரியங்கட்குத் தம்முள் வேற்றுமை பெரிதாமாறு உணர்த்து முகத்தான் ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) உள்ளம் மாயா தனு விளக்காக் காணுதேல் ஒன்றை ஆயாதாம்—உயிர் ஆகந்துக மலமெனப்படும் மாயா காரியமாகிய வுடம்பு தனக்குக் காட்டாகக் கொண்டு காணுதாயின் ஒரு விடயத்தையும் அறிவதில்லையாம்; மற்று மலம் தன்னை அன்று அணைதல் தான்—சகசமலம் உயிரை அனுதியே பற்றி நிற்றல்; அதுவதுவாய் வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம் போல்—காட்டம் முதலியவற்றுள் அதுவதுவேயாய் நின்றுந் தனக்குக் கேடில்லாத வன்னியைத் தனக்குள் மறைத்து வைத்து ஒன்றேயாய் நிற்கும் காட்டம் போலும் எ-று.

எனவே காட்டாய் நின்று விடயங்களை யறியும் வண்ணம் உயிர்க்கு அறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடை செய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி; இவ்விரண்டும் இங்ஙனம் ஒளியும்இருளும்போல இகலி நிற்பனவாகலான், அத்தன்மைத்தாய மாயை, இத்தன்மைத்தாய மலமாதல் யாண்டையது என மறுத்தவாறாயிற்று.

மற்றென்பது மலமன்றணைதல் என்பதனேடு இயைந்து வினைமாற்றின்கண் வந்தது. முற்றும்மை சிறப்பும்மைகள் தொக்கன. ஆமும் தானும் கட்டுரைக்கண் வந்த அசை.

வன்னி அதுவதுவாதல், காட்டத்துள் மறைந்துழிக் காட்டமேயாயும், சூரிய காந்தத்துள் மறைந்துழி அதுவேயாயும், இவ்வாறே அவ்வவற்றின் மறைந்துழித் தான் என்பது ஒன்றில்லை யென்னும் படிநிற்றல். அங்ஙனமாகியும் வீயாமை, கடைதல் முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவழித் தோன்றுதலாற் பெற்றும். தன்னுள்

மறைத்தல் வன்னி யென்பது ஒன்றில்லை யென்னும்படி பொதிந்து கொண்டு தானேயாதல். ஒன்றும் காட்டம். ஒன்றேபோல் அத்து விதமாங் காட்டமென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய அடையும் தொழிலும் இயைபும் பொருட்கண்ணும் கூறிக்கொள்க.

மாயை கன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தாலும் வேற்றுமை கூறுவார், அன்றணைதல் என்றார்.

இங்ஙனம் கூறிப்போந்த மலமாவது ஞானபாவ மென்பாரும், பிராந்தி ஞானமென்பாரும், தமோகுண மென்பாரும், பஞ்சக் கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சை யென்பாரும், மாயை கன்மங்க ளென்பாரும், சிவசத்தி யென்பாரும், உயிர்க்குணமென்பாருமாய் அவ்வச்சமய நூல்பற்றி மயங்குவாருமுளர். அம்மலத்திற்குப் பற்றுக்கோடாகிய சூனிய முதலியற்றின் வேறெனப்பட்ட ஆன் மாவும் இயற்கையாற் சடமென்பாரும், அறிவு மாத்திரையேயெனக் குணிப்பொருளன்றென்பாரும், சுதந்திர வறிவுடைத்தென்பாரும், அவ்வுடம்பளவிற் றென்பாரும், அணுவளவிற் றென்பாரும், உரு வென்பாரும், அரு வென்பாரும், உருவரு வென்பாருமாய் இன் னும் பல திறப்படக் கூறி மயங்குவாருமுளர். அவையெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட் காண்க; ஈண்டுரைப்பிற் பெருகும்.

இச் சகசமலம் ஞான திரோதகமாய்த் திரவியமாய் அறியாமைக் குணத்ததாய்ச் செம்பிற் களிம்புபோல உயிரின் குற்றமாய், அனாதி பந்தமாய்ச் சடமுமாய்ப் பலவுமாயின் அழிவெய்து மாகலின், அனாதி பந்தமாதல் பெறப்படாமையின், ஒன்றேயாய், விஞ்ஞா னகலர், பிரளயாகலர், சகலரென்னும் உயிர்ப் பாகுப்பாட்டிற் கேதுவாய், உயிர்கள்தோறுந் தனித்தனி வெவ்வேறாய் மறைத்து நின்று தத்தங் காலவெல்லையில் நீங்குவனவாகிய சத்திகள் பலப வுடைத்தாய், உயிர்கள் மூன்றவத்தைகளும் படுதற்கு மூலகாரண மாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகவுயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்ப் பசுத்துவம் பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி என்றற்றொடக்கத்துக் காரணக் குறிகளு முடைத்தாய் நிற்பதெனவும், படலம் படர்ந்தகண் ஞாயிற்றின் சந்நிதியில் நிற்பினும் படலத்தான் அவ்வொளியை யிழந்து இருளின் அழுந்துமாறு போல, முதல்வன் சந்நிதியில் நிற்பினும் சோபான முறையின் அறிவிக்க அறியுந் தன்மைத்தாயவுயிர் அநாதியே அறிவித்தால் அறிய மாட்டாமையின், அம்மாட்டாமையான் அவ்வறிவை யிழந்து அறியாமையாய் அழுந்துதலின் அஃது அவ்வுயிர்க்குப் பந்தமாயிற் றெனவும் உணர்க.

அனுதியே மலத்தின் நீங்குதல் முதல்வன் வினையாய் அனுதி முத்தத்தன்மையென எண்குணங்களுள்வைத்து எண்ணப்படுவது என்பது சிவாகமங்களுக் கெல்லாம் ஒப்ப முடிந்தாற்போல, அனுதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க் குற்றங்களுள் வைத்து எண்ணப்படுவ தென்பதூஉம் அவற்றிற் கெல்லாம் ஒப்பமுடிந்தது. ஈண்டுப்படும் கடா விடைகளெல்லாம் ஈரிடத்தும் ஒக்கும்.

(நு-வி) கடாவை-வினவை. ஆசங்கித்து-எழுப்பிக் கொண்டு மூவகை மலங்களுள் ஆணவம் ஒன்றே செம்பிற் களிம்பு போல வேறு காரணமின்றி உயிரொடு உடனுய் நிற்பது ஆதலின் அதனை சகசமலம் என்பர். ஏனைய கன்மமும் மாயையும் இடையில் பொருந்துவன வாதலின் அவற்றை ஆகந்துகமலம் என்பர். 'வல்லிமல கன்மம் அன்றுளவாம்' எனச் சிவஞானபோதமும், 'ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை இரண்டு ஆக இவை ஆறுஆதி இல்' எனத் திருவருட் பயனும் கூறும்.

கன்மம், மாயை ஆகிய இரண்டும் அநாதியென்று கூற, இவை இடையில் வந்து கூடினவென்றல் எங்ஙனம்? எனில், அவையிரண்டும் அநாதியென்பது உண்மையே. ஆயினும் அவை ஆணவமலம் போல உயிரொடு ஒருங்கிருந்தனவன்றி இடையில் இறைவனுல் கூட்டப்படுதலின் இடையில் வந்து தோன்றிய மலம் என்றனர். அவை உயிரோடு கூட்டப்படும் முன்னர் இறைவனின் உடைமையாய் இருக்கும். அரசனிடத்து அடங்கியிருக்கும் அமைச்சர் முதலியோரின் ஆற்றல் போல மாயையிருக்கும். அவற்றைத் தொழிற்படுத்தும் சட்டம் போலக் கன்மம் அமையும் இதனை 'அவை உடைமை ஆளாம் நாம்அங்கு' (சிவஞானபோதம்: இரண்டாவது நூற்பா-நான்காமதிகரணம்), 'அத்தன் தாள் நிற்றல்' (சிவஞான போதம்: முதல் நூற்பா-இரண்டாமதிகரணம்) என வரும் திருவாக்கால் அறியலாம்.

சேதனப் பொருளாயினும்-அறிவுடைய பொருளாயினும்.

ஆணவமலத்தின் இலக்கணம் பொது சிறப்பு என இருவகைப் படும். உயிர் கருவிகளோடு கூடிக் கட்டுநிலை (சகலநிலை) யில் இருக்கும் பொழுது, ஆணவ மலமும் உடனிருந்து விபரீத உணர்வைத் தரும். இவ்வாறு பிறவற்ருேடு தானும் இருந்து செய்தலின் இது பொது இயல்பு எனப்படும். விபரீத உணர்வாவது ஒன்றைப் பிறிதொன்ருக அறிவதாம். உயிர் கருவிகளோடன்றித் தனித்த நிலையில் (கேவல நிலை) இருக்கும் பொழுது ஆணவம் உயிருக்கு அறியாமையைச் செய்து நிற்கும். பிற துணையின்றித் தானே அறியாமையைத் தருதலின் இது ஆணவத்தின் சிறப்பு இயல்பு எனப்படும்.

சற்காரிய வாதம்–உள்ளது தோன்றுவதன்றி இல்லது தோன்ருது என்னும் கொள்கை. உயிரது அறிவை ஆணவமலம் மறைத்து நிற்கும். அதனின்றும் நீங்க இறைவன் கருவி கரணங்களைக் கொடுப்பன். அப்பொழுது உயிர்க்கு அறிவு தோன்றும். இவ்வாற்ருன் முன் மறைக்கப்பட்டிருந்த அறிவு தோன்றும் என்பதன்றி இல்லாத அறிவு தோன்றும் என்பதில்லை ஆதலின் சற்காரிய வாதத்திற்கு இக்கூற்று முரணுகாதாம்.

ஞானதிரோதகமாய்–அறிவைமறைத்துக் கொண்டு நிற்பதாய் வினைப் பெயர் – தொழிற்பெயர். செய்வது என்பதால் வினை முதலாயிற்று. மறைத்தல் என்பது வினையாயிற்று. ஆதலின் வினை முதல்மேல் நின்ற வினைப்பெயரென்ருர்.

ஞான + அபாவம் = ஞானுபாவம்–அறிவின்மை என்பதுஇதன் பொருளாகும். ஒளியின்மையே இருளன்றி இருள் என்பது ஒன்று யின்று என்பது போல, அறிவின்மையே அறியாமை என்பதன்றி அறியாமை என்பது ஒன்று இன்று எனக் கூறுவார் ஒரு சாரார். அறியாமை என்பது ஒன்றுஇன்ருயின் அது மறைத்தல் தொழிலைச் செய்தற்கியலாது. அத்தொழிலைச் செய்யவே அத்தொழிற்குக் காரணமாய அறியாமையும் உண்டென்பது பெறுதும்.

காட்டம் – விறகு, வன்னி – நெருப்பு. இகலி – மாறுபட்டு.

மாயை உயிர்க்கு விளக்கம் தருவது என்னும் செய்தியை அடுத்து, மலம் அறியாமையைச் செய்கின்றது என்ற பொருள் கூறப்பட்டுள்ளது.விளக்கம் தருதலாகிய வினையை மாற்றுதற்கண் மற்று என்பது வருதலின் அது வினைமாற்றின்கண் வந்தது என்ருர். ஒன்றையும் என நிற்க வேண்டிய முற்றும்மையும், அதுவதுவாயும் என நிற்க வேண்டிய சிறப்பும்மையும் தொக்கன. ஆயாதாம் என்பதிலுள்ள ஆம் என்பதும், அணைதல்தாம் என்பதில் உள்ள தாம் என்பதும் அசைநிலையாம்.

விறகிடத்து நெருப்பு இருந்தும் அதனை அது காட்டுவதில்லை. இரண்டும் ஒன்ருயே நிற்கும். விறகைக் கடைந்த வழி நெருப்புத் தோன்றும்.இது உவமையாம்.உயிரை ஆணவம் மறைத்துநிற்கும். கருவிகளோடு உயிர் கூடியவழி அவ்வுயிர் செயற்பாடு பெற்று அவ்வாணவத்தினின்றும் நீங்கி வெளிப்பட்டு நிற்கும். இது பொருளாம். அதுவதுவாய் நிற்பது அடைமொழியாகும். மறைத்து நிற்பது தொழிலாகும். ஒன்ருகவேயிருப்பது இயைபு ஆகும். அதைப்போன்றேஉயிரும் சார்ந்ததன் வண்ணமாய் அதுவதுவாய் நிற்கும் கருவிகளோடு கூடியவழித் தொழிற்படும். தான் சார்ந்த பொருளில் தான் ஒரு பொருள் இருப்பதாக வெளிப்பட அறிதலின்றி ஒன்ருகவே நிற்கும்.

மும்மலங்களுள் ஆணவத்தின் நிலை வேறு. ஏனைய மாயை கன்மங்களின் நிலை வேறு. ஆணவம் இறையும் உயிரும் போன்று அநாதியானது. மாயை கன்மங்களோ அவ்வாணவத்தின் வழி இடையே வந்து தோன்றியவை. இது கால வேற்றுமையாம். ஆணவம் உயிரைப் பற்றி நிற்றலின் அதற்கு இடம் உயிராகும். மாயை கன்மங்கள் இறைவனது உடைமையாய் இருத்தலின் அவற்றிற்கு இடம் இறைவனாகும். இது இடவேற்றுமையாகும். ஆணவம் உயிரை மறைக்கும் தகையது. மாயை கன்மங்கள் உயிரது அறிவை விளக்கும் தகையன. இது தொழில் பற்றிய வேற்றுமையாம். எனவே ஆணவத்திற்கும் இம்மலங்களுக்கும் காலத்தானும் இடத்தானும் தொழிலானும் வேற்றுமை உளவாதலை அறியலாம்.

இவ்வாணவத்தைப் பற்றி விளக்கம்தருவார் பலதிறத்த வராவார். உயிரிடத்து ஞானம் இல்லாமையே ஆணவம் என்பார் ஒரு சாரார். ஞானஅபாவம்—ஞானம் இல்லாமை. மயக்க உணர்வே ஆணவம் என்பார் ஒரு சாரார். பிராந்தி—மயக்கம்: பொருளல்லவற்றைப்பொருளென்று உணர்வது. முக்குணங்களுள் ஒன்றான தமோ குணமே ஆணவம் என்பார் ஒருசாரார். அவிச்சை அகங்காரம் அவா விழைவு வெறுப்பு ஆகிய ஐவகைக் குற்றங்களுள் அவிச்சையே ஆணவம் என்பார் ஒருசாரார். அவிச்சை—அறியாமை. பஞ்சக்கிலேசம்—ஐவகைக் குற்றம். மாயை கன்மங்களேஆணவம் என்பார் ஐக்கிய வாதரும் பாசுபதர் முதலானோரும். ஆணவம் உயிர்க்குணம் என்பார் பாடாண வாதிகள். ஆணவமலம் சார்தற்கு இடனாய் உள்ளது உயிர். அது இல்பொருள் அன்று; உடல் முதலிய பொருளும் அன்று. அங்ஙன மாகவும் உயிரும் ஆணவமும் யாரானும் தோற்றுவிக்கப்படாத பொருள்களாய் இருத்தலின் அவ்வியற்கை நிலையில் அவ்விரண்டுமே அறிவற்றன என்பார்.சடம் என்பார் வைசேடிகர் உயிர் அறிவளவாய குணப்பொருளே யன்றிக் குணிப்பொருள் அன்றென்பார் சாங்கியர். குணி—குணத்தை உடையது. உயிர் தன் வயத்ததாய அறிவுடைத்து என்பார் பட்டாச்சாரியர். உயிர் தான் சார்ந்த உடல் அளவாய்ப் பெருகி நிற்பது என்பார் சமணர் உயிர் அணுவளவாய சிறிய வடிவினது என்பார்பாஞ்சராத்திரிகர். அது உருவுடைய தென்பார் பௌராணிகர். அருவாயதென்பார் பாதஞ்சலர். அருவுருவாய தென்பார் கௌடர்.

ஞான திரோதகமாய்—உயிரின் அறிவை மறைப்பதாய். திரவியமாய்—பொருளாய். சடமுமாய்—அறிவற்றதுமாய். மூன்ற வத்தை—தனிநிலை, கட்டு நிலை, தூயநிலை, உயிர் எங்கும் சென்று எதனையும் நன்கு அறிதற்கு உரியதாயினும், ஆணவப் பிணிப்பால்

உடலொடு கட்டுண்டு எதனையும் அறிவிக்க அறிந்தும், அறிந்ததை மறந்தும் நிற்கின்றது. இவ்வாறு உயிர்க்குச் சிறுமை (அணுத்தன்மை) செய்தலின் ஆணவம் எனப் பெயர் பெற்றது. பசுத்துவம்–கட்டுண்டு நிற்கும் நிலை. உயிரைப் பிணித்து நிற்றலின் ஆணவம் இப்பெயர் பெற்றது. பசுநீகாரம்–உயிரது அறிவை மறைத்து நிற்பது. மிருத்தியு–உயிர் உடலொடு தொடர்ந்து நிற்கச் செய்யாது மாறிப் பிறக்கச் செய்வது. மூர்ச்சை–அறிவை மயங்கிக் கிடக்கச் செய்வது. மலம்–உயிரை மாசுறச் செய்வது. அஞ்சனம்–இருள் போல நின்று உயிரது அறிவை மறைப்பது. அவித்தை – உயிருக்கு அறியாமை செய்வது. ஆவிருதி–உயிர் தன்வழி இயங்காதவாறு அதனை மூடி நிற்பது. இவ்வாற்றான் ஆணவத்தைக் குறிக்கும் பெயர்கள் காரணக் குறிகளாயின. காரணக்குறி – காரணப் பெயர். படலம்–இருள் திரை. சோபான முறையின்–படிப்படியாக அறியும் முறை. பந்தம்–கட்டு.

இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றல் இறைவனுக்கு இயல்பாயினும், அது அம் முதல்வனின் தொழிலாயும் அவனது எண் குணங்களுள் ஒன்றாயும் இருப்பது போல, இயல்பாகவே மலத்தொடு கட்டுண்டு நிற்றல் உயிர்க்கு இயல்பாயினும், அது அதற்குரிய தொழிலாயும், அதற்குரிய குற்றமாயும் கூறப்படுதல் சிவாகமங்களுக்கு எல்லாம் ஒப்ப முடிந்ததொன்றாம்.

எண் குணங்களாவன தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல் இயற்கை வுணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை, என்பனவாம்.

ஈரிடத்தும் – உயிர் இறைவன் ஆகிய ஈரிடத்தும்.

## மூன்றாம் அதிகரணம்

### மேற்கோள்

இனி, இவ்வான்மாச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கும் என்றது.

என்பது மேற்கோள். என்னுதலிற்றோ வெனின், இருளினகப் பட்ட கண் விளக்கோடு கூடிய வழி, விடயங்களைக் காண்டலே யன்றி வெவ்வேறு அவத்தைப்படுமாறு இல்லை; அதுபோல மலத்திலகப்பட்ட உயிர் கருவிகளோடு சந்தித்தவழி ஒரு தன்மைத்தாய் அறிதலே அமைவுடைத்து; அவ்வாறன்றி, மேலைச் சூத்திரத்து ஓதிய முறையான் ஐம்புலன் அறிந்தும், ஒடுக்கம் அறிந்தும், உண்டி வினையின்றிக் கிடந்தும், உணர்த்த உணர்ந்தும், இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுமாறு

யாங்ஙனம் என அவர் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று

இதன் பொருள் வெளிப்படை.

அவத்தையெனப் படுவன பலவுளவாகலின், அவற்றுள், ஈண்டு ஐந்தவத்தையெனப் பட்டவை யாவை யென்னும் ஐயம் நீங்குதற்குக் கிளந்தெடுத் துரைத்தார். அவத்திதன் என்னும் வடமொழி ஆடூஉவறி சொல்லாற் கூறியது அவர்மதம் பற்றி.

அமைச்சர சேய்ப்ப நிற்றலான் என்பதூஉம் ஈண்டு வருவித் துரைத்துக்கொள்க. கொள்ளவே, "படைகொடு பவனிபோதும்" வேந்தன், "கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டு" அந்தப் புரத்திற் செல்லுமாறு போல, ஆன்மா அங்ஙனம் அஞ்சவத்தைப் படுதல் அமைவுடைத்தென விடுத்தவா ருயிற்று.

ஏது

*அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்,*

என்பது ஏது. என்னுதலிற்றோ வெனின், அரசன்போல் உயிர் அங்ஙனம் அஞ்சவத்தைப் படுமாயின், வியாபகத்திற்கு இழுக்காய் முடியும்போலும் என்னும் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வுயிர்தான் மலவடிவின் மறைப்புண்ட வழி அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாய் நிற்றலான், அத்தத்து வங்கள் தொழிற்படும் அவத்தை வேறுபாடு பற்றி, இனி இவ்வான் மாச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கும் என மேற்கொண்டது எ-று.

"சீவனே வியாபி அவத்தையின் இழிந்து திரும்புதல் குற்றமாம் கருவி, சேருதல் பிரிதல் இல்லையாம் முறையிற் செயப்படுங் கருவியே தெரியும், தாவிலா அறிவு தங்கின இடமே தகுமுயிர்க்கு இருப்பிடம்" (உலகுடை நாயனர் திருவிருத்தம்-3) என்றதூஉம் இப்பொருள் பற்றியென்க.

தத்துவ வன்ன ரூபனாதல் வீடுபெற்றுழியும் உண்டுபோலும் என்று ஆசங்கை நிகழாமைப் பொருட்டு, மலசொரூபத்தின் மறைந்தென மேற்கூறிப் போந்ததனை வழிமொழிந்துகொண்டு அரூபசொரூபியாய் நிற்றலான் என்று ஏதுக்கூறினார். மறைத்தவழி யென்றது மறைந்தெனத் திரிந்து நின்றது.

எடுத்துக்காட்டு

**ஒன்றணையா மூலத்து உயிரணையும் நாபியினில்**
**சென்றணையும் சித்தம் இதயத்து-மன்றவே**
**ஐயைந்தாம் நன்னுதலில் கண்டத்தின் வாக்காதி**
**மெய்யாதி விட்டகன்று வேறு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், தத்துவங்கள் தொழிற்படுதற்கண் நிகழும் அவத்தைவேறுபாடு தெரித்துணர்த்தி அஃது ஏதுவாதலை விலியுறுத்துதல் நுதலிற்று.

நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம்; கண்டத்தின், வாக்காதி மெய்யாதி விட்டகன்று வேறுஐயைந்தாம்; இதயத்திற் சித்தம் சென்றணையும்; நாபியினில் உயிரணையும்; அணையா மூலத்து ஒன்று என இயையும்.

(இ-ள்) நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம்-சாக்கிரத்தானும் எனப்படும் இலாடத்திற் புறவிந்திரியம் பத்தினையும் தேற்றமாகப்பொருந்திய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; கண்டத்தின் வாக்காதி மெய்யாதி விட்டு அகன்று வேறு ஐயைந்தாம்-சொப்பனத்தானம் எனப்படும் கண்டத்தின் அப்பத்தினையும்விட்டு நீங்கி வேறாய் இருபத்தைந்து கருவிதொழிற்படும்; இதயத்திற் சித்தம் சென்றணையும்-சுழுத்தித்தானம் எனப்படும் இதயத்துள் அவற்றுள் இருபத்திரண்டு கருவிகளை விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் இரண்டு கருவிகளோடு கூடிய சித்தம் தொழிற்படும்; நாபியினில் உயிர் அணையும்-துரியத்தானம் எனப்படும் உந்தியிற்சித்தத்தையும் விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் புருட தத்துவத்தோடு பிராணவாயுக் கூடித் தொழிற்படும்; அணையா மூலத்து ஒன்று-இக்கருவிகளொன்றும் அணையாத அதீதத்தானம் எனப்படும் மூலாதாரத்திற் புருடனொன்றே நிலைபெறும் எ-று.

எனவே இலாடத்தான முதலிய ஐந்தினும் நிற்கும் கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றும் என்பது போந்தவா றுணர்க.

மன்ற வென்பது தேற்றப்பொருட்டாகிய இடைச்சொல். ஏய் ஐயைந்து என்புழி, ஏய்தல், பொருந்துதல், வினைத்தொகை. வாக்காதி மெய்யாதியை யென இரண்டாவது விரித்துரைக்க. அஃது ஈரிடத்தும் சென்று இயையும்.

வருகின்ற சூத்திரத்தில் "மெய் வாய் கண் மூக்கு" எனச் செய்யுட்கேற்ப, மெய்யை முற்கூறுதலின், அம்முறைபற்றி ஈண்டுச் செவியாதி யென்னது மெய்யாதி யென்றார்.

அவற்றோடு கூடிய இருபத்தைந்தாவன: அவ்விந்திரியம் பத்துக்கும் விடயமாகிய வசனாதி சத்தாதி பத்தும், அவற்றிற்கு உட் கருவியாகிய அந்தக்கரணங்கள் நான்கும், அவற்றோடி கூடி அவத்தையுறுவதாகிய புருடனென்றும், அஃது அவத்தை யுறுதற் குரிய மதுகைக் கேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணாதி வாயுக்கள் பத்துமென இவை. ஈண்டு சத்தாதி யென்றது வசனாதி போலும் விடயங்களை யெனக் கொள்க. எனவே பூதங் களின் கூறாய் அவற்றுடனின்று தேராழிக்குத் தேருறுப்புப்போல இந்திரியங்களின் தொழிற்பாட்டுக்கு மதுகையை விளைத்து நிற்பன வாய புறக்கருவி அறுபதில் ஈண்டுக் கூறிப்போந்த விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும் ஒழித்து ஒழிந்த புறக்கருவிகள் நாற்பதும், அவற்றையுடைய பூதங்களைந்தும், அவற்றிற்கு வலியாய் உடனிற்பனவாய சூக்கும பூதமெனப்படும் தன்மாத் திரைகளைந்தும் என்னும் ஐம்பது கருவிகளும் கீழ்நோக்கிய சாக்கிரத்தானத்தில் தமது சத்தி மடங்கி வினைக்கீடாகத் தொழிற் படா தொழியு மெனவும், அவை ஒழிந்தவழி அவத்தைக்கேதுவாய் நின்ற ஏனைப் பொறி முதலிய முப்பத்துநான்கும் அவற்றோடு கூடிய புருட தத்துவமும் இருவகைப் பூதங்களாலும் புறக்கருவி களானும் தரப்படும் மதுகை யின்மையின், ஆண்டுப் பொறிகளின் தொழிற்பாடு மெத்தன நிகழுமெனவும் கொள்க. கலாதிகளும் சுத்த தத்துவமும் அவத்தைக் கேதுவாகாமையின் உடனெண்ணா ராயினர். ஏனையவும் விரிந்த நூல்களுட் கூறியவாறு பற்றி யுணர்ந்துகொள்க.

எடுத்துக்காட்டு

**இலாடத்தே சாக்கிரத்தைஎய்திய வுள்ளம்**
**இலாடத்தே ஐந்தவத்தை எய்தும்—இலாடத்தே**
**அவ்வவ விந்திரியத்து அத்துறைகள் கண்டுஅதுவே**
**அவ்வவற்றின் நீங்கல்அது வாங்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அங்ஙனம் ஆதீதத்தை யெய்திய புருடன் மீளப் பிரேரக அவத்தையாகிய உணர்த்து முறைமைச் சாக்கிரத்தைத் தலைப்படுமாறு அனுவாத முகத்தான் விளக்கி, அவ்விடத்தினும் முறைமையிற் செலுத்தும் பிரேரகக்கருவிகள் ஐந்தன் தொழிற்பாடு பற்றி ஐந்தவத்தை நிகழுமென்தூஉம் அவை இவை யென்பதூஉம் சுத்தா வத்தையும் இவைபோல் உண்டு என்பதூஉம் கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம் — இலாடத் தானத்தின் நீங்கி ஆண்டாண்டு அவத்தைப்பட்டுக் கீழ்ப்போந்து மூலாதாரத்தின் எய்தியபின் மறித்தும் அவ்வாறே ஆண்டாண்டு அவத்தைப்பட்டு மேற்சென்று இலாடத் தானத்தின் உணர்த்து முறைமைச் சாக்கிரத்தைத் தலைப்பட்ட புருடன்; இலாடத்தே ஐந்தவத்தைஎய்தும்—ஆண்டும், சாக்கிரச் சாக்கிர முதலிய ஐந்தவத்தையுறும்; இலாடத்தே அவ்வவ இத்திரியத்து அத்துறைகள் கண்டு— அவையாவன அவ்விலாடத் தானத்தின்கண்ணே அவ்வப் பொறிகளான் அவ்வவ் விடயங்களை யுணர்ந்து; அதுவே – அப்போதப் போதே; அவ்வவற்றின் நீங்கல்—அவ்வவ் விடயங்களின் நீங்குதலாம்; அது ஆங்கு— இனி முன்னர்க் கூறப்படும் சுத்தாவத்தையும் இவை போல ஐவகைப்படும் எ-று.

மேற்செல்வுழி ஆண்டாண்டுப் படும் அவத்தைகளும் கீழ்ச் செல்வுழிப் போலன்றி விசேடமின்மையின் வகுத்தோதாது இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம் என அனுவாத முகத்தாற் கூறியொழிந்தார். இழியுங்காலும் ஏறுங்காலும் கண்டத் தானத்திற் கனுக்காண்டல் உண்டு என்பது முறையே ஞானமிர்தத்தினும் போற்றிப் பஃறொடையினும் காண்க.

அவ்வவ விந்திரியம், ஆண்டாண்டு விடயித்தற்குரிய இந்திரியம். அவ்வவ்விடயம், ஆண்டாண்டு புலனுதற்குரிய விடயம். கண்டு நீங்கல் என இயையும். அது, அவ்வக்காலம். ஈண்டும் அடுக்கிக் கூறிக் கொள்க. கண்ணுருபு தொகுத்து ஏகாரம் விரித்தார். கண்டதென ஒருமொழியாக வைத்துரைப்பாரு முளர்; குற்றியலுகரத்தின் முன் உடம்படுமெய் பெறுதற்கு ஒத்திலாமையானும் பொருட்சிறப்பின்மையானும் அஃது உரையன்மை யறிக.

அப்போதப்போது நீங்கலாவது, விடயங்களைக் கண்டகண்ட பொழுதே அவற்றை அயர்த்துவிடுதல். "ஒன்றன்பாலும் வரு பயன் மாறிமாறி வந்திடும்'' என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி யென்க. "கரணந்தன்னில் செயல்தோறுங் கண்டுகொள்க நீ'' "உடுத்திடுங் கரணந்தன்னில் செயல்தோறு முணர்ந்து கொள்ளே'' என்பனவுமது. இந்நுட்ப முணர்ந்து கோடற்குத் தூலாருந்ததி நியாயம் பற்றிக் கைப்பொருளை வீழ்த்தித் தெளிதல் முதலிய தூலத்துள் வைத்துக் காட்டுப.

இனி, அரூப சொரூபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையின் இயல்பு கூறதற்கெடுத்துக்கொண்ட இவ்வதிகரணத்தின்கண் அதனோடு இயைபில்லாத சுத்தத்தின்கட்படும் ஐந்தவத்தை

கூறுதற்கு ஓர் இயைபில்லையாயினும், அவத்தை யெனப் படுவன ஈண்டு ஓதியன மாத்திரையே போலும் என மயங்கா மைப் பொருட்டு வேறும் ஐந்தவத்தையுள; அவை முன்னர்க் கூறப்படும் என்னும் துணையே கூறுவார், "அதுவாங்கு" என் றொழிந்தார். இக்கருத்தே பற்றி, "பிறிவிலாஞானத்தொரும் பிறப்பற அருளால் ஆங்கே, குறியொடும் ஐந்தவத்தை கூடுவர் வீடுகூட" என்றொழிந்தார் வழிநூலாசிரியரும்.

இவ்விரண்டு வெண்பாக்களானும் கூறிப்போந்த முத்திறத்து ஐந்தவத்தைகட்கு முறையே மூலமாய கேவலம், சகலம் சுத்த மென்ற மூன்றனுள் வைத்துத்தன்னுண்மை யெனப்படும் கேவலத் தின் இயல்பு சகச மலத் துணரா தென்பதனானே பெற்றும். ஏனைச் சகலத்தின் இயல்பு வருகின்ற சூத்திரத்தினும், சுத்தத்தின் இயல்பு அப்பாலைச் சூத்திரத்தினும் பெறுதும்.

(நு - வி) சாக்கிரம் - நனவு. சொப்பனம் - கனவு. சுழுத்தி- உறக்கம். துரியம் - பேருறக்கம். துரியாதீதம் - உயிர்ப்படங் கல். பஞ்சாவத்தனுய் - ஐந்து அவத்தை உடையனுய்.

ஐந்தவத்தை உடையனுய் எனத் தொகை கொடுத்ததோடமை யாது சாக்கிரம் முதலிய ஐம்பெயர்களையும் எடுத்துக் கூறியது உயிர் சகல நிலையல் இருக்கும் நிலையில் ஏற்கும் அவத்தை நிலைகளைக் குறிக்கவாம். எனவே தனிநிலை (கேவலம்), தூயநிலை (சுத்தம்)களிலும் உயிர் அவத்தையுறும் என்பது பெற்றும். அவத்திதன் என உயிரை ஆண்பாற் படுத்தி இருப்பது வடமொழி வழக்குப் பற்றியாம்.

உயிர் ஐந்து அவத்தை உறுதற்குக் காரணம் அகக்கருவிக ளும் தானும் அமைச்சரசாக நிற்றல் பற்றியாம். அதனல் ஈண்டு அத்தொடர் வருவித்து உரைக்கப்பட்டது. இந்நிலையில் படைக ளும் பரிசனங்களும் சூழ உலாச் சென்ற அரசன், பின் தன் அரண்மனை புகுங்கால் அவ்வவ் வாயிலிலும்நிற்கவேண்டியவரை நிறுத்தித் தான் உள் நுழைதல் போல், உயிரும் அகக்கருவி முதலிய கருவிகளுடன் கூடி நனவு நிலையில் நின்ற பின் கண்டம் முதலாய வாயில் வழி மூலாரத்திற்குச் செல்லுங்கால் அவ்வவ் விடத்தும் நிற்கவேண்டிய கருவிகளை நிறுத்தித் தான் மட்டும் உட்போகும் என்பதாம்.

அதுதான் - அவ்வுயிர்தான், மல சொருபத்தில் மறைந்து - மலவடிவில் மறைந்து. அருபசொருபியாய் - அருவுடம்பாகிய தத்துவ வடிவாய்.

அமைச்சரசு ஏய்ப்ப என்ற உவமையால் உயிர் அரசனுகின் றது; அகக்கருவிகள் அமைச்சர்களாகின்றன. அரசன் ஓரிடத்து

இருப்பின், பிறிதோரிடத்தில் இலனுகின்ருன். அவனைப் போன்றதே உயிரெனின் யாண்டும் இருத்தலாகிய வியாபகத்திற்கு இழுக்காகின்றது. இது எங்ஙனம் பொருந்தும்? என்பது வினு. உயிர் வியாபகமாயினும் இறைவன்போல் யாண்டும் நீக்கமற நிறைந்திருக்கும் வியாபகம் அதற்கு இன்று. தான் சார்ந்த பொருள் அளவில் முழுமையாய் நிற்றல் என்பதே, உயிர் வியாபகம் என்பதன் கருத்தாகும். எனவே உயிர் ஐந்தவத்தைப் படுங்கால் கருவிகளோடு கூடும் நிலையில் அக்கருவிகள் அளவாயும், கூடாவிடத்துத்தான் இருக்கும் இடத்தின் அளவாயும் வியாபித்து நிற்கும் என்பதாம்.

உயிர் வியாபியாயின் அவத்தையுறுங்கால் போக்குவரவு புரிதல் குற்றம் எனில் அற்றன்று. கருவிகளொடு கூடி நிற்றலாகிய நனவும், அவற்றைப் பிரிதலாகிய கனவு, உறக்கம், பேருறக்கங்களும், கருவியில்லாத உயிர்ப்படங்கலுமாகிய அவத்தைகள் கருவிகளொடு கூடியும் பிரிந்தும் முழுமையாக அவற்றின் நீங்கியும் நிற்கும் நிலையில் உண்டாவனவாம். இவ்வாறு கருவிகளொடு கூடியும் கூடாதும் இருக்கின்ற அறிவு இருக்கும் இடமே உயிர் இருக்கும் இடமாம் என்பது மேற்கூறிய உல்குடைய நாயனுர் திருவிருத்தத்தின் கருத்தாகும். உயிர் தான் சார்ந்த பொருளின் வழி வியாபியாய் நிற்றலின் அதன்வியாபகத்திற்கு இழுக்கில்லை என்பதை விளக்கவே இம்மேற்கோள் எழுந்தது.

தத்துவ வன்ன ரூபனுதல்-நுண்ணுடம்பு உடையனுதல். உயிர் ஐந்தவத்தைப் படுதற்கு அருபசொரூபமாய் நிற்றலால் என்ற தொடரே அமைவதாய் இருக்க, மல சொரூபத்தில் மறைந்து என்ற தொடர் மிகைப்படக் கூறலன்ருே என்பது வினு. அருபசொரூபியாய் நிற்றல் என்ற ஒரு தொடரே அமையின், உயிர் தத்துவ வடிவாய் நிற்றல் என்றும் உளதெனப் பட்டு, வீட்டு நிலையிலும் அவ்வாறு இருக்குமெனக் கருதற்கு இடமாகும். ஆனுல் வீட்டு நிலையிலோ உயிர் தத்துவ வடிவாகிய நுண்ணுடம்பையும் இழந்து இறைவன் திருவடியை அணைந்து நிற்கும். எனவே தத்துவ வடிவினதாய் உயிர் நிற்பது மலத்தொடு மறைந்த வழியே என்பது விளங்க, மல சொரூபத்தில் மறைந்து என்ருர். வீடு பெற்றவழி அவ்வடிவும் இல்லையென்பது அறியத்தக்கது. மலசொரூபத்தில் மறைந்து எனவே அருபசொரூபி என்பது பெறுதும். ஆதலின் அதனை வழிமொழிந்தது என்ருர். வழிமொழிதல் என்பதை வடநூலார் அநுவதித்தல் என்பார்.

இலாடம்-புருவ நடு: இரு புருவங்கட்கும் இடையே உள்ள நடுவிடம்.

உயிர் ஐந்தவத்தைப் படுங்கால் கருவிகளொடு கூடியும் பிரிந்தும் இல்லையாகியும் நிற்கும் நிலையை 'ஒன்றணையா மூலத்து' என்னும் வெண்பா கூறுகின்றது.

நிலை இடம் கருவிகள்

நனவு புருவ நடு 1. அறிகருவி ஐந்து: மெய், வாய், கண், மூக்கு, செவி.

2. தொழிற்கருவி ஐந்து: வாய், கை, கால், எருவாய், கருவாய்.

3. அறிபுலன் ஐந்து: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

4. செய்புலன் ஐந்து; பேசல், நடத்தல், உழைத்தல் (வசனம்), (கமனம்), (தானம்), கழித்தல், மகப்பெறல் (விசர்க்கம்), (ஆனந்தம்).

5. அறிவு வளி ஐந்து; உயிர்க்காற்று, மலக்காற்று (பிராணன்), (அபானன்) தொழிற்காற்று, ஒளிக்காற்று, நிரவுக்காற்று (வியானன்), (உதானன்), (சமானன்).

6. தொழில்வளி ஐந்து: தும்மற்காற்று, விழிக்காற்று. கொட்டாவிக் காற்று, (நாகன்), (கூர்மன்), (கிருகரன்), இமைக்காற்று, வீங்கற்காற்று (தேவதத்தன்), (தனஞ்சயன்)

7. அகக்கருவி நான்கு: மனம், புத்தி, சித்தம், அகங்காரம்

புருடன் (ஆள்) ஒன்று.

ஆக முப்பத்தைந்து

கனவு (சொப்பனம்) கழுத்து
அறிபுலன் ஐந்து,
செய்புலன் ஐந்து,
அகக்கருவி நான்கு,
அறிவு வளி ஐந்து,
தொழில் வளி ஐந்து,
புருடன் ஒன்று,
ஆக இருபத்தைந்து.

உறக்கம் (சுழுத்தி) நெஞ்சு
உயிர்க்காற்று (பிராணன்)
சித்தம்,
புருடன்,
ஆக மூன்று,

| | | |
|---|---|---|
| பேருறக்கம் (துரியம்) | கொப்பூழ் | உயிர்க்காற்று (பிராணன்) புருடன் ஆக இரண்டு. |
| உயிர்ப்படங்கல் (துரியாதீதம்) | மூலம் | புருடன் ஒன்று மட்டுமே. |

ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரம்
கைகண்ட ஐயைந்தில் கண்டம் கன என்பர்
பொய்கண்ட மூவர் புருடர் சுழுமுனையில்
மெய்கண் டவனுந்தி மேவல் இருவரே

எனவரும் திருமூலர் திருமந்திரமும் (2002) இதனை விளக்கும்.

தேற்றப் பொருள்-உறுதியாக எனப் பொருள்படுவது. 'மன்ற என்கிளவி தேற்றம் செய்யும்' என்னும் தொல்காப்பியமும். ஏய் ஐயைந்து-பொருந்திய இருபத்தைந்து. முக்காலத்தொடும் இயைய விரிதலின் வினைத்தொகையாயிற்று. வாக்காதி மெய்யாதி என்பன வாக்கை ஆதியாக மெய்யை ஆதியாக என விரிக்கத் தக்கன. ஈரிடத்தும்-நுதல் கண்டம் ஆகிய ஈரிடத்தும்.

தொழிற் கருவி ஐந்தனுள் சொல் முதன்மையாதல் போல, அறிவுப் பொறி ஐந்தனுள் செவி முதன்மையாகும். அவ்வாறாக 'மெய்யாதி' என மெய்யை முற்கூறியது வருகின்ற நூற்பாவில் (5 வது நூற்பா) 'விளம்பியவுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு' என மெய்யை முற்கூறியதற்கு ஏற்பவாம். இவ்வாறு சொல்லையும் செவியையும் அவ்வக் கருவிகட்கும் முதன்மையாக வைத்துக் கூறுதல் ''வாக்கொடு பாதம் பாணி வாயுவோடு உபத்தம் ஐந்து'' ''நற்செவி துவக்குக் கண்ணு நாசி'' என வரும் சிவஞான சித்தியார் பாடல்களாலும் அறியலாம்.

விடயமாகிய-புலனாகிய. மதுகை-வலிமை. சத்தாதி-சப்தம் பரிசம் முதலியன. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பனவே, அவை. இவை பொறிவழி நுகரப்படுவன. இவையன்றி ஐம்பெரும் பூதங்கட்கும் வலிமை தருவதாய் அவற்றுடன் நிற்கும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனக் கூறப்படுவனவும் உள. அவையும் தன்மாத்திரை எனப்படும். ஆயினும் அவை ஐம்பெரும் பூதங் களும் தோன்றுதற்குக் காரணமாவனவாம். பொறிவழி நுகரும் இப்புலன்களோ உயிர்களின் நுகர்வுக்குக் காரணமாய் இருப்பன. இவை தம்முள் வேற்றுமை.

புறக்கருவி அறுபதாவன:-

மண்ணின் கூறு; மயிர், தோல், தசை, எலும்பு, நரம்பு. 5

**நீரின் கூறு:** குருதி, வெண்ணீர் (விந்து), சிறுநீர். கோழை (சிலேத்துமம்), வியர்வை. 5

**தீயின் கூறு:** இருதலை (வாய், கருவாய்) வெப்பம், உட்கொள்ளும் உணவு, நீர் முதலியவற்றை அழிக்கும் வெப்பம், கண் உடலில் இருக்கும் வெப்பம், உடனுறைவு வெப்பம், மிகு வெப்புத்தால் நிலைமாறும் பித்து. 5

**காற்றின் கூறு:** உயிர்க்காற்று (பிராணன்), மலக்காற்று (அபானன்), தொழிற்காற்று (வியானன்), ஒளிக்காற்று (உதானன்), நிரவுக் காற்று (சமானன்), தும்மற்காற்று (நாகன்), விழிக்காற்று (கூர்மன்), கொட்டாவிக் காற்று (கிரிகரன்), இமைக் காற்று (தேவதத்தன்), வீங்கற்காற்று (தனஞ்சயன்). 10

**விண்ணின் கூறு:** இடப்பால் நரம்பு. வலப்பால் நரம்பு, நடுநரம்பு, இடக்கண் நரம்பு, வலக்கண் நரம்பு, இடச்செவி நரம்பு, வலச்செவி நரம்பு, உள்நாக்கு நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு. 10

**குற்றங்கள்:** மகளிரை விரும்புதல், மாறுபாடு, இவறன்மை எப்பொருள்களிலும் வேட்கை கொள்ளுதல், தன் முனைப்பு.

**தொழிற் கருவிகளின் தொழில்:** பேசல், நடத்தல், கொடுத்தல், மலக்கழிவு செய்தல், கருக்கழிவு செய்தல். 5

**தன்மாத்திரைகள்:** சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். 5

**வாக்குகள்:** நுண்ணோசை (சூக்குமை), நினைவோசை (பைசந்தி), மிடற்றோசை (மத்திமை), செவியோசை (வைகரி). 4

**முக்குணங்கள்:** அமைதி, வெகுளி, மடி 3

**மும்முனைப்புகள்:** தைசதம், வைகாரியம், பூதாதிகம். 3

கலாதிகளாவன—கலை, வித்தை, அராகம், காலம், நியதி மாயை என்பன. சுத்த தத்துவமான—சிவம், சத்தி, சதாசிவம், ஈசுவரம், சுத்தவித்தை என்பன. கலை முதலிய ஆறு தத்துவங்களுடனும் கூடிய உயிரே புருட தத்துவம் எனப்படும், அது தொழிற்படுதற்கு ஏதுவாய் இருப்பது சிவ தத்துவமாகும். எனவே

அத்தத்துவம் தொழிற்படுதற்கு ஏதுவாய் இருப்பதன்றித் தொழிற்கு ஏதுவாய் இல்லை என்பது பெறுதும்.

நனவு கீழ் நோக்கியதென்றும், மேல் நோக்கிய தென்றும், இரண்டும் நோக்காத தென்றும் மூவகைப்படும். கீழ்நோக்கிய நனவானது கனவு முதலிய அவத்தைக்கு உரியது. அஃதாவது புறத்தொழிலை விட்டு உறக்கத்திற்குச் செல்ல எண்ணிப் படுத் திருக்கும் அமையத்து உறக்கம் வருதற்கு முன் உளதாகிய நிலையாம். இந்நிலையில் தொழிற்பாட்டிற்குரிய ஐம்பது கருவிகளும் தமது வலி மடங்கிக் கிடக்க உறக்கம் வரும் வரையும் முப்பத்தைந்து கருவிகளும் தொழிற்படும். அவ்வாறு தொழிற் படினும் புறத்தே செயற்படுங்கால் அறிவுப்பொறிகளும், தொழிற் பொறிகளும், விரைந்து செயல்படுவன போலச் செயற்படாது மெதுவாய் நிகழும். இந்நனவு நிலை புருவ நடுவிலிருந்து சுழுத்தி முதலாகக் கீழ் நோக்கு தற்குரியதாய் நிற்றலின் கீழ்நோக்கிய நனவு நிலை எனப்படும். இதனைக் கீழாலவத்தை என்ப. மேல் நோக்கிய நனவு நிலை என்பது நெஞ்சு, கழுத்து, நாக்கின் அடி. புருவநடு, உச்சித்துளை என்னும் ஐந்தனுள் நெஞ்சிடத்து மன ஒருமை ஏற்படுதற்குக் காரணமாய் மேல்நோக்குதற்குரியதாகும். இவ்வைந்தன் நிலையையும் மேலாலவத்தை என்ப. இரண்டும் நோக்காத நனவு என்பது புறப் புலன்களை நுகர்தற்குரியதாய் புருவ நடுவில் நிகழ்வதாகும். இந்நிலையில் தொண்ணூற்றுறு கருவிகளும் தொழிற்படும். இங்கும் ஐந்தவத்தை நிகழும். அரசனுவான் அத்தாணி மண்டபத்தை மையமாகக் கொண்டு உலாப் போதலும், பின் அங்கு வந்தே அரண்மனையின் உட் போதலும் போல, உயிரும் புருவ நடுவிலிருந்தே புறப் பொருள்களைப் பற்றித் துய்த்தும், பின் அவ்விடத்திற்கு வந்தே கழுத்துமுதலிய இடங்களின் வழியாக மூலாதாரத்திற்குச் சென்றும் வரும், புருவ நடுவிலிருந்தே புறப்பொருள்களைப் பற்றித்துய்க்கும் நிலையை மத்தியாலவத்தை என்ப.

அதீதத்தை எய்திய புருடன்–உயிர்ப்படங்கலாகிய நிலையைப் பெற்ற புருடன். பிரேரகவத்தை–எல்லாக் கருவிகளொடும் கூடித் தொழிற்படும் நிலை, பிரேரகம் – செலுத்துதல். உணர்த்தும் முறைமைச் சாக்கிரம்–உறக்கத்தினின்றும் நீங்கிய பொழுது எழும் நினைவு.

உயிர் மூலாதாரத்திலிருந்து நனவு நிலைக்கு வரும் நிலையில் ஒரு சிறப்பில்லை. ஆனல் புருவ நடுவிலிருந்து கீழ் நோக்கிச் செல்லும் நிலை படிப்படியாக, அடங்கிச் செல்வதொன்ருகும். ஆதலின் மேல் நோக்கிய நிலையை ஒவ்வொரு நிலையிலும் வைத்து நோக்காது புருவ நடுவில் நிற்கும் நனவு என அநுவாதத்தால் கூறினர்.

இழியுங்கால்— கனவு, உறக்கம் முதலான நிலைக்கு இறங்குங் கால், ஏறுங்கால்—பேருறக்கம், உறக்கம் என மேலேறுங்கால்.

கண்டு அதுவே எனப் பிரிக்க; அதுவே—அக் காலத்தே அவ்வவ் விடயம் என்பதகேற்ப அவ்வக் காலத்தே எனப் பொருள்பட்டது. கண்டது+ஏ கண்டதுவே என வருதற்கு இலக்கணம் இன்று. ஆதலின் கண்டு + அதுவே எனப் பிரித்தார். கண்டது என வரும்வழி இறுதியிலுள்ள உகரம் குற்றுகரமாகும். அது எனப் பிரிப்புழி முற்றியலுகரமாகும்.

தூலாருந்ததி நியாயமாவது கண்ணுக்குப் புலனாகும் பெரிய விண் மீனைக் காட்டி, அதற்கு அயலதாகி நுண்ணிதாக விளங்கும் அருந்ததி முதலிய விண்மீன்களைக் காட்டும் முறைமையாத கைப் பொருளை வீழ்த்தித் தெளிதலில் ஐந்தவத்தை உண் டெனக் கூறி அதன் மூலம் புருவ நடு முதலாக உயிர் இயங்கும் இயக்கத்திலும் ஐந்தவத்தை உளதெனக் காட்டுவது இம் முறைமை பற்றியதாம். கைப் பொருளை வீழ்த்தித் தெளிதலில் ஐந்தவத்தை நேருமாறு :- விலையுயர்ந்த பொருளொன்று தன்னை அறியாது கை நழுவி விடப் பின் சிறிது பொழுது கழித்து அதனை உணர்ந்து அவ்வாறான நிலைக்கு அயர்த்தல் உயிர்ப்படங்கலாம். பின் அவ்வயர்வு நீங்க உயிர்த்தல் பேருறக்கமாம் விழுந்த இடத்தை எண்ணுதல் உறக்கமாம். இடமறியாது அங்கோ இங்கோ என எண்ணுதல் கனவாம். விழுந்த இடமுணர்ந்து எடுத்தல் நனவாம். இதைப் போன்றே இன்ப துன்பங்களைக் கேட்டஅளவிற்கே நடுக்குற்று உயிர்க்காற்றும்இயங்காவண்ணம் மூர்ச்சித்தல் உயிர்ப்படங்கலாம். ஓரளவு -அந்நிலையினின்றும் மாறிப் பெரு மூச்செரிதல் பேருறக்கமாம். அவ்வின்ப துன்பங்க ளில் அழுந்தி நிற்றல் உறக்கமாம். அவற்றிற்காம் காரணம் அறிதல் கனவாம்: அவற்றைத் துய்த்தல் நனவாம்.

இவ்வதிகரணம் தத்துவக் கூட்டுடன் இயங்கும் உயிர் ஐந் வத்தைப் படுமாற்றைக் கூறுதற்கு எழுந்ததாம். தத்துவக் கூட்டி னின்றும் நீங்கி உயிர் தூய நிலையில் திருவருள் உணர்வோடு கூடும் நிலையிலும் ஐந்தவத்தைப் படுதலுண்டு. அதனை ஈண்டு கூறுதற்கு, ஓர் இயைபு இன்றாயினும் அவ்வாறு வரும் அவத்தை களும் உண்டென உணர்தற்கு 'அது ஆங்கு' என்றார். இத் தொடர்க்குக் கூறப்பட கண்ணழித்தலைக் கருதி இவ்விரிவு ஈண்டுக் கூறப்பட்டது. மேல்நோக்கிய ஐந்தவத்தையைச் சகலத்தில் சுத்தம் என்றும். இடையில் நிகழும் ஐந்தவத்தையைச் சகலத்தில் சகலம் என்றும் கீழ்நோக்கிய ஐந்தவத்தையைச்சகலத் தில் கேவலம் என்றும் கூறப்படும். 'சகச மலத்துணராது' என

இந்நூற்பாவில் கூறப்பட்டமையின் இந்நூற்பா சகலத்தில் கேவல நிலை கூறப்பட்டதாம். 'தாம்தம் உணர்வின் தமியருள்' என அடுத்த நூற்பாவில் கூறப்படுவது சகலத்தில் சகலமாம். 'உணர் வுரு அசத்தெனின்' என உணர்வது சகலத்தில் சுத்தமாம்.

## ஐந்தாவது நூற்பா

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்(கு)**
**அளந்தறிந்(து)அறியா ஆங்கவை போலத்**
**தாந்தம் உணர்வின் தமியருள்**
**காந்தம் கண்ட பசாசத் தவையே.**

என்பது சூத்திரம் என்நுதலிற்றோ வெனின் இவ்வான்மாக்க ளிடத்துத் தமது முதலுபகார முணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்து.

(இ - ள்) ஐந்தவத்தைப்படும் வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசுமேய்ப்ப நிற்பின், அவையே யமையுமாகலான், முதல்வனுல் ஆண்டைக்காகற் பாலதொரு பயனில்லை போலும் என்னும் கடாவை ஆசங்கித்து ஆண்டும் இன்றியமையாது வேண்டப்படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்கு முகத்தானே இரண்டாஞ் சூத்திரத்தினேதிய துணைக்காரண முதற் காரணங்களது இலக்கணமுணர்த்துதல் இவ்வைந்தாஞ் சூத் திரத்தின் கருத்து எ - று.

இதனுனே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குதலின், தமது முதலுபகார மெனப்படும் திரோதான சத்தியது இலக்கணம் கூறவே, அவற்றது இலக்கண மும் கூறியவாருத லறிக.

இச் சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு : மேலைச்சூத்திரங் களின் அங்ஙனம் கூறிப்போந்த உயிரானே மெய் வாய் கண் மூக்குச் செவியென்பன. தத்தம் விடயங்களை இஃது இன்னது என்று அளவிட்டறிந்தும் அங்ஙனமறியும் தம்மையும் தம்மை அதிட்டித்துநின்று செலுத்தும் அவ்வுயிரையும் அறிய மாட்டா; அவ்விந்திரியங்கள்போல், உயிர்களும். தமது அறிவிற்கு வியஞ்சகமாகிய முதல்வனது சிற்சத்தியான் மேற்

கூறிப்போந்த இருவகை அஞ்சவத்தையினின்று வினைப்பயன்களை யறிந்து அனுபவிக்கும் தம்மையும்; தம்மைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறியமாட்டா; உயிர்கள் அவ்வாறுணர்தல் காந்தத் தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதி மாத்திரையின் வலித்துக்கொள் ளப்படுமாறு போலக் கரணத்தானன்றிச் சங்கற்பத்தான் அதிட்டிக் கும் முதல்வன் சந்நிதி மாத்திரையினும்; ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதல் இன்று எ-று.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதல் இன்று என்பது குறிப்பெச்சம்.

செவியென்பது சொல்லெச்சம். ஐம்பொறிகளைக் கூறியது உபலக்கணமாகலின் ஏனைக்கருவிகளும் அவ்வாருதல் கொள்ளப் படும்; அற்ருகலினன்றே, ''பொறிபுலன் கரணமெல்லாம் புருடனல் அறிந்து'' என்ருர் வழிநூலாசிரியரும் (சித்தி-நூற்பா-5-1).

விடயங்களையறிவுழி முதல்வன் உடனின்று செலுத்துவனுயின் அவ்விடயங்களோடு ஒப்ப முதல்வனையும் அறிதல் வேண்டும் என்பாரை நோக்கி, அளந்தறிந்து என்று ஒழியாது அறியா என்ருர்

ஆங்கவை ஒரு சொன்னீர்மைத்து. தம்முணர்வின் தமியென்றது தமதுமுதலென்னும் பொருள்பட வந்தஆரும் வேற்றுமைத்தொகை

ஈண்டு அருளென்றது ஏற்புழிக் கோடலால் திரோதான சத்தி யின் மேல் நின்றது. அருளாலென விரித்து அறியாவென, உவமைக் கோதிய வினையைப் பொருளினும் கூட்டி உரைக்க.

இதனுள் விளம்பியவுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந் தறிந்தறியாவென்றது ஓரதிகரணம்; ஆங்கவைபோலத் தாந்த முணர்வின் தமியருள் காந்தங்கண்ட பசாசத் தவையே யென்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க

(நு-வி) முதல் உபகாரம்-முதல்வனின் உதவி. இரண்டாவது நூற்பா வில் ஓதிய துணைக் காரணம் - இறைவனது அறிவாற்றல் (சிற் சக்தி) வழி வரும் இரு வினை. முதற் காரணம் - மாயை.

நான்காவது நூற்பாவில் உயிர் ஐந்தவத்தைப் படும் எனக்கூறி இந் நூற்பாவில் அவ்வாறு ஐந்தவத்தைப் படும் இடத்தும் முதல்வனின் உதவி வேண்டப்படும் எனக் கூறலின் மேலை நூற் பாவினேடு உள்ள இயைபு இனிது விளங்கும்.

இந் நூற்பாவில் வரும் அருள் என்பது பாசத்தைக் குறிப்பதாகும். அருள்–மறைப்பாற்றல் (திரோதான சத்தி). அஃதாவது உயிர் வினைமாசு கழிந்து திருவருளை அடைதற் பொருட்டு அது துய்க்க வேண்டிய வினைப் பயன்களைக் கூட்டு வித்துத் துய்க்கச் செய்யும் இறைவனுடைய ஆற்றலாம். உயிர் தான் துய்க்க வேண்டிய பொருள்களில் உள்ள நன்மை தீமைகளைத் தெரிய ஒட்டாமல் மறைத்து நிற்றலின் அவ்வாற்றல் மறைப்பாற்றல் எனப் பட்டது. அவ்வாறு அது தன் தொழிலைச் செய்தற்கு இருவினையும் மாயையும் கருவியாய் நிற்கும். எனவே அம் மறைப்பாற்றலின் இலக்கணம் கூறவே அதன் துணைக் காரணமாய இருவினை மாயை ஆகியவற்றின் இலக்கணமும் கூறியவாறாயிற்று.

பாச இலக்கணம் கூறும் இந் நூற்பாவின்கண் ஆணவ மலத்தின் இலக்கணமும், கூறவேண்டுமே! அங்ஙனம் கூறாதது ஏன்? எனில், இருவினையும் மாயையும் இடையே வந்து கூடுதல் போல, ஆணவம் இடையே வந்து கூடியதன்று. இயல்பாகவே உயிரிடத்துக் கூடியுள்ளதாகும், ஆதலின் அவ்வியைபுபற்றி உயிரது இலக்கணம் கூறிய நான்காவது நூற்பாவின் இரண்டாம் அதிகரணத்திலேயே அதன் இலக்கணம் கூறப்பட்டது; ஆதலின் ஈண்டு அதனை விடுத்தார் என்பது.

அதிட்டித்து – ஒரு பொருளை நிலைகளனாகக் கொண்டு நின்று. வியஞ்சமாகிய – துணையாகிய. சிற்சக்தியால் – அறிவாற்றலால். இருவகை அஞ்சவத்தை – கீழ்நோக்கிச் செல்லும் அவத்தை, புருவ நடுவில் படும் அவத்தை. கரணத்தான் அன்றி – உடல் முதலிய; கருவிகளால் அன்றி. சங்கற்பத்தான் – நினைவு மாத்திரையான் சந்நிதி மாத்திரையின் ஆம் – நோக்கும் நோக்கு அளவையின் ஆம்.

காந்தக் கல்லின் முன் நிற்கும் இரும்பு அதன் முன் நிற்கும் அளவால் இழுத்துக் கொள்வது போல, இறைவனின் நோக்களவையினால் உயிர்கள் வினைப்பயனை நுகருமாறு நேருகிறது. இரும்பு இழுக்கப் படினும் காந்தம் திரிபு அடைவதில்லை. அதுபோல உயிர்கள் வினைப்பயன்களை நுகரினும் இறைவன் திரிபடைவான் அலன், இக் கருத்து 'காந்தம் கண்ட பசாசத் தவைய' என்னும் தொடர்வழிக் குறிப்பாய்ப் பெறப்படுதலின் குறிப்பெச்சமாயிற்று. ஐம் பொறிகளுள் செவி என்பது நூற்பாவில் குறிக்கப்படவில்லை. அச்சொல் எஞ்சி நிற்றலின் சொல்லெச்சமாயிற்று. உபலக்கணம்– இனமாயவற்றுள் ஒன்றைக் கூற ஏனையவற்றையும் அதனால் பெய்து கொள்ள வைப்பது. நூற்பாவில் மெய் வாய் கண் மூக்கென அறிகருவிகள்

கூறப்படினும் அவற்றிற்கு இனமாய மனம் முதலாய அகக்கருவி களும் அவ்வாறேயாம் எனக் கொள்ளப்பட்டது. அளந்து அறிந்து என்றே குறிக்கப்படின் அறிகருவிகள் புலன்களை அறிவது போல இறைவனையும் அறியும் என்பது பெறப்படும். அவை இறைவனை அறியா என்பது ஒருதலையாதலின் 'அறியா' என்னும் சொல்லையும் இயைத்துக் கூற வேண்டுவதாயிற்று. ஆங்கவை: ஒரு சொல் நீர்மைத்தாய் நின்று அவ் விந்திரியங்கள் எனப் பொருள்பட்டது தம் உணர்வின் தமி-தமது அறிவிற்குத் துணையாகிய முதல்: இவ்வாறு பொருள் படுதலின் ஆறும் வேற்றுமைத் தொகை என்ருர். இறைவனின் அருள் என்பது அவனது அற்றலைக் (சத்தியை) குறிப்பதாகும். அப்பெருமான் உயிர்க்கு உதவும் ஆற்றல் ஐவகைப்படும். அவை அருளாற்றல் (பராசத்தி), விழை வாற்றல் (இச்சா சத்தி), செயலாற்றல் (கிரியா சத்தி), அறிவாற்றல் (ஞான சத்தி), மறைப்பாற்றல் (திரோதான சத்தி) என்பன. அருளாற்றல் என்பது பொதுவாக உயிர்களுக்கு அருள் செய்ய வேண்டும் என நிற்பதாம். விழைவாற்றல் என்பது சிறப்பாகப் பக்குவம் பெற்ற உயிர்களுக்கு அருள் செய்ய வேண்டும் என நிற்பதாம். செயலாற்றல் என்பது உயிர்க்குச் செய்ய வேண்டுவன வற்றைச் செய்வதாம். அறிவாற்றல் என்பது உயிர்க்குச் செய்ய வேண்டுவனவற்றை அறிவதாம். மறைப்பாற்றல் என்பது உயிர் வினைமாசு நீங்குதற் பொருட்டு ஐவகைத் தொழிலையும் இயற்ற வேண்டும் என நிற்பதாம். இந்நிலை உயிர்களது வினைக்கேற்றவாறு செலுத்தவும் நுகரச்செய்யவும் எண்ணியதாகும். அந்நிலைக்கு வேண்டுவனவற்றைச் சிறப்பாக அறியாமலும் அறிவிக்காமலும் நிற்றலால் மறைப்பாற்றல் எனப்பெயர் பெறுவதாயிற்று. ஏற்புழிக் கோடல்-பல் பொருளுக்கு ஏற்கும் ஒருசொல் அல்லது ஒரு தொடருக்குத் தமக்கு இயையுமாற்ருன் ஒருபொருளை எடுத்துக் கொள்ளுதலாம். இதனைத் தொல்காப்பியர் 'பல் பொருட் கேற்பின் நல்லது கோடல்' என்பர். அருள் என்பது மேற்கூறிய ஐவகை ஆற்றலையும் குறிக்குமேனும் மறைப்பாற்றலைக் கொண்டது இவ்வுத்தியால் ஆம்.

இந் நூற்பாவில் மெய்வாய் முதலியன உவமையாம். உயிர் பொருளாம் (உவமேயமாம்). 'அளந்து அறிந்து அறியா' என உவமைக்குக் கூறிய வினையைப் பொருட்கும் கூட்டி உரைக்கப் பட்டது.

## முதல் அதிகரணம்

*ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது.*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், தாமரை யிலையின் நீர்போல் புருடன் பற்றற்று நிற்பப் புருடன் சந்நிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறி வழியான் விடயங்களை அறியுமென வமையும்; அவ்வாறன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவத்தைப்படுமென மேற்கூறியது அமையுமாறு என்னையெனச் சாங்கியநூலார் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

உணர்விற் கேதுவாகிய பொறிகளை உணர்வென்று உபசரித்தார்.

ஏது

*அவற்றினுன் ஆன்மா ஒற்றித்துக் காணினல்லது அவையொன்றையும் விடயியாவாகலான்*

என்றது ஏது. என்நுதலிற்றோ வெனின் அதற்குப் பிரமாணம் என்னை என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வைம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்தாலன்றி அவை ஒரு விடயத்தையும் விடயிக்க மாட்டாவாகலின் ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணருமென மேற்கொண்டது என்க.

ஆன் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது.

உம்மை இழிவு சிறப்பு; முற்றுமாம்,

எதிர்மறை முகத்தாற் கூறினுர், இன்றியமையாமை விளக்குதற்கு

எடுத்துக்காட்டு

**ஐம்பொறியை ஆண்டுஅங்கு அரசாய்உளம் நிற்ப**
**ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்-ஐம்பொறியின்**
**காணுதேற் காணுது காணும்உளம் காணுதேல்**
**காணுகண் கேளா செவி.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், உயிர் அங்ஙனம் ஒற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலும் அவை உயிரையின்றி அமையாமையும் எற்றாற்பெறுதும் என்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அரசு ஆய்—அரசன் அத்தாணிமண்டபத்தின் வைகித்தன் கீழ்க் கருமஞ்செய்வோரை அவரவர்க்குரிய காரியங் களில் செலுத்தி ஆளுமாறு போல, உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப—உயிர் ஐம்பொறிகளை அவ்வவற்றிற்குரிய விடயங் களிற் செலுத்தி ஆண்டு இலாடத்தானத்தின் நிற்றலான், ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் அரசனல் ஏவப்பட்டோர் ஏவிய கருமமாத்திரையினன்றி அதிகத்திற் செல்லமாட்டாமை போல அவ்வைம்பொறிகள் உயிரை அறிய மாட்டா வாயின. அற்றேல், ஐம்பொறிகள் உயிரானன்றி அறிதல் அமையா தாயினும் உயிர் ஐம்பொறிகளானன்றியும் அறிதல் அமையும் போலும் எனின்; ஐம்பொறியில் காணுதேல் காணுது காணும் உளம் காணுதேல் காணு கண் கேளா செவி-ஒரு கருமஞ்செய்தற் கண் அரசரும் அமைச்சர் முதலாயினோரும் தம்முள் இன்றியமை யாதவாறு போல ஒன்றனை விடயித்தற்கண் உயிரும் ஐம்பொறி களும் தம்முள் இன்றியமையா என்க.

அன்னவாதல் உயிர் ஐம்பொறியின் நீங்கிச் சொப்பனத் தானத்தின் எய்தியவழிக் கண்டுகொள்க.

நிற்ப வென்னுஞ் செயவெனெச்சம், ''மழை பெய்யக் குளம் நிறைந்தது'' என்புழிப்போல, நிற்றலான் எனக் காரணப் பொருட்டாய் நின்றது. இவ்வாறு உரையாக்கால் இஃது ஏதுவின் பொருளை வலியுறுப்பதாய உதாரணமாதற்கு ஏலாமையறிக.

(நு. வி) ஐயுணர்வுகள்—ஐ வகை உணர்விற்கு ஏதுவாகிய ஐம்பொறிகள்; ஏதுவாக நிற்கும் பொறிகளை அவற்றின் பயனுக நிற்கும் உணர்வாகக் கூறியது ஏற்றுரையாம்.

புருடன்—உயிர். தாமரையிலையில் நீர் கூடி நிற்பினும் அவ் விலையில் பற்றின்றி நிற்கும். அதைப் போல ஐம்பொறிகளோடு உயிர் கூடினும் அப்பொறிகளில் பற்றின்றி நிற்கும். அந்நிலையில் உயிர் முன்னிலையில் புத்திதத்துவமே ஐம்பொறிகளின் வழியாகப் பொருளை அறியும் என்பர் சாங்கிய நூலார். உயிர் பொறிவழி அறிந்த பொருளைச் சித்தம் சிந்தித்தும், மனம் அதன்கண் பற்றி நின்று ஆராய்ந்தும், அகங்காரம் முனைத்து நின்று அறிந்தும், புத்தி அதனைத் துணிந்து தெளிந்தும் அமையும். எனவே ஐம் பொறிகளும் ஒன்று அறிந்ததைப் பிறிதொன்று அறியாதவாறு போல மனம் முதலிய அகக் கருவிகளும் ஒன்று உணர்ந்ததைப் பிறிதொன்று உணராதாம். எனவே புத்தி தத்துவமே ஐம்பொறி வழி அறிதற்கு அமையும் என்றல் பொருந்தாதாம்.

அவற்றினுன்—அவ்வைம்பொறிகளோடு: இவ்வாறு உரை செய்தமையின் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்ததென்ருர். தூங்கு கையான் ஓங்கு நடைய என்புழிப்போல. ஒன்றையும் - ஒரு பொருளை யாயினும் எனப் பொருள் கொள்ளின் இழிவு சிறப்பு உம்மையாம். ஒருபொருளையும் எனப் பொருள் காணின் முற்றும்மையாம். காணின் அல்லது என எதிர்மறை முகத்தால் கூறியது, உயிரது இன்றியமையாமை விளக்கவாம்.

இலாடத்தானம்—புருவநடு. நான்காவது நூற்பாவில் அகக் கருவிகளாகிய மனம் முதலிய கருவிகளை அமைச்சரொடு உவமித்தார். இந் நூற்பாவில் ஐம்பொறிகளை அமைச்சராக உவமித்துள்ளார். உயிர் உணர்தற்குக் கருவியாக இவ்விரண்டும் நிற்றலின் முரணுமாறில்லை.

உயிர் பொருள்களை உணர்தற்கு ஐம்பொறிகளும் கருவியே. ஐம்பொறிகளும் உயிரையின்றி உணராதவாறு போல உயிரும் ஐம்பொறிகள் இன்றி உணராதாம். உயிர் கழுத்தில் நின்று கனவு நிலையில் நிற்புழிப் புறப்பொருள்களை உணர்வதில்லை. காரணம் பொறிகளுடன் கூடாமையாலாம். எனவே உயிரும் பொறிகளும் பொருள் உணர்தற்கண் ஒன்றையொன்று இன்றியமையா தனவாம். நிற்ப-நிற்றலான்; காரணப் பொருளது.

அரசுஆய்-அரசு போல.

## இரண்டாம் அதிகாரணம்

இனி இதுவும் தமது முதலாலே உணரும் என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்ருே வெனின், கருவி சடமாகலின் சித்தாகிய உயிரானன்றி அமையாவாயினும், சித்தாகிய உயிர் முதல்வனது உபகாரத்தை அவாய்நிற்பதன்றி அவாவுமாயின் முதல்வனும் அவ்வாறே பிறிதொன்றன் உபகாரத்தை அவாவுமெனப்பட்டு மேலும் வரம்பின்றியோடும் என ஈசுரவவிகாரவாதி முதலியோர் கூறும்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் பிற்கூற்றைக் குறித்துக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

தமது முதல் என்பது யான் எம்மூர் புகுவன் நீ நும்மூர் புகுவை என்புழிப்போல வேறு முடிபு கோடலின் பால் வழுவன்மை யுணர்க.

உம்மை இறந்தது தழீஇய வெச்சம்.

இம்முறைமை தமக்கொரு முதலுடையவற்றிற்கேயன்றி ஏனைப் பொருட்கு இன்மையின் வரம்பின்றி ஓடுமாறில்லை என்பார்; தமது முதலென்று உடம்பொடு புணர்த்தோதினூர். தம்முணர்வின் றமியென்றதும் அது.

தத்துவங்களும் உயிருந் தமக்கொரு முதலுடையவாதலும் முதல்வனுக்கு அஃதின்மையும் மேற்கூறிப் போந்த சூத்திரங் களான் பெறப்பட்டன வென்பது கருத்து.

ஏது

இவ்வான்மாத் தன்னாலே உணரும் இந்திரியங்களைப் போலத் தானும் தன்னையுணராது நிற்றலான்.

என்றது ஏது. என்நுதலிற்றோ வெனின், உயிர் ஐம்பொறியிற் சடமன்மையான் அவற்றை எடுத்துக்காட்டி மேற்கோடல் ஈண்டைக்கு அமையாது என்பாரை நோக்கி அதனைச் சாதித்தல் நுதலிற்று.

சடமும் சேதனமுமாய வேறுபாடுபற்றித் தம்முள் ஒவ்வா வாயினுந் தம்மையும் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் உயிருந் தம்முள் ஒக்குமாகலின், அதுபற்றி அங்ஙனம் மேற்கோடல் அமையும் என்பது கருத்து.

எடுத்துக்காட்டு

**மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த(து)**
**என்னும் மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்**
**கண்ணா வுளமவினையால் கண்டறிந்து நிற்குங்காண்**
**எண்ணான் சிவன்அசத்தை யின்று.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், தன்னால் உணரும் இந்திரியங்களை ஈண்டைக்கு உவமை கூறின் அவ்விந் திரியங்கட்கு வரும் பயன் அவற்றினால் ஒற்றித்துக் காணும் உயிர்க்காயவாறு போல, உயிர்க்கு வரும் இன்பத் துன்பப் பயனும் உயிரான் ஒற்றித்துக் காணும் முதல்வனுக்கு ஆதல் வேண்டுமென் பாரை நோக்கி அங்ஙனம் ஆகாமை கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) மன்னுசிவன் சந்நிதியின் உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறைந்தாய்—ஈண்டு கூறிய கருதலள வையேயன்றி நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரபஞ்சம் செயற்படுகின்றதென்று ஓதும் வேதப் பொருளையும் அறியாது பிணங்குகின்ற பேதாய், உளம் சொன்ன சிவன் கண்ணா வினையால் கண்டு அறிந்து நிற்குங்காண்—உயிராவது தமக்கெனவோர்

காரணமின்றித் தன் பொருட்டே அறிவனவாய அவ்விந்திரியங்கள் போலன்றி அவ்வேதத்துள் எடுத்தோதப்படும் முதல்வன் தனக்குக் காட்டாகி நிற்பத் தான் செய்த வினைக்கீடாக ஒன்றனை யறிந்து நிற்கும், அவ்வேறுபாடு அறிவாயாக; இன்று ஆகலான் சிவன் அசத்தை எண்ணுன்—அங்ஙனம் காட்டாகி நிற்பினும் தனது சந்நிதியில் அசத்தெல்லாம் சூனியமாகலான் மங்கல வடிவினனாய முதல்வன் அவ்வுயிர்போல அவற்றை அனுபவியான் என்றவாறு.

இதனுட் சிவனென்றது மன்னுசிவன் என்புழிப், பேரின்பத்திற்குக் காரணமென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற் குரியஇயை புணர நின்றது. சொன்ன சிவன் என்புழி முற்றுணர்வினன் என்னும் பொருட்டாய்க் காட்டு ஆதற்குரிய இயைபுணர நின்றது. எண்ணுன் சிவன் என்புழித் தூய தன்மையன் என்னும் பொருட்டாய் அசத்தை எண்ணுமைக்குரிய இயைபுணர நின்றது; ஆதலால் கூறியது கூறலன்மை உணர்க. அஃது அம் முப்பொருளுடைத் தென்பது சோம சம்பு பத்ததி வியாக்கியான முதலியவற்றுட் காண்க. சிவதத்துவ விவேகத்துள் மூவகைப் படுத்தோதிய பொருளும் இவையே யாமறு கண்டு கொள்க.

ஈண்டு உலகம் என்றது உயிர்களை. மறையின் இயலும் பொருளை மறையின் இயல் என்று உபசரித்தார். இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. மறந்தாய் என்பது விளியுரு பேற்ற பெயர். ஈண்டுச் சந்நிதி என்றது அவிகாரவாதிகள் கூறும் அபிமுக மாத்திரையன்று என்பார் சொன்ன சிவன் கண்ணு என்றார். சிவசத்தி அவ்வக் காரியங்களின் உன்முக மாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதி யெனப்படும் என்பதாம். காந்தம் கண்ட பசாசத்தவையே யென்றது ஒருபுடை 'யுவமையாதல் பற்றியே, பிறிதன்று என்பது கருத்து. வினையாலென்றது ஐம் பொறிபோலன்றி உணர்தற்பயன் உயிர்க்கேயாதற்கு ஏதுக் காட்டியவாறு. கண்டறிதல் ஒருபொருட் பன்மொழி எண்ணல் ஈண்டு அனுபவித்தல் மேற்று. இன்று என்பது சாதியொருமை. அவனெதிர் என்பது அவாய் நிலையான் வந்தது. ஆகலானென்பது சொல்லெச்சம். இன்றுதல்' 'யாவையும் சூனியம் சத்தெதிர்' (சிவஞான போதம்-7) என்புழிப் பெறப்படும். இக்கருத்தே பற்றி ''மாயைமருவிடான் சிவன்அவன்கண், உறைதராது அசேதனத் தால்'' (சித்தியார் சூ 5, 6.) என்றார் வழிநூலாசிரியரும். ''உன்னு தரத்தே கிடந்த கீடம் உறுவதெல்லாம், உன்னுடைய தென்னுய் நீ யுற்றனையோ—மன்னுயிர்கள் அவ்வகையே காணிங் கழிவதுவும்

ஆவதும், செவ்வகையே நின்றசிவன் பால்'' (திருக்களிற்றுப் படியார்-87) என்றதும் இவ்வியல்பு நோக்கி.

எடுத்துக்காட்டு

**வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது**
**வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனில்**
**கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனைக்**
**கண்டுஉடனாய் மன்னுதலைக் காண்.**

என்பது உதாரணம். என் நுதலிற்றோ வெனின், உயிர் அங்ஙனம் உணர்த்த உணருங்கால் முதல்வனின் வேறு நின்று உணருமோ? ஒன்றாய் நின்று உணருமோ? என்பாரை நோக்கி, அவ்விரண்டு இயல்புமின்றி நின்று உணருமாறு உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) வெய்யோன் ஒளியில் ஒடுங்கி—ஞாயிற்றொளியின் அடங்கி; விளங்காது—அதனின்வேறாய் விளங்கித் தோன்றுதலும்; வெய்யோனை ஆகாத மீன்போல -அதுவாய் ஒழிதலும் இல்லாத நாண்மீன்கள் அஞ்ஞாயிற்றானே ஒளியுடையவாமாறு போல; கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை மெய் அவனில் கண்டு—கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் தீண்டியும் அறியப் படும் ஐவகை விடயங்களையும் உயிர் மெய்ப் பொருளாகிய முதல்வனால் உணர்ந்து; உடனாய் மன்னுதலைக் காண்-வேறாதலும் ஒன்றாதலுமின்றி அவ்விரண்டிற்கும்பொதுவாய் அடங்கி உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக என்றவாறு.

உவமையடை பொருளினும். பொருள்வினை உவமையினும் சென்று இயையும். ஐ—சாரியை. நாண்மீன் முதலியவற்றின் ஒளி யெல்லாம் ஞாயிற்றுனைய ஒளியே யென்பது வேதநூல் துணி பாகலின் அஃது ஈண்டைக்கு உவமையாயிற்று.

உயிரென்னும் எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித் துரைக்கப்பட்டது.

எடுத்துக்காட்டு

**அருளுண்டாம் ஈசற்கு அதுசத்தி யன்றே**
**அருளும் அவனன்றி யில்லை அருள்இன்று**
**அவன்அன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்கு**
**இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அங்ஙன மாயினும் உயிர்கட்குப் பல வேறுவகைப்பட உணர்வு நிகழ்தலின் அஃது உணர்த்துதல் வேறுபாட்டானுயது எனல் வேண்டும். வேண்டவே, நிருவிகாரி யென்னும் சுருதியோடு முரணி முதல்வன் விகாரியாவான் செல்லும் என்பாரை நோக்கி விகாரியாமை யுணர்த்தி அதனைவலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அருள் ஈசற்கு அன்றே உண்டாம்—உயிர்க்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கண் உளதாகிய இரக்கம் முதல்வனுக்கு அநாதியே யுள்ளது; அதுசத்தி—அவ் விரக்கம் வேறு பொருளன்று முதல்வனுக்கு உளதாகிய சத்தியே யாம்; அருளும் அவன் அன்றியில்லை அவன் அருள் இன்றுஇல்லை-இரக்கமும் அவனும் குணமும் குணியுமாகலின் அவ்வருளும் முதல்வனையின்றி யமையாது முதல்வனும் அதனையின்றி யமை யானுய்; அருட்கண்ணர் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்தும் நிற்கும் அரன்—ஞானக் கண்ணுடையார் உணர்விற்கு ஞாயிறு தன்னொளியோடு தாதான்மியமாய் இயைந்து நிற்குமாறு போல அவ்வருளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பன் முதல்வன் என்றவாறு.

ஆகலால் தன்வயத்தனுகிய அம் முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்தி சங்கற்ப மாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடுமென்பது குறிப்பெச்சம்.

உம்மை எதிரது தழீஇயது.

இன்றி யென்னும் வினையெச்சக் குறிப்பின் இகரம் செய்யு ளாகலின் உகரமாய்த் திரிந்தது. அன்றே அசை. இவ்வியல்பு சித்தாந்த நெறியுணர்ந்தார்க்கு அன்றி விளங்காது என்பார் அருட்கண்ணர் கண்ணுக்கு என்றார்.

சத்தியது உண்மையும் அதனியல்பும் ''நீக்கமின்றி நிற்கும் அன்றே'' (சிவஞான போதம்-2வது நூற்பா) யென்பதனுள் வகுத் துரைத்தமையின் ஆண்டுக் காண்க.

(நு. வி.) இதுவும்-இவ்வுயிரும். தமது முதலாலே-தம்மை அடிமையாக உடைய இறைவனாலே. இதுவும் தமது என்ற விடத்து இது என்பது ஒருமையாகும். தமது என்பது பன்மையாகும். இரண்டும் இயைந்துழி ஒருமை பன்மை மயக்கமாகுமே என வினவிக் கொண்டு அவ்வாறு ஆகாமையை விளக்குகின்றார் ஆசிரியர். இதுவும் என்னும்

ஒருமை முதலாலே உணரும் என்ற தொடரொடு இயையும். தமது என்பது முதல் என்பதோடு இயையும். எனவே இவ் ஒருமையும் பன்மையும் தம்முள் இயையாமையின் பால்வழு அன்றும். யான் எம்மூர் புகுவன்என்புழி யான் புகுவன் என்று இயைய எம் என்பது ஊர் என்பதனேடு இயைந்தது போலவும், நீ நும் ஊர் புகுவை என்புழி நீ என்பது புகுவை என்பதனேடு இயைந்தது போலவும் ஆம். இதுவும் என்ற விடத்துள்ள உம்மை முற்கூறிய அகக்கருவிகளேயன்றி இவ்வுயிரும் என இயைந்து நிற்றலால் இறந்தது தழீஇய எச்சமாயிற்று.

உடம்பொடு புணர்த்தலாவது ஒரு பொருளைச் சொல்லத் தொடங்கிய தொடரில் பிறிதும் ஒரு பொருள் தோன்றச் செய்தலாம். இதுவும் என்பது உயிரைக் குறிப்பது அன்றி உயிரினங்கள் அனைத்தையும் குறித்து நிற்றலின் இவ்வுத்தியாயிற்று. இவ்வாறே தம் உணர்வின் என்புழியும் குறிப்பிட்டதொரு உயிரினமன்றி அனைத்துயிரும் அடங்க நிற்றலின் அதுவும் இவ்வுத்தியாம்.

தத்துவங்கள் உயிரை முதலாக உடையன என்பது மூன்றுவது நூற்பாவானும், அவ்வுயிரும் இறைவனை முதலாக உடையது என்பது 'ஆணையின் போக்குவரவு புரிய' என்னும் இரண்டாவது நூற்பாவானும், அம் முதல்வனுக்கு வேறு முதல் இல்லை என்பது 'அந்தம் ஆதி' என்னும் முதல்நூற்பாவானும் பெறப்பட்டன.

தன்னுலே உணரும்- உயிராகிய தன்னுலே உணரும்

புலன்களைப் பற்றி நிற்கும் பொறிகளுக்கு உயிர் கருவியாய் இருந்தும் பொறிகள் தம்மையோ தம்மைப் புலன்களிற் செலுத்தி நிற்கும் உயிரையோ அறிவதில்லை. அதைப் போன்றே இறைவனுல் செலுத்தப்படும் உயிர்களும் தம்மையோ தம்மைச் செலுத்தி நிற்கும் இறைவனையோ அறிவதில்லை என்பது கருத்து. சடமும் சேதனமுமாய வேறுபாடு பற்றி–அறிவற்றதும் (பொறிகள்), அறிவுடையதும் (உயிர்கள்) ஆகிய வேறுபாடு பற்றி. பொறிகள் அறிவற்றன. உயிர்கள் அறிவுடையன. இவ்வாற்றுன் தம்முள் ஒவ்வா. எனினும் தம்மையும் தம்மைச் செலுத்தி நிற்கும் பொருளையும் உணராவகையில் ஒருமை உடையன.

ஒற்றித்து-உடன் நின்று.

மன்னு சிவன்–நிலைபெற்ற சிவன். சந்நிதிக்கண் திருமுன்பில். சேட்டிப்பித்தல்–தொழிற் படுத்துதல். நிலைபெருது பிறந்து இறந்து உழலும் உயிர்கட்கு நிலைபெற்றவனுகிய இறைவன் இறவாத இன்பத்தை வழங்குவன் என்னும் குறிப்பில் மன்னுசிவன் என்ற

தொடர் அமைந்துள்ளது. சொன்ன சிவன்–அறம் முதலிய பொருளையும் அருளிய சிவன்.

நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர் கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல் மேவி அருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண் கழனிச் சேய்ஞலூர் மேயவனே.'

'நுந்தை மறை ஆயிரம் மொழிந்த திருவாயான்' என வரும் திருவாக்குகளும் காண்க. எனவே உணர்த்த உணர்ந்தும் உணர்ந்ததை மறந்தும் நிற்கும் உயிரினங்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தி உய்விக்கும் திறன் விளங்கச் 'சொன்னசிவன்' என்றார். எண்ணன்சிவன்–நிலையில் பொருள்களைச் சுட்டி உணர்ந்து நுகரான் சிவன் நிலையில் பொருள்கள் எல்லாம் அசத்து எனப்படும். உடல் கருவி உலகு முதலியன இவ்வகையனவாம். நிலையுடைய பொருள் இறைவனேயாம். அத்தகையோன் இந் நிலையில் பொருள்களைச் சுட்டி அறிந்து துய்க்கான், எனவே அவன் தூய தன்மையன் என்பது பெற்றும். எனவே ஈண்டு மன்னு சிவன், சொன்ன சிவன், எண்ணன் சிவன் என்பன கூறியது கூறல் அன்றும். சிவன்–பேரின்பத்திற்குக் காரண மானவன், முற்றுணர்வினன், தூய தன்மையன் என்ற முப்பொருளும் உடைத்து என்பது சோம சம்பு பத்ததி விரிவுரையுளுள்ளும் அறியலாம்.

உலகெலாந் தனதொரு சிறு கூற்றினுள் அமைய
அலகில் ஆற்றலான் நிறைந்தவன் என அருணூலோர்
குலவியேத்து வோன் எவன் அவன் உவமையொரு கூற்றின்
அலக்கரைக் களச்சிவ பிரானடியிணை போற்றி.

செவியுற வாங்கி மோகத் திண்படை சிலையிற் பூட்டும்
கவிகைவேள் மடியச்சற்றே கறுத்தியோ குறையும் பெம்மான்
குவிதழை நிறையப் பூத்த கோழிணர்ப் பதுமச் செங்கேழ்
அவிர்தரு விழித்தீக் கென்றன் வினையிலக் காகு மாலோ.

திருமாலிந்திரன் பிரமன் உபமனியன் தபனனந்தி செவ்வே ளாதி
தருமமுது குரவருக்குந் தனதருளால் ஆசிரியத் தலைமை நல்கி
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த
உருவழகுங் குறுநகையுங் காட்டியருள் தருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம்.

என வருவன சிவதத்துவ விவேகத்தில் காணப்படும் பாயிரச் செய்யுட்களாம். இவை முறையே இறைவன் முற்றுணர்வினன் ஆதலையும், பேரின்ப காரணன் ஆதலையும், தூயதன்மையன் ஆதலையும் விளக்குவனவாம்.

மறையின் இயல்–வேதத்தின் பொருளையும்; மறையின் இயலும் பொருளின் என்னுது மறையின் இயல் என்றது ஏற்றுரையாம். உம்மை விரித்து முற்கூறிய கருதல் அளவையைத்தழுவ உரைத்த லின் இறந்தது தழீஇய எச்சவும்மை என்றுர். மறந்தாய் - மறந்த வனே; இவ்வாறு உரைத்தலின் விளியுருபேற்ற பெயர் என்றுர். அபிமுக மாத்திரை – நேர் முகமாகக் கூறும் அளவு. உன்முக மாதல் – நினைவு கொள்ளுதலாகிய நிலை: திருவுளம் பற்றுதல் இறைவனின் திருமுன்பு இவ்வுலகம் செயற்படுதல் அவன் நேர் முகமாக நின்று செலுத்துகிருன் என்பதன்று. அவன் நினைவு மாத்திரையாலேயேயாம் என்பதுகருத்து. காந்தத்தின் முன்வைக் கப்பட்ட இரும்பு நேர்முகமாக நின்றே ஈர்த்தற்கு உரியது. ஆயி னும் அதனை உவமைகாட்டியது இறைவன் முன்னிலையில் உலகம் தொழிற்படுகின்றது என்ற அளவிற்கேயாம். ஆதலின் அது ஒருபுடை உவமையாயிற்று. ஐம்பொறிகளும் உயிரால் அறிவ னவாம். அதைப்போன்றே உயிரும் இறைவனுல் அறிவதேயாம். எனினும் ஐம்பொறிகள் அறிவற்றன வாதலின் அவை தாமே வினைசெய்தல் இல்லை. உயிரோ அறிவுடையதாதலின் வினை செய் தற்கு உரியதாயிற்று. ஆதலின் அவ்வினைக்கேற்ப அறியும்என்றுர். காண்டலும் அறிதலும் ஒரு பொருளைக் குறித்தலின் ஒருபொருட் பன்மொழி என்றுர். எண்ணல் - நினைதல் எனப் பொருள்படாது துய்த்தல் எனப் பொருள்பட்டது. இன்று – அசத்தெல்லாம் இன்று என உரை கூறப்படுகின்றது. அவ்வாறு கொள்ளுங்கால் ஒருமை பன்மை மயக்கம் ஏற்படுகின்றது. அவ்வழு ஏற்படா திருக்கவே இன்று என்பதைச் சாதி ஒருமை என்றுர் அசத்து என்பது அசத்தாய் உள்ள (நிலையிலவாய) பொருள்களை எல்லாம் குறித்தலின் சாதி குறித்த சொல்லாயிற்று. இன்று என்னும் சொல் அவன் எதிர் என்னும் தொடரை அவாவி நிற்க அத்தொடர் வரவழைத்துக் கூறப்பட்டது. ஆதலின் அவாய் நிலையான் வந்தது என்றுர். இன்று என்பதோடு இயைந்த ஆக லான் என்னும் சொல் எஞ்சி நிற்றலின் சொல்லெச்சம் என்றுர்.

சத்தெதிர்–நிலையுடைய பொருளாய சிவபரம்பொருளின் முன் யாவையும் சூனியம் – நிலையற்ற பொருள்கள் யாவும் விளங்கித் தோனுு என்பது இதன் பொருளாம். இதனை விளக்கவே இரு

மேற்கோள்கள் காட்டப்படுகின்றன. மாயையைச் சிவன் மருவிடான் எனச் சித்தியார் கூறுவதும் இதனெடு ஒத்து எண்ணுதற்கு உரியதாம் இதனை ஓர் உவமை முகத்தால் விளக்க எழுந்ததே அடுத்து வந்த திருக்களிற்றுப்படியாராகும். வயிற்றினிடமாகக் கிடக்கும் புழுக்கள் உறும் துயரை உயிர் பொருந்துவதில்லை. அதைப்போன்றே உயிர் உடலொடு கூடித் துய்க்கும் வினைப் பயன்களையும் இறைவன் அடைவதில்லை.

பகற்பொழுதிலும் விண்மீன்கள் ஒளியுடையனவே. எனினும் அவ்வொளி ஞாயிற்றின் ஒளிக்கு வேருகத் தெரிவதில்லை. அன்றி அஞ்ஞாயிற்றெளியினுல் தம் ஒளி கெட்டு விடுவதும் இல்லை. ஞாயிற்றெளியில் அடங்கி அவ்வொளி விளங்கும். அதைப் போல உயிர்களும் வீட்டு நிலையில் மெய்ப்பொருளாகிய இறைவனெடு ஒன்றிக் கெட்டுவிடுவதும் இல்லை. அம்மெய்ப்பொருளின் வேருய் விளங்கி நிற்பதும் இல்லை. எனவே அம் மெய்ப்பொருளிடத்து அடங்கி அதனுல்தான் தொழிற்பட்டு நிற்கும்.

இறைவனுக்கு ஞாயிறும் உயிர்களுக்கு விண்மீன்களும் உவமையாயின. வெய்யோன் ஒளியில் ஒடுங்குதலும் அதனின் வேருய் விளங்காமையும் அப்பொருளேயாய் ஒன்றுதலின்மையும் உவமைக்குரிய அடைமொழிகளாம். இம் மூவகைத் தன்மைகளும் பொருளாகிய உயிர்க்கும் கூட்டி உரைக்கப்பட்டது, மெய்ப்பொருளாகிய முதல்வனுல் உணர்தல் பொருளாகிய உயிர்க்கு மட்டுமே கூறப்பட்டுள்ளது. அது நாண்மீனுகிய உவமைக்கும் கூட்டி உரைக்கப்பட்டது. வெய்யோனை - ஐ சாரியை.

நிருவிகாரி - எவ்வித மாறுபாடும் இல்லாதவன். சுருதி-மறை வேதம். பசுத்துவம் - மலங்களால் உயிர்க்குற்ற சிறுமை. சிவத்துவம் - இறைவனுல் உயிர் பெறும் பேறு. குணி - குணத்தை உடையது. தாதான்மியம் - பிரிவின்றி நிற்றல். சத்தி - அருளாற்றல். சங்கற்ப மாத்திரையான். நினைத்த அளவானே. இறைவன் தன் அருளாற்றலால் தன் திருவுளத்து நினைந்த அளவானே அனைத்தையும் செய்வன் என்பது இப்பாடலில் (அருளுண்டாம் ஈசற்கு) குறிப்பாய் எஞ்சி நிற்றலின் குறிப்பெச்சமாயிற்று. கண்ணுக்கு ஒளி விளங்கக் கதிரவன் ஒளி தேவையாகின்றது. ஆனல் கதிரவனுக்கு ஒளி விளங்குவதற்குப் பிறிதொன்றின் துணைதேவையில்லை, அதுபோல உயிர் அறிதற்கு இறைவனின் துணை தேவையாகின்றது, ஆனல் அவ்விறைவன் அறிதற்கு பிறிதொன்றன் துணை தேவையில்லை. இவ்வாற்றன் இறைவன் தன் வயத்தனுதல் பெறுதும். கண்பொருள் தன்மைக்கேற்ப ஒளி மாறுபடுவதுபோல

கதிரவன் பொருள்தன்மைக்கேற்ப ஒளி மாறுபடுவதில்லை. அது போல உயிர் பொருள்தன்மைக்கேற்ப மாறுபடுவது போல இறைவன் தன் ஆற்றலால் நினைந்த மாத்திரையில் அனைத்தையும் இயக்குங்கால் வேறுபடு வதில்லை என்பது இதனால் எஞ்சி நிற்றலின் இதனைக் குறிப்பெச்சம் என்றார்.

அருளும் என்பதன்கண் உள்ள உம்மை அவன் என்ற விடத்தும் கூட்டப்பெற்று அவனும் அருள் இன்றி இல்லை என உரைத்தலின் உம்மை எதிரது தழீஇயது என்றார். இன்றி என்னும் வினையெஞ்சு இறுதி நின்ற இகரம் உகரமாதல், 'தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே' (தொல். உயிர் மயங்கியல் 35) என்னும் இலக்கண விதியானும். அவனன்றே என்பதன்கண் உள்ள அன்றே என்பது அசை நிலையாம்.

அருளும் சிவமும் பிரிந்தன்றி இயைந்து நிற்கும். சிவலிங்கத் திருமேனியை வழிபடுவார் சித்தாந்த நெறியை உணர்ந்தவராவர். பிறரெல்லாம் தனித்தனியே வழிபடுவோரும், அருள்பெற்றவராக கருதப்படும் மக்களை வணங்குவோருமாக இருத்தலின் இவ்வியல்பு சித்தாந்த நெறி உணர்ந்தார்க்கே முடியும்' என்றார். கதிரவன் ஒளியைக்கொண்டே கதிரவனையும் அவ்வொளியையும் அறிதல் போல இறைவனின் அருளைக்கொண்டே இறைவனையும் அவ்வருளையும் அறிதல் வேண்டும். 'அவனருளாலே அவன்தாள் வணங்கி,' 'அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்' என வரும் திருவாக்குகளும் நினைவு கூர்தற்குரியன.

ஆறாவது நூற்பா

**உணருரு அசத்துஎனின் உணராது இன்மையின்**
**இருதிறன் அல்லது சிவசத் தாம்என**
**இரண்டு வகையின் இசைக்குமன் உலகே**

என்பது சூத்திரம். என்நுதலிற்றோ வெனின், சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேல் ஐந்து சூத்திரத்தானுங் கூறிப்போந்த பொருள் களுள் யாது சத்து யாது அசத்து என்னும் ஐயம் நீங்குதற்குச் சத்தின் இயல்பும் அசத்தின் இயல்பும் இவையென அவ்விரண்டும் இலக்கணத்தால் தம்முள் மயங்காதவாறு வரைந்துவைத்துணர்த்தி உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யு முகத்தானே

இலக்கண வோத்துட் கூறுதற்கு எஞ்சி நின்ற பதிப்பொருளது இலக்கணம் கூறுதல் இவ்வாருஞ்சூத்திரத்தின்கருத்து என்றவாறு,

இதனுனே சூத்திர வியையும் இனிது விளங்கும்.

இச் சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு.

தம்முணர்வின் தமியாகிய முதற்பொருள் அளவைகளான் அறியப்படும் இயல்பிற்றெனின், அங்ஙனம் அறியப்படும் பிரபஞ்சம் போல அழிபொருளாகிய அசத்தாம்; எவ்வாற்ருனும் அறியப்படாத இயல்பிற்றெனில் முயற்கோடு போலச் சூனியப் பொருளாம். ஆகலான், இவ்விருபகுதியுமன்றி ஒருவாற்ருன் அறியப்படாமையும் ஒருவாற்ருன் அறியப்படுதலும் ஆகிய இரண்டு வகையானும் சிவசத்தா மெனக்கூறுவர் மெய்யுணர்வின் நிலைபெற்று உயர்ந்தோர் என்றவாறு.

உணருரு வெனின் அசத்து என மாறுக. எனின் என்பது முன்னரும் சென்று இயைந்தது. முற்றும்மைகள் தொக்கன அல்லது என்பது வினையெச்சக் குறிப்பு முற்று. அன்றியாமென இயையும்.

ஒரு வாற்ருனறியப்படாமை பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை; ஒரு வாற்ருன் அறியப்படுதல் சிவஞானம் ஒன்ருனே அறியப்படுதல். பாசஞான பசுஞானங்களால் அறியப் படாமையின் சிவமாதலும், பதிஞானத்தான் அறியப்படுதலின் சத்தாதலும் பெறப்படுமென்பார், "இரண்டு வகையின் சிவசத்தாமென இசைக்கும்" என்ருர். சிவசத் தென்னும் இரு பெரொட்டுப் பண்புத்தொகை வடநூன் முடிபு. சிவசத் தென்பது சித்துச் சத்தென்னும் பொருட்டு. சடமாகிய சத்தின் நீக்குதற்குச் சிவசத்து என்ருர்.

எழுவாய் மேலைச் சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது. இருதிறனுமன்றி இரண்டு வகையானும் சித்தாதலும் சத்தாதலும் உடையனுய் நிற்றல் முதல்வனுக்கு இலக்கணம் என இலக்கணமும் இதனுட் போந்தவாறு உணர்க.

முதல்வனுக்குப்பொதுவியல்பு மேற் புனருற்பவம் உணர்த்து முகத்தாற் கூறிப் போந்தமையின் இது சொரூபலக்கணம் எனப் படுஞ் சிறப்பிலக்கணம் எனக் கொள்க. அற்ருகலின் அன்றே இதனை இலக்கணவோத்துள் முதற்கண் கூருது உண்மையைச் சாரவைத்து இறுதிக்கண் கூறியதூஉ மென்க இன்னும் முதல்வனுக்கு உளவாகிய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இவ்விரண்டினுள் அடங்கும். அஃது அறிந்து அடக்கிக்கொள்க.

'தன்னாலே தன்னையறிந்தால், தன்னையுந் தானே காணும்' எனவும் (சிவப்-72) ''உன்னரிய திருவருளையொழியமலம் உளது என்று உணர்வரிதாம் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே'' (சிவப்-36) எனவும், 'மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை, ஆயவாருயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும் (சிவப்-70) எனவும், ஓதிய வாற்றால் ஏனைப் பசு பாசங்களும் சிறப்பியல்பு பற்றி உணர்தல் சிவஞானத்தானன்றி அமையா தாயினும், ''தீபமெனத் தெரிந்தாங்கொருவி ஆன்மாவின் உண்மை யுணர்ந்தவர் தமை யுணர்ந்தோர் தருமிது பசுஞானம்'' (சித்தி 4-2) எனவும், ''இவை கீழ் நாடலாலே, காதலின் நான். பிரமமென்னும் ஞானம் கருதுபசுஞானம்'' (சித்தி 9-2) எனவும், பொதுவியல்புபற்றி யோதுதலானும், யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்றறியும் பாச உணர்விற்கு அவற்றது பொது வியல்பு விடயமாதல் கண்கூடாகப் பெறப்படுதலானும், அவை ஒரு வாற்றான் உணருருவாதலும் உடைமையின் சிவசத்தாவான் செல்லாமையறிக. சற்காரியவாதம் கூறும் சைவசித்தாந்தத்தில் அசத்து என்பது சத்துக்கு மறுதலையன்மையான் அப்பசுபாசங்கள் அங்ஙனம் அறியப்படும் பொது வியல்புபற்றி அசத்தெனப்படு மாயினும், சிறப்பியல்பு நோக்கும் வழி அவை சத்தாதற்கு இழுக்கின்மையும் அறிக.

இங்ஙனம் செவ்வனே இறுக்க அறியாதார் அபாவத்தின் இயல்பாவது பாவத்திற்கு மறுதலைப் பொருள் போலு மென நையாயிகர் முதலியோர் மதம் பற்றி மயங்கி எல்லாப் பொருளும் சத்தென்னும் சித்தாந்தத்தோடு முரணுமைப் பொருட்டு ஈண்டுச் சத்து அசத்தெனப்பட்டவை சித்து அசித்தென்னும்பொருளவாம் எனவும் சுத்தம் அசுத்தம் என்னும் பொருளவாம் எனவும் உரைத்து இடர்ப்படுவர்.

காரியப் பிரபஞ்சம் ஏனைப் பசுபாசங்கள் போலன்றி இருவகையியல்பானுங் காட்சிப் புலனாய் இத்துணைப்பொழுது நிற்குமென நம்மனோரால் அறியவாராது நிலைபெறுவதுபோலத் தோன்றி விரையக் கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமை பற்றி, அதுவே ஈண்டு ''உணருரு அசத்து'' என்று எடுத்துக் கொள்ளப்பட்டது. அசத்து எனவே அசித்து என்பதும் தானே போதரும்.

இதனுள், உணருரு அசத்தெனின் உணரா தின்மையின் என்றது ஓரதிகரணம்; இருதிற னல்லது சிவசத்தாமென இரண்டு வகையின் இசைக்குமன் உலகே யென்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்து இச்சூத்திரமென் றுணர்க.

(நு–வி) சத்து–நிலைபேறுடையது. அசத்து–நிலைபேறில்லாதது. ஏழாவது நூற்பா முதல் உண்மையதிகாரம் தொடங்குதலின் இது அதற்குத்தோற்றுவாயாயிற்று.

முயற்கோடு–முயல்கொம்பு. சூனியப்பொருள்-இல்பொருள்.

எனின் என்பது உணருரு எனின், உணராது எனின் என ஈரிடத்தும் கூட்டப்பட்டது. இருதிறன் அல்லது – இவ்விரு பகுதியும் அன்றி, இரண்டு வகையின்–இரண்டு வகையானும், என இவ்விரு தொடர்க்கண்ணும் உம்மை விரித்துரைக்கப்படு தலின் முற்றும்மைகள் தொக்கன என்றார். இருதிறன் அல்லது – இவ்விரு பகுதியும் அன்றி; அல்லது என்னும் குறிப்பு வினைமுற்று. அன்றி என்னும் குறிப்பு வினையெச்சப் பொருளில் வந்தது. ஆதலின் வினையெச்சக் குறிப்பு முற்று என்றார். பாச ஞானம் – பாசமாகிய கருவிகளின் துணையால் உயிரிடத்து நிகழும் அறிவு. பசுஞானம்–தன் முனைப்பால் உயிரிடத்து நிகழும் அறிவு. சிவசத்து–சிவமாகிய சத்து என விரிதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்றார். ஒற்றுமிகாமையின் வடநூல் முடிபு என்றார். ஆதிபகவன் என்புழிப் போல.

இறை உயிர் தளை ஆகிய மூன்றும் நிலையுடைய பொருள்களே எனவே இவை மூன்றுமே சத்தென்றற்குரியன. இவற்றுள் தளை அறிவற்றது. ஆதலின் அதனைச் சடசத்து என்றார். உயிரும் இறைவனும் அறிவுடைப் பொருளாகலின் அவற்றைச் சிற்சத்து என்றார். எனினும் உயிர் முற்றுணர்வின்றி உணர்த்த உணரும் அறிவினை உடையதாதலின் சிற்சத்து என்றற்கு இறைவனே பெரிதும் ஏற்புடையன் என்பதாம். ஆதலின் சடமாகிய சத்தின் நீக்குதற்குச் சிவசத்து என்றார்.

தம் உணர்வின் தமி என்னும் எழுவாய் மேலைச் சூத்திரத் தினின்றும் வருவித்து உரைக்கப்பட்டது.

புனருற்பவம்–மீளத்தோற்றுவித்தல். உயிர்களின் இளைப்பாற லுக்காக உலகனைத்தையும் ஒடுக்கிய இறைவன் அவ்வுயிர்களின் மல நீக்கத்திற்காகப் பின்னும் அவ்வுலகைத் தோற்றுவிப்பான். இதுவே மீளத் தோற்றுவித்தலாம். இரண்டாம் நூற்பா இக்கருத்தை உணர்த்த எழுந்தது என முன்னர்க் கூறப்பட்டது. அந்நூற்பாவில் இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் எனக் கூறப்பட்டது. அது இறைவனின் பொது இலக்கணமாம். இங்குச் சித்தாயும் சத்தாயும் இறைவன் நிற்பன் என்றது சிறப்பிலக்கணமாம். 4,5,6 ஆகிய மூன்று நூற்பாக்களும் இலக்கண வியலுள் உள்ளன இவற்றில் இதனை இறுதிக்கண் வைத்தது இறைவனின்

சிறப்பிலக்கணம் கூறுதல் பற்றியாம். முதல்வனுக்கு உளவாகிய இவ்விருவகைக் குணங்களுமின்றி மேலும்பல குணங்கள் உள. அவை திருவாசகம், ஞானாமிர்தம் முதலிய நூல்களால் ஆங்காங்கு விரித்துக் கூறப்பட்டுள்ளன. எனினும் அவை யனைத்தும் சித்து சத்து என்னும் இவ்விரு வகைக் குணங்களுள் அடக்கி உணர்தற் குரியனவாம்.

தன்னாலே தனையறிந்தால் தன்னையும் தானே காணும் - பதி ஞானத்தால் இறைவனை அறியின் அவ்வாற்றான் உயிர் தன்னையும் அறியும். உன்னறிய திருவருளை ஒழியமலம் உளது என்று உணர் வரிதாம் அதன் உண்மை தெரிவரிதாம் உனக்கே-நினைத்தற்கரிய திருவருள் துணையின்றி ஆணவம் உளதென்று உணரவொண்ணாது; அதன் உண்மை உனக்குத் தெரியவும் ஒண்ணாது. மாயை மாமாயை மாயா வரும் இருவினையின் வாய்மை, ஆயவாறு உயிரின் மேவும் அருள் எனில் ஒளியாய் நிற்கும்-மாயை மாயேயம் ஆகிய இரு மாயைகளும், துய்த்தன்றி நீங்காத இருவினைகளும் உயிர் திருவருளைக் கூடியவிடத்து ஒளியாய் நிற்கும். இம் மேற்கோள்களால் உயிர் தளை ஆகிய இவற்றின் இயல்புகளும் இறையருளாலன்றி அறிய இயலாதனவாய் இருக்க இறையியல்பு மட்டுமே அதன் அருளாலன்றி அறிய இயலாதென்றால் எங்ஙனம் பொருந்தும்? என்பது வினா. மேற்காட்டிய இரு மேற்கோள்களும் உயிர், மலம் ஆகியவற்றின் சிறப்பியல்பை அறிதற்குத் திருவருளின் துணையின்றி அமையாது என்பதை விளக்குகின்றது. ஆனால் அவற்றின் பொதுவியல்பை அறிதற்கு உயிரது அறிவே சாலுமெனப் பின்வரும் மேற்கோள்கள் உணர்த்துகின்றன. 'தீபமெனத் தெரிந்தாங்கு, ஒருவி ஆன்மாவின் உண்மை உணர்ந்தவர்தமை உணர்ந்தோர், தருமிது பசுஞானம்' - விளக்குக் கண்ணிற்குத் துணையாவது போலக் கருவிகள் உயிர்க்குத் துணையாவதெனத் தெரிந்து அக்கருவிகளை நீக்கி உயிரை உணர்வது உயிரறிவாம் (பசுஞானம்). 'இவை கீழ் நாடலாலே காதலின் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம்' - கருவிகள் தன்னிடத்து அடங்கியன என்று அறிந்து அவற்றை நீங்கினவிடத்துத் தன்னைப் பிரமம் என்று உணர்தல் உயிரறிவாம். இவ்விரு மேற்கோள்களும் உயிரின் பொதுவியல்பை அறிதற்கு அதன் அறிவே சாலும் என்பதை உணர்த்துகின்றன. யான் இதனை அறிந்தேன் என்றவிடத்து கருவிகள் துணைதாயல் பெறப்படுகின்றது. அறிகின்றிலேன் என்றவிடத்து அவற்றின் துணையின்மை பெறப்படுகின்றது எனவே அறிதற்குக் கருவிகள் துணையாதலும் அது பாசவறிவாதலும் பெறப்படும். இவ்வாற்றான் உயிர்தளை ஆகியவற்றின் பொது

வியல்பை அறிதற்கு அவையே துணையாதலும், சிறப்பியல்பை அறிதற்குத் திருவருளே துணையாதலும் பெற்றும்.

உயிரது அறிவானும்கருவிகளின் அறிவாலும் உயிரது இயல்பம் தனையது இயல்பும் அறியப்படுமெனில்அவையும் உணர்தற்குரிய பொருளெனப்பட்டு 'உணருரு அசத்து' என்பதால் இவையும் நிலையில் பொருளாகுமே என்ற ஐயம் எழும். உயிரும் தளையும் பொதுவியல்பால் நோக்குழி அழியும் பொருளாகவே (அசத்து) தோன்றும். சிறப்பியல்பால் நோக்குழி அவை அழியாப் பொருளே யாம். ஆதலின் அவை உணருரு அசத்து 'என்பதால் அசத்தாதற் கும் இழுக்கில்லையாம். சத்து அழியாதது; முக்காலத்தும் ஒரு தன்மைத்தாய் இருப்பது.அசத்து அழிதல் மாலையது; கால வகை யால் வேறுபடுவது. நையாயிகர் வைசேடிகர் மீமாஞ்சகர் ஆகியோர் இவ்வாறு பொருள் கொள்ளுதலின்றி உண்மையின் இன்மை (பாவம்-உண்மை அபாபம்-இன்மை) அபாவமாதல் போல சத்தின் இன்மையே அசத்தாம் என மறுதலைப் பொருள் கொண்டு அவ்வாறு கருதின் அவை உள் பொருளாதற்கு மாறுகுமே எனக் கருதிச் சித்து அசித்து என்றும், சுத்தம் அசுத்தம் என்றும் சொற்களை மாற்றிப் பொருள் கொள்வர்.

காட்சிப் பொருளாய உலகம் இத்துணைக் காலம் வரை நிற்கும் என அறுதியிட்டுச் சொல்லவும், அழிதலை அறியவும் இயலாது. ஆயினும் ஒரு ஞான்று அழிதற்குரியது என்பது பற்றியே உணருரு அசத்து என்றார். அசத்து, அழிதல் மாலையது. அசித்து, அறிவற்றது.

## முதல் அதிகரணம்

ஈண்டு அறிவினல் அறியப்பட்ட சுட்டு அசத்து என்றது.

என்றது மேற்கோள். என் நுதலிற்றோவெனின், மேலைச் சூத்தி ரத்தின் "அளந்தற ந் தறியா" வென்றதனை உடம்படாது பிரபஞ்சம் போல முதல்வனும் அளவைகளான் அளந்தறி பொருளே யாம் என நையாயிகர் முதலியோர் கூறுங் கடாவையும், எல்லாப் பொருளும் சத்தாகலின் அளந்தறி பொருளுஞ் சத்தேயாமனச் சாங்கியர் கூறும் கடாவையும் ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று, (இ-ள்) சுட்டறிவினல் அறியப்பட்ட சுட்டுப் பொருளெல்லாம் அசத்து என்றவாறு.

சுட்டு ஆகுபெயர். சிவஞானத்தால் அறியப்படுதலை நீக்கு தற்கு அறிவினுல் என விசேடித்தார். ஈண்டு அறிவு என்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட்டிக் காணும் அளவையறிவினை யென்பது; "அறிவினு லறிந்த யாவும் அசத்தாதலறிதி" என்ற புடைநூலாசிரியர் மீள அங்ஙனந் தெரித்தோதியவாறு பற்றி உணர்ந்து கொள்க.

ஏது

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்

என்பது ஏது. என்னுதலிற்றோ வெனின் உள்ளதென்னும் உணர்விற்குவிடயமாய்உபலத்தியைப்பயப்பிக்கும்பிரபஞ்சத்தை இல்லை யென்னும் உணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப் பிக்கும் இல்பொருளோடு ஒப்ப அசத்தென்றல் அமையுமாறு யாங்ஙனம் எனவும், சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதல் மாத்திரையான் அசத்தென்றல் சற்காரியவாதத்திற்கு இழுக்காம் போலும் எனவும் முறையே அவ்விருவர் மதம் பற்றிக் கூறுவாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அச்சுட்டுப் பொருள்கள் தாம் இராசதகுண மிகுதிப் பாட்டான் உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத் தியைப் பயப்பித்து நின்று, தாமே தாமதகுண மிகுதிப்பாட்டான் இல்லை யென்னும் உணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப் பித்து நிற்றலான் ஈண்டு அறிவினுல் அறியப்பட்ட சுட்டு அசத் தென மேற்கொண்டது என்றவாறு.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன உபலத்தி அநு பலத்தியென்னும் பொருளவாய் அவை நிகழ்தற்கிடனுகிய பொருள்மேல் நின்றன.

இது நையாயிகரை நோக்கி மேற்கோளைச் சாதித்தவாறு. இனி இதனை இரட்டுற மொழிந்துகொண்டு அவைதாம் காரியவவத் தையில் தூலமாய் விளங்கி நின்றே காட்சிப் புலனுய்ச் சடுதியின் மறைந்து சூக்குமமாய்க் காரணவத்தையின் விளங்காது நிற்கும் இவ்வேற்றுமையுடைமையான், அங்ஙனம் புலனுகாத காரணப் பொருள்களை நோக்கிக் காரியப் பிரபஞ்சம் அசத்தாதல் சாலு மாகலின் 'ஈண்டறிவினுல் அறியப்பட்ட சுட்டு அசத்து' என மேற்கொண்டது என்றவாறு எனவும் உரைத்துக்கொள்க.

எடுத்துக்காட்டு

அசத்துஅறியாய் கேள் நீ யறிவறிந்த வெல்லாம்
அசத்தாகும் மெய்கண்டான் ஆயின்—

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின் ஒருசாரன அங்ஙனமாயினும் உபலத்திப் பட்டனவெல்லாம் அவ்வாறு அசத்தாம் என்றற்குப் பிரமாணம் என்னை என்னும் நையாயிகரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அசத்து அறியாய் நீ கேள்—அசத்தின் இயல்பை அறியாத மடவோனே யாம் இறுக்கும் இறையை நீ மனம் பற்றிக் கேட்பாயாக; மெய்கண்டான் ஆயின் அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும்—சத்தின்இயல்பை அறிந்தோன் ஆராய்ந் தானுயின் அறிவினுல் அறியப்பட்டன வெல்லாம் அசத்தேயாம் என்றவாறு.

அறியாய் என்பது விளியுருபேற்ற பெயர்.

அசத்தின் இயல்பை அறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவா யல்லை யென்பார் அசத்தறியாய் என்றும், "எந்தை தாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க" (திருப்பாசுரம்) என்பார் கேள் நீ என்றும், உபலத்திக்கு விடயமானவை எல்லாம் அநுபலத்திக்கு விடயமாதல் ஒருதலை யென்பார் அறிவறிந்த வெல்லாம் அசத்தா கும் என்றும், சத்தின் இயல்பு உணர்ந்தார்க் கன்றி அசத்தின் இயல்பு உணர வாரதென்பார் மெய்கண்டான் என்றும், ஆய்தற் கருமை நோக்கி ஆயின் என்றும் கூறினர்.

எடுத்துக்காட்டு

—அசத்து அலாய்

நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரின் அவை இன்றுமா றொப்பு

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், இரட்டுற மொழிந்துகொண்டு சாங்கியரை நோக்கி உரைத்த பொருளை வலி யுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அசத்து அலாய்—அசற்காரியவாதி யல்லாத அறிவுடையோனே: அவை இன்று ஆம் ஆறு ஒப்பு ஓரின்—அங்ஙனம் தோன்றி மறைவனவாய பிரபஞ்சம் அசத்தா மாற்றிற்கு உவமை ஆராயின்; நிகழ் நீரில் எழுத்தும் கனவும் பேய்த்தேரும்—நிகழா நின்ற நீர் மேலெழுத்தும் கனவிற் காட் சியும் பேய்த்தேருமாம் என்றவாறு.

எனவே, அப்போதுள்ளனவாய நீர்மேலெழுத்து முதலிய வற்றை அங்ஙனே சடுதியின் மறைந்துபோதற் சிறப்புப்பற்றிஅசத்

தென்றல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவ்வியல் புடைய பிரபஞ்சத்தையும் அவைபோல் அசத்தென்றல் அமையு மென்றவாருயிற்று.

அசற்காரிய வாதியை அசத்து என்று உபசரித்தார். நீரி லெழுத்து முதலியன பொய் என்பாரை மறுத்தற்கு நிகழ் என்று அடைகொடுத்தார். அஃது யாண்டுஞ் சென்றியையும். குவ்வுருபு விகாரத்தால் தொக்கது. இன்றென்னும் ஒருமை அப்பண்பின் மேல் நின்றது.

நீரிலெத்துத் தோன்றிய பொழுதே மறைந்து போதற்கும்' கனுப்பொருள் முடிவு பெறுதலின்றி இடையே மறைந்து போதற்கும் அருஞ்சுரத்தின் முதுவேனிலின் நண்பகற் கடுமைப் பற்றித் தோன்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தில் மறைந்த வழித் தானும் மறைந்து போவதாகிய பேய்த்தேர் ஒரு காரணங் காட்டி மறைந்து போதற்கும் உவமையாயின.

இவ்வெண்பாவை 'இலயித்த தன்னில்' என்பதுபோல இங்ஙனம் இருதொடராக வைத்துரைத்து மேற்கோள் ஏதுக் களையும் இரட்டுற மொழிந்துகொண்டு இரண்டதிகரணப் பொருள் கோடல் ஆசிரியர் கருத்தென்பது, வழிநூலாசிரியர் "அசத்தாஞ் சுட்டி உணர்பொருளான வெல்லாம்" என்றும், "உண்டு போலின்ரும் பண்பின் உலகினை யசத்து மென்பர்" என்றும் வேறு கூறியவாற்ருனு முணர்க. இஃது அறியாது இவ்வெண்பாவை ஒரு தொடராக வைத்து உரைப்பார்க்கு அசத்தறியாய் அசத்தலாய் என்றதனுல் ஒரு பயன் படாமையும், ஆயின் ஓரின் என்று இரு காற் கூறுதலும், அசத்தாகும், இன்ரும் என்று இருகாற் கூறுதலும் கூறியது கூறலென்னும் வழுவாதலும் அறிக.

இனி, ஒருவாற்ருனும் உணரப்படாத பொருள் சூனிய மென்பது எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின் ஆண்டு அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலிய நிகழாமையான் அதனை வேறுபடுத்துரைத்து மேற்கொள்ள வேண்டாவாயினும், மந்த வுணர்வுடையார்க்கு அதன்கண் ஐயம் நிகழாமைப் பொருட்டு வழிநூலாசியர், "உணராத பொருள் சத்தென்னில் ஒருபயனில்லை போலும்" எனவிடுத் தொழிந்தாரென்று உணர்க.

(நு-வி)சுட்டறிவு-ஒன்றைக் குறித்து அறிதற்குரிய அறிவு. சுட்டு: சுட்டி உணரப்படும் பொருளைக் குறித்தமையின் ஆகுபெய ராயிற்று. அறிவினுல்-உயிரது தன்முனைப்பாலும் கருவிகளின் துணையாலும் அறியப்படும் அறிவினுல் (பசுஞானம் பாசஞானம்).

கருவிகளின் துணைக்கொண்டு அறியும் அறிவை அறிவுடைமை என்ற அதிகாரத்தானும், திருவருள் துணைக்கொண்டு அறிதலை மெய்யுணர்வு என்னும் அதிகாரத்தினுலும் திருவள்ளுவனுர் விதந்து கூறியிருப்பது அறியத்தக்கது. புடை நூலாசிரியர்-உமாபதிசிவம். விடயமாய்-(உணரப்படும்) பொருளாய்.உபலத்தி-உள்ளதென்று அறியும் அறிவு. அநுபலத்தி-இல்லதென்று அறியும் அறிவு. சற்காரிய வாதம்-உள்பொருள் ஒன்றே செயல்படும் என்னும் கொள்கை.

இராசதகுணம் ஒன்றைத் தோற்றுவிக்கும் இயல்புடையது ஆதலின் நான்முகனை அக்குணம் உடையோன் என்பர். சாத்விகம் அமைதியைத் தருவது, ஆதலின் திருமாலை அக்குணம் உடையவன் என்பர். தாமதம் அறிவழிவைக் குறிப்பது. ஆதலின் உருத்திரரை அக்குணம் உடையவன் என்பர். 'சத்துவம் முதலிய குணங்களான் மூன்ருய உறுதிப் பொருட்கு அவற்ருன் மூவராகிய முதற்கடவுளோடு இயைபுண்டாகலான், அம்மூன்று பொருளையும் கூறலுற்ருர்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ் வாழ்த்து (திருக்குறள்-கடவுள் வாழ்த்து) அம்மூவர்க்கும் பொதுப் படக் கூறினுரென வுணர்க' என வரும் பரிமேலழகர் உரையும் ஈண்டு நினைவு கூர்தற் குரியதாம்.

பிரகாசம்-உண்டு என்று உணரும் அறிவு: ஈண்டு அவ்வாறு உணரப்படும் பொருளைக் குறித்தது. அப்பிரகாசம்-இல்லை என்று உணரும் அறிவு: ஈண்டு அவ்வாறு உணரப்படும் பொருளைக் குறித்து நின்றது. நான்முகனுல் இவ்வுலகம் தோற்றுவிக்கப்பட்ட பொழுதுஉண்டு என்னும் உணர்வைத் தருவது. உருத்திரனுல் அழிக்கப்பட்ட பொழுது இல்லை என்ற உணர்வைத் தரும். இவ் வாற்ருன் நையாயிகர் ஐயத்திற்கு விடை தருகின்ருர் ஆசிரியர்.

விளங்கித் தோன்றுகின்ற இவ்வுலகை விளங்கித் தோன்ருது என்றல் யாங்ஙனம் என்பது சாங்கியரின் வினு. இவ்வுலகம் காரியப்பொருளாய்த் தோன்றி நிற்கும் நிலையில் விளங்கித் தோன்றும். காரணப் பொருளாய் ஒடுங்கி நிற்கும் நிலையில் விளங்கித் தோன்ருதாம் என்பது அவர்க்குரிய விடையாம். பிரகாசம்-விளக்கமாய் இருப்பது. அப்பிரகாசம்-விளக்கமின்றி இருப்பது. இவ்வாறு பொருள் கொண்டே இவ்விளக்கம் தரப்படுகின்றது. பிரகாசம், அப்பிரகாசம் என்பன இரட்டுற மொழிதலாய் இரு பொருள்பட நின்றன.

இறையை-விடையை. அறியாய்: அறியான் என்பதன்கண் உள்ள ஆன் இறுதி ஆய் ஆயிற்று. சாங்கியர் சற்காரியவாதியாவர்.

நையாயிகர் அசற்காரியவாதியாவர். 'அசற்காரியவாதி அல்லாய்' எனற்பாலதை 'அசத்தலாய்' என்ருர்.

## இரண்டாம் அதிகரணம்

### மேற்கோள்

இனி, இவ்விரண்டு தன்மையும்இன்றி வாக்கு மனதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற் பாற்று.

என்றது மேற்கோள். என்னுதலிற்ருே வெனின், மேல் உணர் பொருள் இயல்பும் உணராத பொருள் இயல்பும் கூறுமுகத்தான் அசத்தின் இயல்பை வரைசெய்து உணர்த்தியவழி இரண்டும் இவ் வாருகலான் இவற்றின் வேருய முதல்வனது இயல்பாவது மாயா வாதி கூறும் அநிர்வசனம்போலும் என்னும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

வாக்கெனப்படும் நாத முடிவான பாசஞானத்தை வாக் கென்றும், அவற்றின் வேருய பசுஞானத்தை மனமென்றும் உபசார வழக்காற் கூறினர்.

வாக்கு மனதீத கோசரமாய் நின்ற என்றது, அவ்விரண்டின் விருத்திகளைக் கடந்து அதீதமாயும், ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவ ஞானமாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதாயும் நின்ற என்றவாறு.

அவ்வாறு நின்றபொருள் இதுவென அளவைகளான் அறிய வாராமை பற்றி அதுவே என மகாவாக்கியத்துட் கூறியதனை அநு வதித்துச் சத்தாகிய சிவமாதலைச் செவியறிவுறுத்தார்.

வாக்கு மனதீதம் என்றது தமிழ்நூல் முடிபு. மரம்+அடி =மராடி என மரீஇயினற் போல, மனம் அதீதம் மனதீதமென மரீஇயிற்று. அதீத கோசரம் என்பது வடநூல் முடிபு.

வாக்கு மனதீதப் பொருளாகலின் உணருருவாம் தன்மையும், கோசரப் பொருளாகலின் உணராதாம் தன்மையும் இல்லை யென்பது பெறப்படுதலின், இவ்விரண்டு தன்மையும் இன்றி என்ருர்.

ஏது

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மை யானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மையானும்.

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், இவ்விரண்டு வகையும் இல்லாத பொருள் அநிர்வசனமாய் நிற்பது என்னுது வாக்கு மனுதீத கோசரமாய் நிற்பது என்றற்குப் பிரமாணம் என்னே என்பாரை நோக்கி மேற்கோளேச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) வாக்கு மனங்களால் ஓதி உணரப்படுவதாய நிருவசனப் பொருட்கு முன்னர்க் கூறப்படும் சாதனங்களினின்று அறியற் பாலதாக வேண்டாமையானும், ஒருவாற்றானும் அறியப்படாத அநிர்வசனப் பொருட்குச் சாதனத்தினின்றும் அறியப்படுமாறு இன்மையானும், இனி இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்கு மனுதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்று என மேற்கொண்டது என்றவாறு.

உணர்தற்பாற்று என்ருர் உணர்தல் அருமை நோக்கி. பிரகாசம், அப்பிரகாச மென்பன உபசார வழக்கு.

எடுத்துக்காட்டு

**எண்ணிய சத்துஅன்று அசத்துஅன்ரும் என்ருல்என்**
**கண்ணி யுளதுஎன்றல் மெய்கண்டான்—எண்ணி**
**அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்**
**அறிவறியா மெய்சிவன்தா ளாம்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின்பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் அவிச்சை வயத்தான் ஞாதா எனவும் ஞேயம் எனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படும் சாதனங்களின் நின்று அறியவும் படும். அவிச்சை நீங்கியவழி அப்பகுப்பின்மை யான் சத்தென்ருதல் அசத்தென்ருதல் ஒருவாற்ருனும் ஞேயமா மாறு இன்றிக் கேவலம்ஞானமாத்திரையேயாய் நிற்பதொன்று ஆகலான் அது கோசரமாம் என்றல் பொருந்தாது என்பாரை நோக்கி அதனே வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) எண்ணிய சத்து அன்று அசத்து அன்று ஆம் என்ருல் உளது என்றல் என் கண்ணி— பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் விவகாரத்திற் கருதப்பட்ட சத்துமன்று அசத்து மன்று என்னின், அங்ஙனம் ஒரு பொருள் உண்டென்றல் யாது பிரமாணங்கருதியோ அதனைக் கூறுவா யாக; பிரமாணம் உண்டெனின் அதற்கு அது பிரமேயம் எனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென்று அஞ்சிப் பிரமாண

மில்லை என்பையாயின், மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம்—சத்தின் இயல்பை யுணர்ந்தோன் ஆராய்ந்தறியின் காட்சி முதலிய பிரமாணங்கட்கு விடய மாவதூஉம் ஒருவாற்ருனும் பிரமாணமல்லாத சூனியமுமாகிய இரண்டும் மேற்கூறியவாற்ருன் அசத்தேயாம்; ஆதல் சத்துஆம் அறிவு அறியாமெய் சிவன் தாள்ஆம் – ஆதலால் சாந்தோக்கிய முதலியவற்றுள் சத்தென்று ஓதப்படும் சுட்டறிவினுல் அறியப் படாத மெய்ப்பொருள் சைவ உபநிடதங்களினும் சைவாகமங் களினும் அந்நியமின்றி நின்று உணரும் அநுபவ மாத்திரையின் கோசரிப்பது என்று ஓதப்படும் சிவன்அருளாவதன்றி நீகூறும் சூனியமன்று என்றவாறு.

ஆம் அசை. அறிய வென்னும் செயவெனெச்சம், ''மழை பெய்யக் குளம்நிறையும்'' என்புழிப் போலச் செயின் என்னும் எச்சப் பொருட்டாய் நின்றது.

முற்றும்மை விகாரத்தால் தொக்கது. அசத்தாமென மாறுக' சத்தாகிய மெய்யென இயையும் ''அடியளந்தான் தாஅயது (திருக் – 610) என்ருற்போல அறிவறியா மெய் என்றது வாளா பெயராய் நின்றது.

சிவன்தாள் எனச் சிவசக்தியின் மேல் வைத்து உயர்த்துக் கூறியது உபசாரவழக்கு; ''இறைவனுர் கமலபாதம்'' (சித்தி – பாயிரம்) என்பதுமது.

இதனுற் போந்த பொருள் : சத்துமன்றி அசத்துமன்றி ஒரு பொருள் உண்டெனின் அதற்குப் பிரமாண மென்னை? பிரமாணு தீதமாகிய சூனியமெனில், சூனியமும் அழிபொருளுமாகிய இரண்டும் அசத்தே யென்பது மேற்காட்டினமையால் பிரமப் பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னுஞ் சுருதிகளோடு முரணும்; ஆகலின் அவற்றுள் சத்தென்று ஓதப்படும் பரப்பிரமப் பொருளாவது உண்மைஞானத்திற் கோசரிப்பது என யாம் கூறும் சிவமேயன்றி நீ கூறும் சூனியம் அன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரமென்றதனை வலியுறுத்தியவாறும் என்க.

எண்ணி யறிய விரண்டாம் அசத்து என்பதற்குப் பிறரெல் லாம் வருகின்ற வெண்பாவிற் கூறும் பொருள்படக் கூறியது. கூறியது கூறலாதல் மேலும் ஓர் இயைபின்றி யுரைப்ப.

எடுத்துக்காட்டு

**உணர்ப அசத்தாதல் ஒன்றுணராது ஒன்றை**
**உணரும்நீ தானுணரா யாயின் - உணரும்உனின்**
**தான்இரண்டாம் மெய்கண்டான் தன்னுல் உணர்தலால்**
**தான் இரண்டாய்க் காணுன் தமி.**

சி. போ. பா. 20

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், பிரகாசித்த பொருளையும் வேறோராற்றான் அறிதுமென வேட்கை சென்றுழி அவ்வாற்றான் புதுவதாய்ப் பிரகாசிக்க வேண்டுதலின் பிரகாசத்தி னுக்குப் பிரகாசிக்க வேண்டுவதில்லை யென்றல் யாண்டும் செல் லாமையின் வாக்கு மனாதீதம் என்றல் பொருந்தாது என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) உணர்ப அசத்து - நின்னால் அறிவனவாய கருவி களெல்லாம் மேற்கூறியவாற்றான் அசத்தாம். அசத்தெனவே அசித்தாதலும் பெறப்படும்; ஆதல் ஒன்று ஒன்றை உணராத- ஆகலான் அவற்றுள் ஒருகருவியும் ஒன்றாகிய முதற்பொருளை அறியமாட்டாது; உணரும் நீதான் உணராய் - அவற்றான் அறிந்து வருகின்ற நீதானும் அதனை அறியமாட்டாய்; ஆயின் - நீயே ஆய்ந்தறிவாயாயின்; உணரும் உனின் தான் இரண்டும் ஆம்-அவ்வா றுணரப்படும் பொருள்கள் போல் உணருகின்ற நின்னின் வேறாம்; மெய்கண்டான் தன்னால் உணர்தலால் - உயிர்க்கு அறிவு விளங்கும் உண்மை அறிந்தோன் தன்னறிவு அச்சிவனருளின் அடங்கி அதுவதுவாய் நின்றுஅதனானே; அதனை அறியுமாதலான்; தான் இரண்டாய்க் காணான் தமி ஏனைப் பொருள்களை அறியுமாறு போல வேறாய் நின்று அறிவானல்லன் அத்தனி முதற் பொருளை என்றவாறு.

உணர்ப வென்பது அகரவீற்று அஃறிணைப் பன்மைப் பெயர்ச் சொல். ஒன்றும் என்னும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது உனின் என்னும் இன்னுருபு நீக்கப் பொருட்கண் வந்தது ஒற்றி ரட்டாமை புரனடையாற் கொள்க.. தான், அசை.

இதனாற் போந்தது: சத்தாகிய சிவம் பாசஞானத்தானாதல் பசு ஞானத்தானாதல் அறியப்பட்டது; அறியப்படின் குடமுத லாயின போல உயிரின் வேறாய் அவிச்சையான் வரும் சுகதுக் கங்களைப் பயப்பதன்றி அவிச்சையின் நீங்கிய நிரதிசய இன் பத்தினைப் பயவாதாகலான், அவ்வுண்மை உணர்ந்தோன், ஏனையபோல அசத்தாதலின்றித் தனியாய் நின்ற அம் முதற் பொருளை, அதனால் ஒற்றித்து நின்றே காண்பன் என நையாயிகர் முதலியோரை மறுத்து வாக்கு மனாதீதமாய் நின்றே கோசரமாம் என வலியுறுத்தியவாறுமென்க.

எடுத்துக்காட்டு

**பாவகமேல் தான்அசத்தாம் பாவனா தீதம்எனில்
பாவகமாம் அன்றுஎன்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்
பாவித்தல் தானென்னின் பாவகமாம் தன்னருளால்
பாவிப் பதுபரமில் பாழ்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின் தானே கோசர மாஞலன்றித் தன்ஞல் அறிதல் கூடாமையின் தன்ஞலே தனையுணரும் என்பது தன்னைப் பற்றுதல் என்னும் வழுவா மாகலின் அவ்வாறன்றி வாக்கு மஞதீதப் பொருள் யோகநூலிற் கூறும் தியான பாவனைகளில் கோசரமாம் என்றலே அமை வுடைத்து என யோக மதம் பற்றிக் கூறுவாரை நோக்கித் தன்ஞலன்றிக் கோசர மாகாமையை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) பாவகமேல் தான் அசத்து ஆம்-நீ கூறும் பாவனை ஏனைப் பாவகங்கள் போல மன முதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும் பாவகமெனின், அறிவிஞ லறியப்பட்ட சுட்டாகலான் அப்பொருள் அசத்தாம்; பாவஞதீதம் எனின் பாவகம் ஆம்-கருவிகளை நீங்கி நின்று பாவிப்பதாகலின் அப்பாவனையைக் கடந்தது எனின் கருவிகள் நீங்கிய வழி ஒன்றும் அறியுமாறின்றிக் கேவலமாமா கலான் அது பாவக மாத்திரையே யன்றிப் பயன் படுமாறில்லை; அன்று என்னின் பாழ் ஆம்-இவ்விரு திறனுமன்றி அநிருவசனமாகப் பாவிக்கப்படுவது எனின் அது சூனியப் பொருளாம்; பாவகத்தைப் பாவித்தல் தான் என்னின் பாவகம் ஆம்-அவ்வாறன்றிப் பாவனைக்கெய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவகஞ் செய்தலெனின் அது போலிப் பாவனை யாதலால் பாவஞதீதம் போலப் பாவனை மாத்திரையே யன்றிப் பயன்படுமாறில்லை;அற்றேல்,ஒருவாற்ஞனும் பாவனைக் கெய்தாத பொருள் பாழாமெனின், தன் அருளால் பாவிப்பது பரம்-அப் பாவங்களை யொழித்துத் தனது திருவருளாற் பாவிக்கப்படுவதாம் பரம்பொருள்;பாழ் இல்-ஆகலான் நீ கூறும் பாவனைக்கெய்தாமை பற்றிப் பாழாதல் இல்லை என்றவாறு.

தான், அசை. பாவகத்தைப் பாவித்தல் என்பது "கறைமிட றணியலும் அணிந்தன்று (புறம்-கடவுள் வாழ்த்து) என்றது போலக் கொள்க.

மேலை வெண்பாவில் தன்னென்றது தனது சத்தியே யாதலால் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாதல் யாண்டையதென விடுப் பார் தன்னருளாற் பாவிப்பது என்ஞர். தன்னருளை யறியுமாறும் அதஞல் பாவிக்குமாறும் உண்மையதிகாரத்திற் (சி. போ. 9) கூறப்படும்.

எடுத்துக்காட்டு

**அறிய இரண்டல்லன் ஆங்கறிவு தன்ஞல்**
**அறியப் படான்அறிவி னுள்ளான்-அறிவுக்குக்**
**காட்டாகி நின்ஞனைக் கண்ணறியா மெய்யென்னக்**
**காட்டா தறிவறிந்து கண்டு**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், மேற்கூறிப் போந்த பாவனைகட் கெய்தாத பொருளைத் தன்னருளால் பாவித்தல் வேண்டா; "உயிர் பசுத்துவம் நீங்கிய காலத்துச் சிவனைப்போல முற்றுமுணர்தல் முதலிய எண்குணங்களு முடையது" என்று ஆகமங்களுட் கூறுதலின் ஆண்டு ஆன்ம ஞானம் சிவஞானத்தோடு ஒப்பதன்றிப் பசுஞானம் எனப் படாமையான் அவ்வறிவான் அறியப்படும் கோசரப்பொருள் என்றலே அமைவுடைத்து என்னும் சிவசமவாதிகளை நோக்கித் தன்னருளாலன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அறிய இரண்டு அல்லன்-சிவாகமங்களில் அத்து விதம் கூறுதலின் உயிர் தன்னறிவான் அறிதற்குத் தன்னில் வேறல்லனாகலாலும்; அறிவின் உள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான்-சமமாதலின்றித் தூல சூக்கும முறையால் தன்னறிவுக் குள்ளுமாய் நிற்றலின் அவ்விடத்துத் தன்னறிவினால் அறியவாரானாகலானும்; அறிவுக்குக் காட்டு ஆகி நின்றானை - தன்னறிவுக்கு வியஞ்சகமாய் நின்று அறிவிக்கும் உயிர்க்குயிராய முதல்வனை; அறிவு கண்டு அறிந்து காட்டாது - ஆன்ம ஞானமானது தான் கண்டறிந்து தன் குணியாகிய உயிர்க்குக் கோசரமாமாறு காட்டமாட்டாது; மெய் அறியாக் கண்என்ன - தன்னின் வேறின்றித் தனக்குள் நிற்றலின் தன்னாற் காணப்படாது தனக்குக் காட்டாகி நின்ற உயிரை அறியமாட்டாத கண்ணேளி போல என்றவாறு.

காட்டு முதனிலைத் தொழிற்பெயர். அறிவுக்குக் காட்டாகி நின்றான் என்னும் பெயரடையானும் ஓர் ஏதுக்கூறியவாறு. கண்டறிதல் "குழிந்தாழ்ந்தகண்" (நாலடி-தூய்தன்மை-9) என் புழிப்போல ஒரு பொருட் பன்மொழியாய்ச் சிறப்பின்கண் வந்தது. மெய்யறியாக்கண் என்ன என இயைத்துரைக்க, கண் முதலியவற்றை நோக்க உயிர் சத்துச் சித்தாம் என்று அதனை மெய்யென்றார். கண்-ஆகுபெயர்.

கண்ணறியா மெய் என்பதற்குக் கண்ணை அறியாத உடம்பு போலென்று உரைப்பாரும் உளர். உடம்பிற்கு அறியுந் தன்மை இன்மையானும், உடம்பிற்குக்கண் காட்டாதலும் இன்மையானும் அஃது ஈண்டு உவமையாதற்கு ஏலாமையின் அதுபோலி உரை என்றொழிக.

எடுத்துக்காட்டு

**அதுவென்னும் ஒன்று அன்று அதுவன்றி வேறே**
**அதுஎன்று அறியறிவும் உண்டோ-அது என்று**
**அறிய இரண்டல்லன் ஆங்கு அறிவுள் நிற்றல்**
**அறியும்அறி வேசிவமு மாம்,**

என்பது உதாரணம். என்னுதலிற்றோவெனின், அத்தன்மையனாகிய முதல்வனைத் தலைப்பட்ட உயிர் அம் முதல்வனோடு ஒன்றுயப் போவதேயாகலின் ஆண்டு அங்ஙனம் அறிவதூஉம் அறியப்படுவதூஉம் ஆதல் யாங்ஙனம் என்னும் சிவாத்துவித சைவரை நோக்கி ஒன்றுயவழியும் அறிவதும் அறியப்படுவதும் உண்டென்பது உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அது என்னும் ஒன்று அன்று—சத்தாகிய சிவம் ஞேயப் பொருளாய் விசிட்டமாய் நிற்பதென்பது உமக்கும் ஒக்கும் ஆகலான் அச்சிவம் இன்னதென்று அறிய வாராது அநிருவசனமாய் நிற்பதொரு நிருவிசேடப் பொருளெனக் கொண்ட மாயாவாதத்தைப்போல அது என்றுஅநிருவசனமாய்க் கூறப்படுவது ஒரு சூனியம் அன்று ஆகலான்; அது அன்றி வேறு அது என்று அறி அறிவும் அங்கு உண்டே - அந்த ஞேயமாத்திரையேயன்றி அதனின் வேறுக வாக்கு மனாதீதமாய் நிற்பதொரு பொருள் என்று அறிகின்ற ஞாதாவும் ஆண்டுள்ளதேயாம்: அற்றேல், ஒன்றுதல் பெறப்படாதால் எனின்; அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவே சிவமும் ஆம்—உலகத்துப் பொருள்போல் அது என்று சுட்டி அறியுமாறு முதல்வன் தன்னின் வேறல்லனாய் அப்பணைந்த உப்புப் போலத் தன் அறிவின்கண் விரவி வேற்றுமை தோற்றாது நிற்றலான் அறிவிறந்து அறிகின்ற அவ்வுயிர் சிவமேயாம் என்றவாறு.

உம்மை சிவமாயும் சிவமாகாமை விளக்கி நின்றது. அது வென்னும் ஒன்றன்று ஆகலான் என ஏதுப் பொருள்படக் கொண்டு உரைக்க. அறிவும் என்ற உம்மை இறந்தது தழீஇயது. அல்லனென்பது முற்றெச்சம். வேறு முடிபு கோடலிற் பால் வழுவாகாமை உணர்க. உண்டே என்னும் ஏகாரம் தேற்றம்; ஏனையிரண்டும் அசைநிலை. நிற்றலான் என்றவாறு.

இவ்வெண்பாக்கள் ஐந்தும், முறையே வாக்கு, மனாதீதம் என்றல் பொருந்தும் கோசரமாம் என்றல் பொருந்தாது என்னும் மாயாவாதிகளையும், கோசரமாம் என்றல் பொருந்தும் வாக்கு மனாதீதம் என்றல் பொருந்தாது என்னும் நையாயிகர் முதலியோரையும்,பாவனைக்குக் கோசரமாம் என்னும் பாதஞ்சலரையும் ஆன்மஞானத்திற்கே கோசரமாமென்னும் சிவசமவாத சைவரையும்,முத்தியில் சிவமேயன்றி உயிரெனவேறு இன்மையின் உயிர்க்குக் கோசரமாமாறு யாண்டையது என்னும் சிவாத்துவித சைவரையும் மறுத்து, வாக்கு மனாதீத கோசரமாய் நிற்கும் இயல்பு வலியுறுத்தி ஒரு பொருள் மேல் வந்தவாறு காண்க.

இவ்வாறு நரன்காஞ் சூத்திர முதலிய மூன்றினும், மேற் பிரமாணத்தாற் கூறிப் போந்த பசுபாச பதிகட்கு இலக்கணம் கூறுமுகத்தான் முறையே கேவலஞ் சகலஞ் சுத்த மென்னும் மூன்றவத்தையும் காட்டப்பட்டன. இம்மூன்றனுட் கேவலம்: மருட்கேவலமும், சகல கேவலமும், பிரளய கேவலமும், விஞ்ஞான கேவலமும், அருட் கேவலமும் என ஐவகைப்படும். அவற்றுள், மருட் கேவலமாவது அனாதி கேவலம். சகல கேவல மாவது சங்கரித்த பின்னர்ப் புனருற்பவத்திற்கு ஏதுவாய்ப்படுங் கேவலம். ஆண்டுச் சூக்கும ஐந்தொழில் உண்டென மிருகேந் திரத்துட்கூறுதலின் அனாதி கேவலத்தோடு இதனிடை வேற்றுமை யாமாறு கண்டுகொள்க. பிரளய கேவலமாவது மாயையோடு இயைபின்றி ஆண்டுப் படுங்கேவலம். விஞ்ஞான கேவலமாவது மாயை கன்மங்கள் என்னும் இரண்டனோடும் இயைபின்றி ஆண்டுப் படுங் கேவலம். அருட்கேவலமாவது தத்துவ சுத்திப் பின்னர்ப் படும் கேவலம். அது துகளறுபோதத்திற் காண்க.

இனிச் சகலமும் சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தமென மூவகைப்பட்டு ஒரோவொன்று ஐந்து வகைப்படும். அவற்றுட் சகலத்திற் கேவலம் ஐந்தும் ''ஒன்றனையா மூலத்து'' என்றதனுட் காண்க சகலத்திற் சகல மைந்தும் ''இலாடத்தே சாக்கிரத்தை'' என்றதனுட் காண்க. சகலத்திற் சுத்தமைந்தும் ''யோகிற் றருவதோர் சமாதி'' என வழிநூலாசிரியர் தொகுத்தோதியது சித்தாந்த சாராவலி யோக பாதத்தின் வகுத்துக் கூறுதலான் ஆண்டுக் காண்க.

இனிச் சுத்தமும் சீவன் முத்தி, அதிகார முத்தி, போக முத்தி இலய முத்தி, பர முத்தி என்று ஐவகைப்பட்டுச் சாக்கிர முதலிய பெயர் பெறும்; அவற்றை முன்னர் வகுத்தோதுப.

(நு-வி) நிருவசனம்–உறுதியாய்ச் சொல்லக் கூடியது. அநிர்வசனம்–உறுதியாய்ச் சொல்ல முடியாதது. வாக்கு எனத் தலைமை பற்றிக் கூறினாரேனும் ஏனைய தத்துவங்களும் கொள்ளப் படும். உயிருக்கும் மனத்துக்கும் உள்ள ஒற்றுமை பற்றி உயிரை மனம் என்றார் அதீதம்–கடந்து நிற்பது. கோசரம்–விளங்கித் தோன்றுவது. வாக்கு மனம் ஆகியவற்றைக் கடந்து நிற்பினும் திருவருள்துணைக்கொண்டுஉணருங்கால்விளங்கித்தோன்றுதலின் 'வாக்குமனாதீத கோசரம்' என்றார்.

மகா வாக்கியம் என்றது தத்துவமசி என்பதாம். இதன்கண் தத் என்பது அது என்ற பொருளைக் குறிக்கும். அது—பரம்பொருள். இப்பொருளையே வழிமொழிந்து சத்தாய் உள்ள சிவம் என்றார்.

தத்-அது(பரம்பொருள்), துவம்—நீ, அசி-இருக்கிறுய் எனப் பொருள்காண்பார். மன + அதீதம் = மனுதீதம்.ஒற்று மிகாமையின் வடநூல் முடிபு என்றுர்.

பிரகாசம்-விளக்கம்: விளக்கமுடைய பொருளைக் குறித்தது. அப்பிரகாசம்-விளக்கமற்றது: அவ்வாறுய பொருளைக் குறித்தது. இவ்வாறு கூறுதல் ஏற்றுரையாம்.

பரமார்த்தமாகிய-மேலாய பொருளாகிய. அவிச்சை வயத்தான்—மலப் பிணிப்பால் அறியாமையொடு கூடிய வழி. ஞாதா-அறிபவனுகிய உயிர். ஞேயம்-அறியப்படுவதாகிய பரம்பொருள். ஞேயம் ஆமாறின்றி-அறியப்படும் பொருளாதலின்றி. கேவல ஞானமாத்திரையேயாய்-உயர்ந்த அறிவுருவாம் அளவினதாய். பிரமேயம் எனப்பட்டு-அளந்தறியப்படும் எனப்பொருள் பட்டு.

அறிய அறியின் எனப் பொருள்பட நின்றது. இரண்டும் எனப் பொருள் கோடலின் முற்றும்மை விகாரத்தால் தொக்கதென்றுர். இரண்டாம் அசத்து என்றவிடத்து இரண்டு அசத்தாம் எனப் பிரித்துக் கூட்டப்பட்டது.

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான், தாஅயது எல்லாம் ஒருங்கு' என்னும் திருக்குறளில் தாஅயது எனப் பின் வருதலின் அடியளந்தான் என்பது திருமால் என்னும் பெயரளவாய் நின்றது. அடியளந்தான்-அடியை அளந்தவனுகிய திருமால் எனப்பொருள் கொள்ளின் பின்னர்க் கூறிய 'தாஅயது' என்பது பயனில் கூற்றுய் முடியும். அதைப் போன்றே 'அறிவறியா மெய்' என்பதும் மெய்ப்பொருள் என்னும் பெயரளவாய் நின்றதாம். சுட்டறிவினுல் அறியப்படாத மெய்ப்பொருள் என உரைட காணின், 'இரண்டும் அசத்தாம்' என்றவிடத்துப் பெறப்பட் கருத்தே மீண்டும் கூறியதாய் அமையும்.

அருளைத் தாள் என்றது ஏற்றுரையாம். இறைவனுர் கமல பாதம்-இறைவனது தாமரைமலர் அனைய திருவடி. ஈண்டும் அருளையே திருவடி என்றுர்.

பிரகாசித்த பொருளையும் அறியப்பட்ட பொருளையும், புதுவதாய்ப் பிரகாசிக்க-பிறிதொருவாற்றுன் ஆராய்ந்த வழியும் புதிதாய் விளங்க. காண்டல் அளவையால் அறிந்த பொருளைக் கருதல் அளவையானும் ஆராய்ந்து அறிய விரும்பின் அவ்வாற்றுனும் அளந்தறிதல் பொருத்தமேயாம். எனவே முன் அறிந்த பொருளுக்குப் (பிரகாசத்தினுக்கு) பின்னும் அறிய வேண்டுவதில்லை (பிரகாசிக்க வேண்டுவதில்லை) என்றல் அமையாது என்பர் நையாயிகர்.

அசித்தாதலும்—அறிவற்றதாதலும்.

உணர்ப-உணர்வன எனப்பொருள் காண்டலின் அஃறிணைப் பன்மைப் பெயர் என்றார். உணரும் உனின் இரண்டும் ஆம்-உணர்கின்ற நின்னின் வேறாம். ஈண்டு உனின் என்பதன்கண் உள்ள இன் நீக்கப் பொருட்கண் வந்தது. உனின் என்பது'குறிய தன் முன்னர் தன்னுருபு இரட்டலும்' என்ற விதிப்படி உன்னின் என்று ஆதல் வேண்டும். அவ்வாறு ஒற்று இரட்டாமை 'ஈறியல் மருங்கின்' எனவரும் புறனடையால் கொள்ள வேண்டும் என்றார்.

நிரதிசய இன்பம்-நிலைத்த வியத்தகு இன்பம்.

தன்னாலே தனை உணரும்-சிவபரம் பொருளாலேயே சிவ பரம் பொருளை உணரும்.

கேவலமாம் ஆகலான்-பேருறக்கமாகிய கேவல அவத்தை ஆகலின்.

பாவகத்தைப் பாவித்தல்-பாவகம் செய்தல். பாவித்தல் என்பது செய்தல் என்னும் பொருள்து; அணியலும் அணிந்தன்று என்ற தொடரில் அணிந்தன்று என்பது (அழகு செய்தலைச்) செய்தது எனப் பொருள்பட நின்றது போலாம்.

பசுத்துவம்-உயிர் ஆணவ மலத்தால் கட்டுண்டு அறியாமை யோடு கூடியநிலை. தன்னருளாலன்றி- இறையருளாலன்றி. அத்து விதம் கூறுதலின்-உயிரும் இறைவனும் இரண்டறக் கலந்து நிற்கும் எனக் கூறுதலின்.

தூல சூக்கும முறையால்-பருப்பொருளும் நுண்பொருளு மாகிய முறையால். உயிர் பருப்பொருளாக வெளிப்பட்டு நிற்கும். இறைவன் உயிரறிவினுள் நுண்பொருளாய் நின்று வெளிப்படாது ஞானம் என்றவாறும். வியஞ்சகமாய்-விளக்கம் தருவதாய். ஆன்ம நிற்பன்-உயிரறிவு, காட்டாகி நின்ற உயிர்-துணையாக நின்ற உயிர். கண்ணொளியின் வேறின்றி அதற்கு உள்ளாக நின்று அது பொருளை அறிதற்குத் துணையாய் நிற்பது உயிராம், ஆயினும் அதனைக் கண்ணொளி காண்பதில்லை. அதைப் போன்றே உயிர்க்கு உயிராக நின்று அதற்கு விளக்கம் தரும் இறைவனையும் உயிர் தானே அறிவதில்லை என்பது கருத்து.

காட்டுதல் என்பது தொழிற்பெயர். ஈண்டு அது விகுதியின்றி முதனிலை மாத்திரையேயாய் அப்பொருளைத் தருதலின் முதனிலைத் தொழிற் பெயர் என்றார், அறிவுக்குக் காட்டாகி நின்றான் என்னும்

தொடரில் நின்றான் என்பது வினையாலணையும் பெயராம். அதற்கு அடைமொழியாக 'அறிவுக்குக் காட்டாகி' என்ற தொடர் அமைந்துள்ளது. ஆதலின் அதனைப் பெயரடை என்றார். உயிருக்குத் தானே அறியும் தன்மை இன்மையின் அதற்கு விளக்கம் தருபவனாய் இறைவன் நிற்கின்றனன். எனவே உயிர் தானே அறியும் திறத்தது அன்றாதலின், அது முதல்வனை அறிதல் கூடாது என்பதாம். கண்டறிதல்–அறிதல், குழிந்து ஆழ்ந்த கண் என்றவிடத்துக் குழிதலும் ஆழ்தலும் ஒருபொருட் பன்மொழியாய் நின்றாற் போல, ஈண்டுக் 'கண்டு' 'அறிதல்' ஆகிய இரு சொற்களும் அறிதல் என்னும் ஒருபொருள் பயக்கும் பன்மொழியாய் நின்றதாம். 'கண் அறியா மெய்' என்பதை 'மெய் அறியாக் கண்' என மாற்றி உரைக்கப்பட்டது. மெய் என்பது ஈண்டு உயிரைக் குறித்தது. உயிர் நிலைபேறுடையது. அறிவுடையது. ஆதலின் அதனை மெய் என்றார். மெய்ப் பொருள்–நிலையான பொருள். கண்: ஈண்டு அதன் ஒளியைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று. மெய்–உடம்பு. இவ்வாறு பொருள் காண்பாரை ஆசிரியர் இரு காரணங்களால் மறுக்கின்றார். 1. உடல் அறிவற்றதாதலின் அறியும் தன்மை அதற்கு இன்று, 2. உடம்பிற்குக் கண் விளக்கம் தருதலின்றிக் கண்ணிற்கு உடல் விளக்கம் தருதல் இன்று.

ஞேயப் பொருளாய்–அறியப்படும் பொருளாய். விசிட்டமாய் –சிறப்பித்துக் கூறப்படுவதாய். அநிருவசனமாய்–இன்ன தன்மை உடையதென்று அறுதியிட்டுக் கூறமுடியாததாய். நிருவிசேடப் பொருள்–விசேடம் இல்லாத பொருள்: சாதாரண பொருள். ஞாதா–அறிபவன்: காண்பான். அப்பு அணைந்த –தண்ணீரைச் சேர்ந்த.

அறிகின்ற உயிரும் அறியப்படும் சிவமும் வெவ்வேறாம். முத்தி நிலையில் நீரைச் சார்ந்த உப்பெனச் சிவத்துடன் உயிர் கலந்து நிற்கும். அந்நிலையிலும் இறைவன் அருளும் இன்பப் பேற்றை நுகர்வதாகவே அவ்வுயிர் அமைந்து விளங்கும் என்பது இப் பாடலின் ('அதுவென்னும் ஒன்றன்றி') கருத்தாகும்.

சிவமும் ஆம் என்றவிடத்திலுள்ள உம்மை, எதிர்மறைப் பொருள்படக் கலப்பினால் உயிர் சிவமாய் நின்றும், பொருள் தன்மையால் சிவம் ஆகாமையை விளக்கி நிற்கும். அது என்னும் ஒன்றன்று என்றவிடத்து ஆகலான் என்னும் சொல் கூட்டி உரைக்கப்பட்டது. அறிஅறிவும்– அறிகின்ற உயிரும். இவ்விடத்துள்ள உம்மை அதனால் அறியப்படும் இறைவனையும் தழிவி நிற்றலின் இறந்தது தழீஇயது என்றார். அல்லன்–அல்லனாய் எனப் பொருள்படுதலின் முற்றெச்சமாயிற்று. அது என்று அறிய இரண்டு

அல்லன் என்றடத்து அது என்னும் அஃறிணை ஒருமை அல்லன், என்னும் உயர்திணை ஆண்பாலொடு முடிதல் வழுவெனில் ஆகாது. அது என்பது உலகத்துப் பொருளையும் அல்லன் என்பது இறைவனையும் குறித்து நிற்றலினால் ஆம் அல்லன் என்னும் முற்றெச்சம் 'நிற்றலான்' என்னும் எச்சம் கொண்டு முடியும். உண்டே: இவ் வேகாரம் உயிர் உண்மையை உறுதி செய்தலின் தேற்றேகாரமாயிற்று. வேறே, அறிவே என்ற இடங்களிலுள்ள ஏகாரம் அசை நிலையாம்.

கேவலாவத்தை – கருவிகரணங்களின்றி உயிர் ஆணவ மலத்தோடு பிணிப்புண்டு எதனையும் அறியாது நிற்கும் நிலை, சகலாவத்தை– உயிர் கருவிகளோடு கூடி அவற்றால் பொருள்களை அறிந்தும் நுகர்ந்தும் வரும் நிலை. சுத்தாவத்தை – உயிர் திருவருள் விளைவால் சிவபரம் பொருளை அறியும் தூயநிலை.

அநாதி கேவலமாவது அறிவை மயக்கும் ஆணவத்தோடு தொன்மையாகவே கூடி அறிவின்றிக் கிடக்கும் நிலையாம். புனர் உற்பவத்திற்கு – மீண்டும் தோற்றுவித்தற்கு. சகல கேவலமாவது தொன்மையே உளதாய ஆணவ மலத்தினின்றும் நீங்கி உடல் உலகு நுகர்வு முதலியவற்றைப் பெற்றும் மலம் நீங்காமை காரணமாக இறைவனின் திருவருளால் ஒடுக்கப்பட்டு அவ்விடத்தில் மும்மலங்களோடும் கூடிப்படும் சகலர்க்குரிய நிலை. அவ்வாறு ஒடுங்கிய காலத்தும் நிகழும் ஐந்தொழில்களாவன:– பின் தோன்றுதற்குரிய அறிவற்ற பொருளையும் அறிவுடைப் பொருள்களையும் நோக்கிக் கொண்டிருப்பது படைப்பாம். மாயையைக் கொண்டு விளைவிக்கும் செயல்களை வெளிப்படும்படியாகச் செய்தல் காத்தலாம். உயிர்களின் பழவினைகளைப் பக்குவப் படுத்தல் அழித்தலாம். மலப் பக்குவம் உற்றாரின் தகுதிக்கேற்ப அறிவிக்கத் தக்கவர்களை அறிவித்தல் அருளலாம். மறைக்கத் தக்கவர்களை மறைத்தல் மறைந்தலாம். ஐந்தொழில்களும் இன்றி ஆணவ மலத்தோடு விரவி நிற்கும் நிலை அநாதி கேவலமாம். ஐந்தொழில்களோடு மும் மலங்களுடன் விரவி நிற்கும் நிலை சகல கேவலமாம். இவை தம்முள் வேற்றுமை பிரளய கேவலமாவது தொன்மையே உள்ள ஆணவப் பிணிப்புடைய நிலையினின்றும் நீங்கி உடல் பெற்று அழிக்கப் பெற்ற பின்னர் மீண்டும் படைத்தற்கு ஏதுவாய் ஒடுங்கி இருக்கும் நிலையில் மாயையொடு பொருந்தாது. ஆணவம் கன்மம் என்னும் இரண்டினோடும் கூடிப் பெறும் பிரளயாகலர்க்கு உரிய நிலையாம். விஞ்ஞான கேவலமாவது முன்னைய நிலையில் மாயை கன்மங்கள் என்னும் இரண்டினோடும் பொருந்தாது. ஆணவம் என்ற ஒன்றோடு கூடிப்பெறும் விஞ்ஞானகலர்க்கு உரிய

நிலையாம். அருட் கேவலமாவது தத்துவப் பிணிப்பினின்றும் நீங்கிய பின்னர் இறைவனின் அருளொடு கூடிப் பெறும் நிலையாம்

'பகல்இழந்த வான்போல் பரவுமல நீயா
இகலறவே நின்றாய் இழந்தாய்—அகலறிவு
வாடாத முத்தியினில் வாய்ந்தஅருட் கேவலம்நீ
நாடாத கேவலம்முன் நாள்'. துகளறு, கேவலம்-25

என்னும் துகளறு போதப் பாடலால் அருட்கேவலம் என்பது இனையதென விளங்கும். இதன் பொருள், கதிரவன் நீங்கிய விண்வெளி இருளொடு கூடி இருளாயே இருக்கும். அதுபோல அருளின் நீங்கிய நீ ஆணவத்தோடு கூடி அதுவாகவேஇருந்தாய். இதுபொழுது அம்மலம் நீங்க அருளொடு கூடி அருளாயே நிற்கின்றாய். தன்செயலற்ற இந்நிலையே அருட்கேவலமாம். மருட் கேவலத்தில் ஆணவத்தின் செயலாய் நின்றது போல, இவ்வருட் கேவலத்தில் அருளின் செயலாய் நிற்கின்றாய் என்பதாம். 'ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோடு அத்துவிதம் ஆகும் நாள் எந்நாளோ' எனத் தாயுமானார் அருளுவதும் இவ்வுண்மையை விளக்குவதாம்.

ஒரோ ஒன்று ஐந்துவகைப் படுதலாவது நனவு, கனவு உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் எனும் ஐவகை நிலையில் நிற்றலாம். சகலத்தில் கேவலமாவது உயிர், புருவநடு, மிடறு, நெஞ்சம், கொப்பூழ் ஆகிய இவற்றின்வழிக் கீழ்நோக்கிச் சென்று மூலத்தில் தங்குதலாம். சகலத்தில் சகலமாவது உயிர் நனவு நிலையாகிய புருவ நடுவில் நனவில் நனவு நனவில் கனவு என இவ்வகையில் ஐவகை நிலையினை அடைதலாம். சகலத்தில் சுத்தமாவது நெஞ்சு, மிடறு, நாவின்அடி, புருவநடு, உச்சித்துளை என்னும் ஐந்திடங்களில் பொருந்தும் நிலையாம்.

சீவன் முத்தி முதலிய ஐந்தும் முறையே நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மலதுரியம், நின்மல துரியாதீதம் எனப் பெயர் பெறும். சீவன் முத்தியாவது உயிர் தன் தன்மையினின்றும் விடுதலாம். 'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என ஏழாவது நூற்பா நிறைவு பெறுகிறது. உயிர் உலகைச் சார்வுழி உலகியல் சார்பாகவும் இறையைச் சார்வுழி இறைச் சார்பாகவும் அமைந்து விளங்கும். இவ்விரண் டனுள் இறையைச் சார்வுழி இறைச்சார்பாக நிற்கும் என்பதால் உயிர் தன் தன்மை கெட்டு இறைத்தன்மை பெறுதற்குத் தோற்றுவாய் செய்தவாறும். அதிகாரமுத்தியாவது உயிர் குருவருள் பெற்று உடற்பற்றை விடுதலாம். அதிகார சிவம்-குரு.

'தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த விட்டு' என வரும் எட்டாம் நூற்பாவின் பகுதி இவ்வுண்மையை விளக்கும். போக முத்தியாவது உயிர் இறைஞானம் பெற்று உலகப் பற்றை விடுதலாம். போகசிவம்–இறை. 'ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினில் சிந்தை நாடி உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவ' எனவரும் ஒன்பதாம் நூற்பாவின் பகுதி இவ்வுண்மையை விளக்கும். லயமுத்தியாவது சிவபரம் பொருளோடு ஒன்றிய நிலையில் மும்மலங்களையும் விடுதலாம். லயசிவம்–உயிர் தன்முனைப்பற்ற நிலையில் ஒன்றி நிற்றற்கு உரிய சிவம். 'ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே' எனவரும் பத்தாவது நூற்பாவின் பகுதி இவ்வுண்மையை விளக்கும். பரமுத்தியாவது மேலான சிவபரம் பொருளை அடைந்து பாசப்பற்றை விடுதலாம். 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே எனவரும் பதினோரும் நூற்பாவின் பகுதி இவ்வுண்மையை விளக்கும். பத்தாவது நூற்பா உயிரைத் தளைத்தற்குரிய மலங்களினின்றும் நீங்குதல் பயனாகக் கூறும். பதினோருவது நூற்பா உயிரைத் தளைத்தற்குரிய பொருள்களின் மீது உள்ள பற்று நீங்குதலைப் பயனாகக் கூறும். இவை தம்முள் வேற்றுமையாம். பற்றறுதல் சிவபரம் பொருளைப் பற்றினாலன்றி வாய்ப்பதில்லை. ஆதலின் அதனைச் சிவப்பேறு என்பர். பத்தாவது நூற்பா பாசநீக்கம் கூறுவதென்றும், பதினோருவது நூற்பா சிவப்பேற்றை கூறுவது என்றும் கூறுவதும் இதனாலேயாம். 'யான் எனது என்னும் உரைமாய்த்துக் கோதில் அமுதானைக் குலாவுதில்லைக் கண்டேனே,'

> வான்கெட்டு மாருதம் மாய்ந்து அழல்நீர் மண்கெடினும்
> தான்கெட்டல் இன்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
> ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என்உள்ளமும் போய்
> நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.
>
> (திருவாசகம்–திருத்தெள்ளேணம் 18)

எனவரும் திருவாக்குகள் ஈண்டு நினைத்தற்குரியன.

## சிறப்பியல்பு

### சாதன இயல்

ஏழாவது நூற்பா

> **யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்**
> **சத்தே அறியாது அசத்துஇலது அறியாது**
> **இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா**

என்பது சூத்திரம். என்நுதலிற்றோ வெனின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தூலாருந்ததி நியாயம் பற்றி மேலே ஆறு சூத்திரங் களினும் சிவாகமங்களில் கூறப்படும் முப்பொருள்களது பொது வியல்பு பிரமாண முகத்தானும் இலக்கண முகத்தானும் ஆராய்ச்சி செய்து உணர்த்திய ஆசிரியர், அம்முப்பொருள்களது சிறப்பியல்பு எனப்படும் உண்மை, சாதன முகத்தானும் பயன் முகத்தானும் ஆராய்ச்சி செய்து உணர்த்துவான் புகுந்து, முதற் கண் மூன்று சூத்திரங்களான் அவற்றை அறிந்து அதனுடைய பயன் பெறுதற்கு ஏதுவாகிய சாதனம் கூறிய தொடங்கினார்.

இவற்றுள் இச்சூத்திரம் உணருரு அசத்தெனவும், இருதிறன் அல்லது சிவசத்தெனவும் மேலைச் சூத்திரத்தான் (நூற்பா-67) வரையறை செய்து உணர்த்திய வழி, அங்ஙனம் அறியும் பொருள் அவ்விரண்டனுள் ஒன்றோ வேறோ என்னும் ஐயப்பாட்டின் கண் அவ்விரண்டனுள் ஒன்றாகற்பாலது என்பார் மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்திற்குப் புறனாக எடுத்து ஓர் ஒழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்துணர்த்து முகத்தானே, சாதித்துப் பயன் பெறுதற்கு உரிய அதிகாரியின் இயல்பாவது இதுவென்பது உணர்த்துதல் நுதலிற்று என்றவாறு.

அதிகாரமும் ஓத்தும் வேறாய வழியும் இயைபுணர்ந்து கோடற் பொருட்டுக் கருத்துரை அவ்வாறு செய்தாரென்பது. இப்புறனடையை வடநூலார் வாக்கிய சேடமென்ப. இதனுட் கூறப்படும் மூன்றதிகரணமும் மூன்று புறனடைபோலும் என மலையாமைப் பொருட்டு ஓர் புறனடை என்றார். முன்னைய விரண்டும் இறுதி அதிகரணத்தைச் சாதித்தற்கு ஏதுவாய் ஒரு பொருண்மேல் வந்தனவேயாம் என்பது கருத்து.

ஒன்றனை அறிந்தவழி அதனுடைய பயன் பெறுதற்குரிய முயற்சி செய்யலுறுவார்க்கு அதனைச் சாதிக்கும் ஆற்றல் தமக்கு உண்டென்பதூஉம், சாதித்தனுதல் வரும் பயன் இது வென்பதூஉம், அதனைப் பயப்பித்தற்குரிய சாதனமாவது இது வென்பதூஉம், அது வருவாயும் உணர்ந்தாலன்றி அதன்கண் மனவெழுச்சி செல்லாமையின், ஈண்டு ஓதப்படும் சாதனம்

செய்து பயன் பெறுதற்கு உரிமையுடைய அதிகாரியின் இயல்பு உணர்த்துவதாய இச்சூத்திரம் முதற்கண் வைக்கப்பட்டது.

இதன் பிண்டப்பொழிப்பு:—

மேலைச் சூத்திரத்துள் கூறிப் போந்த இரண்டனுள், வாக்கு மனுதீதமாகிய சிவசத்தின் சந்நிதியின், உணருருவாகிய அசத்தெல்லாம் பாழாகலின், சத்தாகியசிவம், அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிதல் செய்யாது; அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலின் சத்தாகிய சிவத்தை அறிதல் செய்யாது; ஆதலால் பாரிசேட அளவையான், இருதிறன் அறிவுளது ஒன்று உண்டென்பது பெறப்படுதலின், அதுவே சத்தாதற்றன்மையும் அசத்தாதற்றன்மையும் ஆகிய இரண்டும் அன்றிச் சதசத்தாயுள்ள உயிராம் என்றவாறு.

இரண்டனுள் ஒன்றனைப் பிரிக்கின்றமையிற் சத்தே என்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. அசத்து இலது ஆகலின் என்றுரைக்க. அசத்துச் சத்தை யறியாமைக்குச் சத்தெதிர் சூனியமாதிலே ஏதுவாதல் அமையுமாயினும், அசத்தெனப்பட்ட கருவிகள் முத்திநிலையில் சிவகரணமாய் ஆன்ம சந்நிதியை யொட்டி முதல்வன் சந்நிதியில் நிற்கப்பெறும் என்பாரை நோக்கி வேறுமோர் ஏதுக் கூறினர். இக்கருத்தே பற்றி, ''சத்தின்முன் நிலாமையானும் தனைக்கொடென்று உணர்தலானும்'' என இரண்டேதுவும் உடன் கூறினர் வழிநூலாசிரியரும். ஏற்புழிக் கோடலான் அறிதல் என்றது ஈண்டு அனுபவ அறிவின்மேற்று. இனைத்தென அறிந்த பொருட்கு வினைப்படு தொகுதிக்கண் வேண்டப்படும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

இதனுள் யாவையும் சூனியம் சத்தெதிராகலின் சத்தே அறியாது என்றது ஓரதிகரணம்; அசத்து இலது அறியாது என்றது ஓரதிகரணம்; இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா வென்றது ஓரதிகரணம்;ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்று உணர்க.

(நு-வி) தூலாருந்ததி நியாயம்-விண்ணின்கண் உள்ள பெரியதொரு விண்மீனைக் காட்டி அதன் வாயிலாக அதன் அருகிலுள்ள அருந்ததி என்னும் விண்மீனைக் காட்டுவதுபோல் வதோர் முறைமை முற்கூறிய ஆறுநூற்பாக்களாலும் முப்பொருள் களின் இயல்பைப் பொதுவியல்பு என்னும் முறையில் பருப் பொருளாகக் (தூலமாக) கூறிய ஆசிரியர் இனிவரும் ஆறு நூற்பாக்களால் சிறப்பியல்பு என்னும் முறையில் அவற்றின் இலக்கணங்களைச் சாதனம். பயன் என்ற வகையில் நுண் பொருளாகக் கூறுகின்றாராதலின் தூலாருந்ததி நியாயம் பற்றிக் ட்டது என்றார்.

சதசத்தின் இயல்பு—உயிரது இயல்பு. நிலையுடைய பொருளை யும் (சத்து), நிலையில் பொருளையும் (அசத்து) அறிதற்குரிய உரிமை உளதாதல் பற்றி உயிர் சதசத்து எனப்பட்டது.

ஆருவது நூற்பா பொது அதிகாரத்தைச் சார்ந்தது. இலக்கண ஒத்தின்கண் (இயல்) உள்ளது. இவ்வேழாவது நூற்பா உண்மை அதிகாரத்தில் உள்ளது. சாதன ஒத்தைச் (இயல்) சார்ந்தது. இங்ஙனம் அதிகாரத்தாலும் இயலாலும் இவ்விரு நூற்பாக்களும் வேறுபட்டிருப்பினும் இவ்விரண்டற்கும் உள்ள இயல்பு விளங்குதற் பொருட்டு மேலதற்கோர் புறனடை என்ருர். ஆருவது நூற்பாவில் சத்து அசத்தை அறியாது அசத்து சத்தை அறியாது எனக் கூறப்பட்டுள்ளது. அவ்வாருயின் இவ்விரண்டனையும் அறிவது எது என்னும் வினு எழும். அது உயிரே என இந்நூற்பா கூறுதலின் இந்நூற்பாவை மேலதற்கோர் புறனடை என்ருர்.

பாரிசேட அளவையால்-ஒழிந்தவற்ருல் உணரும் முறைமை யால். உயிர் உலகு இறை ஆகிய மூன்றனுள் உலகும் இறையும் ஒன்றையொன்று அறியாது எனக் கூறவே ஒழிந்து நின்ற உயிர் இவ்விரண்டையும் அறியும் என உணர்தல் பாரிசேட அளவையாம்.

'யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்' என்ற தொடராலேயே சத்து அசத்தை அறியாது அசத்துச் சத்தை அறியாது என அறிந்து கொள்ள இயலும் அங்ஙனமாகவும் அசத்து இல்லாதலின் என வேறும் ஒரு காரணம் கூறியதன் கருத்தை ஆசிரியர் விளக்கு கின்ருர். உயிர்க்கு விளக்கம் தருதற்குத் துணையாய் நிற்கும் கருவி கள். வீட்டு நிலையில் இறையுணர்வு உடையவாய் உயிரிடத்து ஒன்றி இறைவன் முன் நிற்கப் பெறும் என்பாரை நோக்கி அவ் விடத்தும் உயிரிடத்து அக் கருவிகள் இறையுணர்வு பெற்று நிற்றல் அன்றி இறைவனை அறிவதில்லை என்பதை அறிவித்தற்கு 'அசத்து இல்லாதலின்' எனப் பிறிதொரு காரணத்தையும் கூறுவா ராயினர், சிவஞான சித்தியாரிலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளமை யின் அதனையும் ஈண்டு எடுத்துக் காட்டினர், தனைக்கொடு ஒன்று உணர்தலானும் என்பதாலேயே உயிர் தாளுக எதனையும் அறிவதில்லை என்பது பெறுதும். இனைத்தென அறிந்த பொருள் இத்துணை என அறியப்பட்ட பொருள். உலகியற்பொருள்களைச் சத்து அசத்து எனும் இவ்விருதிறனுள் அடக்கப்படுதலின் இனைத் தென அறிந்தபொருளாயிற்று. இரண்டும் அல்லாது என முற்றும்மை விரித்தல் வேண்டும். அவ்வாறு விரியாமையின் விகாரத்தால் தொக்கது என்ருர்.

## முதல் அதிகரணம்

*ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியா தென்றது*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ''தந்திடும் சிவனவன்றன் சந்நிதி தன்னில் நின்றே' (சித்தி1–16) என்றும்' ''கூடு மொளிவளர் குடிலை மாயை மேவி'' (சிவப்–2) என்றும் ''தாரகமாம் அத்தன் தாள் நிற்றல்'' (சிவ–போத1–2) என்றும் ''விமலனுக்கோர் சத்தியாய்'' (சித்தி2–53) என்றும், ''உலகமே யுருவமாக'' (சித்தி5–7) என்றும், ''அத்துவா மூர்த்தியாகி'' (சித்தி 1–56) என்றும், ''இருநிலனுய்த் தீயாகி நீருமாகி ........... நின்ற வாறே'' (தாண்டகம்–நின்ற–1) என்றும் கூறப்படும் இயல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றல் அவசித்தாந்தமாய் முடியும் போலுமெனவும், ''மண்டிய வுணர்வுயிர்க்காய் மன்னி நின்றறியும்'' (சிவப்–25) எனவுங் கூறும் சிவாத்துவித சைவர் மதம் பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ–ள்)சுட்டுணர்வின்றி நின்றறியும் சிவசத்தின் முன்னர்சுட்டி யறியப்படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்ருது என்றவாறு.

ஈண்டுச் சூனியம் என்றது விளங்காமைப் பொருட்டென்பார் பிரகாசியாது என்ருர். இக்கருத்தே பற்றி ''முனைத்திடா தசத்துச் சத்தின்முன் இருள்'' (சித்தி–7–1)என்ருர் வழிநூலாசிரியரும். முனைத் திடாமையாவது இது குடம் இஃது ஆடையென நம்மனோரால் அறியப்படுமாறு போல முதல்வனுல் சுட்டி யறியப்படுவதாய் வேறு நில்லாமையாம். ஆகவே ஈண்டுச் சத்தெதிர் யாவையுஞ் சூனியம் என்றதுகொண்டு அவசித்தாந்தமாதல் யாண்டையதென மறுத்துச் சத்தறியா வென்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

*ஏது*

*மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.*

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தை விடயிப்பதாய சுட்டுணர்வும் உண்டென்ருற் படும் இழுக்கென்னை யென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ–ள்) தன்னியல்பாகிய இயற்கை யுணர்வின் முன்னர் பொது வியல்பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லா மையான் ஈண்டுச் சத்திடத்து அசத்துப் பிரகாசியாது என மேற் கொண்டது என்றவாறு.

பிரகாசித்து நிற்றலின்மையாவது இயற்கை யுணர்வோடு ஒப்ப ஒருங்கு நில்லாமை. எக்காலத்தும் நிலைபெறுவதாய தன்னியல்பே மெய்யெனவும் இடையே தோன்றி மறைவதாய பொது வியல்பே பொய்யெனவும் கூறப்படுவன வாகலான் அவை ஈண்டைக்கு ஏற்புடைய அறிவின் மேனின்றன.

இஃதறியாதார் உரைப்பன வெல்லாம் மேற்கோளைச் சாதித்தற்குரிய ஏதுவாதல் செல்லாது கூறியது கூறலாய் முடியு மென் றொழிக.

எடுத்துக்காட்டு

**அன்னியம் இல்லாமை அரற்குஒன்று உணர்வின்றும்**
**அன்னியம் இல்லான் அசத்தைக் காண்குவனேல்—**
**அன்னியமாக்**
**காணன் அவன்முன் கதிர்முன் னிருள்போல**
**மாணா அசத்துஇன்மை மற்று**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், சுட்டுணர் வின்மையான் முதல்வன் அசத்தை அறியான் எனின் முற்றுணர் வுடைமைக்கு இழுக்கென்பாரை நோக்கி இழுக்கின்மை கூறி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அன்னியம் இல்லாமை அரற்கு ஒன்று உணர்வு இன்று ஆம்–தன்னுள் வியாப்பியமான பசு பாசங்களோடு வேற்றுமையின்றி உடனாய் நிற்றலையுடைய முதல்வனுக்குச் சுட்டியறியக் கிடப்பதொன்று இல்லை ஆகலான்; அன்னியம் இல்லான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாக் காணான் – அத்தன்மையனாகிய முதல்வன் அசத்தை அறியலுறுவனாயின் அறிந்தாங்கறிவதன்றி நம்மனோர் போல வேறாகச் சுட்டி அறிவானல்லன்; கதிர்முன் இருள்போல அவன்முன் மாணா அசத்து இன்மை–ஞாயிற்றின் முன் இருட்டுப்போல அம்முதல் வனெதிர் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாது ஆகலான் என்றவாறு.

எனவே, அசத்தை விடயிப்பதாகிய ஏகதேச உணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாகலான் அஃதில்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடாவதன்றி இழுக்காகாதென ஐயமகற்றி ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

மாணாமை வியாபக உணர்விற்கு விடயமாகாமை. இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது. மற்று, அசை. மற்றுக்

காண்குவனேல் என மேலேகூட்டி வினைமாற்றின்கண் வந்த தெனினும் அமையும். உணர்வுங் கதிரும் ஆகுபெயர். கதிர் முன்னிருள் ஈண்டு முனையாமை மாத்திரைக்கு ஒருபுடை உவமை யாயிற்றென்பது வழி நூலாசிரியர் "முனைத்திடாது அசத்துச் சத்தின் முன் இருள் இரவி முன்போல"(சித்தி-7-1) என்றவாற்ருன் அறிக.

(நு-வி) தந்திடும் சிவன் அவன்தன் சந்நிதி தன்னில் நின்றே- சிவசத்தியின் நினைவு மாத்திரையினாலேயே மாயை தன் காரியங்களைத் தோற்றுவிக்கும் என்பது பொருள். கூடும் ஒளி வளர்குடிலை மாயை மேவி-இறைவன் சுத்த மாயையைப் பொருந்தி என்பது பொருள். தாரகமாம் அத்தன் தாள் நிற்றல் - மாயை தனக்கு ஆதாரமாகிய சிவசத்தியில் நிற்கும் என்பது பொருள். விமலனுக்கு ஓர் சத்தியாய்-மாயை இறைவனுக்கு ஓர் சத்தியாய் என்பது பொருள். அடுத்துள்ள மேற்கோள்கள் மூன்றும் உலகு இறைவனுக்கு வடிவாதலை உணர்த்துவன. மண்டிய உணர்வு உயிர்க்காய் மன்னினின்று அழியும்-இறைவன் உயிருக்காக அதனொடு பொருந்தி உலகத்தை அறிவன் என்பது பொருளாம். அவசித்தாந்தமாய்-தாம் மேற்கொண்டொழுகும் துணிவிற்கு மாருய முடிவுடையதாய்.

சத்தெதிர்சூனியம் என்றது இறைவன்முன் உலகு வேறு நில்லாது என்பது பொருளாம். அதுபற்றி மாயை இறைவனுக்குச் சத்தியாதற்கும், அது திருவருளில் அடங்கி நிற்கும் என்றற்கும், உலகம் இறைவனின் திருமேனி என்பதற்கும் இழுக்கில்லை.

விடயிப்பதாய-சுட்டி உணர்வதாய.

ஈண்டு மெய், பொய் என்பன மெய்யறிவு, பொய்யறிவு என்னும் பொருள்பட நின்றன.மெய்யறிவு என்பது இயல்பாகவே எஞ்ஞான்றும் உள்ள இயற்கை உணர்வாம்.பொய்யறிவு என்பது செயற்கையாகக் கருவிகளோடு கூடியவிடத்து அறிவதாயும் அதுவும் நிலைபேறு அற்றதாயும் இருப்பதாம். இயற்கை உணர்வு சிவத்திற்கு உண்டு. ஆதலின் கருவிகளோடு கூடிப் பெறும் நிலையற்ற செயற்கைச் சுட்டுணர்வு அதற்கு வேண்டுவதில்லை. ஆதலின் அப்பொய்யறிவு மெய்யறிவினிடத்துவிளங்கி நில்லாது. சுட்டுணர்வு-தன்னில் வேருய்த் தனக்கு இன்றியமையாததாய்க் காணவும் கருதவும் நிற்கும் உணர்வாம்.இது நிலையில் உணர்வாம்

இவ்வாறன்றி மெய், பொய் என்பனவற்றிற்கு மெய்ப் பொருள் என்றும் பொய்ப்பொருள் என்றும் உரை காண்பாரு முளர்.அவ்வாறு உரைப்பின் முற்கூறிய மேற்கோளையே மீண்டும் கூறுவதாய் அமையும். ஆதலின் அது பொருந்தாது என்ருர்.

ஏகதேசஉணர்வு—சுட்டுணர்வு: ஒவ்வொரு பொருள்களையும் தனித்துக் காணும் உணர்வு.

வியாப்பியமான — அடங்கியிருத்தலான. அறிந்தாங்கு அறிவ தன்றி—எல்லாப் பொருள்களையும் ஒருசேர அறிவதல்லாமல்.

மாணு அசத்து—மாட்சிமையில்லாத உலகு. ஈண்டு மாட்சிமை இல்லாமையாவது. இறைவனின் பேரருளால் ஒவ்வொன்றும் அறிதற்குரியபெருமை இல்லாமையாம். ஆதலின் நன்மையில்லாத பிரபஞ்சம் என்றூர். வியாபக உணர்வு-எவற்றையும் ஒக்க நோக்கும் பேரறிவு.

உலகு இறைவனிடத்து அடங்கியுள்ளது. ஆதலின் அதனை அவன் காணுன். மற்றுக் காண்குவனேல் அதனை ஒருசேரவே காண்பன் என்பது கருத்து. ஈண்டுக் காணுன் என்னும் வினையை மாற்றிக் காண்குவனேல் எனக் கூறப்படுகின்றது. ஆதலின் மற்று என்பது வினைமாற்றின்கண் வந்தது என்றூர். உணர்வு: உணரப் படும் பொருளைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று. கதிர்—ஒளி: ஈண்டு அதனை உடைய கதிரவனைக்குறித்தலின் ஆகுபெயராயிற்று. ஒரு பொருட்கு ஒரு பொருள் உவமையாங்கால் முழுமையாக உவமையாதலும் உண்டு, ஓரளவிலேயே உவமையாதலும் உண்டு. ஓரளவே உவமையாதலை ஒருபுடை உவமை என்பர். கதிரவன்முன் இருள் விளங்கித் தோன்றுதது மட்டுமன்று; அவ்விருள் முற்ற இல்லாதாயும் விடும். ஆனல் இறைவன்முன் உலகோ விளங்கித் தோன்றுதன்றி இல்லாதிருப்பதன்று, ஆதலின் விளங்கித் தோன்றுமை ஒன்றற்கே இவ்வுவமை அமைந்திருத் தலின் ஒருபுடை உவமை என்றூர். இது பற்றியே வழிநூலாசிரியரும் 'அசத்து சத்தின்முன் முனைத்திடாது' என்ற அளவே கூறினர்.

# இரண்டாம் அதிகரணம்

## மேற்கோள்

*இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது.*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், சத்து அசத்தை அறியாதாயினும் அசத்து எனப்பட்ட தனுகரண புவன போகங் களுள் ஒன்றுய கரணம் விளக்குப்போல் விகாரமின்றி நிற்கும்

ஆன்ம சந்நிதியிற் பெத்தநிலைக்கண் அசத்தாய விடயங்களை அறிந்தாற்போல முத்திநிலையிற் சிவகரணமாய் நின்று சிவத்தை அறியுமென்றலும், கண்ணாடியின் நிழல்போல ஆன்ம சந்நிதியில் அதன்கண் அறிவுண்டாமென்றலும் அமைவுடைத்துப் போலும் எனச் சிவசங்கிராந்தவாதி மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங் கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

சூத்திரத்தில் இலது என்றது அறிவிலதென்னும் பொருட்டு என்பார் உணர்வின்றென உரைத்தார். ஈண்டு அசத்து என்றது தத்துவப் பிரபஞ்சத்தை; ஏனைப் பிரபஞ்சத்திற்கு அறிவின்மை சாதிக்க வேண்டாமையின்.

ஏது

அதுதான் நிரூபிக்கில் இன்றாகலான்

என்பது ஏது. என்னுதலிற்றோ வெனின், பதிஞான பசுஞானங் களோடு ஒப்பப் பாசஞானம் ஒன்றென வைத்து எண்ணப்படும் உரிமையுடையது. அதனை அறிவுடைத்தன்று என்றல் பொருந்தாது என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வறிவாவது தூலமாய் நோக்கும் வழி அவ்வசத் திற்கு உள்ளதுபோலத் தோன்றினும் ஐயந்திரிபின்றி மாசறு காட்சியான் ஆராயும் வழி அதன்கண் இல்லாதாகலான் இனி அசத்தினுக்கு உணர்வின்றென மேற்கொண்டது என்றவாறு.

எனவே, பாசம் வாயிலாக உயிரின்கண் நிகழும் பசுஞானமே பாச ஞானமென்று உபசரித்துக்கூறப்படும்; அதனைப் பாசத்திற்கு உளதாகிய ஞானமெனக் காண்டல் நிரூபியாதவழிப்படும் மடமையே, பிறிதில்லை என்றவாறாயிற்று.

எடுத்துக்காட்டு

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதெனக் காண்

என்பது உதாரணம். என் நுதலிற்றோவெனின், அதனை உவமை முகத்தான் வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு மற்று அணைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின்-பாலை நிலத்தின்கட் காணப்படுவதாய பேய்த்தேரை நீரென்று கருதி அதனையுண்ண வருகின்ற நீர் வேட்கையுடைய மடவோனுக்கு அதனையடுத்தவழித் தன்னால் அணையப்பட்ட அப்பேய்த்தேர் நீரா தலின்றிப் பொய்யாந் தன்மைபோல; வாய்த்து—குரவன் அறிவுறுக்கும் உபதேசமொழி கிடைப்ப; அதனைக் கண்டு உணர் வார் இல்வழியின் அசத்து இன்மை காணும்—அவ்வசத்தின் இயல்பை ஆராய்ந்து அறிவாரின்றி அறியமாட்டாதார் உள்வழி அவர்க்கு அதன்கண் அறிவுள்ளதாய் மதிக்கப்படும் சத்தாந் தன்மையே காணப்படும்; கண்டு உணர்வார் இல்லது எனக் காண் —அவ்வுபதேசமொழி கிடைப்ப அதன் இயல்பை ஆராய்ந்து அறிய வல்லார்க்கு அவ்வசத்து அறிவில்லதேயாம் என்று அறி வாயாக என்றவாறு.

மற்று, வினைமாற்று. மை பகுதிப்பொருள் விகுதி. இன் உவம உருபு. வாய்த்து என்பது வாய்ப்ப என்பதன் திரிபு. வாய்த்தல் நேர்படுதல். ஆண்டைக்கு ஏற்புடைய வினைமுதல் அவாய் நிலையான் வந்தது. அசத்தின்மையாவது சத்தாந்தன்மை. நான் கனுபு விகாரத்தால் தொக்கது. அறிவு என்பது அதிகாரத்தான் வந்தது.

(நு. வி) உடல், கருவிகள், உலகு, நுகர்தற்குரிய பொருள்கள் ஆகியவை அசத்து எனப்படும். இவற்றுள் கருவிகள் ஒழிந்த மூன்றும் அறிவற்றன என்பது வெள்ளிடை. ஆனல் கருவிகள் கட்டுநிலையில் உயிரின் முன்பு தொழிற்படவும் அறியவும் செய் கின்றன. அவ்வாறே வீட்டு நிலையிலும் அவை இறையுணர்வு உடையவாய்ச் சிவபரம் பொருளை அறிந்து இன்புறத் துணையா கின்றன. கண்ணுடியின்முன் அதன் நிழல் ஒளியுடையதாதல் போல உயிரின்முன் கருவிகளும் அறிவுடையனவாகும். ஆதலின் அசத்து சத்தினை அறியாது என்பது பொருந்துவதன்று என்பர் சிவசங்கிராந்தவாதிகள்.

உடல் உலகு முதலியனவும் அசத்தெனப்படுமாயினும் அவற்றிற்கு அறிவின்று என்பது விளங்கக் கிடத்தலின் ஈண்டுக் கருவிகளையே அசத்து என்ருர்.

தூலமாய் நோக்கும்வழி-பருப்பொருளாக. (மேம்போக்கான) நிலையில் கண்டவிடத்து. மேம்போக்காக நோக்குமிடத்துப் பாச ஞானம் என்பது பாசத்திற்கு உளதாய அறிவு எனப் பொருள் கொள்ளத் தோன்றும். ஆனல் நுண்மையாக நோக்குழிப் பாசம் வாயிலாக உயிரின்கண் தோன்றும் அறிவு என்பதே அதன்

உண்மைப் பொருள் என விளங்கும். 'அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று' 'விளம்பிய உள்ளத்து மெய், வாய் கண், மூக்கு அளந்து அறிந்து அறியா ஆங்கவை போல' என்ற இடங்களில் கூறப்பட்ட உண்மை கொண்டும் கருவிகட்கும் அறிவின்மை அறியலாம். ஆன்ம சந்நிதி-உயிரின் முன்னிலையில். பெத்தநிலை-கட்டுநிலை.

நீரென்று கருதி வருவோனுக்கு என வரும் வினையை மாற்றுதற் கண் மற்று என்பது வருதலின் அது வினைமாற்று ஆயிற்று. பெற்றிமை-தன்மை: ஈண்டுப் பெற்றி என்பதே இப்பொருளைத் தருவதாய் இருக்க மை விகுதியும் கூட்டிக் கூறலின் அது பகுதிப் பொருளின் விகுதியாயிற்று. இன் என்னும் ஐந்தன் உருபு, போல என்னும் பொருள்பட நின்றது. ஏற்புடைய வினைமுதல்-குரவன் என்னும் சொல். அசத்தின்மை எனவே சத்தாந் தன்மை என்பது பெறுதும். கண்டுணர்வார் என்றவிடத்து நான்கன் உருபு விரித்து உரை செய்யப் படுதலின் அது தொக்கதென்றார். இல்லதெனக் காண் என்றவிடத்து எது இல்லதெனக் குறிக்கப்படவில்லை. எனினும் இவ்வதிகரணத்தின் தொடக்கத்தே அசத்தினுக்கு உணர் வின்று என்று கூறியிருத்தலின் ஈண்டும் அசத்தினுக்கு அறிவின்று என்றார். இவ்வாறு ஓரிடத்துக் கூறப்பட்ட சொல் பிறிதோரிடத்தும் சென்று இயைந்து பொருள்படுமாயின் அதனை அதிகாரம் என்ப.

## மூன்றாம் அதிகரணம்

### மேற்கோள்

இனி இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா வென்றது

என்பது மேற்கோள். என் நுதலிற்றோ வெனின், சிவசத்தின் தன்மையே உயிர்க்குத் தன்மையாவதன்றி வேறில்லை யாகலின் சத்தே அசத்தை அறியுமென்னும் சிவாத்துவித சைவரையும், உயிர்க்குத் தன்மை என்பது ஒன்று இன்மையின் அசத்தே சத்தை அறியுமென்னும் சிவசங்கிராந்தவாத சைவரையும் மறுத்து சத்தும் அசத்தும், தம்முள் அறியுமாறில்லையென மேற்சாதித்தவழி, இரண்டும் இவ்வாறாயின் இவற்றை அறியும் பொருள் வேறு என்னை என்பாரை நோக்கிப் பாரிசேட வளவையான் அவ் விரண்டின் வேறாய் உயிர்க்குத் தன்மை உண்டு என்பது விளக்கிச் சதசத்தின் இயல்பை வரைசெய்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை

ஈண்டு இரண்டலா ஆன்மா இருதிறன் அறிவுளது என்பது சத்தெதிர் நில்லாத அசத்தும் சத்தும் தம்முள் ஒன்றுன் ஒன்றை

அறியப்படாமையான் இருதிறன், அறிவுள்ளதுஇரண்டலா ஆன் மாவேயாம். தம்முள் ஒன்ருன் ஒன்று அனுபவிக்கப்படாத ஞாயிற் றையும் விடயத்தையும் அனுபவிக்கும் கண் போலுமென அனு மானம் கூறிக்காண்க. அவை உயிரானும் அறியப்படாதவழிப் பயப்பாடின்றிச் சூனியமாய் முடியுமாகலான் உயிர் அறிதற் றன்மைத்து என்பதுதெற்றென வுணர்க.

இவ்விரண்டனையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அவ் வறிவு இரண்டன்பாலும் உளதாய் உள்ள அதுவே அவ்வான்மா வாம் என்றது.

என்றது பொழிப்புரை. என்நுதலிற்றோ வெனின், இருதிறன் அறிவென்னும் தொகைச் சொல் விரியுங்கால் படும் பொருள் வேறுபாடு விளக்கு முகத்தான் உயிருக்குத் தன்னியல்பு வேறு வேறு கூறும் சமயங்கள் எல்லாம் மறுக்கப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) இவ்விரண்டனையும் அறிவதாய் - மேற்கூறிப் போந்த சத்தையும் அசத்தையும் அறியுந்தன்மைத்தாய்; உபதே சியாய் - அறிவிக்க அறியும் தன்மைத்தாய்; அவ்விரண்டன் பாலும் நின்ற அறிவுளதாய் - அவ்விரண்டன் கண்ணும் நிலை பெற்ற அனுபவ அறிவுளதாய்; உள்ள அதுவே அவ்வான்மா வாம் என்றது - இவ்வாறுள்ள பொருள் யாது அதுவே சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய உயிராம் என்றவாரும்.

ஆய் என்னும் வினையெச்சம் இரண்டும் நின்றவென்னும் பெயரெச்ச வினையோடு தனித்தனி முடிந்தன; நின்றவென்னும் பெயரெச்சம் உள்ள என்பதன் முடிவாகிய அதுவென்னும் பெயர் கொண்டு முடிந்தது.

இருதிறன் அறிவு என்னுந் தொகைச்சொல் ஈண்டு மூன்று பொருளில் மயங்கிற்று என்னுங்கருத்தான் இவ்வாறு மொழிந்தார். அவற்றுள் இருதிறனையும் அறியும் அறிவென்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகைப் பொருள் பற்றி இவ்விரண்டனையும் அறிவதாய் எனவும், இருதிறனுல் விளங்கிய அறிவு என்னும் மூன்ரும் வேற்றுமைத் தொகைப்பொருள் பற்றி உபதேசியாய் எனவும், இருதிறனிலும் உள்ள அறிவென்னும் ஏழாம்வேற்றுமைப் பொருள்பற்றி நின்ற அறிவு இரண்டன்பாலும் உளதாய் எனவும் உரைக்கப்பட்டன.

இவ்விரண்டினையும் அறிவதாயுள்ள அது என்பதனுல் இரண்டும் இவ்வாருயின் இவற்றை அறியும் பொருள்வேறு என்னை என்னும் கடாவுக்கு விடை கூறி அவ்விருவர் மதங் களையும் அவற்ரேடு ஒரு தன்மையவான புறச் சமயங்களையும் மறுத்தவாறு.

உபதேசியாயுள்ள அது என்றதனுல் உயிர் அறிவிக்கவேண்டாது தானே அறியும் இயல்பிற்று என்னும் சிவசமவாத சைவர், ஈசுர அவிகாரவாத சைவர், ஐக்கியவாத சைவர் மதங்களேயும் அவற்ருேடு ஒருதன்மையவான புறச்சமயங்களேயும் மறுத்தவாறு

இரண்டன்பாலும் உளதாயுள்ள அது என்பதனுல் ஆன்மாவின் அறிவு சத்தோடு கூடுமாறில்லே என்னும் பாடாணவாத சைவர், பேதவாத சைவர் மதங்களேயும், சத்தோடு கூடியவழி ஒன்ருய்ப் போதலே அன்றி அதன்பால் உளதாமாறு இல்லே என்னும் சுத்த சைவர் மதத்தையும் அவற்ருேடு ஒரு தன்மையவான புறச் சமங்களேயும் மறுத்தவாறு.

இவ்விரண்டனேயும் அறிவதாய் எனவே அவ்வறியுந் தன்மை இவ்விரண்டின் தன்மைபோல் அன்றி ''இருளொளியலாக் கண்'' தன்மைபோல் வேருயதோர் தன்மை என்பதூஉம், உபதேசியாய் எனவே அஃது ஆகாயத்தின் குணமாய் ஓசையின் இயல்பு போலத் தன்னே விளக்குவதாய வியஞ்சகம் உள்வழி விளங்குவதோர் தன்மை என்பதூஉம், இரண்டன்பாலும் உளதாய் எனவே அத்தன்மை படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாய் அழுந்துந் தன்மை என்பதூஉம் பெறப்பட்டன.

எடுத்துக்காட்டு

**அருவுருவம் தானறிதல் ஆய்இழைஆய் ஆன்மா**
**அருவுருவம் அன்ருகும் உண்மை — அருவுருவாய்த்**
**தோன்றியுடன் நில்லாது தோன்ருது நில்லாது**
**தோன்றல் மலர்மணம்போல் தொக்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்ருேவெனின், அம்மூன்றனுள் முன்னேயதனே வலியுறுத்தி இரண்டலாமையை விளக்குதல் நுதலிற்று.

(இ-ள்) ஆய் இழைஆய் ஆன்மா அருவுருவம் அறிதல் அருவுருவம் அன்று ஆகும் — நுணுகிய நூல்களே ஆராய்வதாகிய உயிரே சத்து அசத்து எனும் இரண்டனேயும் அறிவதாகலான் அஃது அவ்விரண்டுமின்றி அவற்றின் வேரும். அற்றேல், அவ்விரண்டனேயும் அறியும் உயிர்க்குத் தன்உண்மை அறியப்படுமோ படாதோ எனக் கடாயினர்க்குப் படுமெனின் தன்னேடு உளப்பட மூன்றனேயும் அறிவதென்னது அவ்விரண்டனேயும் அறிவதாய் என்றல் பொருந்தாது; படாதெனின் அறியப்படாத

பொருள் சூனியமெனப்பட்டு வழுவாமால் எனின்; உண்மை அருவுருவாய்த் தோன்றி உடன் நில்லாது தோன்ருது நில்லாது மலர்மணம்போல் தொக்குத்தோன்றல்—அவ்வான்மாவின் உண்மைத் தன்மை அவ்விரண்டும் போல விளங்கித் தோன்றி அவற்ரேடு ஒப்ப நிற்பதும் அன்ருய் விளங்காது சூனியமாய் நிற்பதும் அன்ருய், மலரின்கண் வாசம் அவ்விரு வகையும் அன்றி அதன் கண் அடங்கித் தோன்றுமாறு போலச் சத்திலும் அசத்திலும் சார்ந்ததன் வண்ணமாய் அடங்கித் தோன்றுவது ஓர் இயல்பாம்; ஆகலான் அஃது அவை போலத் தனித்து அறியப்படுவ தொன்றன்றி அவ்விரண்டனேயும் அறியுமுகத்தான் அறியப்படுவதாம் என்றவாறு.

ஆகலான் அஃது அவைபோலத் தனித்து அறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டனேயும் அறியுமுகத்தான் அறியப்படுவதாம் என்பது குறிப்பெச்சம்.

சுட்டுணர்விற்கு விடயமாகாமை பற்றிச் சத்தை அருவென்றும், அதற்கு விடயமாதல் பற்றி அசத்தை உருவென்றும் கூறினர். உணர்உரு அசத்து(சிவஞான போதம்-6) என்புழி உருவென்றதும் அது நோக்கி. செவ்வெண் தொகை விகாரத்தால் தொக்கது. தான் அசை. அறிதலால் அன்ருகும் என வியையும்.

இழை நூலாகலான் ஈண்டுச் சாத்திரத்தை உணர்த்திற்று. ஆய்தல் நுணுகுதல்; ''ஓய்த லாய்தல் நிழத்தல் சாஅய்-ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'' என்ருர் தொல்காப்பியனுரும். ஆய் இழை எனப் பொருளின் நுணுக்கம் நூன்மேலேற்றப்பட்டது. இரண்டாவது விரித்துரைக்க. உயிருக்கு அறியுந் தன்மை உண்டாகலானன்றே வேதாகம முதலிய நூல்கள் உளவாயின என அதனே வலியுறுத்துவார், ஆயிழை ஆய் ஆன்மாவென அதனே உடம்பொடு புணர்த்தோதினர். இக்கருத்தே பற்றி, 'பலகலே யுலகில் நிலவுதலானும்' (சங்கற்ப நிரா:48) என்ருர் புடைநூலாசிரியரும்.

இவ்வாறன்றி ஆயிழையாய் என மகடூஉ முன்னிலே யாக்குவார்க்கு, இவ்வுதாரணம் மேலதனே வலியுறுத்துவதற்கு எழுந்ததன்ருய்க் கூறியது கூறல் என்னும் வழுவாய் முடியுமென்று ஒழிக.

தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கது. அருவுருவாய் என்புழி ஆக்கச் சொல் உவமைப் பொருள் குறித்து நின்றது, 'ஆள்வாரிலி மாடாவெனே' (திருவா-கோயில் 7) என்ருற் போல. தொக்குத் தோன்றல் மலர் மணம் போலெனக் கூட்டுக.

எடுத்துக்காட்டு

**மயக்கமது உற்றும் மருந்தில் தெளிந்தும்**
**பெயர்த்துஉணர்நீ சத்துஆகாய் பேசில்—அசத்தும்அலை**
**நீயறிந்து செய்வினைகள் நீயன்றி வேறுஅசத்துத்**
**தான்அறிந்து துய்யாமை தான்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அங்ஙனம் அறியும் உயிர் சிவசத்தோடு ஒப்பச் சித்தாகும் என்பாரை நோக்கி உபதேசியாய் என்றதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும்—நின் அறிவை விளக்குதற்குரிய வியஞ்சகம் இல்வழி ஒரு விடயத்தை இன்னதென்று அறியமாட்டாது மயக்கத்தை யுற்றும், பசி நோய்க்கு அன்னம் போல, அம்மயக்க நோய்க்கு மருந்தாகிய வியஞ்சகம் உள்வழி அம்மயக்கம் நீங்கி அதனை இன்னதென்று நிச்சயித்தும்; பெயர்த்து உணர் நீ பேசில் சத்து ஆகாய்—இங்ஙனம் மாறி மாறியுணர்ந்து வருகின்ற நீ சொல்லுமிடத்துச் சிவசத்தோடொப்ப அறியுஞ் சத்தி உடையா யல்லை; அற்றேல் அசத்தனவேன் போலும்எனின், நீ யறிந்து செய்வினைகள் நீயன்றி வேறு அசத்துத்தான் அறிந்து துய்யாமை அசத்தும் அலை—வியஞ்சக முள்வழியும், நீ முன்னறிந்து செய்த வினைகளை இப்பொழுது நீயே அறிந்து அனுபவிக்க வல்லையன்றி நின்னின் வேருய் அசத்தாகிய பாசம் அறிந்து அனுபவிக்க மாட்டமையான், அதனேடொப்ப அசத்தனுவாயும் அல்லை; வேறு—சத்த குணமுடைய ஆகாயம் போல வியஞ்சகம் உள்வழி அறியு மாற்றல் உடைமையும் அஃது இல்வழி அவ்வாற்றல் இன்மையு மாகிய இரண்டும் உடைய நீ, அவ்விரண்டற்கும் வேருய்ச் சதசித்தாந் தன்மையுடையை எ-று.

மருந்தில் தெளிந்து எனவே மயங்குதல் அஃது இல்வழி என்பது பெற்றும். வியஞ்சகம் இல்வழித் தலைப்படுவதூஉம் அஃது உள்வழிநீங்கி நிற்பதூஉமாக மயக்கம், உண்டி இல்வழித் தலைப்படுவதூஉம், அஃது உள்வழி நீக்கி நிற்பதூஉமாகிய இயல்புடைய பசியோடொத்தலின் அதனைப் பசிநோயாகவும், தீர்த்த லொப்புமை பற்றி வியஞ்சகத்தைப் பசி தீர்க்கும் மருந் தாகவும் உருவகம் செய்தார். இஃது ஏகதேசஉருவகம். மருந் தெனப் பொதுப்பட உருவகம் செய்தாராயினும், மறித்து மறித்து வேண்டப்படுமாறு ஈண்டைக்கு ஏற்புடையது பசி நோய் தீர்க்கும் மருந்தே யாகலின் அவ்வாறு உரைக்கப்பட்டது. அது பகுதிப் பொருள்விகுதி. உம்மைஎண்ணின்கண் வந்தது. அசத்தும் என்னும்

உம்மை இறந்தது தழீஇயிற்று. தான் என்பது முன்னையது எழுவாயுருபுபட நின்றது; பின்னையது அசை நிலை. துவ்வாமை துய்யாமை என மரீஇயிற்று.

சத்தியுடைய பொருள் சத்தும், அஃது இல்பொருள் அசத்தும் ஆகலின் அம்மொழிகள் ஈண்டு அம்முக்கெட்டுக் குற்றியலுகர வீறாய் நின்றன; ''நாகணையான்'' (ஞானசம் 80.9.), ''பெற்றெருன்றுயர்த்த பெருமான்'' (ஞானசம் 312. 11.), ''பேது செய்து'' (சிந்தாமணி 1920), 'வாது செய்யத் திருவுள்ளமே' (ஞானசம். 366. 2.) என்றாற்போல.

அசித்துமலை என்பது பாடமாயின், மேற் சத்தாகாய் என்றதனை இசையெச்சமாகக் கொண்டு சத்தாந்தன்மையே யுடையாயல்லை; அதன் மேலும் சித்தாமாறு யாங்ஙனம் என்று உரைத்து இயைத்துக் கொள்க.

இவ்வாறன்றி ஈண்டுச்சத்தாகாய் அசத்துமலை என்பவற்றை மேல் அருவுருவம் அன்றாகும் என்றதன் பொருள்படக் கொண்டு உரைப்பாருமுளர். அவர் ஆண்டே அமைந்து கிடந்த பொருளை மறித்தும் கூற வேண்டாமையும், பெயர்த்துணர் நீ எனவும், அறிந்து துய்யாமை எனவும் அறிவுடைமை அறிவின்மை பற்றிக் கூறும் பொருள் அவையாதல் செல்லாமையும் நோக்கிற்றிலர்.

எடுத்துக்காட்டு

**மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாது அசத்தாதல்**
**அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண்—மெய்ஞ்ஞானம்**
**தானே யுளதன்றே தண்கடல் நீர் உப்புப்போல்**
**தானே யுளம்உளவாத் தான்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அம்மயக்கம் அவ்வுயிரோடு இயைபுடைய முதல்வனுக்கும் உண்டுபோலும் எனவும் அதுதான் உயிர்க்கு எக்காலத்து எந்தது எனவும் நிகழும்; கடாவை விடுக்கு முகத்தான் இரண்டன்பாலும் உளதாமாறு வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அஞ்ஞானம்—மேற்கூறிப் போந்த மயக்கமாவது மெய்ஞ் ஞானம் தன்னில் அசத்து ஆதல் விளையாது—ஒருபெற்றித் தாய அறிவெனப்படும் சிவத்தின் எதிர், கதிர்முன் இருள்போல் நிலையுதல் இலதாகலின் ஆண்டு உளதாதல் இன்றி; மெய்ஞ் ஞானம் தானே உளது அன்றே—அச்சிவம் என்றுள்ளது அன்றே; தான் ஏய் உளம் உளவா—தான் பொருந்துதற்கு உரிமையுடைய உயிர்கள் உள்ளனவாக; உள்ளம் அணைதல்—அவ்வுயிர்களைப்

பற்றி நிற்றல்; தண்கடல் நீர் உப்புப் போல் காண்—தண்ணிய கடலின்கண் உளதாதலன்றி அக்கடலிடத்து உளதாகிய நீரைப் பற்றி நிற்கும் உப்புப்போல் என்று அறிவாயாக என்றவாறு.

விளையாது என்னும் வினையெச்ச மறை அணைதல் என்னுந் தொழிற் பெயரொடு முடிந்தது. தானே என்பது கட்டுரைக்கண் வந்தது. தானேஉளம் உளவாத் தான் என்புழித் தானென்பது முன்னையது எழுவாய்: பின்னையது அசைநிலை. ஏயுளம் என்னும் வினைத் தொகை ''அறிவறிந்த மக்கட்பேறு'' (திருக்-61) போல நின்றது. ஏய்தற்கு உரிமையாவது மேற்காட்டினும். தண்கடல் நீர் உப்புப் போல் என்றதனுல் முப்பொருள்களும் வியாபக வியாப்பி யங்களாய் நிற்குமாறும் பெறப்பட்டது. இரண்டன்கண்ணும் உயிர்க்கு இயைபுடைமை கூறவே, இரண்டன்பாலும் உளதாதலை வலியுறுத்தவாறு காண்க.

ஈண்டு இருதிறனையும் அறியும் அறிவுளது எனவே, இருதிற னுகிய சத்துஅசத்து எனப்பட்டனவெல்லாம்பிரமேயம்;அவற்றை அறியும் சதசத்தாகிய உயிர் பிரமாதா; அவ்வுயிரின் அறிவாகிய சிற்சத்தி பிரமாணம்: அவ்வறிவு நிகழ்ச்சி பிரமிதி என்பதூஉம், இருதிறனுல் விளங்கும் அறிவுளது எனவே அவ்விரண்டனுள் அசத்தான் அறிவு விளக்கும்வழித் தனக்கு வேருய் நின்று விளங்கு வனவாய காட்சி அனுமானம் உரை எனப்படும் அசத்தாகிய பாச ஞானம் மூன்றும், சத்தான்அறிவு விளங்கும் வழி அந்நியமின்றித் தனக்கு ஆதாரமாய் உடனின்று விளக்கும் சிவஞானமும் தனக்கு வியஞ்சகங்களாகலான், அதுபற்றி அவையும் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படும் என்பதூஉம், இருதிறனினும் அறிவுளது எனவே ஈரிடத்தும் கேடின்றி அசத்தான் விளங்கி, அசத்தை அறி வுழி அசத்தின்பாலும், சத்தான் விளங்கிச் சத்தை அறிவுழிச் சத்தின்பாலும் அதுஅதுவாய் அழுந்தும் என்பதூஉம் பெறுதும். இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாணமென்னும் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தாமையும், அவ்வியஞ்சகங்களால் நிகழும் பிரமிதி வேறுபாடும் அவற்றது இயல்புகளும் ஈண்டு விரிக்கிற் பெருகும்; பௌட்கரம் முதலிய சிவாகமங்களிற் கண்டு கொள்க.

(நு–வி)சதசத்து-உயிர். என்றும் நிலையுடைய பொருளாய்இலங் கும் இறைவனேடு சேர்ந்து மெய்யுணர்வைப் பெற்றும், நிலையில் பொருளாகிய உலகு உடல் முதலியவற்ருேடு இயைந்து குறையு டைய உணர்வைப் பெற்றும் சார்ந்ததன் வண்ணமாய் இருத்தலின் இது சதசத்து எனப்பட்டது. சத்து-என்றும் உள்பொருளாய்

ஒருபடித்தாய் இருப்பது அசத்து-நிலையில் பொருளாய்த் தோன்றியும் அழிந்தும் வரும் இயல்பினது. விடயம்-பொருள்: ஈண்டு அது இருளைக் குறித்தது. ஞாயிறு இருளையும், இருள் ஞாயிற்றையும் அறிதல் இல்லை. ஆனால் கண் இவ்விரண்டையும் தனித்தனியே அறியவல்லது. அதைப் போன்றே உயிர் இறைவனையும் உலகியற் பொருளையும் அறிய வல்லதாம்.

உபதேசியாய்-அறிவிக்க அறியும் இயல்பினதாய், ஆய் என்னும் வினையெச்சம் இரண்டும்-அறிவதாய் உபதேசியாய் எனவரும்வினையெச்சங்கள் இரண்டும் இருதிறன் அறிவு என்னும் தொகைச் சொல் இரண்டு மூன்று ஏழு ஆகிய மூன்றன் வேற்றுமை உருபுகளாலும் விரித்துரைக்கப்படுகின்றன. அவ்வாற்றான் பல சமயக்கருத்துக்கள் மறுக்கப்படுகின்றன.

இவ்விரண்டனையும் அறிவதாய் உள்ள இது என இரண்டன் உருபை வைத்து விரிப்புழி அவ்விரண்டும் ஒன்றையொன்று அறியாது என்பதும், உயிரே அவ் விரண்டனையும் அறியும் என்பதும் பெறப்படும். இவ்வாற்றான் உயிருக்காகச் சத்து அசத்தை அறியும் என்னும் சிவாத்துவித சைவர் கருத்தும், உயிரின் முன் அசத்துச் சத்தை அறியும் என்னும் சிவசங்கிராந்த வாத சைவர் கருத்தும் மறுக்கப்பட்டன.

இவ்விரு திறனாலும் விளங்கிய அறிவினை உடையதாய் (உபதேசியாய்) என மூன்றன்உருபு வைத்து விரிப்புழி உயிர் அறிவிக்க அறியும் தன்மையதன்றி தானே அறியும் தன்மைய தன்று என்பது பெறப்படும். இவ்வாற்றான் உயிர் தானே அறியும் தன்மையுடையது எனும் சிவசமவாத சைவர், ஈசுர அவிகாரவாத சைவர், ஐக்கியவாத சைவர் ஆகியோரின் கருத்துக்கள் மறுக்கப் படுகின்றன.

இவ்விரண்டன் கண்ணும் உள்ள அறிவு என ஏழன் உருபை வைத்து விரிப்புழி உயிர் சார்ந்ததன் வண்ணமாய்க்கட்டுண்ட நிலையில் அறியாமையொடு கூடியதாயும் வீட்டு நிலையில் அக் கட்டினின்றும் நீங்கி சிவத்தொடு சார்ந்து பேரின்பத்தைத் துய்ப்பதாயும் விளங்கும் என்பது பெறப்படும். இவ்வாற்றான் வீட்டுநிலையிலும் உயிர் மலநீக்கம் இன்றிக் கல்போல் அதன்கண் அடங்கி நிற்கும் என்னும் பாடாணவாத சைவர் கருத்தும். மலநீக்கம் பெறுவதன்றி இறையடியை அடைய வேண்டுவது இன்று என்னும் பேதவாத சைவர் கருத்தும், வீட்டு நிலையில் இறைவனுடன் ஒன்றுதலன்றி உயிர் சிவானுபவத்தை நுகருமாறு இல்லை என்னும் சுத்த சைவர் கருத்தும் மறுக்கப்படுகின்றன.

இருள் ஒளியலாக்கண் தன்மை போல-இருள் ஒளியையும் ஒளி இருளையும் அறியாது; அதுபோல்வதன்றி அவ்விரண்டினையும் அறியும் கண்ணின் இயல்பு போல. விண்ணின் குணமாய ஓசை துணையுள்ளவிடத்து விளங்குவது போல, உயிரும் கட்டுநிலையில் கருவிகளைக் கொண்டும், வீட்டு நிலையில் திருவருளைக்கொண்டும் விளங்கும் தன்மையதாம் வியஞ்சகம்-துணை. அழுந்துந் தன்மை அவ்வப்பொருளினும் ஒன்றியிருந்து அறியும் தன்மை.

அவ்விரண்டனையும் அறியும் முகத்தால்-சத்து அசத்து ஆகிய அவ்விரண்டனையும் அறியும் வாயிலாக மலரின்கண் உள்ள மணம் மலரும் ஆகாது அதனின் வேறும் ஆகாது, மலரின் வாயிலாக அறியப்படுவதாம். அது போல உயிரும் சத்து அசத்து ஆகிய இரண்டும் ஆகாது அவற்றின் வேறும் ஆகாது அவ்விரண்டனை அறியும் வழி அறியப்படுவதாம். இவ்வாறு உயிர் கட்புலனுதலின்றி உணர்தற்குரிய தாய் இருத்தலின் உயிர் எத்தன்மைத்து என்றவழி உணர்தல் தன்மைத்து என இலக்கண உரையாசிரியர்களும் கூறுவாராயினர். சுட்டுணர்விற்கு விடய மாகாமை-சுட்டி உணர்தற்கு உரியபொருள் ஆகாமை. பெயர் வினைகளில் உம்மை தொக்குநிற்பின் அதனைச் செவ்வெண் என்பர். அவ்வாறு வரும் செவ்வெண் தொகை பெற்றே நிற்க வேண்டும் என்னும் இலக்கணம் ஈண்டு அருவுருவம் எனவரும் இடங்களில் உம்மையின்றி வருதலின் செவ்வெண் ஆயிற்று. இரண்டு என்னும் தொகை பெருமையின் அது விகாரத்தால் தொக்கது என்றுர்.

இழை-நூல்: நூல் போறலின் நூலாயிற்று. 'பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா-எஞ்சாத, கையே வாயாக கதிரே மதியாக, மையிலா நூல் முடியுமாறு' எனவும் 'பொல்லா மரத்தின் கனக்கோட்டம் தீர்க்கும் நூல் அஃதே போல் மாந்தர் மனக்கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு' எனவும் வரும் இலக்கணக் கூற்றுகளான் இவ்வுண்மை அறியலாம். நூலின் பொருள் நுண்மையதாதல் பற்றி ஆயிழை என்றுர். நூற்பொருளின் நுணுக்கமே நூல்மேல் ஏற்றப்பட்டது. 'நுண்ணிய நூல்பல கற்பினும்' எனத் திருவள்ளுவர் கூறுவதும் காண்க. இழையை என இரண்டனுருபு விரித்துரைக்கப்பட்டது. இறைவன் தானே அறிபவன். முற்றறி வுடையவன் எனவே அப்பெருமானுக்கு ஆய்ந்து தெளிதற்குத் துணையாக நிற்கும் நூல்கள் எவையும் தேவையின்று. உலகு முதலிய பொருள்கள் அறிவற்றனவாதலின் அவற்றிற்கும் அத்தகைய நூல்கள் வேண்டுவதின்று. இவ்வாற்றுன் எஞ்சி நிற்கும் உயிர்க்கே அவை வேண்டப்படுவனவாம். அவ்வேதாக

மங்களின் வாயிலாகப் பல்வேறு பொருள்கள் அறியப் படினும் அவை அனைத்தும் சத்து அசத்து என்னும் இரண்டனுள் அடங்குவனவாம். அதுபற்றியே 'ஆய் இழை ஆய் ஆன்மா அருவுருவம் அறிதல்'என்றார்.உயிர் என்றே கூற அமையுமாயினும் ஆய் இழை ஆய் ஆன்மா என உடம்பொடு புணர்த்திக் கூறியது, சத்து அசத்தாகிய இரண்டனையும் அறிதற்குரிய உரிமையை வலியுறுத்தவாம். இவ்வாறு உயிர்க்கு அறியும் தன்மை உண்டு என்பதால் சங்கற்ப நிராகரண ஆசிரியரும் 'பலகலை உலகில் நிலவுதலாலும்' என்றார்.

ஆயிழையாய்-ஆராய்ந்து எடுத்த அணிகளை அணிந்த பெண்ணே எனப் பொருள் கூறுவதும் இத்தொடருக்குப் பொருந்துவதாகும்.இவ்வாறு இலக்கிய வழக்கில் வருதலை மகடூஉ முன்னிலை என்றலும் வழக்கேயாம். எனினும் அவ்வாறு கூறுதல் பொருத்தமன்று என ஆசிரியர் விளக்குகின்றார். 1. மகடூஉ முன்னிலையாக்கின் பெண்ணை விளிப்பதன்றி உயிரைக் குறியாது: நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே என உடம்பொடு படுத்துப் பொருள் காணின் அந் நூல்களை அறியும் வாயிலாகச் சத்து அசத்து ஆகிய இரண்டனையும் அறியும் எனப்பட்டு உயிர் அவ்விரண்டனையும் அறிதற்குரிய உரிமை உளதாதலை வலியுறுத்தும். 2. அருவுருவம் தான் அறிதலால் ஆன்மா அருவுருவம் அன்றாகும் என்று மட்டுமே கூறின் மேல் பொழிப் புரையில் இவ்விரண்டனையும் அறிவதாய் எனக் கூறியதையே ஈண்டும் கூறுவதாய் அமைந்து கூறியது கூறலாய் அமையும் என்பது: எனினும் இத்தொடருக்கு இவ்வாறு பொருள் காண்டல் ஆராயத் தக்கதேயாம்.

ஆன்மா என்றவிடத்து உயிரே என ஏகாரம் கூட்டி உரைக்க பட்டுள்ளது. அவ் ஏகாரம் உயிரோ பிறவோ என்னும் ஐயத்தை நீக்கி நிற்றலின் தேற்றமாயிற்று. அருவுருவாய்த் தோன்றி-அவ் விரண்டும் (சத்தும் அசத்தும்) போலத் தோன்றி ஈண்டு ஆய் என்னும் ஆக்கச்சொல் 'போல' என்னும் உவமப் பொருள் குறித்து நின்றது. திருவாசகத்திலும் இவ்வாறே 'ஆள்வார் இலிமாடு ஆவேனோ' என்றவிடத்து, 'ஆவேனோ' என்பது போல்வேனோ என உவமைப்பொருள்பட நின்றது.

சத்த குணமுடைய ஆகாயம்-ஒலிக்கும் குணமுடைய விண். உயிர் கருவிகளொடு கூடியவழி விளக்கம்பெறும்.அவை இல்வழி தன் நிலையில் (கேவல நிலையில்) கண்ணில்லாக் குழவியைப் போல் மயங்கி நிற்கும். இம் மயக்கம் பசியைப் போன்றது. பசி உணவு உள்வழி நீங்கும். இல் வழி உண்டாகும்.அதைப்போன்ற இம்மயக்கமும் (உயிர்க்குத்) துணையுள்வழி நீங்கும். இல்வழி

உளதாகும். வியஞ்சகம்–துணை. இது மருந்து போல்வது. இவ்வாறு உவமையாகக் கூறுது துணையையே மருந்தாகக் கூறலின் இது உருவகமாயிற்று. துணையை மருந்தாகக் கூறியவர் மயக்கத்தைப் பசியாக உருவகியாமையின் இது ஏகதேச உருவகமாயிற்று, மருந்து–உணவு, நோய் தீர்க்கும் பிற மருந்துகளைக் குறியாது உணவெனக் குறித்தது, மீண்டும் 'மீண்டும் பசி உளவாகவும் உணவை உட்கொள்ள அது நீங்கவும் இருக்கும் இயல்பு பற்றியாம். இவ்வாறே உயிரும் நனவு முதலிய ஐந்தவத்தை உறுங்கால் கருவிகளொடு கூடிய நனவுநிலையில் விளக்கம் பெற்றும், கருவிகளொடு கூடாத உயிர்ப்படங்களில் மயங்கியும் நிற்கும் என்பதாம். மயக்கமது என்றவிடத்துள்ள அது என்னும் விகுதி, மயக்கம் என்னும் பகுதிப்பொருளையே தருதலின் அதனை பகுதிப் பொருள் விகுதி என்றுர். அசத்தும் அலை என்றவிடத்துள்ள உம்மை சத்தாகாய் எனவரும் முன்னைய தொடரைத் தழுவி நிற்றலால் இறந்தது தழீஇயிற்று என்றுர்.

நாகம், பெற்றம், பேதம், வாதம் என்ற சொற்கள் அம்கெட்டு நாகு, பெற்று, பேது, வாது என உகர ஈருய் நின்றவாறு போல, சத்தம் அசத்தம் என்பனவும் அம்கெட்டுச் சத்து அசத்து என உகர வீருய் நின்றன. 'வாது செய்யத் திருவுள்ளமே' எனவரும் ஆளுடைய பிள்ளையின் திருவாக்கும் நினைவு கூர்க.

சத்தாகாய்–அருவாகாய்: அசத்தும் அலை–உருவாகாய் எனப் பொருள் கொள்வாரும் உளர். 'அருவுருவம் தானறிதல்' என்னும் வெண்பாவில் இப்பொருள் அமைந்து கிடத்தலின் அதனையே மீண்டும் கூறுதல் பொருத்தமின்ரும். பெயர்த்து உணர் நீ–மாறி மாறி உணர்ந்து வருகின்ற நீ என உயிர் கூறப்படுவதால் அதற்கு அறியும் தன்மை உளதாதல் பெறுதும். அறிந்து துய்யாமை – அறிந்து நுகராமை. இவ்வாறு பொருள் கொள்ளுதற்கேற்பச் சத்து என்பதற்கு இறை என்றும் அசத்து என்பதற்குப் பாசம் என்றும் உரைகாண்டலே பொருத்தமாம். அவ்வாறன்றி அரு உரு என்று பொருள் காண்டல் பொருத்தமின்ரும். அரு உரு என்பன முறையே சத்தையும் சிவத்தையும் குறித்தல் மேலைய வெண்பாவால் பெறப்படுதலின் இம்மறுப்பு ஆராயத்தக்கது.

மேற்கூறிப் போந்த மயக்கம்–மேலைய வெண்பாவில் மயக்கமது உற்றும் எனக் கூறிய மயக்கம். உயிரும் சிவமும் உணர்த்த உணர்தலும் தானே முற்றுணர்தலும் ஆகிய வேறுபாடுடையவேனும் அறிவுடைப்பொருள் என்ற வகையில் இரண்டும் ஒருதன்மையவாய் இருத்தலின் ஒரு பெற்றித்தாய அறிவெனப்படும் சிவம் என்றுர்.

இங்குக் கடல் எனக் குறிப்பது நீருக்கும் நிலத்திற்கும் இடம் கொடுத்து நிற்கும் இடைவெளியேயாம். உப்புநீரைப்பற்றுவதன்றி

இவ்வெளியைப் பற்றுவதில்லை. அது போன்றே சிவபரம்பொருள் உயிர் பாசம் ஆகிய இரண்டும் நிலைபெறுதற்குத் துணையாய் இருப்பினும் பாசம் உயிரைப் பற்றுவதின்றிச் சிவத்தை பற்றுவது இல்லையாம்.

அசத்து மெய்ஞ்ஞானம் தன்னில் விளையாது உள்ளம் அணைதல் உப்பு கடலில் உளதாகாது நீரிடத்து உளதாவது போலாம். ஈண்டு முடியாது என்பது அணைதல் என்னும் தொழில் பெயரொடு முடிந்தது கட்டுரைக்கண் - சிறப்பித்து உரைத்தற்கண். ஏயுளம்-பொருந்துதற்கு உரிமையுடைய உயிர், அறிவறிந்த மக்கள் என்றவிடத்து அறிய வேண்டுவனவற்றை அறிதற்குரிய மக்கள் எனப் பொருள் பட்டாற் போல் ஈண்டும் பொருள்படுகிறது. அஞ்ஞானம் உயிரைப் பொருந்துதற்கு உரிய உரிமை பெறுதற்குக் காரணம் அதனிடத்து உள்ள பற்றும் தன்மையேயாம். இதனை நான்காவது நூற்பா இரண்டாவது அதிகரணத்தில் 'தன்னை மலம் அன்று அணைதல் தான்' என்னுமிடத்துங் கூறப்பட்டது. வியாபகம்-எங்கும் நிறைவது. வியாப்பியம் - அந்நிறைவினுள் அடங்கியிருப்பது.கடல் -வியாபகம். நீர்-வியாப்பியம். இதைப் போன்றே நீர்வியாபகம்: உப்பு வியாப்பியமாம். நீருக்குக் கடலும் உப்பும் இயைபுடையன. அதைப் போன்றே உயிர்க்கும் அசத்தும் சத்தும் இயைபுடையன.

பிரமேயம் - அவைகளால் அளந்து கொள்ளப்படுவது. பிரமாதா-அவ்வாறு அளந்து கொள்பவன். பிரமானம்-அளத்தல். பிரமிதி-அதனல் உண்டாகும் அறிவு. சிற்சத்தி-உயிர் அறிவு.

உலகியற் பொருள்களை உயிர் உணர்தற்குக் காட்சி, அனுமானம் உரை ஆகிய மூன்றும் துணையாவனவாம். இறைவனை அறிதற்கு அருளும் பதிஞானமும் துணையாவனவாம். ஒரு பொருளைக் காண்டற்குத் துணையாகுவது என்பது வேறு; கருவியாகுவது என்பது வேறு; உயிர் அறிதற்குக் கருவியாய் இருப்பது அறிவேயாம். காட்சி அனுமானம் முதலியன அதற்குத் துணையேயாம். தார்க்கிகர் முதலியோர் துணையாய் இருப்பனவற்றையே அளவை என்பர்.

## எட்டாவது நூற்பா

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு**
**அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.**

## கருத்துரை

ஞானத்தினை யுணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

என்பது சூத்திரம். என் நுதலிற்றோ வெனின் என்பது கருத்துரை. சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வான்மாவின் அறிவானது மேல் (7வது நூற்பா) இருதிறன் என்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பாலுளதாய் அசத்தினை அறிந்து நின்றவாறும், சத்தான் விளங்கிச் சத்தின்பாலுளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாறும் தரிசிக்கும் முறையினை உணர்த்துமுகத்தால், சாதித்தற்குரிய அதிகாரம் தனக்கு உண்டென மேலைச் சூத்திரத்தான் அறிந்த ஆன்மாவுக்குச் சாதித்தனுற் பெறப்படும் பயனும், அதற்குச் சிறந்த சாதனமாவதும், அது வருவாயும் இவை என்பது உணர்த்துதல் இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

இதனானே சூத்திர இயைபும் இனிது விளங்கும்.

இச் சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு

உயிர், தான் முன்னே செய்து கொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தால் தனக்கு அந்தரியாமியாய் இதுகாறும் உள்நின்று உணர்த்தி வந்த பரம்பொருளே, இப்பொழுது குருவடிவமுங் கொண்டெழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து, ''மன்னவ குமாரனாகிய நீ, ஐம்பொறிகளாகிய வேடருட்பட்டு, வளர்ந்து, நின் பெருந்தகைமையை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய்; நின் பெருந்தகைமையாவது இவ்வியல்பிற்று' என்று அறிவுறுப்ப அறிந்த மாத்திரையே அவ் வேடரை விட்டு நீங்கி அந்நியமின்றி அந்நியமாம் தன்மையின் நிலைபெற்று அம் முதல்வன் திருவடிகளை அணையும் என்றவாறு.

உயிர் என்பது மேலைச் சூத்திரத்தினின்றும் வருவித்து உரைக்கப் பட்டது. தவத்தினிற் குருவுமாய், வளர்ந்து அயர்ந்தனை யென உணர்த்த விட்டுச் செல்லும் என இயையும். புலன் ஆகுபெயர் வளர்ந்தயர்ந்தனை யென்பது ''ஈந்து புகழ் பெற்றான்'' என்புழிப் போலக் காரண காரியப் பொருட்டாய் நின்றது. தம்முதல் என்றது வேறு முடிபாகலின் பால்வழு வின்மையுணர்க. குருவும் என்ற உம்மை உயிர்க்குயிராய் உண்ணின்று உணர்த்தியதூஉமன்றி யென இறந்தது தழீஇயிற்று; சிறப்புமாம். அந்நியமின்மை அத்துவிதம்; அஃதாவது சேறலைப் பயப்பித்ததாய் ஆண்டு உளதாகிய இயைபு. அரன் என்றது சுட்டுப் பெயர்ப்பட நின்றது.

வெண்கொற்ற கொடையும் நவமணி முடியுஞ் சிங்காதனமும் மன்னவர்க்கே உரிய சிறப்படையாளமாம்; அதுபோலப்பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாம் இயல்பாகிய ஒரு பெரு வெண் கொற்றக்குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒருபெருஞ்சுடர்முடியும், அங்கங்கேஉயிர்க்குயிராய் நின்று எவற்றினையுஞ் செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர் ஒருவர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமை பற்றிப்பசுக்களுக்குப்பாசங்களைஅரித்தலான் அரன் என்னுந் திருப் பெயருடைய முதல்வனை மன்னனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுதும் தனதேயாகக் கொண்டு அனுபவிக்குஞ் சுதந்திரமுடைமையும் சித்தெனப்படும் சாதி யொருமையும் பற்றி ஆன்மாவை மன்னவ குமாரனாகவும் அவ்வான்மாவை அறிவுப் பெருஞ் செல்வ முழுதையும்ஆறலைத்துக் கொண்டு சிறுமை யுறுத்துதலும் விதிவிலக்கை இழப்பித்து இழி தொழிலில் நிற்பித்தலும் ஆகிய இயல்பு பற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார். இஃது ஏகதேச உருவகம். ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென எனவே ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்தலும் அநுவாத முகத்தாற் பெற்றும்.

இதனுள், தவத்தினி லுணர்த்த வென்றது ஓரதிகரணம்; தம் முதல் குருவுமா யென்றது ஓரதிகரணம்; ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென வென்றது ஓரதிகரணம்; விட்டுஅன்னிய மின்மையின் அரன் கழல் செலுமே என்றது ஓரதிகரம்; ஆக நான்கு அதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க.

(நு-வி) அந்தரியாமியாய் - உள்நின்று இயக்குபவனாய் அன்னியமின்றி - வேற்றுமையின்றி. அநன்னியமாய் - ஒன்றாய் புலன் - சுவை முதலியன; தமக்கிடனாய பொறிகளை உணர்த்தி நிற்றலின் ஆகுபெயராயிற்று. வளர்ந்து அயர்ந்தனை, (ஐம் பொறிகளாய வேடரிடத்து) வளர்ந்தமையால் மறந்தனை. எனவே மறத்தற்குக் காரணம் வேடரிடத்து வளர்ந்தமை என்பது புலனாகும். எனவே அதுகாரணமாயிற்று. மறந்தமை காரியமாயிற்று. இது புகழ்பெறுதற்கு ஈதல்காரணமாதல் போலாம். 'இரப்பாற்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழ்' என்பர் திருவள்ளுவனாரும் தம் முதல் என்றவிடத்துப் பன்மையால் கூறியவர், வளர்ந்தனை என்ற விடத்து ஒருமையால் கூறியிருப்பது பால்வழுவாதல் பற்றி வேறு· முடிபென அதற்கு அமைதி கூறினர். வளர்ந்தனை என்றவிடத்து நீ வளர்ந்தனை என உரை கூறப்பெறுதலின் அதற்கு நீ என்பது தோன்றா எழுவாயாக நின்றது. தம் முதல் எனபுழித் தம் என்பது உயிர்ப்பன்மை குறித்து நின்றது. சேறலைப் பயப்பிப்ப

தாய் - திருவடிக்கண் சேருதலை எய்துவிப்பதாய்; அரன் - அம் முதல்வன் எனப் பொருள் கோடலின் சுட்டுப்பெயர்ப்பட நின்றது என்றார். சாதி ஒருமை - ஒருசொல் ஒருமை நீர்மைப் பட நின்றும் அது பன்மைப் பொருள்பட நிற்பதாம். சித்து என்பது உயிர்ப்பன்மை குறிப்பதன்றிச் சிவத்தையும் குறிக்கும். 'சிவன் சீவன் என்றிரண்டும் சித்து ஒன்றும்' என்னும் சிவஞான சித்தியாரும், ஐம்பொறிகளை வேடராக உருவகித்தவர் இறைவனை அரசனாகவும் உயிர்களை அவனது மக்களாகவும் உருவகியாமை யின் ஏகதேச உருவகம் என்றார். ஒரு செய்தியை யாதானும் ஒரு காரணம் பற்றிப் பின்னரும் கூறின் அது அநுவாதமாம். ஐம் புல வேடரின் அயர்ந்தனை என்பதாலேயே அயர்த்தற்குக் காரணமாய வளர்ந்தமை பெறப்படும் அவ்வாறு இருக்க மீண்டும் வளர்ந்தனை என்றல் அநுவாதமாம்.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

*ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது.*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், மேற் (7வது நூற்பா) கூறிப்போந்த சாதகரால் செய்யப்படும் சாதனமும் அது வருவாயும், வேறுவேறாகக் கூறும் சமயத்தாரை நோக்கிச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை

மேற் (7 வது நூற்பா) கூறிப் போந்த இயல்புடைய ஆன்மாக் களுக் கென்பார் இவ்வான்மாக்களுக் கென்றார். படிமுறை யானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையா தென்பது உணர்த்துதற்கு முற்செய் தவமென விசேடித்தார். ஈண்டு ஞானம் என்றது குரவனுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணாகக்கொண்டு அறிவதாகிய சாதனவறிவின் மேற்று. நிகழ்தல் ஐயந்திரிபின்றி விளக்குதல்.

### ஏது

*மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறி யாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடா வாகலான்*

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், தவங்களே சாதன மாதல் அமையும், ஞானம் எற்றுக்கு என்பாரை நோக்கி மேற் கோளைச் சாதித்தல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை,

ஈண்டுத் தவம் எனப்பட்டன பிறவல்ல வென்பார் சரியை கிரியா யோகங்களை யெனக் கிளந்துரைத்தார். கிரியாயோகங்கள் என்னும் உம்மைத்தொகை வடநூன் முடிபு. கிரியா யோகம் இரண்டற்கும் தீக்கை ஒன்றென்பது தோன்றஅவ்விரண்டனையுந் தொகுத்தோதிச் சரியையைத் தமிழுக்குரிய ஈற்றான் வேறுவைத்தார்.ஆளுடைய பிள்ளையார் முதலாயினர்க்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்தவாறென்னை என்னும் கடாவை விடுத்தற்கு, மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி யென ஈண்டும் வலியுறுத்தார். மேலாகிய உண்மைச் சரியை கிரியா யோகங்களை எனினும் அமையும். காட்டிக்கொடுக்கும் எனற்பாலதனை எதிர்மறை முகத்தாற் கூறினர், ஞானத்தின் இன்றியமையாமை உணர்த்துதற்கு. சரியை கிரியா யோகங்களைச் செய்துழி என்றது உபலக்கணம் ஆகலின், தீக்கை பெற்றுழி அதுவும் ஞானத்தைக் காட்டி அல்லது மோக்ஷத்தைக் கொடாதெனக் கொள்க. அவையெல்லாம் ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடாமையை வலியுறுத்துவார் நன்னெறியாகிய என ஞானத்தை விசேடித்தார்.

நன்மை யெனப்படுவன எல்லாவற்றினுஞ் சிறந்த நன்மை யாவது வீடுபேறு என்பது. அதனைத் தலைப்படுதற் கேதுவாய்ச் சிறந்த நெறியாகலின் ஞானம் நன்னெறி யெனப்பட்டது. வீட்டிற்கு நெறியென அவ்வச் சமயத்தாராற் கூறப்படுவன அனைத்தும் தன்கண்ணே வந்து கூட நின்ற பெருநெறி யாகலான் அது நன்நெறி யெனப்பட்டது. நன்னெறி, சன்மாக்கம் என்பன ஒரு பொருட்கிளவி.

## எடுத்துக்காட்டு

**தவஞ்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து**
**பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த**
**நற்சார்பில் வந்துஉதித்து ஞானத்தை நண்ணுதலைக்**
**கற்றோர்சூழ் சொல்லுமாம் கண்டு.**

என்பது உதாரணம், என்நுதலிற்றோ வெனின், மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்தார், அவற்றான் ஞானத்தைக் காணும் முறைமை எவ்வாறு என்பாரை நோக்கி, அஃறு ஆமாறுணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) தவம் செய்தார் – சரியை முதலியவற்றைச் செய்தோர்கள்; தவலோகம் என்றும் சார்ந்து—அவ்வத் தவப்பயன்களைப் பயப்பிக்கும் சாலோகாதி பதங்களை ஒரு தலையாக நண்ணி

ஆண்டு உளவாகிய இன்பங்களை அநுபவித்து; பற்றுப் பவஞ் செய்து அறுப்பார் ஆக—முன்னுடம்பு இறக்கும் நாள் அடுத்த வினை காட்டும் கதி நிமித்தம் பற்றி எழுந்த அவாவினை மீள நிலத்தின்கண் பிறந்து அனுபவித்து நீக்கிக் கோடற் பொருட்டு; தவம் செய்த நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலை—மீளத் தவம் செய்தற்குரிய உயர்ந்த குலத்தின்கண் வந்து தோன்றித் தவக்குறையான் அவ்விடயப்பற்றும் முறுகாவண்ணம் அறுத்துத் தத்துவஞானத்தைத் தலைப்படுவாராதலை; கற்றூர் சூழ் கண்டு சொல்லுமாம்—வீட்டுநூல்களைக் கற்றூரது சூழ்ச்சி அந்நூற் கருத்துணர்ந்து சொல்லும் என்றவாறு.

தவந்தானுக, பிறிதொன்று தானுக இவ்வுலகத்து உடம்பொடு நின்று ஈட்டிய வினையெல்லாம், அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம் போகங்களைப் பயந்தே விடுமாகலான், அவற்றை ஒரு ஞான்றும் பிறழமாட்டார் என்பார், என்றும் தவலோகம் சார்ந்து என்றூர். ஆகவென்னும் செயவெனெச்சம் "உண்ண வந்தான்" என்புழிப்போலத் தற்பொருட்டாய் நின்றது. பற்றறுதற் பொருட்டு வந்துதித்து எனவே ஆண்டுப் பற்றுச் செல்லாதவழி அவ்வுலகத்து நின்றூங்கே ஞானத்தை நண்ணுவர் என்பதூஉம் பெறுதும். கற்றூரது சொல்லுதற்றெழில் சூழ்ச்சி மேலேற்றப் பட்டது. ஆம், அசை. நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதல் என்றது அருத்தாபத்தியான் இழி குலத்தார் தத்துவ ஞானத்திற்கு உரியரல்லர் என்பது பெறப்பட்டது.

எடுத்துக்காட்டு

**பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்**
**இசைத்து வருவினையில் இன்பம் - இசைத்த**
**இருவினை யொப்பில் இறப்பில தவத்தான்**
**மருவுவனும் ஞானத்தை வந்து.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், சரியை முதலிய தவங்களே தத்துவ ஞானத்தைக் காட்டும் எனயாப்புறுத்து ஓதியது என்னை? வேதத்துட் கூறிய வேள்வி முதலாயினவும் தத்துவ ஞானத்தைக் காட்டுமென்றல் அமையும் எனப் பட்டாசாரியன் மதம் பற்றிக் கூறிவாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) இசைத்து வருவினையில் இன்பம்—ஒரு நல்வினை செய்வான் தொடங்கி அறநூலை ஆய்வாரது உணர்வின்கண் விடய

மாய் வரும்பொழுதே தம்மால் பெறப்படும் காமியப் பயன்களை உடன் கூறிக்கொண்டே வருகின்றனவாய வேள்வி முதலிய அறங்களின் பயனாகிய இன்பம்; பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்—முன்னர்ப் பசித்துண்டு பின்னும் பசிப் பானுக்கு அவ்வுண்டியான் வரும் இன்பத்தை ஒக்கும் ஆகலான்; இசைத்த இருவினை இறப்புஇல் தவத்தான் ஒப்பில்-ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதற்கண் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போலத் தம்முட் சமப்படுத்து உணரப்படுவன வாகிய அறம் பாவம் இரண்டும் தம்மைப்போல் அநுபவ மாத்திரையால் கெடுதலின்றி மேன்மேன் முறுகி வளர்வன சரியை முதலிய தவங்களானே நேராக ஒத்தால்; வந்து ஞானத்தை மருவுவன்—அத் தவமுதிர்ச்சி யுடைமையான் முன்னர்க் கூறப் படும் ஞானகுருவைத் தேடி வந்து ஞானத்தைத் தலைப்படுவன் என்றவாறு.

வேள்வி முதலாயின வெல்லாம் அழிதல் மாலையவாய காமியங்களைப் பயப்பனவன்றித் தத்துவ ஞானத்தைப் பயவா என்றற்கு அவற்றை விதித்த நூல்களே சான்றென்பார் இசைத்து வருவினையென்றும், அவை ஞானத்தைப் பயவாமை மாத்திரையே யன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலுமுடைமையின் அவற்றது கழிவே ஈண்டைக்குக் காரண மாவது என்பார் இசைத்த இருவினை யொப்பின் என்றுங் கூறினர் ஒப்பிலென்னும் வினையெச்சம் மருவுவன் என்னு பிறவினை முதல் வினை கொண்டது தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கது. ஆம். அசை, வருதல் இடவழுவமைதி பசிப்பானென்றது ஆகு பெயர். இசைத்து வருவினையென நூலின் தொழில் வினைமேல் ஏற்றப்பட்டது. மிசைத்த இருவினையொப்பிலெனப் பாடமோதி, இருவினைகளுண் மிக்க இருவினையாகிய பிரமக்கொலை பரிமேத வேள்வி போல்வன தம்முள் ஒருங்கே பயன் தருவனவாய் ஒத்த காலத்தென்று உரைப்பாருமுளர். அஃது ஈண்டைக்குப் பயன் படாமையும் சித்தாந்தத்திற்கேலாமையும் அறிக.

இசைத்து வருவினையில் இன்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும் எனவே இறப்பில் தவத்தான் மருவப்படும் ஞானம், பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாத கடவுளர்க்கு அமிழ்தவுண்டியான் ஆய பயனை யொக்கும் என்பதூஉம் பெறப் பட்டது. படவே, அவ்வமிழ்த உண்டி, நரை திரை மூப்பின்றி நிலைபெறுதலாய பெரும் பயனைத் தருதல் மாத்திரையேயன்றிப் பசி தீர்த்தலாகிய அவாந்தரப் பயனையும் தருமாறு போல, இறப்பில் தவமும் தத்துவ ஞானத்தைப் பயத்தன் மாத்திரையே யன்றித் தத்தம் பத முத்தியாகிய அவாந்தரப் பயனைப்பயத்தலும் அமைவுடைத்தாமாறு கண்டு கொள்க.

(நு-வி) சாதனம்-பயன் பெறுவதற்குரிய கருவி; அதனல் பயன் கொள்ளுதற்குரியோன் சாதகர் ஆவர். அது வருவாயும் - அது வரும் வழியும்.

படிமுறையானன்றி—பல பிறவிகளிலும் படிப்படியாகச் செய்து வந்த தவத்தாலன்றி.

கிளந்து உரைத்தார்—விளங்க எடுத்துரைத்தார். கிரியை யோகம் எனக் கூறற்பாலது கிரியாயோகம் எனக் கூறப்பட்டது வட நூல் முடிபாம். சரியையும் கிரியையும் எனப் பொருள்படு தலின் உம்மைத் தொகையாயிற்று. சமய விசேட நிருவாணத் தீக்கைகளுள் கிரியை யோகம் ஆகிய இரண்டையும் செய்தற்கு விசேட தீக்கைப் பெறுதல் வேண்டும் ஆதலின் கிரியாயோகம் என்ருர். சரியா எனக் கூருது சரியை என்றது தமிழுக்குரிய ஈற்ருன் கூறியதாம். ஆளுடைய பிள்ளையார்—திருஞானசம்பந்தர். மூன்ருண்டில் ஞானம் பெறுதற்கு அவர் முற்செய்த தவமே காரணமாயிற்று. ஆதலின் மேல் சரியை கிரியை யோகங்களைச் செய்துழி என்ருர். ஈண்டு மேல் என்பது முன்னைய பிறவிகளைக் குறித்து நின்றது. மேல்-மேலான என்றும் ஆம் ஏனைய வேள்விகள் முதலாயின காமியப் பயன்களையே விளைவிப்பன: இச் சரியை கிரியை யோகங்களோ ஞானம் பெறவும் அதனல் வீடடையவும் செய்வன. ஆதலின் மேலான என்ருர். உபாயச் சரியை கிரியா யோகம் உண்மைச் சரியை கிரியையோகம் என இருவகைப் படுவனவற்றுள் முன்னையது உலகியற் பொருள்களை அடையவும் பின்னையது வீடுபேற்றை அடையவும் காரணமாவனவாம். இவற்றுள் பின்னையது ஈண்டுக் கூறப்படுதலின் மேலான என்ருர் எனினும் அமையும். உபலக்கணம்-ஒன்றைக் கூறியவழி அதற்கு இனமான பொருளையும் இணைத்துக் கொள்ளுதலாம். ஈண்டுச் சரியை கிரியை யோகங்களைக் கூறும் வழி அதற்கு இனமான தீக்கையையும் இணைத்துக் கூறுதலின் உபலக்கணம் ஆயிற்று.

சரியை நெறி நின்ருர்க்குச் சாலோகமும் கிரியைநெறி நின்ருர்க்குச் சாமீபமும் யோகநெறி நின்ருர்க்குச் சாரூபமும் ஆகிய பதவிகள் கிட்டும். அவ்வப் பதங்களில் பயனை நுகர்ந்து இறக்குங்கால் உலகியல் நுகர்விற்குரிய அவா உண்டாயின் அவ் அவாவினை ஆற்ற அறுத்தற்கு மீண்டும் ஒரு பிறவி கிட்டும். அப் பிறவியில் செய்யும் சரியை கிரியை யோகங்கள் ஞானத்தை விளைவித்து அவ்வுடல் கழியுங்கால் வீடுபேறு அடையும் பேறு பெறுவர். சரியை கிரியா யோகங்களைச் செய்தவர் உடல் விடுங்கால் எவ்விதப்பற்றும் இன்றிச் செம்பொருள் கண்ட வண்ணம் இருப்பராயின் சாலோகம் முதலிய பதவிகளை அடைந்த வண்ணம் ஆண்டு இருந்தே வீடுபேறு அடைவர்.

உண்ண வந்தான்—உண்ணுதற் பொருட்டு வந்தான் எனத் தன் பொருட்டாகப் பொருள்படுதல் போலப் பற்றறுப் பாராக என்றவிடத்தும் ஆக என்பது ஆதற் பொருட்டு என்னும் பொருளில் வத்தது. கற்ருர் சொல்வர் எனச் சொல்ல வேண்டுவது அவர் அறிவு சொல்லுமாம் என அறிவின் மேல் ஏற்றிக் கூறப் பட்டது. சூழ்ச்சி—அறிவு. நற்சார்பு—நற்குலம்; உயர்குலம். நற்சூழல் எனக்கூறல் அமைவுடைத்தாம்.

யாப்புறுத்தி-வற்புறுத்தி. காமியம்-பயன்கருதிச் செய்வது நேராக ஒத்தல்-நன்மை தீமை ஆகிய இரண்டையும் ஒருதன்மைத் தாகக் கருதுதல். இதுவே இருவினை ஒப்பாம். 'இருவினைகள் நேராக நேராதல்' என்னும் திருவருட்பயனும்.

இன்ன வேள்வி செய்யின் இன்ன பயன் பெறுவர் எனவேள்வி செய்க எனக் கூறும் நூல்களே கூறுதலின் விதித்த நூல்களே சான்று என்ருர். ஒப்பில்-ஒத்தால் என உரை காண்டலின் வினை யெச்ச மாயிற்று. ஒப்பில் என்பதற்குரிய வினைமுதல் இருவினை என்பதாம். மருவுதல் என்னும் வினைக்குரிய வினைமுதல் ஞானம் என்பதாகும். ஆதலின் மருவுவன் என்பது பிறவினையாயிற்று. தவத் தானே எனக் கூறப்பெற வேண்டிய தேற்றேகாரம் விகாரத்தல் தொக்கது. மருவுவனும் என்றவிடத்துள்ள ஆம் என்பது அசை நிலையாம். 'பணியுமாம் பெருமை' என்புழிப் போல. 'தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும் தன்மை முன்னிலை ஆயீரிடத்த' என்னும் தொல்காப்பியம், வருவினை-என்றவிடத்து வருதலைப் படர்க்கைக்கண் கூறியமையின் இட வழுவமைதியாயிற்று. சென்று மருவுவன் எனப் படர்க்கையில் கூற வேண்டுவதை வந்து மருவுவன் என முன்னிலையாகக் கூறியதும் இடவழுவமைதியாம். பசிப்பான்: ஈண்டு அவனுக்கு உண்டியால் வரும் இன்பத்தைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று. பிரமக் கொலை-பார்ப்பனரைக் கொல்லுதல். பரிமேத வேள்வி-அசுவமேதயாகம். இவ் விரண்ட னுள் முன்னையது மிகக்கொடியது. பின்னையது பெரும் பயன் தருவது. இவ்விரண்டன் பயனும் ஒருகாலத்தில் ஒத்துப் பயன் தருமாறுஅமைதலை இருவினை ஒப்பு என்பாரும் உளர். இந்நிலை சரியை கிரியா யோகங்களால் உண்டாவதன்று. ஆதலின் இங்குப் பயன்படாததோடு சித்தாந்தச் செந்நெறிக்குரிய உரையும் ஆகாது. அவாந்தரப் பயன்-இடைக்காலப் பயன். பதமுத்தி-சாலோக சாருப சாமீபம் ஆகியன.

## இரண்டாம் அதிகரணம்

மேற்கோள்

*இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது.*

என்பது மேற்கோள். என் நுதலிற்றோ வெனின், மேற் கூறிய வாற்றான் நிகழும் ஞானத்தை உணர்த்துவோர் கலைஞானங்களை உணர்த்துவோர் போல நம்மனோரில் ஒருவராதல் அமையும் எனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் மதம் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) மேற் கூறியவாற்றான் சரியை முதலிய மூன்றும் முற்றிய பின்னர், இம் முற்றுதலானே மலபரிபாகம் சத்திநிபாதம் நிகழ்ந்து தத்துவ ஞானத்தினை அவாவுதலை யுடைய உயிர்கட்கு இதுகாறும் தமக்கு முதலாய் உண்ணின்று உணர்த்தி வந்த பரம் பொருளே அப்பருவம் அறிந்து குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து அதனை அறிவுறுக்கும் என்றவாறு.

எனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்றவாறாயிற்று. இக் கருத்தே பற்றி "அகத்துறு நோய்க் குள்ளினரன்றி யதனைச்— சகத்தவருங் காண்பரோ தான்" என்றார் புடைநூலாசிரியரும் (திருவருட்பயன்-42). ஏகாரம் தேற்றம்.

ஏது

*அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.*

என்பது ஏது. என்நுலிற்றோ வெனின், மாயா வுருவினன் மாயாவுருவினை யேயான்; ஏயுமெனின் எம்மனோரில் ஒருவனாய் முடியும் ஆகலின் தமது முதல் குருமூர்த்தி ஆதாரமாகத் தரித்து நின்று உணர்த்து மென்றலே அமைவுடைத்தெனப் பொதுவகையான் அதிட்டான பக்கம் கூறுவாரை நோக்கிச் சிறப்புவகையான் ஆவேச பக்கம் ஆமாறு உணர்த்தி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அம்முதல்வன் பாலில் நெய் போல மறைந்து வேறாய் நிற்றலின்றிச் சுத்தான்ம சைதன்னியமே தனக்குச் சொருபமாகக் கொண்டு தயிரின் நெய் போல ஆண்டு விளங்கி நிற்றலான் இவ் வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என மேற்கொண்டது என்றவாறு.

பாலில் நெய் போல வேறாய் மறைந்து நின்று செலுத்தப் படுவனவற்றினும் பொதுவாய்ச் செல்வதாகிய அதிட்டான பக்கம் கொள்வார்க்கு ஏனைச் சமய குரவரும் குரவராவான் சேறலின்

அஃது ஈண்டைக்கு அமைவுடைத்தன்று என்பதாம். சுத்த சைதன்னியம் என்றார் மாசு தீர்ந்தது என்பது உணர்த்துதற்கு.

எடுத்துக்காட்டு

**மெய்ஞ்ஞானம் தானேவிளையும் விஞ் ஞானகலர்க்கு**
**அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்—மெய்ஞ்ஞானம்**
**பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு**
**முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், ஓரோரிடங் களில் குருவாய் வந்துணர்த்துதல் இன்றியும் ஞானம் நிகழுமாறு என்னை என்பாரை நோக்கி அதனை வரைசெய்து உணர்த்தி வலி யுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும்-அம்முதல்வன் மூவகை ஆன்மாக்களுள் விஞ்ஞானகலராயினார்க்குத் தன்மையின் நின்றவாறே தத்துவ ஞானத்தை விளைவிப்பன்; அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும்—அவ்வாறன்றிப் பிரளயாகலராயினார்க்கு நாற்றோளும் முக் கண்ணும் கறைமிடறும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்தி நின்றதன் இயற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னாகி நின்று தத்துவ ஞானத்தை உபதேசித்து உணர்த்துவன்; அஞ்ஞான அச்சகலருக்கு அக்குருவாய்ப் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும்-அவிச்சையையுடைய சகலராயினார்க்கு அவர் வடிவு போலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவ ஞானத்தை உணர்த்துவன்; முன் - அவ்வேறு பாட்டை அறிவாயாக என்றவாறு.

முன்னென்றதனை முன்னைப் பொருள் என்று உரைத்து எழுவாயாகக் கோடலுமொன்று. விளையும் என்பது "அரச னெடுத்த ஆலயம்" என்புழிப்போல விவ்வகுதி தொக்கு நின்றுது. இவ்வாறன்றி எளிதின் அடப்படுதல் நோக்கி "அரிசி தானே அட்டது" என்றாற் போல எளிதின் விளைவிக்கப்படுதல் நோக்கி மெய்ஞ்ஞானந் தானே விளையும் என்றார் எனினும் அமையும் "உண்ணின் றறுத்தருளி" (போற்றி 60-63) என்றார் புடைநூலா சிரியரும். ஈண்டு அஞ்ஞானம் என்றது அவிச்சையை. அஞ்ஞான அச்சகலர்க்கு என்பது சகலர்க்கே அடையாய் ஓதியவாற்றா னறிக. அச்சகலர் என்றது தவஞ்செய்தாரென மேல் (சிவ-போத 8-அதி-1) எடுத்துக்கொள்ளப்பட்ட சகலர் என்றவாறு. அக்குரு என்றது மேற்கோளில் கூறிப் போந்த குரு வென்றவாறு. தானே விளையும், முன்னுணர்த்தும், பின்னுணர்த்தும் எனவே, விஞ்ஞான கலர்க்குத் தன்மையினும், பிரளயாகலர்க்கு முன்னிலையினும்

சகலர்க்குப் படர்க்கையினும் நின்று உணர்த்தும் என வரைசெய் தவாறு காண்க. இவற்றுண் முன்னைய விரண்டும் நிராதாரம் எனவும், பின்னையது சாதாரம் எனவும் கூறப்படும்.

எடுத்துக்காட்டு

**அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்**
**செறியுமா முன்பின் குறைகள் — நெறியிற்**
**குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்**
**குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், விஞ்ஞான கலர் முதலிய மூவர்க்கும் ஓரியல்பான் உணர்த்தாது அவ்வாறு தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையாய் உணர்த்துதல் எற்றுக்கு என்பாரை நோக்கிக் காரணம் கூறி அதனை வலியுறுத்து தல் நுதலிற்று.

(இ-ள்) உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி— உயிர்க ளெல்லாம் தமக்குரிய படிவழியின் அறிவிக்க அறியும் இயல்பின வன்றி ஒன்றுபோல் அறிவிக்க அறியும் இயல்பின வல்ல ஆக லான்; குறைவுஇல் சகன் சூழ்கொள்பவர்க்கு—அவ்வறிவாற் குறை பாடில்லாத சகக்கடவுளது உபதேசமொழியைக் கொண்டு உணரும் இயல்பினராகிய பிரளயாகலர் சகலர்க்கு; குறைகள் முன்பின் செறியுமாம்-அவ்வறிவித்தல் அறிவதாகிய குறைகள் முன்னிலையினும் பின்னிலையினும் நிகழ்வனவாம்; குறை உடைய சொல் கொள்ளார் கொள்பவத்தின் வீடாம் என்-குறைவில் சகனு லாகிய குறையினையுடைய உபதேசமொழி கொண்டு உணர வேண்டாத விஞ்ஞானகலர்க்கு முதல்வனாற் கொள்ளப்பட்ட தன்னுண்மை மாத்திரையின் வீடு பயக்கும் உணர்வு உண்டு என்று அறிவாயாக என்றவாறு.

குறை இன்றியமையாப் பொருள்: அது "வினைக்குறை தீர்ந் தாரின் தீர்ந்தன் றுலகு" என்பதனுட் பரிமேலழகர் உரையானும் உணர்க. பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட் கிளவி. வீடுபயக்கும் உணர்வு வீடென்றும், சூழ்ச்சி பயக்கும் உபதேச மொழி சூழென்றுங் காரண காரியமாக உபசரிக்கட்டன. கொள் பவர் கொள்ளார் என்பனவும் அவை. கொள்ளார்க்கு என்னும் நான்கனுருபு விகாரத்தால் தொக்கது; "ஐந்தவித்தா னாற்றல்" என்புழிப் போல. ஆம் வீடெனவும் இயையும். வீடாம் எனப் பாடம் ஓதுவாருமுளர்.

மேலை வெண்பாவின் முன்னுணர்த்தும்பின்னுணர்த்தும்தானே விளையும் எனக் கூறியவற்றை ஈண்டு நெறியின் அறிவிக்கவன்றி

அறியாவாகலான், இது முன்செறியும் பின்செறியும் பவத்தின் ஆம் எனக் காரணங் காட்டி வலியுறுத்தினர். இதற்குப் பிறரெல்லாம் தத்தமக்கு வேண்டியவாறே மேலே வெண்பாவொடு இயைபற உரைத்தார். அல்லதூஉம் அறிவிக்கவன்றி அறியாமை உபதேசியாம் என ஆன்மாவின்தன்னியல்பு கூறும் வழிப் பெறப் பட்டதாகலின் அதனை ஈண்டும் புனருத்தியாகக் கூறல் வேண்டா மையின் மேலது வலியுறுத்துதற்கு ஏற்புடைய, அறிவிக்க அறிதற் கட்படும் விசேடமாத்திரையே ஈண்டு எடுத்தோதினர் என்று உணர்க. படிவழியின் வைத்து அறிவிக்கவன்றி அறியாமை, "பந்தமும் பிரிவும் தெரிபொருட்பனுவற் படிவழி சென்று சென்றேறி'' என்பதனுலும் அறிக.

எடுத்துக்காட்டு

**இலலா முலைப்பாலுங் கண்ணீரும் ஏந்திழைபால்**
**நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல்—இல்லா**
**அருவாகி நின்றனை யாரறிவார் தானே**
**உருவாகித் தோன்றுனேல் உற்று.**

என்பது உதாரணம். என்நுதலிற்றே வெனின், அம்முத்திறத் துள் ஈண்டைக்கு எடுத்துக்கொண்ட அஞ்ஞான அச்சகலருக்கு அக்குருவாதல் உபசாரமேயன்றி ஏனைய போல் உண்மையாதல் செல்லாது என்பாரை நோக்கி உண்மையாதலை உவமை முகத் தான் வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) நல்லாய்-அறிவால் நன்மையுடைய மாணுக்கனே; ஏந்திழைபால் முலைப்பாலுங் கண்ணீரும் இல்லா உளஆம்—ஏந்திய இழைகளை யுடையாட்குக் குழவிமாட்டு உளதாய அருவாகிய அன்பினைப் பிறர் அறியுமாறு வெளிப்படுத்தும் அவ் வன்பின் உருவாகி முலைப்பாலுங் கண்ணீரும் அவள்மாட்டுக் குழவியைக் காணும் முன் இல்லாவாய்ப் பின் உளவாம், அது போல; நீர் நிழல் போல் இல்லா அருவாகி நின்றனை ஆர் அறிவார் தானே உருவாகி உற்றுத் தோன்றுனேல்—நீரின்கண் நிழல் போல் உயிர்கள் மாட்டுப் புலப்படுதல் இல்லாது அருவமாய் நின்ற முதல்வனை யார்தாம் அறிவார் அவனே குருவடிவாய் வந்து தோன்றி நின்று உணர்த்தானுயின் என்றவாறு.

ஒருவரும் இல்லை யென்பதாம், இஃது எடுத்துக்காட்டுவமை. இன்றியமையாமை உணர்த்துவார் தோன்றுனேல் ஆரறிவார் என

எதிர்மறை முகத்தாற் கூறினர். பொருளுக்கு ஓதியதனை உவமை யினுங் கூட்டி ஏற்குமாறு உரைக்க.

முலைப்பாலும் கண்ணீரும் அன்பை விளக்கும் என்பது, ''சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானம்—சுரந்துண்டார் பிள்ளை யெனச் சொல்லச்-சுரந்த, தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த, மனமுடையாள் அன்பிருந்த வாறு''(திருக்களி.54)என்பத னுலும், ''அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ் ஆர்வலர்—புன்கணீர் பூசல் தரும்'' என்பதனுலும் அறிக. அவ்விரண்டும் அன்பின் வடிவே பிறவல்ல என்பது, அன்பு நிகழ்தற்குரிய காரணம் உள்வழி வெளிப்பட்டு, அஃது இல்வழி வெளிப்பாடத ஒற்றுமை நோககிக் கண்டுகொள்க. இவ்வொற்றுமை உணர்த்து வார் இல்லாவாய் உளவாம் என்ருர்.

இல்லா வென்பது முற்றெச்சக் குறிப்பு. ஆல், அசை. நீர் அகத்தியங்கும் உயிர்கட்கு இடங்கொடுத்தல் உண்மையான் நீரின் கண் வெளியுண்டு என்பதூஉம், உண்டாகவே, ஆண்டு நீருக்கு நிழல் உண்டு என்பதூஉம் பெறப்பட்டன. அந்நிழல் வேறு நில்லாது நீரோடு விரவி நிற்றலின் நீர்போல் புலப்படா தாயிற்று; அது போலச் சிவசைதன்னியமும் யானென்னும் உணர்விற்கு விடயமாய்ப் புலப்படும் ஆன்ம சைதன்னியத்தோடு விரவிப் புலப் படாது நிற்பதொன்று என்பார் நீர் நிழல் போல் இல்லா அருவாகி நின்ருனை என்ருர்.

(நு-வி) மலபரிபாகம்-மலம் தனது வலி கெடுதற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்ருேடும் கூடுதல். சத்திநிபாதம்-அருள் வீழ்ச்சி. ஒரு வீட்டில்உள்ளோர்க்குஉற்ற நோயை அவ் வீட்டிலுள் ளோர் அறிய இயலுவதன்றி ஏனையோர் அறிவரோ? அறிய மாட்டார். அதுபோல உயிர்க்குற்ற நோயை உயிர்க்குயிராக விளங்கும் இறைவன் அறிவதன்றிப் பிறர் அறிவரோ? அறியார். அகத்துறு நோய்க்கு எனத் தொடங்கும் திருவருட் பயனின் கருத்து இதுவாம். புடை நூல் ஆசிரியர்—சார்பு நூலைச் செய் தருளிய உமாபதி சிவம். தமது முதல் தானே என்றவிடத்துள்ள ஏகாரம் அவனன்றி பிறர் எவரும் குருவாய் வருதற்கில்லை என்னும் உறுதியைத் தந்து நிற்றலின் தேற்றேகாரமாயிற்று.

சைதன்னிய சொரூபியாய்—மாசு தீர்ந்த அறிவே உருவாய். அதிட்டான பக்கம்—இறைவன் குருமூர்த்தியை நிலைக்களனுகக்

கொண்டு உணர்த்துவன் எனக் கூறுவது. பாலில் நெய்போல உயிரிடத்து இறைவன் மறைந்து நிற்பன். ஆவேச பக்கம் - இறைவன் தூய உயிரின் அறிவையே தனக்கு வடிவாகக் கொண்டு வெளிப்படுவன் என்று கூறுவது தயிரில் நெய்போல வெளிப்பட்டு நிற்கும் நிலை இதுவாம். அதிட்டானம் பொது சிறப் பென இருவகைப்படும். பொதுவாக உயிர்களிடத்து இறைவன் மறைந்து அவற்றின் வேருய் .நிற்றல் பொதுவாம். ஞானத்தை வழங்கியருளும் குருமூர்த்திகளிடத்து அவருக்கு விளங்கி ஒன்ரு யும் பொருளின் தன்மையால் வேருயும் நிற்றல் சிறப்பாம். ஞானத்தை வழங்கியருளும் குருமூர்த்திகளை நிலைக் களனகக் கொண்டு அருளுவதைப் பொதுவான அதிட்டானம் என்னில் ஏனைய சமய விசேடத் தீக்கைகளைச் செய்தருளும் குரு மூர்த்திகளிடத்தும் பொதுவான அதிட்டானம் இருப்பதால் அவர்களும் ஞானசிரியராதல் கூடும். ஆதலின் ஞானசிரியரை நிலைகளனகக் கொண்டு அருளுவதைச் சிறப்பு அதிட்டானம் என்றலே பொருந்துவதாம். ஏனைச் சமய குரவரும் - ஏனை சமய விசேடத் தீக்கைளைச் செய்தருளும் குருமூர்த்திகளும்.

தன்மையில் நின்றவாறே- விஞ்ஞானகலர்களிடத்து உயிர்க் குயிராய் ஒன்றுபட்டு நின்றவாறே. அவிச்சையையுடைய - மயக் கத்தையுடைய. மையல் மானுடமாய் மயங்கும் வழி என்பதை யும் நினைவு கூர்க.

முன் - கருதுதல்; அறிதல். அவ்வகையில் வியங்கோட் பொருளாய் நின்றது. 'முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன் னருளே என்னப் பொழியாய்' என்புழியும் கருதுதல் எனப் பொருள்படுமாறு அறிக. இவ்வாறன்றி முன் என்பதற்கு முன்னைப் பொருளாகிய இறைவன்எனப்பொருள் கொண்டு உணத்தும் என்பதற்கு எழுவாயாகக் கோடலும் ஒன்று. விளை யும் - விளைவிக்கும்: இதன்கண் உள்ள விவ் விகுதி தொக்கு நின்றது. விஞ்ஞானகலர்களுக்கும் பிரளயாகலர்களுக்கும் இறைவன் நினைவு மாத்திரையில் எழுந்தருளி உணர்த்துவன். சகலருக்கு அவர்போன்ற மானுடச்சட்டைதாங்கி உணர்த்துவன். நிராதாரம் - ஒரு பொருளை இடனகக் கொள்ளாதது. ஆதாரம் - ஒரு பொருளை இடனகக் கொள்வது.

அதுபோல என்னும் தொடர் தொக்கு நின்றமையின் இது எடுத்துக்காட்டு உவமையாயிற்று. இல்லா - இல்லாதன; முற்று. ஈண்டு அது இல்லாவாய் எனப் பொருள்படுதலின் முற்று எச்ச மாயிற்று. ஆன்ம சைதன்னியத்தோடு-உயிரது தூய அறிவோடு.

## மூன்றும் அதிகரணம்

### மேற்கோள்

*இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா வென்றது*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், விடய ஞானத்தை விளக்கும் ஐம்பொறிகளே தத்துவ ஞானத்தை விளக்குதற்கும் அமையும்; தம் முதல் குருவுமாதல் வேண்டா வெனச் சிவசங்கிராந்த வாத சைவர் மதம் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இவ்வாறு உரையாக்கால், இனி என்ப தனுன் உணர்த்தப்படும் மேலை யதிகரணத்தோடு உளதாகிய இயைபு பெறப்படாமை அறிக.

இதன்பொருள் வெளிப்படை.

உணர்வு ஆகுபெயர்.

### ஏது

*அவைதாம் பளிங்கில் இட்ட வண்ணம்போல் காட்டிற் றைக் காட்டி நிற்றலான்*

என்பது ஏது என்நுதலிற்றோ வெனின், அறிவை விளக்கும் கருவியான் மயக்கம் நிகழுமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) படிகத்தின் வைத்த பலவேறு வகைப்பட்ட நிறங்கள் அப்படிக ஒளியைக் கீழ்ப்படுத்துத் தத்தம் இயல்பினையே விளக்கி நிற்குமாறு போல, அவ்வைம்பொறிகள் தாம் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்துத் தம்மாற் காட்டப்பட்ட தத்தம் விடய மாத்திரையே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பன வாகலான் இனி இவ் வான்மாக்கள் ஐயுணவுளான் மயங்கித் தம்மை யுணரா வென மேற்கொண்டது எ-று.

விடயங்களுள்ளும் அவ்வவ் விடயமாத்திரையே அவ்வவ் விந்திரியம் காட்டவல்லும் என்பார் காட்டிற்றை என ஒன்றறி சொல்லாற் கூறினர்.

எடுத்துக்காட்டு

**பன்னிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம்**
**தன்னிறமே காட்டும் தகைநினைந்து—பன்னிறத்துப்**
**பொய்ப்புலனைவேறுணர்ந்துபொய்பொய்யாமெய்கண்டான்**
**மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், அங்ஙனம் காட்டிற்றையே காட்டி நிற்குமாயின் அவ்விந்திரியங்கள் உள் வழித் தம் முதல் குருவுமாய் உணர்த்தினும் உணர்தல் செல்லாது போலும் என்பாரை நோக்கி உணர்தற்கு உபாயம் கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) பல் நிறம் காட்டும் படிகம் போல் இந்திரியம் தன் நிறமே காட்டும் தகை நினைந்து—தன்னாற் சாரப்பட்ட பன்னிறங் களின் இயல்பே தன் மாட்டுக் காட்டி நிற்கும் பொது வியல்பு உடைய படிகம்போலத் தன்னால் சாரப்பட்ட இந்திரியங்களின் இயல்பையே சார்ந்ததன் வண்ணமாய்த் தன்மாட்டு விளக்கி நிற்கும் தனது பொதுவியல்பை முன்னர்ச் சிந்தித்து அறிந்து கொண்டு; பல்நிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து—பின்பு அந்நிறங்கள் படிகத்துக்கு வேறு என்று அறியுமாறு போலப் பலவகை இயல்புடைய பொதுவியல்பைச் செய்யும் யொறிகளைத் தன்னின் வேறு எனத்தெளிந்து;பொய் பொய்யா மெய்கண்டான் அவற்றான் ஆய அப்பொது வியல்பு பொய்யா யொழியுமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானாயின்;வேறு மெய்ப்பொருட்குத் தைவம் ஆம் – அவ் வசத்தாகிய பொறிகளுக்கு வேறாகிய சிவசத்தினது இயல்பு தன்மாட்டு விளங்கச் செய்யும் ஆகலின் அச்சிவசத்துக்கு அடிமையாம் என்றவாறு.

ஈண்டுப் பொய் மெய் யெனப்பட்டன அப்பொருளவாதல் மேலே (சிவஞானபோதம் 7-ல் அதி-1) காட்டினாம். தைவமென்பது தேவனதுடைமை யென்னும் பொருட்டாய வட மொழிப்பகுபதம்.

இதனானே கருவிகள் உள்வழிக் காட்டிற்றைக் காட்டி நிற்றலின் அறிதல் செல்லாது, அவை நீங்கிய வழிக் கேவலமாய் முடியுமாதலின் தன்னுண்மை அறியுமாறு யாங்ஙனம் என்னுங் கடாவை ஆசங்கித்து, அவை யுள்வழியே தன்னுண்மை யறிதற்கு உபாயங் கூறி இது பற்றி அவை காட்டிற்றைக் காட்டி நிற்றற்கு இழுக்கில்லை யென வலியுறுத்தவாறும் என்க. மெய்ப்பொருட்குத் தைவமாம் என்றதனால் வருகின்ற அதிகரணத்திற்குத் தோற்று வாய் செய்தவாறு.

(நு-வி) உணர்வு: அதற்கு ஏதுவாகிய பொறிகளுக்கு ஆனமையின் ஆகு பெயராயிற்று பளிங்கில் இட்ட வண்ணம் - படிகத்தினிடத்துப் பதிந்த பல்வேறு வகைப்பட்ட நிறங்கள் காட்டிற்றை-காட்டியதை. இவ்வாறு ஒருமையால் கூறவே ஒவ்வொரு பொறியும் ஒவ்வொரு உணர்வையே காட்டும் என்பது விளங்கி நின்றது. எனவே ஒன்றறிந்ததைப் பிறிதொன்று அறியாதாயிற்று என்பதாயிற்று. தைவம் ஆம்-அடிமையாம். பொய்-இடையே விளங்கி மறைவதாகிய பொதுவியல்பு. மெய் எக்காலத்தும் நிலைபெறுவதாகிய தன்னியல்பு கேவலமாய்-ஆணவத்தோடு கட்டுண்டு அறிவு செயலற்றிருக்கும் நிலையதாய்.

## நான்காம் அதிகரணம்

### மேற்கோள்

*இனி இவ்வான்மா தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது சீபாதத்தை அணையும் என்றது.*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், பொய்ப் புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டார்க்கு அதுவே அமையும்; கருவிகள் நீங்கியவழிச் செய்யக் கடவதொரு முயற்சி கூடாமையின் ஆண்டு மெய்ப்பொருட்குத் தைவமாதல் பெறப் படாது எனப் பேதவாத சைவர் முதலியோர் கூறும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நான்காங்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

இந்திரியத்தின் வேருயவழிக் கேவலத்தை அணைதலும் உண்மையின், அதனை நீக்குதற் பொருட்டு வேருக என்று ஒழியாது வேருவான் காண என்ருர். காண்டலே அதற்கமையும் என்றலின் ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது.

### ஏது

*ஊசல் கயிறற்ருல் தாய் தரையேயாம் துணையான்*

என்பது ஏது. என்நுதலிற்ரோ வெனின், அவ்வாறு காண்டலே சீபாதத்தை அணைதற்குச் சாலும் என்பது யாங்ஙனம் என்பாரை நோக்கி உவமையின் வைத்துக்காட்டி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) ஒருவன் ஏறியிருந்து ஆடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறு அற்றதாயின் அவனுக்கு உற்றுழி உதவும் தாய் போல, ஆண்டுத் தாரகமாவது நிலனே யன்றிப் பிறிதில்லை யென்னும் ஒப்புமையான் இனி இவ்வான்மா, தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும் என மேற்கொண்டது என்றவாறு.

வியாபகப் பொருட்குக் காட்சி விசேடமே நீக்கமாகலின் அறுதல் அதற்கு உவமையாயிற்று.

எடுத்துக்காட்டு

**சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்**
**சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து—சிறைவிட்டு**
**அலைகடலிற் சென்றுஅடங்கு மாறுபோல் மீளாது**
**உலைவில்அரன் பாதத்தை யுற்று**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், கருவிகள் நீங்கின வழி வேறுநில்லாது சிவத்தைத் தலைப்படுமாயின், அவ்வுயிர்க்கும், கருவிகளின் நீங்கிக் கேவலத்தைத் தலைப்பட்ட உயிர்க்குப் போல, மீட்சியுண்டு போலும் என்பாரை நோக்கி, அஃது இன்றுமாறு கூறி மேலதனை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ-ள்) சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் — ஒருவன் அணையை உயர்த்துக் கட்டித் தடைசெய்ய ஆண்டுத் தடையுண்டு தேங்கி நின்ற ஆற்றுநீர் போலக் கருவிகளான் ஆய பாசஞானம் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அதன்கண் ஏகதேசமாய் அடங்கித் தடையுண்டு நின்ற உயிர்; சிறைவிட்டு அலைகடலின் சென்று அடங்கும் ஆறுபோல் - அவ்வணை முறிந்து தடைதீர்ந்தவழி இடையீடின்றிக் கடலின்கண் முடுகிச் சென்று அந்நீரேயாய் அதனுள் அடங்கி மறித்து வாராத ஆற்றுநீர் போல சிறை செய்புலன் உணர்வில் தீர்ந்து — கருவிகளான் ஆய பாச ஞானத் தடையினின்று நீங்கியவழி; உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது—தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைத் தலைக்கூடி அத்திருவடி நிறைவேயாய் அதன்கண் அடங்கிப் பின்பு மீளுதல் செய்யாது என்றவாறு.

சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் என்றது தொகை உவமம். இன், உவம உருபு. தேக்கத்தின் மிகுதி

உணர்த்துவார் செழும்புனல் என்றார். மலசத்திற்குக் கேடுண்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர்க்குக் கருவிகளின் மீட்சி கூடும்; சிவசத்திக்கு அஃது இன்மையின் அதனைத் தலைப் பட்ட உயிர் அவ்வாறு மீளுதற்கோர் இயைபில்லையென்பார் உலைவில் அரன் பாதம் என விசேடித்தார் அடங்குமென்னும் உவமவினை பொருளினும் மீளாதென்னும் பொருள் வினை உவமையினும் சென்று இயைந்தன.

எடுத்துக்காட்டு

**எவ்வுருவும் தான்என்னில் எய்துவா ரில்லைதாள்**
**இவ்வுருவின் வேறேல் இறையல்லன்—எவ்வுருவும்**
**கண்போல் அவயவங்கள் காணுவக் கண்ணில்லார்**
**கண்பேறே காணக் கழல்**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், மீளாது என்று விடுத்தல் வேண்டா, எல்லாம் சிவமாகக் கண்டார்க்கு மீண்டாலென் மீளாக்கால் என் என்னும் சிவாத்துவித சைவரை நோக்கி அது விடையாதற்கு ஏலாமை கூறி மறித்தும் மீளாமையை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) எவ்வுருவம் தான் எண்ணின் தாள் எய்துவார் இல்லை உயிருணர்வேயன்றிப் புலனுணர்வும் சிவமேயாமாயின் விசேட மின்மையால் புலன் வழி ஒழுகும் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூடல் வேண்டாமையின் ஒருவரும் அதனை எய்துவாரில்லையாய் முடிந்து, "பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை யடைய முத்தி (சிவ-சித்தி-பாஞ்ச-மறுதலை-25) என்னும் வேதாகமங்கள் போலியாய் முடியும்; இவ்வுருவின் வேறேல் இறையல்லன்-அது பற்றி முதல்வன் புலன் உணர்வோடு இயைபின்றி அதனின் வேறாய் நிற்பன் என்னின் அப்புலனுணர் விற்கு அவனால் ஆகற்பாலதொன்று இன்மையின் அவன் ஆண்டைக்கு இறைவ ன்அல்லன் எனப்பட்டு முதன்மைக்கு இழுக்காய் முடியும், மற்று என்னையோ அதன் இயல்பு என்னின்: எவ்வுருவும் -உயிருணர்வு போலப் புலனுணர்வும் கலப்பினால் சிவமேயாம் ஆயினும் இரண்டும் தம்முள் ஒப்பனவல்ல: அவயங்கள் கண் போலக் காணு—உயிர் ஐம்பொறிகளிலும் ஒப்ப நிற்பினும் அவற்றுள் மெய் வாய் மூக்கு செவி நான்கும், கண்ணிந்திரியம் ஒளியான் அவ்வான்ம போதத்தொடு விரவிச் சேய்மைக் கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியுமாறு போல,வியாபித்தறியமாட்டாவாய்த்தம்மாட்டுவந்த விடயங்களை

நின்றுங்கு நின்று இயைந்து அறிதற்றன்மையவே யாம்; அக் கழல் அக் கண் இல்லார் கண்பேறே காண் — அக்கண்ணினது வெற்றிப் பாட்டைக் கண்ணொளி இழந்தாரது கண்பேற்றின்கண் கண்டறிவாயாக என்றவாறு.

கண்ணும் அவயங்களும் ஆகுபெயர். கண் பேறே எனஏழா வது தொகுத்து ஏகாரம் விரித்தார்.

கழலணிவார்க்கு உளதாகிய வெற்றிப்பாட்டைக் கழல் என்று உபசரித்தார். கழல், காலணி மணிவடம். ஈண்டு வெற்றியாவது ஏனை நான்கு இந்திரியங்களையும் நோக்க மேம்படுதல்.

கண்போல் அவயவங்கள் காணு அக்கண்ணில்லார் கண்பேறே காண் அக்கழல் என்பது முதல்வன் இரண்டினும் ஒப்ப விரவி நிற்பினும் உயிருணர்வுபோலப் புலனுணர்வு வியாபக விளக்கமாதலின்றி ஏகதேச விளக்கமாம்; உயிருணர்விற்கு உளதாகிய அம்மேம்பாடு அவ்வியாபக உணர்வை இழந்த பசுத்துவமுடையார்மாட்டு அறியப்படாதாயினும், அவரது பசுத் துவம் நீங்கிய சிவபேற்றின் கண் அறியப்படுமென்பது தோன்ற நின்றமையின் இஃது ஒட்டு என்னும் அலங்காரம். சிவமாய வழி யும் புலனுணர்வு ஏகதேச விளக்கமாவதன்றி உயிருணர்வு போல வியாபாக விளக்கமாதல் இன்று எனவே, அதன்கண் மீளுதல் இழுக்கென்பது பெறப்பட்டது. இதற்குப் பிறர் எல்லாம் இயைபின்றி யுரைத்தார்.

## எடுத்துக்காட்டு

**ஐம்பொறியின் அல்லையெனும் அந்த தரசிவனை**
**ஐம்பொறியை விட்டுஅங்கு அணைசகலன் — ஐம்பொறியின்**
**நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்**
**நீங்கானை நீங்கும் நினைந்து.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், சிறை விட்டவழி அலைகடலிற் சென்று அடங்குதலேயன்றி, ''ஆற்றல் அலை கடற்கே பாய்ந்த நீர் அவ்வாற்றான் மறித்'' தலு முண்மையின் அதுபோல, அரன் பாதத்தை உற்ற உயிர்க்கு ஒரோவழி மீட்சியும் உண்டென்பது பெறப்படுதலால், அவ்வழி மீளாமை செல்லாது என்பாரை நோக்கி அம் மீட்சிக்குக் காரணம் இது என்பதூஉம் அதனை நீக்குதற்கு உபாயமும் கூறி வலியுறுத்தல் நுதலிற்று.

(இ — ள்) ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததர - ஐம்பொறி கள் போல் ஏகதேச விளக்கமுடையை அல்லை என்று அறிவுறுக் கப்படும் சித்தாந்த மகா வாக்கியத்தைப் பெற்றுடைய மாணவ

கனே; அங்கு ஐம்பொறியை விட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான் - சிறைவிடவும் அலைகடற் சென்று அடங்கும் ஆறுபோல் என மேற்கூறியவாறே ஐம்பொறிகளாஞய புலனுணர்வில் தீர்ந்து சிவன் திருவடியைஉற்ற சகலன்அவ்வைம் பொறிகளான் மீளஅதனை நீங்குவானல்லன்; நீர்ப்பாசி போல் நீங்கு மலகன்மம் வரின் நீங்கானை நினைந்து நீங்கும்-கல் எறியும் வழி நீங்கிய நீர்ப்பாசி அது விடும் வழிப்பரக்குமாறு போல அவ் வணைதலின்கண் நீங்கிய மலகன்ம மாயைகள் வாதனை வயத்தான் நிகழும் அயர்ச்சி பற்றி வந்து கூடுமாயின், அதுபற்றிப் பொறி வழி மீளாமல் அவ்வழியும் தன்னைவிட்டு நீங்காத முதல்வனை முன்னர்க் கூறப்படும் உபாயங்களில நின்று சிந்தித்து அவற்றை நீக்கிக் கொள்ளும் என்றவாறு.

வரின் என்றதனுல் வருதல் ஒருதலையன்று; வாசனை உள் வழியே வந்துகூடும் என்பது பெற்ரும். நீங்கி என்பது பாடமா யின் நீங்கின வாகிய மலகன்மம் எனப் பெயராக வைத்துரைக்க சித்தாந்தத்தை அந்தம் என்றது தலைக்குறை. தரம், அதன் கண்ணதாய்ச் சிறந்த ஒரு வார்த்தை. அங்கு மேற்கூறிய படி. ஐம்பொறியை விட்டு அணைதற்கு உரியான் இவன் என்பது உணர்த்துவார் சகலன் என்ருர். நீங்கும் என்னும் மகரம் சந்தி நோக்கிக் கெட்டது; நீங்கெனவே பாடங்கொண்டு அணை என வேறு பிரித்து, முன்னிலை ஏவலாக்கி அதற்கேற்ப நீங்காய் எனப் பாடம் திரித்து உரைப்பாருமுளர்.

மேற்கூறிய மீளாமையை வலியுறுத்துவார் ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததர சிவனை ஐம்பொறியை விட்டு அங்கு அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான் என்றும், ஒரோவழி உளதாமாயின் அதற்குக் காரணம் இஃதென உவமை முகத்தான் உணர்த்துவார் நீர்ப்பாசி போல் என்றும், ஐம்பொறியின் மீளுமாயின் அவற்றிற்கு மூலமாகிய மலகன்ம மாயைகளும் அது பற்ருக வந்து தலைப்படும் என்பார் மலகன்மம் வரின் என்றும், அது நீங்குதற்கு உபாயங் கூறுவார் நீங்கானை நினைந்து நீங்கும் என்றும் கூறினர். மலகன்மம் எனவே இனம் பற்றி மாயையுங் கொள்ளப்பட்டது.

''மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன், நன்கலம் நன்மக்கட் பேறு'' என்ருற்போல நீங்கானை நீங்கும் நினைந்து என்றதனுல் வருகின்ற சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்ததூஉம் ஆயிற்று.

இம்மூன்று உதாரணங்களும் முறையே திருவடிஞானத்தைப் பெற்ற உயிர் புலனுணர்வின் மீளுதல் இல்லை எனவும், மீளுதல் இழுக்காம் எனவும், ஒரோவழிப் பயிற்சி வயத்தான் மீள வருமாயின் மீளாதவாறு செய்துகொள்ளற் பாற்று எனவும் கூறித் தாய் தரையேயாம் என்னும் ஏகாரப்பொருளை வலியுறுத்தி ஒரு பொருண்மேல் வந்தவாறு காண்க.

(நு-வி) தாரகமாவது-பற்றுக்கோடாவது.

மறித்து வாராத – மீண்டும் வாராத.

உயர்ந்த அணையினுல் தடைப்பட்ட ஆற்றுநீர் போல ஐம்பொறிகளாகுய மயக்கத்தால் உயிரது அறிவும் தடைப்பட்டது. எனவே தடைப்படுதல் இரண்டற்கும் ஒத்ததாயிற்று. இப்பொதுச் சொல் தொக்கு நிற்றலின் தொகையுவமமாயிற்று. புனலின்–ஆற்று நீர் போல ஈண்டு ஐந்தனுருபு ஒப்புப் பொருள்பட நின்றது. கருவிகளினின்றும் நீங்கிக் கேவலத்தைப் பொருந்திய உயிர் மீண்டும் கருவிகளுடன் கூடிச் சகல நிலைக்கு வருதல் உண்டு. ஆனுல் அவ்வுயிரோ சிவத்தைச் சார்ந்துழி அச்சிவத்தினின்றும் மீளுவதில்லை இதனை விளக்கவே அரன் என்னுது உலைவில் அரன் என்ருர். இப்பாடற்கண் காட்டப்பட்ட உவமை நீர் ஆகும். பொருள் உயிராகும். உவமையாகிய நீருக்குரிய வினை அடங்கும் என்பதாம். இதனையே பொருட்கும் கூட்டிச் சிவத்தைச் சார்ந்து நின்ற உயிர் அதன்கண் அடங்கி நிற்கும்எனப் பொருள் விரிக்கப் பட்டது. பொருட்குக் கூறிய வினை மறித்து வாராது என்பதாம். அதனை உவமைக்கும் கூட்டிக் கடலில் அடங்கிய நீர் மறித்து வாராதெனப் பொருள் விரிக்கப்பட்டது.

பொறிகள் ஐந்துடனும் உயிர் கலந்து நிற்பினும் கண்ணிற்கும் ஏனைய பொறிகளுக்கும் வேற்றுமை உண்டு. கண் உயிருடன் கலந்து தொலைவிலுள்ள பொருளையும் கண்டறியும். ஏனைய பொறிகளோ உயிருடன் கலந்து நிற்பினும் தம்பால் வந்த பொருளன்றி அறியாவாம். அதைப்போன்றே உயிரிடத்தும் தனையிடத்தும் இறைவன் கலந்திருப்பினும் அவ்விரண்டிற்கும் வேற்றுமை உண்டு. உயிர், கண் போல் இறையுணர்வுடன் கலந்து தொலைவிலுள்ள பொருளையும் அறியும். ஆனுல் தனையோ தன்பால் இறையுணர்வு கலந்து நிற்பினும் தம்மைச் சூழ்ந்துள்ள பொருள்களை மட்டுமே அறியும் என்பது இப்பாடற்கருத்தாம்.

கண்; அதன் உள்ளீடாகிய பொருளைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று. அவயவங்கள்-உறுப்புக்கள்: மெய் வாய் மூக்கு

செவி என்னும் நான்கு உறுப்புக்களைக் குறியாது அவற்றின் உள்ளீடாகிய பொறிகளைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று. கண் பேறே கண்பேற்றின்கண் என உரை காண்டலின் ஏழனுருபு தொக்க தென்றார். கழல்–வெற்றி குறித்து அணியும் காலணி. அதனை அணிவார்க்குரிய வெற்றித் திறத்தினை அக்கழற்கு ஏற்றியது ஏற்றுரையாம். தொலைவிலுள்ள பொருளையும் பற்றி அறிதல் கண்ணது மேம்பாடாகும்,

கண்ணினது இயல்பு கூறிய முகத்தானே அதனை ஒத்த உயிரது இயல்பையும் அறிய வைத்தமையின் இது ஒட்டு என்னும் அலங்காரமாம். 'கருதிய பொருள் தொகுத்து அது புலப்படுத்தற்கு ஒத்த தொன்று உரைப்பின் அஃது ஒட்டென மொழிப' என்பதால் ஒட்டணியின் இயல்பு புலப்படும். உயிர் ஐம்பொறிகளினும் கலந்து நிற்பினுங் காணும் தன்மை கண்ணிற்கே வாய்த்தாற்போல உயிர் தன் முனைப்பாலும் (பசுஞானம்) கருவிகளின் வாயிலாகவும் (பாசஞானம்) அறியும் தன்மையைப் பெறினும், இறைவனை அறிதற்கு அவனருளும் அறிவே (பதிஞானம்) கருவியாகும் என இவ்வெண்பாவிற்கு உரை காண்பர். அவ்வுரை அடுத்த வென்பாவின் பொருளோடு இயையாமையின் அது பொருளன்றாம்.

அந்தம்: சித்தாந்தம். இதன்கண் சித்தம் என்னும் சொல் மறைந்து நிற்றலின் தலைக்குறை என்றார். சிறந்த ஒரு வார்த்தை_ அருட்பதிவு (சத்திநிபாதம்) உடைமை. நீங்கானை நினைந்து நீங்கும் உயிரிடத்தினின்றும் என்றும் நீங்காதிருக்கும் இறைவனை நினைந்து மல கன்ம மாயையினின்றும் நீங்கும். அடுத்த நூற்பாவில் பாசம் ஒருவுமாறு கூறப்பட்டிருத்தலின் இது தோற்றுவாய் செய்த வாறுயிற்று.

## ஒன்பதாவது நூற்பா

**ஊனக்கண் பாசம் உணராப் பதியை**
**ஞானக் கண்ணினில் சிந்தை நாடி**
**உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்**
**தண்ணிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே.**

என்பது சூத்திரம். என்நுதலிற்றோவெனின், ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக் கருத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தம்முதல் குருவுமாய் உணர்த்தக் கேட்டு அதனைச் சிந்தனை செய்து உணருமாறு உணர்த்து முகத்தான் ஐம்புல வேடரின் வளர்ந்த வாலாமை நீக்கி உயிர் தன்னைத் தூய்மைப் படுத்துமாறு உணர்த்துதல் இவ்வொன்பதாம் சூத்திரத்தின் கருத்து என்றவாறு.

சூத்திர இயைபும் இதனானே இனிது விளங்கும்.

சிவப்பிரகாசத்துத் ''தான்பணியை நீத்தல்'' என்று ஓதப்படும் ஆன்மசுத்தியாவது இறைபணி நிற்க என வருகின்ற சூத்திரத்திற் பெறற்பாலதாகலானும், அழுக்கின் நீக்கமே அறுவைக்குச் சுத்தியாமாறு போலப் பாச நீக்கமே உயிர்க்குச் சுத்தியாவதன்றி வேறன்மையானும், பாச நீக்கம் பண்ணும் முன்னர்ச் சுத்தியாதல் கூடாமையானும், வருகின்ற சூத்திரத்தின் கருத்தாய் நின்ற ஆன்ம சுத்தி பண்ணுமாற்றைப் பதியை நாடி எனவும் தண்ணிழலாம் பதி எனவும் சிவதரிசனம் பண்ணுமாறு உணர்த்துதற்கு எழுந்ததே இச்சூத்திரத்தின் கருத்தாக வைத்து உரைத்தது என்னையோவென மலையற்க; சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்ம சுத்தி என்னும் உடனிகழ்ச்சி உணர்த்துதற்கும் தம்முள் வேறுபாடு சிறுபான்மை யுடையவாய இவ்விரு சூத்திரமும் ஒரு பொருள்மேலன என்பது உணர்த்துதற்கும் இவ்வாறு உரைத்தாராகலின், அஃது அங்ஙனமாக ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும் என்றலின், அக் காட்சியே அதற்கு அமையும், சுத்தியெற்றுக்கு எனின் அஃதொக்கும்; நிருவிகற்பமாய்க் காண்டலும் இரட்டுறக் காண்டலும் தெளியக் காண்டலும் எனக் காட்சி மூவகைப்படும். இம்மூன்றும் அதிபரிபக்குவமுடையோர்க்குக்கேட்டமாத்திரையே ஒருங்கு நிகழுமாயினும், ஏனையோர்க்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் சோபான முறையினன்றி நிகழாமையின், அவரை நோக்கிச் சிவரூபத்தின் நிகழும் ஆன்ம தரிசனத்தின் பின்னுல் சிவதரிசனத்தின் நிகழும் ஆன்ம சுத்தியும் ஒரு தலையான் வேண்டப்படும் என்று உணர்ந்து கொள்க. ''நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும் நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி, ஆசையொடும் அங்குமிங்குமாகி யலமருவோர் அரும்பாசம் அறுக்கும் வகையருளின் வழியுரைப்பம்'' என வழி நூலாசிரியரும் இக்கருத்தே பற்றி ஓதினர்.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு.

குறையுணர்வாகிய பசுவறிவானும் பாசவறிவானும் உணரப் படாத முதல்வனை, அவனது திருவடி ஞானத்தால் தன்னறிவின் கண்ணே ஆராய்ந்து அறிக; அத்திருவடி ஞானத்தான் நிலமுதல் நாதம் ஈருகிய பாசக்கூட்டம் 'நின்றுழி நில்லாது' பரந்து திரிதற்

கண் அதிவேகமுடைய பேய்த்தேரின் இயல்பிற்ருய்க் கழிவது என்று அறிந்து நீங்கவே, அப்பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும்; அவ்வாறு பாசத்தையொருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு அப்பொருள் பயக்கும் திருவைந்தெழுத்து அவ்விதிப்படி அறிந்து கணிக்கப்படும் எ-று.

ஊனம் என்பது அப்பொருட்டாதல் "ஊனமேற்கிரியை வித்தை" என்பதனுன் அறிக. "நன்று மன்னிது நாடாய் கூறி" (அகம் 268) என்ருற் போல நாடி என்பது இகரவீற்று முன்னிலை ஏவல் சிந்தையின் கண் என்னும் ஏழனுருபு தொக்கது. உரா வென்பது முதனிலைத் தொழிற் பெயர்; இனி, "பறவாக் குளவி" "பாயா வேங்கை" என்ருற்போல, ஒருவரான் ஊரப் படாத வேகத்தையுடைய தேர் எனச் செயப்படு பொருட்கண் வந்த பெயரெச்ச மறையாகக் கொண்டுரைத்து, "திருத்தார் நன்றென்றேன் றியேன் (முத்தொள்ளாயிரம்) என்ருற் போல உராவென்பது குறுக்கல் விகாரம் என்பாருமுளர். பின் வந்த பதி ஆகுபெயர்.

இதனுள், ஊனக்கண்பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி என்றது ஓரதிகரணம்: உராத்துனைத் தேர்ந்தெனப் பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி என்றது ஓரதிகரணம்;விதி எண்ணும் அஞ்செழுத்தே என்றது ஓரதிகரணம் ஆக மூன்று அதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

(நு-வி) ஐம்புல வேடரின் அயர்ந்து வளர்ந்ததினலாய வழுவினின்றும் நீங்கித் திருவைந்தெழுத்தை ஓதி உயர்தலாகிய தூய்மை மெறுமாற்றை இந்நூற்பா கூறுதலின் ஆன்ம சுத்தி பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று எனக் கூறினர்.

வாலாமை – தூய்மையின்மை. அறுவைக்கு – ஆடைக்கு அடுத்து வரும் பத்தாவது நூற்பாவில் பாசச்சயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று எனக் கருத்துரை கூறப்படுகிறது. அழுக்கின் நீக்கமே ஆடைக்குத்தூய்தாதல் போலப் பாசநீக்கமே உயிர்க்குத் தூய்மையாம். எனவே பத்தாவது நூற்பாவே ஆன்மசுத்தி கூறுவதாயிருக்க இந் நூற்பா ஆன்மசுத்தி கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று எனக் கூறல் எங்ஙனம் பொருந்தும் என்பது வினு. இந் நூற்பாவில் பாசம் ஒருவ எனக்கூறப்படுகிறது அடுத்த நூற்பாவில் மலமாயை தன்னெடு வல்வினை யின்றே எனக் கூறப்படுகிறது. இவ்வாற்ருன் பாச நீக்கமாகிய ஒரு பொருளில் இவ்விரு நூற்பாவும் அமைதலின் இதுவும்

ஆன்மசுத்தி கூறுதலே ஆயிற்றுஅன்றியும் 'பதியைநாடி தண்ணிழலாம்பதி' என இந்நூற்பாவில் கூறுவது உயிர் சிறப்பென்னும் செம்பொருளைக் காணும் முறைமையாம். சிறப்பென்னும் செம்பொருள் காணும் பொழுதே உடனிகழ்ச்சியாகப் பாச நீக்கமும் நிகழும். இவ்வாற்றானும் ஆன்மசுத்தி உணர்த்துதல் நுதலிற்று என்றல் பொருந்துவதாம். ஞேயத்தை—சிவபரம் பொருளை. ஊனம்—குறைவு. ஊனமேல் கிரியை: ஊனமேல் என மாறுக. கிரியை ஊனம்—கிரியை குறைந்து.கூறி—கூறுக. இவ்வாறே நாடி என்ற விடத்தும் நாடுக எனப் பொருள் பயந்தது. அக நானூற்றில் நாடாய் கூறுதி என்ற பாடமே உள்ளது. உராவல் என்பது அல் விகுதி கெட்டு உரா என நின்றது. உராவல் — உலாவித் திரிதல்: பறந்து திரிதல். இனி ஊரா என்பது உரா எனக் குறுகி நின்றதாகக் கூறி ஊராத தேர் எனவே பேய்த் தேராயிற்று எனப் பொருள் விளக்கம் காண்டலும் ஒன்று இது குளவி வேங்கை என்பவற்றின் வினையாகிய பறத்தலையும் பாய்தலையும் மறுக்கவே (பறவாக்குளவி,பாயா வேங்கை) அவை செடியும் மரமுமாம் தன்மை விளங்குதல் போலவாம். இன்னோரன்னவற்றை அணியிலக்கண நூலார் 'வினையெதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்துதல்' என்பர். தீயேன் என்பது தியேன் எனக் குறுகினாற் போல ஊரா என்பது உரா எனக் குறுகிற்று.

பதி:ஈண்டுப்பதிஞானத்தைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், மேலைச் சூத்திரத்து ஓதியவாற்றான் முதல்வன் பாச அறிவால் நாடப் படுவன் அல்லன் ஆயினும் பசு அறிவால் நாடப்படுவன் என்றற்கு இழுக்கு என்னை எனச் சிவசமவாத சைவர் மதம்பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.
ஏகாரம் தேற்றம்.

### ஏது

அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், ஏனை ஞானங்களான் அறியப்படாது சிவஞானத்தான் அறியப்படும் என்றற்குப் பிரமாணம் என்னையென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) வாக்கு மனுதீதகோசரமாய் நின்ற அதுவே என்புழி உரைத்தாம்.

ஆண்டு (சிவஞான போதம் 6-2ம் அதி) பொதுவகையால் பெறப்பட்டதனை ஈண்டு ஏதுவாக வைத்து, வாக்கு மனுதீத மாகியும் கோசரமாதல் பிறிதொன்றால் பெறப் படாமையின், அருத்தாபத்தியான் ஞானக் கண்ணாலே காணப்படும் என்பது தாமே போதரும் என மேற்கோளைச் சாதித்தார்.

எடுத்துக்காட்டு

**நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ**
**தேடி எனையறியேன் தேர்ந்தவகை—நாடியரன்**
**தன்னாலே தன்னையும் கண்டு தமைக்காணார்**
**என்னும் எனவறிவார் இன்று**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், கோசரமாதல் பிறிதொன்றால் பெறப்படாதென்றது என்னை? பசுத்துவம் நீங்கிய வழிச் சுட்டிறந்து அறிவதாகிய உயிருணர்வு திருவடி ஞானத் தோடு ஒப்பதாகலின், அதன்கண் கோசரமாதல் அமைவுடைத்து போலும் என்பாரை நோக்கி அவ்வுணர்வு விளங்குமாறு உணர்த்து முகத்தான் அவரை மறுத்து ஏதுப்பொருளை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) நாடியோ என்போ நரம்பு சீக்கோழையோ தேடி எனை அறியேன் தேர்ந்த வகை நாடி-நாடி முதலியவற்றுள் யான் யார்? என்னைத் தேடியும் அறிகின்றிலேன்' என்று இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சி அறிவின் கண்ணே இதனைத் தெளிவிப்பதோர் அறிவு வேறு உண்டெனை ஆராய்ந்து நோக்கி; அரன் தன்னாலே தன்னையும் கண்டு தமைக்காணார் — அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றுவதாய முதல்வனது திருவடி ஞானத்தால் முதல்வனையும் உணர்ந்து முதல்வனின் வியாப்பியமாய் நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தம்மையும் உணர்தலைச் செய்யாதார்;என்னும் என அறிவார் இன்று-மற்று எவ்வியல்பினர் என்று தம்மை அறிய வல்லுநர் இம்முத்திக் காலத்து என்றவாறு.

நாடி என்றது இடை பிங்கலை முதலியவற்றை. நரம்பெனவே அடங்குமேனும் தலைமை பற்றி வேறு கூறினர். சீ-புண்ணீர், கோழை-ஐ. ஓகாரம் தெரிநிலை. என்றென்பது சொல்லெச்சம், வகை ஆகுபெயர். ஒற்றுமை பற்றி அரனது ஞானத்தை அரன் என்று உபசரித்தார். உம்மை எதிரது தழீஇயிற்று. எவனென்னும் வினைவினைக் குறிப்புப் பெயர். ஈண்டு ஆகுபெயராய் என்னெனை மரீஇயிற்று. ஆம், அசை,

நாடியோ என்போ நரம்பு சீக்கோழையோ வென்ற உபலக்கணத்தால் ஏனைத் தத்துவ தாத்துவிகங்களினும் அவ்வாறு தெரிதல் கொள்ளப்படும். இது தம்மை அறியுமாறு உணர்த்து முகத்தானே தலைவனை அறிந்த பின், அறியப்படுவதாகிய தம்மறிவு கொண்டு தலைவனை அறியுமாறு யாண்டையது எனச் சிவசமவாத சைவரை மறுத்துச் சிவஞானத்தானன்றி அறியப் படாமையை வலியுறுத்தவாறு காண்க.

எடுத்துக்காட்டு

**காட்டிய கண்ணே தலைக்காணு கண்ணுக்குக்**
**காட்டாய வுள்ளத்தைக் கண்காணு - காட்டிய**
**உள்ளந் தலைக்காணு வுள்ளத்தின் கண்ணய**
**கள்வன்தான் உள்ளதிற் காண்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோவெனின், எதிர்முகத்து ஒரு பொருளைக் கண்ட கண்ணே மறித்து நோக்கியவழி வெரிந் புறத்துப்பொருளையுங் காணவல்லும்; அதுபோல அங்ஙனம்தேர்ந் தறிதலைச் செய்த உயிரே தெளிந்தலைதறியும் செய்யவல்லும் என அமையும் என்பாரை நோக்கி அதனது மாட்டாமையை விளக்கி அரன் தன்னாலே காண்டலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) காட்டிய கண் தனைக் காணு—உயிராற் காட்டப் பட்டு ஒரு விடயத்தைக் காண்கின்ற கண்ணனது தன்னியல்பைக் காணமாட்டாது; கண்ணுக்குக் காட்டு ஆய உள்ளத்தைக் கண் காணு—தனக்கு அவ்விடயத்தைக் காண்பித்து முதலாய் நிற்கும் உயிரையும் அதுகாண மாட்டாது காட்டிய உளம் தனைக்காணு—அதுபோல் முதல்வனுல் மறைந்து நின்று உணர்த்தப்பட்டு ஒன்றதனைத்தேர்ந்து உணர்கின்ற உயிர் அவ்வாறே தன்னியல் பையும் அறியமாட்டாது, தன்னை யுணர்த்தி நிற்கும் முதல்வனை யும் அறியமாட்டாது; உள்ளத்தின்கண் ஆய கள்வன்தான்—அத் தேர்ச்சியறிவின்கண்ணும்உடனாய் நிற்கும் கள்வன் அம்முதல்வன் தான் ஆகலானே; உள்ளத்தில் காண் -அவனை அவ்வறிவின்கண் வைத்து நாடித் தெளிவாயாக என்றவாறு.

இது சொற்பொருள் பின்வருநிலை. ஏகாரம் அசைநிலை 'முறை காக்கு முட்டாச் செயின்' என்ருற்போலக் காணுதென்னும் துவ்வீறு விகாரத்தால் தொக்கது. பின்வந்த உள்ளம் ஈண்டுத் தேர்ச்சியறிவின் மேற்று. உள்ளத்தின் கண்ணும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தோன்ருது நிற்றல் பற்றிக் கள்வன் என்ருர். கள்வ னென்றது கண்ணுக்கு உயிர் மறைந்து

நின்றே காட்டுவதாகலான் அது தன்னையும் உயிரையும் அறிய மாட்டாதாயிற்று; அது போல முதல்வன் இதுகாறும் மறைந்து நின்றே உணர்த்துதலின் உயிர் தன்னையும் முதல்வனையும் அறிய மாட்டாதாயிற்று என்பதுபட நின்ற குறிப்பு மொழி, உள்ளத்திற் காண வல்லார்க்கு அக்கள்ளம் தீர்தலின் தன்னையும் முதல் வனையுங் காண்டல் கூடுமென்பதாம். 'கள்ளரோடில்லம் உடை யார் கலந்திடின், வெளியாமென் றுந்தீபற' என்றதும் இக்கருத்து நோக்கி. கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண் காணு என உவமைக்கு ஓதியவாறு பொருளினும் வருவித்து உரைத்துக் கொள்க, இஃது எடுத்துக்காட்டு உவமை.

(நு - வி) வாக்கு - சொல். மனம் + அதீதம் = மனாதீதம், மாற்றம் மனங்கழிய நின்றேன்என்பது பொருளாம். கோசரமாய்- விளங்கித் தோன்றுவதாய். அருத்தா பத்தி - சொல்லியதைக் கொண்டு சொல்லாதவற்றை உணர்தல், உயிர் தன்னறிவாலும் (பசுஞானத்தாலும்) பிறவற்றின் துணையாலும் (பாச ஞானத்தா லும்) அறிய இயலான் எனக் கூறவே அவனருளே கண்ணாகக் காணின் (பதி ஞானத்தால்) அறியலாம் என உணர்வது அருத்தா பத்தியாம்.

நாடி - நரம்பு. கை நரம்பின்வழி உள் நிகழ்வனவற்றை ஆராய்ந்து உணர்தலின் கைநரம்பிற்கு நாடி எனப்பெயர் வழங்கு வதாயிற்று. நாடிகள் பத்தென்பர். ஒன்று இடதுபக்க நரம்பு. (இடைகலை) 2. வலது பக்க நரம்பு. (பிங்கலை). 3. நடுநரம்பு. (சுழுமுனை). 4. உள் நாக்கு நரம்பு (சிகுமை). 5. வலச்கண் நரம்பு (புருடன்). 6. இடக்கண் நரம்பு (காந்தாரி). 7, வலச் செவி) நரம்பு (அத்தி). 8. இடைச்செவி நரம்பு (அலம்புடை). 9. கருவாய் நரம்பு (சங்கினி). 10. எருவாய் நரம்பு (குகு). கோழை-ஐ: சிலேட்டுமம். நாடியோ என்போ என்பனவாதியாய ஓகாரங்கள் தான் யார் என ஆராய்தற்கண் வருதலின் தெரிநிலை யாயிற்று. கோழையோ என்று என உரை கூறப்படுதலின் என்று என்பது சொல்லெச்சமாயிற்று. வகை: அவ்வாறு வகுக்கிற அறிவைக் குறித்து நிற்றலின் ஆகுபெயராயிற்று. அரனது (முதல்வனது) திருவடி ஞானத்தால் எனக்குறிக்க வேண்டுவதை அரன் தன்னுல் எனக் கூறியது ஏற்றுரையாம். தன்னையும் என்றவிடத்திலுள்ள உம்மை பின்வரும் தமையும் என்பதைத் தழுவி நிற்றலின் எதிரது தழீஇயிற்று என்றுர். எவன் என்பது என் என மருவியது. கற்றதனாலாய பயனென் கொல் என்புழிப் போல. ஈண்டு எவன் என்னும் வினு வினைக் குறிப்பு ஆகுபெயராய்ப் பெயர்ச்சொல் லாயிற்று. என் - எவ்வியல்பினன் என உரைகாண்டலின் இவ்வாறு

இலக்கணக் குறிப்புத் தந்தார். உபலக்கணம்-ஒன்றனைக் கூறின் அதற்கு இனமாயபொருளையும் இணைத்துக் கொள்ளுதல் நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ எனக் கூறியதால் ஏனைய அகக் கருவி முதலிய நுண்ணுடம்பாகிய தத்துவங்களிலும் உயிர்க் காற்று ஓசை ஒளி முதலிய புலன்களின்வழி வரும் பரு உடம்பா தத்துவங்களிலும் யான் யார் எனத் தெரியப்படும். தத்துவம்-அகக் கருவி முதலாயின, தாத்துவீகம்-அதன் காரியமாகிய புறக் கருவிகள்.

மேவிய புன்மயிர்த் தொகையோ அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ கூறுசெய்து
இடையிடை நிற்கும் எலும்போ எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்து
உள்ளிடை ஒழுகும் வழும்போ மெள்ள நின்று
ஊரும் புழுவின் ஒழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ உடம்பிற்குள்
பிரியாது ஒறுக்கும் பிணியோ தெரியாது
இன்னது யானென்று அறியேன் என்னை
எங்கும் தேடினேன் யாதிலுங் காணேன் முன்னம்

(திருவிடை-மும்மணி-13)

எனவரும் பகுதி, தேடி எனை அறியேன் என்ற பகுதியை விளக்கு வதாகும். 'ஞான நாட்டம் பெற்றபின் யானும், நின் பெருந்தன் மையுங் கண்டேன் காண்டலும், என்னையும் கண்டேன் பிறரை யும், கண்டேன், நின்னிலை யனைத்தையும் கண்டேன்' நின்னைக் காணா மைந்தர் தன்னையுங் காணாத் தன்மையோரே' என்ற பகுதி தம்மையும் தம் தலைவனையும் அறிதலை விளக்குவதாகும்.

இவ்வெண்பாவில் ('காட்டிய கண்ணே') என்னும் சொல்லும் பொருளும் பின்னரும் தொடர்ந்து வருவதால் சொற்பொருள் பின் வருநிலையாம். 'தனைக் காணா', கண் 'காணா' என்ற இடங்களில் ஒருமை உணர்த்தும் துவ் ஈறு கெட்டது; திருக்குறளில் முட்டாது என்பது துவ் ஈறு கெட்டு முட்டாச் செயின் என நின்றூர் போல. காட்டிய உள்ளம்-தேர்ந்து உணர்கின்ற உயிர். இவ்வாறு பொருள் தோன்றலின் உள்ளம் என்பது தேர்ச்சியறிவின் மேலதாயிற்று.

ஒலிக்கும் சோரன் என்னும் திருவாசகமும். இவ்வெண்பாவில் கூறப்பட்ட உவமை கண் என்பதாகும். பொருள் உயிர் என்பதாம். கண் தன்னியல்பையும் அறிவதில்லை. பொருளைக் காண்பித்து நிற்கும் உயிரையும் அறிவதில்லை என கண்ணிற்கு இருநிலை கூறப்பட்டுள்ளது. பொருளாகிய உயிர்க்கோ தன்னை அறிவதில்லை என்ற ஒருநிலை கூறப்பட்டுள்ளது. ஆயினும் உவமைக்கு ஒதியவாறு உயிர் தன் முதல்வனையும்'' அறிவதில்லை என்ற நிலையையும் கூட்டி உரைத்துக் கொள்ளப்பட்டுள்ளது. உவமையை விளங்குதற்குரிய அதுபோல என்னும் தொடர் தொக்கு நிற்றலின் இஃது எடுத்துக்காட்டுவமையாயிற்று.

# இரண்டாம் அதிகரணம்

## மேற்கோள்

*இனி அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞான சொரூபம் என்று உணரற்பாற்று.*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க வென்று உணர்த்தியவழி அந்த ஞானக் கண்ணைப் பெறுமாறு யாங்ஙனம் என நிகழும் அவாய் நிலையை நீக்குதற் பொருட்டு. மேலதற்கோர் புறனடையாய் எழுந்த இச்சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

பாச மொருவத் தண்ணிழலாம்பதி என்புழிப் பாசமென்றது காரியப் பிரபஞ்சத்தை என்பார் அசத்தாயுள்ள என்றும், சொல் பல்காமைப் பொருட்டு ஏதுப்பொருளை உருவக முகத்தான் உடம்பொடு புணர்த்துக் காட்டுவார் பிரபஞ்சத்தை என்னாது வன்ன பேதங்களை என்றும், வியாபகப் பொருளுக்கு ஒருவுதலாவது உணர்ச்சி விசேடமேயாம் என்பார் அசத்தென்றொழிய என்னாது காணவென்றும், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்றென்பார் உளதாய் நிற்பது என்றும், பதி என்றது ஆகுபெயரால் பதிஞானத்தின்மேல் நின்றது என்பார், ஞான சொரூபம் என்றும், இஃது அனுபவத்தினன்றிச் சொல்லளவையின் அறியவாராது என்பார் உணரற்பாற்று என்றும் உரைத்தார் இஃது ஏகதேச உருவகம்.

இதனுள் பெறப்படும் ஏதுப் பொருளை ஏனையவற்றுட் போல மேற்கோளின் வேறு வைத்துக் காணுமாறு:-

இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உள தாய் நிற்பது ஞான சொரூபம் என்றது, வேற்றியல்பாகிய வன்ன பேதங்களை வேற்றியல்பு என்று கண்டு கழிப்பின், உளதாய் நிற்பது படிக சொரூபமாம் துணையான் எனவரும்.

(இ-ள்) படிக சொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை இவைநிலையுதல் இலவாகிய வேற்றுநிறங்கள் எனக் கண்டு நிற்பின், அவ்வழி நிலையுதலுடைத்தாய் விளங்கி நிற்பது பளிங்கினது சொரூபமாம் என்னும் ஒப்புமையான் நிலையுதலுடைய தற் சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையுதல் இலவாயுள்ள பிரபஞ்சத்தை, இவை நிலையுதல் உடையன அல்ல என்று விவேகித்தறியின் அங்ஙனம் நிராலம்ப மயமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபம் என மேற் கொண்டது என்றவாறு.

வன்னபேதமாவது சித்திரமெனக் கொண்டு சுவர்மேல் வைத்து உரைத்தலும் ஒன்று. அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஆசிரியன் அறிவுறுத்த உபதேசப் பொருளின் உரைத்து நின்று "அட்டகுண மெட்டுச் சித்தி கோகனதன் முதல் வாழ்வு குலவுபதம் எல்லாம் — வெறுத்து நெறியறு வகையு மேலொடு கீழ் அடங்க" காரண ரூபத்தில் இல்லாமையால் "வெறும் பொய்யென நினைத்திருத்தல்."

எடுத்துக்காட்டு

**நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்**
**தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் - அற்புதம்போல்**
**ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானே**
**வானே முதல்களையின் வந்து.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோவெனின், அசத்தை அசத்தென்று கண்டு ஒருவியவழித் தோன்றுவது சூனியமே யன்றிப் பிறிதில்லை போலும் என்பாரை நோக்கி ஞான சொரூபத்தின் இயல்பு கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) நிர்க்குணனாய்—அசுத்தப் பிரபஞ்சம்போல முக்குண ரூபமாய் அளவிட்டு அறியபடுவானும் அல்லனாய்; நின்மலனாய்— முக்குணங்களைக் கடந்த மிசிரப்பிரபஞ்சம் போல மலகன்ம காரிய ரூபமாய் அறியப்படுவானுமல்லனாய்; நித்தியானந்தனாய்— மலகன்மங்களையும் கடந்தசுத்தப் பிரபஞ்சம்போல அநித்தியானந்த ரூபனாய்ச் சுட்டி அறியப்படுவானும் அல்லனாய்;

தற்பரமாய் — இம்மூன்றனேடும் கூடிப் பொது வியல்புபற்றி அவ்வாறுணரப்படும் உயிர்போலன்றி அதற்குமேலாய்; நின்ற தனி முதல்வன்—இவ்வாறு நிற்றலான் ஒன்றன் இயல்புபற்றி அறியப்படாத தனி முதலாகிய இறைவன் வானமுதல் கலையின் - ஆகாசம் முதலிய அசத்தை அசத்தென்று கண்டு ஒருவியவழி; அளவு இறந்து அற்புதம் போல் வந்து — பயின்றறிந்து வரும் தனது சுட்டறிவின் அளவினைக் கடத்தலான் இன்னது என்று அறியவராத சூனியப்பொருள் போலத் தோன்றி; ஆனு அறிவாயத் தோன்றுனே —பின்னர்ச் சுட்டிறந்தறியும் தன்னறி வின்கண் நீங்காது நிலைபெறுவதாய்ச் சோதிக்குட் சோதியாய் விளங்கித் தோன்றுன் கொல்லோ எ - று.

தற்பரம் தனக்குப் பரம் என விரியும். தன்னென்றது உயிரை அற்புதம் ஈண்டுச் சூனியத்தின்மேற்று. முதற்கண் சூனியமாய்த் தோன்றினும் சூனியம் அன்று என்பார், அற்புதம் போல் வந்து என்றுர். ஆனுமை நீங்காமை. ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் அசை நிலை.

வானே முதலெனவே தோற்ற முறை பற்றி வான் முதலாய பூதங்களும், ஒடுக்க முறை பற்றி வான்முதலாகிய ஏனைத் தத்து வங்களும் அடங்கும், நிற்குணனுய், நின்மலனுய், நித்தியானந்த னுய்த் தற்பரமாய் என்புழி ஆக்கச்சொல் உண்மை குறித்து நின்றது வடமொழி மதம். அறிவாய் என்புழி ஆக்கம் வேறுபாடு குறித்து நின்றது. ஒற்றுமை பற்றி முதல்வனது ஞானத்தை முதல்வன் என்று உபசரித்தார்.

## எடுத்துக்காட்டு

**சுட்டி யுணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்**
**சட்ட வினியுளது சத்தேகாண் - சுட்டி**
**உணர்ந்தநீ சத்தல்லை உண்மையைத் தைவம்**
**புணர்ந்ததனுற் பொய்விட்டுப் போம்,**

என்பது உதாரணம், என்னுதலிற்றே வெனின், வானே முதல்கலைந்தவழி அங்ஙனம் தோன்றுவதும் வேறென்று எனக் கோடும், ஞானசொரூபம் என்றற்குப் பிரமாணம் என்னை என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) சுட்டி யுணர்வதனைச் சுட்டி அசத்து என்ன—ஏக தேச உணர்வாற் சுட்டி உணரப்படுவதாய பிரபஞ்சத்தை மேற் கூறியவாறே ஒரோ ஒன்றுகச்சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக் கொண்டு சென்றவழி; இனிச் சட்ட உளது சத்தே காண் —முடி

வின்கட் செம்மையே கோசரமாவது யாது அஃது அவ்வசத்தின் வேருகிய சத்தேயாம் அதனை அறிவாயாக; அற்றேல், அசத்தின் வேருய் அங்ஙனம் தோன்றும் சத்தாவது உயிரேயாமென அமையும் எனின்; சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லை— இதுகாறும் அசத்தோடு கூடிச் சுட்டி அறிந்து வந்த நீ அசத்தின் வேருய் அங்ஙனம் தோன்றும் சத்தாவாய் அல்லை; அற்றேல், அச் சுட்டுணர்வு எனக்கு நீங்குவதின்று போலும் எனின்; உண்மை யைத் தைவம் புணர்ந்து—அசத்தின் வயப்பட்டு நின்று சுட்டி அறிந்து வந்த நீ அதனை ஒழிந்து அங்ஙனம் தோன்றிய சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால் அதனல் பொய் விட்டுப் போம் —அப்புணர்ச்சியானே சுட்டுணர்வாகிய அப்பொதுவியல்பு நின்னைவிட்டு நீங்கும் என்றவாறு.

என்ன என்றது உபசார வழக்கு. சட்ட என்பது செப்பம் உணர்த்தி நிற்பதோர் அகரவீற்றிடைச் சொல்; அது சட்டமென இழிவழக்கின் மகரவீருய் மரீஇயிற்று. அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. உண்மை, சத்து என்பன ஒரு பொருட் கிளவி. தைவமாய் என ஆக்கச் சொல் வருவித்துரைக்க. புணர்ந்தால் என்பது புணர்ந்தெனத்திரிந்தது. உண்மைக்குத் தைவ மாதல் புணரின் என உருபு மயக்கமாகக் கொண்டு உரைப் பினும் அமையும். பற்றறக் கழிந்தொழியும் என்பார் விடுமென்னது விட்டுப்போம் என்ருர்.

## எடுத்துக்காட்டு

**கண்டதை அன்றுஅன்று எனவிட்டுக் கண்டுஅசத்தாய்**
**அண்டனை யான்மாவில் ஆய்ந்துணரப்- பண்டுஅணைந்த**
**ஊனத்தைத் தான்விடுமாறு உத்தமனின் ஒண்கருட**
**சானத்தின் தீர்விடம்போல் தான்.**

என்பது உதாரணம். என்நுதலிற்ருேவெனின், அசத்தை அசத் தென்று கண்டொழியுமாறும், ஒழிந்தவழி உண்மையைத் தைவம் புணருமாறும், புணர்ந்தவழி அதனற் பொய்விட்டுப் போமாறும் யாங்ஙனம் என்பாரை நோக்கி அவற்றைத் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) கண்டதை அன்று அன்று எனக் கண்டு அசத்து ஆய் விட்டு சுட்டியுணரப்பட்ட பிரபஞ்சத்தை — இதுசத்தன்று இது சத்தன்று என ஒரோ ஒன்ருக வைத்து நோக்கி அசத்து என்று ஒழித்து; ஆன்மாவில் அண்டனை ஆய்ந்து - அவ்வாறு கண் டொழிந்த தன் அறிவின் கண்ணே சுட்டுணர்விற்றி நின்)

கடவுளை ஆராய்ந்து உணர - சோகமெனப்பாவிப்பனுயின்; உத்தமனின் பண்டு அணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு—அப் பாவகத்தான் அத்துவிதமாய் விளங்கித் தோன்றும் முதல்வனல் அனுதியாய்க் கூடி நின்ற பொது வியல்பைத் தான் விட்டு நீங்கு மாறு; ஒண் கருட சானத்தின் தீர்விடம்போல் தான்-ஒள்ளிய கருட தியானத்தில் விளங்கித் தோன்றும் கருடனல் அப்பாவகன் விடத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு போலாம் என்றவாறு.

தான் என்பது முன்னையது எழுவாய்; பின்னையது அசை. சானம் பாகதச் சிதைவு.

கருடதியானமாவது யாதெனிற் கூறுதும்; ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும். பொருடோறும் இவ்வாறு கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற் காணப்படும் கருடன் ஆதிபௌதிக கருடன்; அதற்குஅதிதெய்வ மாகிய மந்திரம் ஆதிதைவிக கருடன்; அம்மந்திரம் இடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தி யான்மிக கருடன் எனப்படும். அம்மூன்றனுள் ஈண்டுக் கருட னென்றது கருடனுக்கு அதிதெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தில் அதுபோல் வைத்துத் தியானம் செய்து கணிக்கப்படும் மந்திர ரூபமாகிய ஆதிதைவிக கருடனை. அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்று வந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திர ரூபமே தானுக அநன்னிய பாவனை செய்து தன்னறிவு அதன் வயத்ததாம் படி உறைத்து நிற்றல். அவ்வாறு நின்று அம்மந்திரக் கண்கொண்டு பார்ப்பவே அஃது அவ்விடவேகத்தை மாற்றுதல் ஒரு தலையாகலின் அப்பாவனை ஈண்டைக்கு உவமையாயிற்று. புள்ளு விலங்கு மரம் முதலியவற்றிற்கெல்லாம் அதி தெய்வம் மந்திரம் உள என்பதூஉம், மந்திரங்களைக் கணிப்போன் படிகம் போல மந்திர சொரூபியாவன் என்பதூஉம் சருவஞானேத்தரம் முதலியவற்றுள் காண்க. இதனுனே கருடபாவனை அசத்தியம் என்பார் மதமும் போலியாயவாறும் உணர்க. அல்லதூஉம், பாவனை போலியாயவழி அது பயன் தருமாறு யாண்டையது என்று ஒழிக.

(நு-வி) அசத்தாய் உள்ள-நிலையாததாய் உள்ள. வன்ன பேதங்களை- நிறவேறுபாடுகளை; ஈண்டு அவை உருவகமாய் உலகைக் குறித்து நின்றது. அசத்தென்று காண-அழிதல் மாலையது என அறிய. பாசம் என்பது மலங்களையும் குறிக்கும். ஆனுல் அவை அழிவனவல்ல. ஆதலின் அழியும் தன்மையதாய உலகைக் குறிக்க அசத்தாய் உள்ள என்ருர். பளிங்கில் காணும் நிறவேறுபாடுகள் நிலையுதல் இலவாதல் போல இவ்வுலகமும் நிலையுதல் இலதாம்

எனவே வன்னபேதங்கள் போன்ற பிரபஞ்சம் அசத்து எனக் கூறின் சொற்கள் மிகும். ஆதலின் வன்னபேதங்கள் எனக்கூறிய அளவால் உலகைக் குறித்தார். ஒருவுதல்-நீங்குதல். உயிர் எங்கும் பரந்து நிற்பதாகும். ஆதலின் நிலையுதல் இலவாயபொருளினின்றும் நீங்குதல் என்பது இயலாது. அதன் இழிவும் தனது தகவும் ஒருங்கு நோக்கி அதனைத் தன்னின் வேருக உணரும் சிறப்புணர்வோண்டு ஒருவுதலாம். ஆதலின் அசத்தென்று ஒழிய எண்ணுது காண என்ருர். உலகைநிறங்களாக உருவகித்த ஆசிரியர்இறைஞானத்தைப் பளிங்காக உருவகம் செய்யாமையின் இஃது ஏகதேசவுருவகமாயிற்று. நிராரம்பமாய்-பற்றுக் கோடு இலதாய். பளிங்கின்முன் வைக்கப்பட்ட நிறமுடைய பொருள்கள் அதில் பதியின், பளிங்கின் வடிவம் தெரியாது; அப்பொருள்களின் நிறங்களே தோன்றும் அவ்வாருன நிறங்களை உடைய பொருள்கள் பளிங்கின் வேருனவை, அழிபவை என அவற்றைப் பிரித்து அறியின் பளிங்கின் ஒளி தோன்றும். அதைப் போன்றே நிலைபேறுடைய திருவருள் ஞானத்தை மறைத்து நிற்கும் நிலையுதல் இல்லாத இவ்வுலகை நிலையுடையது அன்று என உணர நிலையுடைய அத்திருவருள் ஞானம் தோன்றும். எனவே பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும் மருள் நீங்கின் அருள் ஞானம் கிட்டும் என்பதாம். வன்னபேதம்-ஓவியம். சுவற்றில் காணும் ஓவியம் நிலையுதல் இல்லாதது என உணர நிலையுடைய சுவர் தோன்றுவது போல என அவ்வுவமையை விரித்தலும் ஒன்று அட்டகுணம்: அநந்தஞானம்-வரம்பிலாத அறிவு. அநந்த தரிசனம்-வரம்பிலாக் காட்சி. அநந்த வீரியம்-எல்லையற்ற வீரம். அநந்த சுகம்-முடிவிலின்பம் நிர்நாமம்-பெயரின்மை. நிர்கோத்திரம் - கோத்திரமின்மை. நிராயுஷ்யம்-வயதின்மை. சம்யதாபாவம்-அழியாத்தன்மை. எட்டுச்சித்தி; அணிமா -மிகவும் நுண்ணிதாதல். மகிமா-யாண்டும் நிறைந்திருத்தல்;கரிமா-மிகவும் கனத்தல். லகிமா-மிகவும் நொய்தாதல். பிராப்தி-வேண்டுவன அடைதல். பிரகாமியம்-குறைவின்றி நிறைவுள்ளவனுதல். ஈசத்தும்-யாவர்க்கும் மேம்பட்டிருத்தல். வசித்துவம்-தன் வயமாக்கும் வல்லமை. கோகனதன் முதல்வாழ்வு-அயன் முதலாயோர் வாழ்வுநெறி-வழி. அது அறு வகைப்படும். வன்னம்-எழுத்து. பதம் சொல், மந்திரம் - மறைமொழி. கலை-அறிவு. தத்துவம் - மெய்ம்மைக் கூறுகள். புவனம் - உலகு; அசுத்தப் பிரபஞ்சம் - தூயதல்லாத உலகு; மிசிரப் பிரபஞ்சம்-தூய்தும் தூயதல்லதும் கலந்த உலகு, சுத்தப் பிரபஞ்சம்-தூய உலகு.

முக்குண-ரூபமாய் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்றும் முக்குணவடிவாய். துன்பத்திற்கு ஏதுவாய உயிர்க்குரிய இம்முக் குணங்கள் இலனேனும் நிறைவும் தலைமைப்பாடும் உடைய எண்

குணங்களை உடையன் இறைவன் என்பது ஈண்டு அறியத்தக்க தாம். முக்குணங்கள் இலனுதலை 'குணமிலி மானிடன் தேய்மதியன்' என வரும் திருவாசகப் பகுதியானும் அறியலாம். எண்குணங்கள் உளனுதலை எண்குணத்தான் எட்டுக்கொண்டார் என்பனவாதிய திருவாக்குகளால் உணரலாம்.

தற்பரமாய்-உயிர்க்கு மேலாய் (தன்-உயிர் பரம்-மேல்) தோன்றுனே-தோன்றுமல் இருப்பனே இல்லை தோன்றுவன் எனப்பொருள்பட நிற்றலின் ஓகாரம் எதிர்மறையாயிற்று. ஆய்-ஆதல் என்னும் பொருளது, எனவே முன் இல்லது ஒன்று தோன்றினும் அல்லது முன்பு இருந்ததொன்று வளரினும் ஆக்கச் சொல் படுத்துக் கூறுதல் உண்டு ஆனுல் இவ்விடத்தோ முன்பு இல்லாததொன்று உளதாகாது என்றும் உள்ளது என்னும் பொருள் குறித்து நின்றது. இவ்வாறு கோடல் வடமொழிமதம் பற்றியதாம். அறிவாய் என்றவிடத்து ஆய் என்னும் சொல் வேறு எனப் பொருள்பட நின்றது. அதாவது அற்புதமாகிய சூனியத்தின் வேருய் எனும் பொருள்பட நின்றது.இவ்வுலகம் நிலையிலது எனக் காண இறைவனது அருள் ஞானம் தோன்றும். அவ்வாறு ஞானம் தோன்றும் என்னுது முதல்வன் தோன்றும் என்றது குணத்துக்கும் குணிக்கும் உள்ள ஒற்றுமை பற்றியாம். இவ்வாறு கூறுவது• ஏற்றுரையாம். ஞானம்-குணம். முதல்வன்-குணி.

வானே முதல் களைந்த வழி-விண் முதலிய தத்துவங்களை நிலையற்றது எனக் கண்டு அவற்றினின்றும் நீங்கியவிடத்து ஏகதேசவுணர்வு-ஒன்றை அறியும்பொழுது பிறிதொன்றை அறிய முடியாத குறையுடைய அறிவு. ஒரோ ஒன்ருகச்சுட்டி-ஒவ்வொரு தத்துவமாக அறிந்து.

அசத்து என்ன-நிலையற்றது என்று: ஈண்டு என்ன என்றது என்றென்னும் பொருள் படுவதன்றி அவ்வாறு அழிதல் மாலைய வாய பொருளென்று கண்டு கழித்து அவற்றினின்றும் நீங்கி என்னும் பொருள்பட நின்றது. இவ்வாறு ஒருசொல் தனக்குரிய பொருளன்றி இயைபு நோக்கி ஒரு தொடர்ப்பொருளைக் கொள்ளுதல் ஏற்றுரையாம் சட்ட-செம்மை 'சட்ட நேர்பட வந்திலாத சழக்கனேன்' என்னும் திருவாசகமும். தைவமாய் - அடிமையாய் விடுதல்-பற்று நீக்கம் இது மலத்தின் தொழில் போம். பொருளின் நீக்கம். இது உடலின் தொழில் 'பொருந்தணை மேல் வரும் பயனைப்போகமாற்றி' என்னும் திருவாக்கும் போகவும் மாறவும் உள்ள சொல் வன்மை காணலாம்.

அண்டன்-அண்டங்களெல்லாம் தானுய் நிற்கின்ற சிவபரம் பொருள். சோகம்-ஒருமுகப்படுதல். ச + அகம் = சோகம். ச-அது அகம்-நான். அதுவே தானுகப் பாவித்தது.

சானம்–தியானம் என்ற வடமொழிச்சொல் இவ்வாறு சிதைந்து வந்துள்ளது கருட தியானம் என்பது உலகில் காணப்படும் கருடனைத் தியானிப்பதன்று. ஒவ்வொரு உயிர்க்கும் உடல் ஒன்று, மந்திரம் ஒன்று, அம்மந்திரத்தில் நிற்கும் தெய்வத்தன்மை ஒன்று ஆகமூன்று உண்டு. அம்மூன்றனுள் உடல் ஐம்பெரும் பூதங் களின் விளைவாதலால் பௌதிகம் எனப்படும் மந்திரம் தெய்வ இயைபுடைமையால் தைவிதம் எனப்படும். அத்தெய்வத்தன்மை சிவபரம் பொருளது கருணையின் (சிவசத்தியின் காரியம்) விளைவா தலால் ஆன்மிகம் எனப்படும். எனவே இவ்வுலகில் காணும் கருடன் ஆதிபௌதிக கருடனும். அதன் உயிரில் உள்ளுணர்வாகக் கலந்து நிற்கும் தெய்வ இயைபைக் குறிக்கும் மந்திரம் ஆதிதெய்விக கருடனும். அதன் இடமாக நின்று எண்ணுவார்க்கு (மந்திரிப்பார்க்கு) பயன் கொடுப்பதாகிய சிவபரம் பொருளது கருணை ஆத்தியான்மிக கருடனும். இம்மூன்றனுள் இங்குக் குறிக் கப்படும் கருடன் இடையதாகிய அம்மந்திரத்தையாம். இம் மந்திரத்தை நாள் தொறும் எண்ணிப்பழகியதன் வாயிலாக அம் மந்திரமே தானதும் வண்ணம் நிலை ஏற்படும். அவ்வாறு உரைத் திருக்கும் அம் மந்திரக்கண்ணுல் நோக்கப் பாம்பின் விடம் மாறும். அதைப் போன்றே நாள் தொறும் திருவைந்தெழுத்தின் வாயிலாய் இறைவனை நினைந்து நினைந்து பழக அப்பழக்கத்தின் முதிர்ச்சியால் அப்பரம்பொருளின் வயமாய் நிற்கும் தன்மை ஏற்படும். அதன் விளைவால் ஆணவப் பிணிப்பு உயிரிடத்தினின்றும் நீங்கும்.

அசத்தியம் என்பார் மதம்—பொய்ம்மை என்று கொள்வார் தம் கொள்கை·

கண்டவிவை யல்லன் நான் என்றகன்று காணுக்
கழிபரமும் நானல்லேன் எனக் கருதிக் கசிந்த
தொண்டினெடும் உளத்து அவன் ருன்நின்ற கலப்பாலே
சோகம் எனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி;
விண்டகலும் மலங்களெல்லாம். கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல, விமலதையும் அடையும்;
பண்டை மறைகளும் அது நான் ஆனேன் என்று
பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே’

எனவரும் சித்தியார் பாடல் இவ்வெண்பாவின் பொருளை விளக்கி’ நிற்கும்.

## மூன்றும் அதிகரணம்

### மேற்கோள்

இனி. இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது. என்றது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ஆன்மாவைச் சுத்தி பண்ணுதற்குப் பாசம் ஒருவியவழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானசொரூபம் ஒன்றே அமையுமாகலின் இவ்விடத்தில் இனிச் செய்யக் கடவதுஒன்றில்லை என்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றுங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்) மேற் பாசம் ஒருவி ஆண்டுத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானக்கண்ணுற் பதியைச் சிந்தை நாடிய பின்னர் அவ்விடத்துத் திருவைந்தெழுத்தையும் விதிப்படி கணிக்க என மேற்கொண்டது என்றவாறு.

இறந்தது தழீஇய எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. அற்றாகலின் அன்றே "பின்னும்-ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க" (சித்தி 9 : 1) என்றார் வழிநூலாசிரியரும் என்க. ஈண்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தை என்றது முத்தி பஞ்சாக்கரத்தை திருவஞ்செழுத்தால் சாதிக்கப்படும் பொருளும் அதுவேயாகலான்' வேறு வகுத்துக் கூறவேண்டாமையின், விதிப்படியென மாட்டெறிந்து ஒழித்தார். இவ்வாறு ஆசிரியர் மாட்டெறிந்ததூஉம் உணராதார் சாதித்து நிற்குமுறை வேறே ஓதுமுறைவேறேயெனச் சித்தாந்த வழக்கொடு முரணிக்கூறுவார். நிற்குமுறைமையும் ஓதுமுறைமையும் தம்முள் இயைபில்வழி அஃது அதற்குச் சாதனமாமாறு யாண்டையது என்றொழிக.

மானதம், மந்தம், உரை எனக் கணிக்குமாறு மூவகைம்படும் அவற்றுள் சுத்த மானதம் எனப்படும் அறிவாற் கணித்தலே ஈண்டு உச்சரித்தலென்பார், சூத்திரத்துள், உச்சரிக்க என்னாது எண்ணுக என்றார். வடமொழிச் சூத்திரத்துத் தியானிக்க என்றதும் அது. இன்னும் இதன்கட்படும் இயல்பெல்லாம் உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட் காண்க. ஈண்டு விரிக்கின் பெருகும்.

### ஏது

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்து அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீங்குதற்கு எனக்கொள்க

என்றது ஏது. என்நுதலிற்றோவெனின், அந்தரங்க வழிபாடாகலின் அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக்கண்டு வழிபடு மாற்றைச் சார வைத்து ஓதற்பாலதாகிய இதனைச் சித்த சாதனமாய் ஈண்டு விதித்தல் எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) வேம்பு தின்ற புழு அதனை ஒருவிக் கரும்பைத் தலைப் பட்டு அதன் சுவை தெரிந்துழியும், பயிற்சி வயத்தான் நோக்கிற்றை நோக்கி நிற்குமாறு போல, அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்து என்று கண்ட உயிர்களுக்கு அதனான் ஞான சொரூபம் விளங்கி ஞேயம் காட்சிப்பட்டவிடத்தும், அவை பயிற்சி வயத்தால் பண்டைச் சிற்றுணர்வை நோக்கி நிற்குமா கலின், அவ்வாதனை நீக்குதற் பொருட்டு ஈண்டைக்கு வேண்டப் படுதலான் இனி ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி இவ்விடத்து உச்சரிக்கவென மேற்கொண்டதெனக் கொள்க என்றவாறு.

இவ்விடத்து என்றதனால் அணைந்தோர் தன்மையைச் சார வைத்து மேற்கோடற்குரிய ஸ்ரீ பஞ்சாக்கரத்தையென வருவித்து ரைத்துக் கொள்க. எனக்கொள்க என்று உடம்படுப்பித்ததும் அதுபற்றி. இக்கருத்து நோக்கியன்றே புடை நூலாசிரியர் அஞ்செழுத் தருணிலையை ஆன்மலாபத்தின் பின்னாக அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து ஓதியதூஉம் என்க.

''வானோக்கிவாழும்......கோனோக்கிவாழும்'' என்றாற்போல ஈண்டு நோக்கென்றது மனவெழுச்சி விசேடத்தை. பிரகாசித்த வழியென்பது பிரகாசித்தெனத் திரிந்தது. ஈண்டு ஞானம்என்றது அசத்தை அசத்தென்று கண்டவழி விளங்குவது எனப்பட்ட ஞான சொருபத்தை;அஞ்ஞானம் என்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வை என உணர்க. அது நீக்குதற்கெனக் கொள்க எனவே, சித்த சாதனம் அன்றென்பதும் பெறப்பட்டது.

எடுத்துக்காட்டு

**அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டுஅரனை**
**அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில் — அஞ்செழுத்தால்**
**குண்டலியில் செய்துஓமம் கோதண்டம் சானிக்கில்**
**அண்டனும் சேடனும் அங்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், இஃது அவ்வாசனையை நீக்குதற்குச் சாதகமாமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி அஃது ஆமாறு ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) உள்ளம் அரனுடைமை அஞ்செழுத்தால் கண்டு — உயிர் சிவனுக்கு உடைமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கும் முறையில் வைத்து நோக்கி; இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து—தன்னுடம்பகத்தே இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றனையும், முறையே பூசைத்தானம், ஓமத்தானம், தியானத் தானமாகக்கருதிக் கொண்டு புறம்பே ஞானபூசை செய்யுமுறைப் படி இதய பங்கயத்தில் அவ்வஞ்செழுத்தால் அமைந்த திருமேனியில் அம்முதல்வனைக் கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறை அருள் அறிவு வாய்மை தவம் அன்பு என்னும் அட்ட புட்பம் கொண்டு அம்மனுவால் அர்ச்சனை செய்து; அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமம் செய்து அத்திருமந்திரத் தானே குண்டலித்தானமான உந்தியில் ஞானவனலையெழுப்பி அதன்கண் விந்துத்தானத்து அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் ஓமித்து; கோதண்டம் சானிக்கில்-விந்துத்தானமாகிய புருவநடுவில் சிகரயகர வகரங்கள் மூன்றும் முறையே தற்பதப்பொருளும் துவம்பதப் பொருளும் அசிபதப்பொருளுமாம் முறைமை நோக்கி அதனற் சிவோகம் பாவனை செய்வானாயின்; அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம்-அப்பொழுதே அப்பாவனைக் கண் அம் முதல்வன் விளங்கித் தோன்றுவன், அப்பாவகன் அவனுக்குச் சேட சேடிய பாவகத்தால் அடிமையாவன் என்றவாறு.

ஓமித்தலும் தியானித்தலும் பூசைக்கு அங்கம் என அறிக. ஞான சொரூபம் விளங்கிய வழியும் பயிற்சி வயத்தான் ஏகதேசப் பட்டுப் புறத்திற் செல்ல நோக்குவதாய தன்னறிவை அங்ஙனம் ஆகாதவாறு மடக்கி அகத்தே ஒரு குறியின்கண் நிறுத்தி நிட்டை கூடும்படி அஞ்செழுத்து ஓதும் முறையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க அஃது அந்நோக்கத்தைப் பற்றறக் கெடுத்து ஞானசொரூபத்தை இனிது விளக்கிப் பூரணநிலையிற் கொண்டு செலுத்துமாகலின் இஃது ஈண்டைக்குச் சிறந்த சாதனமாயிற்று என்பது.

எடுத்துக்காட்டு

**இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்**
**சிந்தையில் காணில் சிவன்கண்ணும்—உந்தவே**
**காட்டாக்கிற் றேன்றிக் கனல்சேர் இரும்பென்ன**
**ஆள்தானும் ஓதுஅஞ் செழுத்து.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அங்ஙனம் ஒரு குறியின்கண் வைத்தன்றி முதல்வனைக் காண்டல் செல்லாத வாறும் அவ்வாறு கண்டவழி முதல்வன் தன்மாட்டு விளங்கித் தோன்றுமாறும் தோன்றியவழித் தான் அம்முதல்வனுக்கு

அடிமையா மாறும் உவமையில் வைத்து உணர்த்தி அதனை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ-ள்) இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்கு - அந்தரத்து இயங்கும் நவகோள்களுள் ஏனைய போலக் காணப் படாத இராகு கேதுக்களை உபராகத்தில் சந்திராதித்தர் மாட்டுக் கண்டாற் போல; சிந்தையில் காணில் — முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர்விற்கு விடயமாகிய பசுபாசங்களோடு ஒப்ப வேறு உணரப்படாத முதல்வனைத் தன் இதய பங்கயத்தின் அஞ்செழுத்தின் முறையில் வைத்து காணுமாயின்; உந்தவே காட்டாக்கில் சிவன் தோன்றிக் கண் ஆம்—கோலை நட்டு கயிற்றினுல் சுற்றிக் கடையவே காட்டத்தினின்று அங்கி தோன்றுமாறு போல அம்முதல்வன் ஆண்டுத் தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன்; தான் கனல்சேர் இரும்பு என்ன ஆள்—ஆம் அப்பொழுது தானும் எரி சேர்ந்த இரும்புபோலத் தனது சுதந்திரத்தைவிட்டு அம்முதல் வனுக்கு அடிமையாம்; அஞ்செழுத்து ஓது — ஆகலான் அத் திருவைந்தெழுத்தை விதிப்படி ஓதுவாயாக என்றவாறு.

கேது சாயாக் கிரகமாகலின், வேறு கூருராயினர். கண், அறிவு தோன்றி யாமென இயையும், உந்துதல் ஈண்டுக் கடைதல் மேற்று, காட்டாக்கி வடமொழிச் சிதைவு, தான் எழுவாய். இகரம் விகாரத்தால் தொக்கது. இன் உவம வுருபு. ஈண்டும் ஓதஞ்செழுத்து என்றது வலியுறுத்தவாறு.

எடுத்துக்காட்டு

**மண்முதல் நாளம்மலர் வித்தை கலாருபம்**
**எண்ணிய ஈசர் சதாசிவம்—நண்ணில்**
**கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்**
**நிலையதிலாம் அச்சிவன்தாள் சேர்.**

என்பது உதாரணம், என்நுதலிற்றோ வெனின், தத்துவ முப்பத்தாறுக்கும் மேற்பட்ட முதல்வனை இதய பங்கயத்தில் கண்டு அர்ச்சிக்குமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி அவ்விதய பங்கயத்தின் இயல்புணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) நண்ணில் — அவ்விதய பங்கயத்தின் இயல்பை அறியப்புகின்; மண்முதல் நாளம்—நிலமுதலிய இருபத்து நான்கு தத்துவமும் உந்தியினின்றுந் தோன்றி எண் விரலளவைத் தாயுள்ள நாளவடிவாம்; வித்தை மலர் —வித்தியா தத்துவங்கள்

ஏழும் சுத்த வித்தையும் என்னும் எட்டுத் தத்துவமும் எட்டு இதழ் வடிவாம்; எண்ணிய ஈசர் சதாசிவமும் காலரூபம் — அத் தத்துவங்களுக்கு மேலாகக் கருதப்பட்ட ஈசுரஞ் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கெனப்படும் கேசர வடிவாம்;சத்தி கலை உருவாம்-சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்கு உள்ளாகிய பொகுட்டு வடிவாம்; நாதம் அதன் கண்ணும் — சிவதத்துவம் அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு வீச வடிவாம்; அதில் அச்சிவன் தாள் நிலையாம்-ஆகலான் அவ்வியல் பிற்ருகிய இதய பங்கயத்தின் முப்பத்தாறு தத்துவமும் ஆசன மாகவுடைய அச்சிவனது சத்தி நிலை பெறும்; நேர்-அதனையறிந்து திருவஞ்செழுத்தால் அர்ச்சிப்பாயாக எ-று.

இதனுனே ''அண்ட பிண்டம் அவை சமமாதலால் (கோவில் புராணம் பதஞ்சலி) புறத்துக் காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்தினில் சூக்குமமாய் உண்டு என்பது காட்டி முதல்வனுக்கு இந்நிலையே அந்நிலையெனத் தெளிவித்தவாறு. வித்தை என்பது இரட்டுற மொழிதலான் அவ்வாறு உரைக்கப் பட்டது. சிவஞான சித்தியில் 'மூட்டு மோகினிசுத்த வித்தை மலரெட்டாய்'' என்புழி மோகினியென்றதூஉம், ஆகுபெயரான் அதன் காரியமாய கலாதிகளின் மேனின்றது.

இவ்வாறின்றி, நில முதலிய முப்பத்தொரு தத்துவம் எனப் படும் எட்டுக்கொத்தும் எண் விரல் நாளை வடிவும், அசுத்த மாயா தத்துவம் நாளத்துக்கும் மலருக்கும் நடுக்கண்டமாகிய கிரந்தி வடிவும், அதற்கு மேல் சுத்த வித்தையில் வாமை முதலிய எட்டும் எட்டிதழ் வடிவுமாம் என்றுரைப்பாரும், முப்பத்தொன்றுக்கு மேல் அசுத்த மாயை கிரந்தியின் அதச்சதனம், சுத்த மாயை ஊர்த்துவச் சதனம், அதற்கு மேல் ஈசுர தத்துவத்தில் அனந்தன் முதலிய எட்டும் எட்டிதழ் வடிவும் சதாசிவ தத்துவ மொன்றுங் கேசர வடிவமெனக் கொண்டு அதற்கியையக் கொண்டு கூட்டி உரைப்பாரும், கலாரூபம் என்றது பஞ்சகலைகளை எனவும் அஃது யாண்டும் கூட்டி யுரைக்கப்படும் எனவும் கொண்டு, மண் முதல் நாள மலர் என்பதற்கு மண்ணுகிய நிவர்த்தி கலாரூபம் நாளமும் மண்ணை முதலாகவுடைய ஏனை யிருபத்துமூன்று தத்துவமாகிய பிரதிட்டாகலாரூபம் மலருமாம் எனவும், வித்தை எண்ணிய ஈசர் சதாசிவமும் கலை என்பதற்கு வித்தியா தத்துவமாகிய வித்தியா கலாரூபம் கலையெனப்படும் சேகரமும், சுத்த வித்தையோடு கூடி எண்ணப்பட்ட ஈசுர தத்துவம் சதாசிவ தத்துவமாகிய சாந்தி கலாரூபம் கலைக்குள் உருவெனப்படும் பொகுட்டுமாம் எனவும், நாதமாஞ் சத்தியதன் கண்ணும் என்பதற்குச் சிவதத்துவம் சத்தி தத்துவமாகிய சாந்தியதீத கலாரூபம் பொகுட்டின்

கண்ணுகிய வீசமாம் எனவும் உரைப்பாருமுளர். இவையெல்லாம் அவ்வவ் வாகமபேதம் பற்றிக்கொள்ளப்படும்.

கலை, அறுபத்து நான்காகலான், அறுபத்து நான்காகிய கேசரங்களுக்குத் தொகை பற்றிக் கூறப்படும் ஆகுபெயராயிற்று. ஈசர் ஆகுபெயர். கலையுரு கலைக்குள்ளுரு என உள்ளுருபு விரித்துரைக்க. அதில்என்புழி அன்சாரியைவிகாரத்தால்தொக்கது. இது நாள முதலாக மேனேக்கித் தோன்றும் உலகத்துக் கமலம் போலாது கண் முதலாகக் கீழ்நோக்கித் தோன்றியதோர் திப்பிய கமலமெனக் கொள்க சிவன்ருள் அதின் நிலையா மெனவே சிவன் சத்திக்கு மேலாய் நிற்பன் என்பதூஉம் பெறப்படும்.

(நு–வி) ஞானம் வெளிப்பட்டவிடத்தும் திருவைந்தெழுத்தை முறையாக எண்ணுதல் வேண்டும். பஞ்சாக்கரத்தையும் எனக் கூற வேண்டுவது பஞ்சாக்கரத்தை என நிற்றலின் உம்மைத் தொக்கதென்றார். ஞானம் வெளிப்பட்டவிடத்தும் என முன்னைய அதிகரணப்பொருளைத் தழுவி நிற்றலின் இறந்தது தழீஇய எச்சவும்மை என்ருர் இவ்வும்மையை விரித்தல் ஆசிரியர் கருத்தாதல் வழி நூலாசிரியர் 'பின்னும்' எனக் கூறியதாலும் விளங்கும். திருவைந்தெழுத்து தூலபஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், ஆதி சூக்கும பஞ்சாக்கரம் என மூவகைப்படும். தூலபஞ்சாக்கரம் நகரத்தை முதலாக உடையது. (நமசிவாய) சூக்கும பஞ்சாக்கரம் சிகரத்தை முதலாக உடையது. (சிவாயநம). அதி சூக்கும பஞ்சாக்கரம் நகர–மகரங்கள் இரண்டுமின்றி யகரத்தை இடைவைத்து முன்னும் பின்னும் சிவ என்னும் அருமறையைக் கூட்டி உரைப்பதாம். (சிவயசிவ). இதனைக் காரண பஞ்சாக்கரம் எனவும், முத்தி பஞ்சாக்கரம் எனவும் கூறுவர். ஈண்டு ஸ்ரீபஞ்சாக்கரம் என்பது வீடுபேற்றுக்கு உரியதாகிய இத்திருவைந்வெழுத்தையேயாம். இவ்வைந்தெழுத்தை உச்சரிக்கும் முறைமையைக் கூருமல் விதிப்படி உச்சரிக்க என்று கூறியகருத்து என்னையெனில் பாசத்தை நீக்கி ஞானக் கண்ணினுல் சிவபரம்பொருளை நாடுவதே இதன் பொருளாதலானும் அதனை இரண்டாம் அதிகரணத்தில் கூறிவிட்டமையின் அவ்வாறு நிற்கும் முறையே ஓதும்முறைமையுமாம் என அறிவிக்க வேண்டி இவ்வாறு கூறினர் என்பதாம். மாட்டெறிதலாவது மேல் இரண்டாம் அதிகரணத்தில் கூறியதையே இதற்கும் ஏற்குமாறு கூறுதல். நிற்கும் முறையாவது நகர வகரங்களின் இடை உயிர் நில்லாது முன்னும் பின்னும் சிவ என்னும் அருமறை நிற்ப இடையில் உயிர் நிற்பதாம். இதனை 'ஆசில்நவா நாப்பன் அடையாது அருளினல், வாசியிடை நிற்கை வழக்கு' 'சிவ முதலே ஆமாறு சேருமேல் தீரும், பவம் இதுநீ படி' எனவரும் திருவருட்பயன் வாக்கால் அறியலாம். அவ்வாறு

நிற்கும் முறைமையே ஈண்டு ஓதும் முறைமையாம். ஞானக் கண்ணினுல் காண்பதென்பது உயிர் திருவருள் வயத்ததாய் நின்று அதன் துணையால் தன் அறிவின் கண்ணே சிவபரம் பொருளை விளங்கக் காண்டலாம். இதனை 'அவனருளே கண்ணுகக் காணின் அல்லாமல் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணுதே' என அப்பரடிகள் அருளுமாற்றுன் உணரலாம். நிற்கும் முறை ஒன்றுயும் ஓதும்முறை ஒன்றுயும் இருப்பின் நிற்கும் முறைமை நிலைப்பதற்கு ஓதும் முறைமை சாதனமாகாது ஆதலின் பிறர்கருத்துப் பொருந்தாது.

கணித்தல்–எண்ணுதல். மானதம்–மனத்தல் எண்ணுவது மந்தம் தன் செவியளவில் கேட்குமாறு கூறுவது. உரை–பிறர் செவிக்கும் கேட்குமாறு வாய்விட்டுச் சொல்வது. இவற்றுள் உரை யால் ஒலிக்கும் போது மனம் கலவாதிருத்தலும் கூடும். தன் செவிக்குக் கேட்குமாறு ஒலிக்கும் காலத்து மனம் கலந்து நிற்கு மெனினும் அதுவே அறிவு வடிவாய் நின்று என்னுங்கால் பயன் மிகுதலின் அவ்வாறு எண்ணுதலையே ஈண்டுக் கூறினர். மனத் தால் என்னும் மானதத்தினும் அதுவே அறிவாய் நின்று எண்ணும் தூய மானதம் உயர்ந்ததாம். உரை கலப்பின்றி எண்ணிப் பாவிக்கும் இதனைச் சுத்தமானதம் என்பர்.

வேம்பு தின்ற புழுப்போல்—வேம்பினைத் தின்ற புழு அதனை விடுத்து கரும்பைக் கூடி அதன் சுவையை அறிந்து துய்க்க பின்னும் முன்பு பல நாள் பழகிய பழக்கத்தால் கரும்பை விடுத்து அவ்வேம்பினையே நுகர நினைவது போல. உலகியல் நுகர்வில் திளைத்த உயிர் முன் அதிகரணத்தில் கூறியவாறு அதன் உண்மை உணர்ந்து அதனை விடுத்துத் திருவருள் இன்பத்தில் திளைத்த பொழுதும் முன் பழகிய நீண்ட காலப் பழக்கத்தால் உலகியல் உணர்வில் தலைப்பட நினையும். நோக்கிற்றை நோக்கி நிற்றலாவது நிலையற்றதும் பிறப்பிறப்பிற்கு ஏதுவாயதுமாய உலகியல் உணர்வில் முன் திளைத்தவாறு மீண்டும் திளைக்க எண்ணுதல். நோக்கம் இருவகைப்படும். 1. நோக்கிய நோக்கம்; கண்ணுல் பார்த்தல், 2. நோக்கல் நோக்கம்: மனதால் பார்த்தல். ஈண்டுக் கூறும் நோக்கம் பின்னையதாம் வானேக்கி வாழும் உலகெல்லாம், பிறன்மனை நோக்காத பேராண்மை என்பனவும் அன்ன. இவ்வெண்ணம் முழுமையாக நீங்குதற்கே திருவைந்தெழுத்தை ஈண்டு முறையாக எண்ணவேண்டும் என அறிவுறுத்துகிருர் ஆசிரியர். அழுந்தாதே பாசத்து அனுதினமும் ஐயோ, விழுந்தால் எழுந்திருக்க வேண்டும்—செழும்பாகை, மீறித் 'தரும் இரத வீட்டின்ப மாமலைமேல், ஏறித் திரும்பலாமே' என குருஞான

சம்பந்தர் இரங்கிக் கூறும் இவ்வருளுரையும் ஈண்டு எண்ணத் தக்கதாம்.

அந்தரங்க வழிபாடு—அக வழிபாடு: திருவைந்தெழுத்தை அறிவால் எண்ணுதலாம், பின்வரும் பன்னிரண்டாம் நூற்பாவின் கருத்துரையில் அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று என்ற தொடர் காணப் படுகிறது. அசிந்திதனுய்— சிந்திப்பதற்கு அரியனுய். 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே', 'சிந்திப்பரியன' எனவரும் திருவாக்குகள் காண்க. நின்ற பதி—நிலைபெற்ற பரம்பொருள். சிந்திதனுக சிந்தனைக்கு உரியனுக. அடியார்சிந்தனையுள் தேனூறி நின்று என்றலும் காண்க. எனவே மனத்தாலும் நினைதற்கரிய பரம்பொருளை நினைந்து வழிபடுமாறும் அவ்வழிபாடும் திருவைந் தெழுத்தை அறிவால் எண்ணுதலாமாறும் பின்னர்க் கூறப்படு கின்றது. ஈண்டும் அவ் அக வழிப்பாட்டைக் கூறுதல் சித்த சாதனமாம் என்பாரை மறுக்கவே இவ்வேது ஈண்டுக் கூறப்படுகின்றது. சித்த சாதனம்—பின்னர்முடிவு செய்திருக்கும் பொருளையே முன்னர்க் கூறுவதும் அன்றி முன்னர் முடிவு செய்த பொருளையே பின்னர்க்கூறுவதும் ஆம் ஈண்டுச் செய்யும் வழிபாடு சாதனை நிலைபெறவும் ஆண்டுச் செய்யும்வழிபாடு பயன் நிலைபெறவும் கூறியதாமாகலின் சித்த சாதனம் அன்ரும்.

ஞேயம் காட்சிப்பட்ட விடத்தும்—காண்டற்கரியபொருளாய பதிப்பொருள் காட்சிக்கு உரியதாய விடத்தும்.

பஞ்சாக்கரத்தை உச்சரிக்க என்றலே அமையும். இவ்விடத்து எனக் கூறியது எற்றுக்கு எனில்திருவைந்தெழுத்தை ஓதும் இடம் இரண்டாம் 1. மேல் அணைந்தோரும் எண்ணவேண்டும் எனக் கூறுமிடம் 2. அகவழிபாடு செய்வோர் எண்ணவேண்டுமென இங்குக் கூறப்படுமிடம். இவ்விரண்டனுள், அகவழிபாடு செய் வோர் எண்ணவேண்டிய இடம் இதுவாதல் விளங்க இங்கு எனக் கூறினர் என்பது அணைந்தோர் தன்மையை அடுத்து அதன் முன்னுகக் கூற வேண்டுவதை ஈண்டும் கூறியது சிவோகம் பாவனை நிலை பெறுதற் பொருட்டாம் என்பது கருத்தாகக் கொள்க. இவ்விடத்து என்றற்குக் கூறிய விளக்கமே அமையுமாதலின் இத்தொடருக்கு மீளவும் இவ்வாறு பொருள் காண்டல் அறியத் தக்கதாம். புடை நூலாசிரியர்-சார்புநூலாசிரியராய உமாபதிசிவம். ஆன்மலாபம்— உயிர் விளக்கம். திருவருட்பயனில் உயிர் விளக்கமும் இன்புறு நிலையும் கூறியபின் ஐந்தெழுத்து அருள்நிலை கூறப்படுகின்றது. அணைந்தோர் தன்மையைச் சாரவும் உள்ளது. காரணம் திருவருளை

அடைவதற்கு உயிர் செய்யும் பயிற்சிநிலையில் இடையீடு நிகழா திருக்கவும் அம்முயற்சியின் பயனுகக் கிடைத்த பயனில் இடையீடுபடாதிருக்கவுமேயாம். நோக்குதல்—மனத்தால் நோக்குதல் என்னும் பொருளதன்றி அதனைத் துய்த்தலாகிய இன்ப எழுச்சியையும் குறிப்பதாம்.

பூசைத்தானம் – பூசைக்குரிய இடம். அட்ட புட்பம்-எண் வகை மலர்கள். இறைவனைப் புறத்தே புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவட்டம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை ஆகிய எண்மலர்களைக் கொண்டு வழிபடுவதுபோல இறைவனை அகத்தே இவ் எண்வகைக் குணங்களையும் மலர்களாகக்கொண்டு வழிபடுவது என்பாதாம். 'எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி' மட்ட தரிடு வார்வினை மாயுமால், கட்டித் தேன்கலந் தன்னை கெடிலவீ – ரட்டனுரடி சேரு மவருக்கே' என வரும் அப்பரடிகளின் திருவாக்கும் ஈண்டு நினைவுகூரத் தக்கது. விந்துத் தானம் – புருவ நடு. அடிவயிற்றில் உள்ள ஒலியை எழுப்பிக் கொப்பூழின்கண் அமைத்து நெற்றி புருவத்து உறையும் விந்து வாகிய (வெண்மையான நீர்) அமிர்தத்தை நெய்யாகக் கருதி நடுநரம்பு இடைநரம்பு ஆகியவற்றை அந்நெய்யைப் பெய்யும் துடுப்புக்களாகக் கொண்டு அத்தீயின்கண் பெய்து வேள்வி இயற்றுதலாகும். அம்மனுவால் அர்ச்சனை செய்து – அத்திருவைந் தெழுத்தால் போற்றி உரை செய்து. சுழுமுனைநாடி – அடிவயிறி லிருந்து உந்தித் துளை வரை நிற்கும் நடுநரம்பு. இடைநாடி-இட மூக்கில் நிற்கும் நரம்பு. சுருக்கு சுருவம் என்பன நெய் பெய்தற் குரிய துடுப்புக்கள். ஓமித்து – வேள்வி செய்து. கோதண்டம் – புருவநடு. தற்பதப் பொருள் – இறை. துவம்பதம் – உயிர், அசிபதம்-இவ்விரண்டும் ஒன்றுந் தன்மை. தத்–அது. துவம்–நீ. அசி–ஆகிருய். எனவே தத்துவமசி என்னும் சொல் அது நீ ஆகிருய் என்றும் பொருள்படும். முற்கூறிய வேள்வியின் பயனுக இறைவயப்பட்டு அதுவே பிரிவின்றி இயையும் அப் பாவனையையும் செய்யின் இறைவன் விளங்கித் தோற்றுவன் என்பதாம். சேடன்-உயிர்சேடம் என்பது எஞ்சியது என்னும் பொருளைக் குறிப்பது. யாதானும் ஒரு பொருளின்றி எஞ்சியது என்னும் பொருள் உளவாகாது. எனவே இறைவனையன்றி அமையாத உயிர் சேடம் எனப்பட்டது. சேடியம் – சேடத்தை உடையது; இறை. பூரண நிலையில் – இறைவனேடு ஒன்றுபட்ட நிலையில். அந்தரத்து இயங்கும்–விண்ணில் இயங்கும். உபராகத்தில்–கிரகண காலத்தில். இராகு கேது என்பன முறையே கரும் பாம்பு செம் பாம்பு என்று கூறுவர். இவை தனிக் கோள்கள் அல்ல. ஞாயிறு திங்களாகிய இரண்டின் நிழற்கோள்களேயாம். கண்டது மன்னும் ஒரு நாள் அலர் மன்னும் திங்களைப் பாம்பு – கொண்டற்று என்னும் திருக்குறளும்.

இயல்பாக அறியப்பெருத இராகு கேதுக்களை சந்திர கிரகண காலத்தும் சூரிய கிரகண காலத்தும் விளங்கி அறிதல் போல இயல்பாக அறியப் பெருத இறைவனையும் இவ் அகவழிபாட்டின் வழி அறியலாம். விறகில் கோல் நட்டுக் கடைந்த பொழுது நெருப்புத் தோன்றுதல் போல இதயமாகிய இவ்விறகிடத்து வேள்வியும் எண்ணுதலும் (தியானித்தலும்) செய்ய இறைவன் தோன்றுவன். நெருப்பைச் சேர்ந்த இரும்பு நெருப்பாதல் போல அவ்வழி இறைவனைச் சேர்ந்த உயிரும் இறையாய் அப்பரம் பொருளுக்கு அடிமை செய்து நிற்கும் என்பது கருத்து. காட்டத்தினின்று - விறகிலிருந்து. அங்கி-நெருப்பு. கேது தனிக்கோள் இன்மையின் அவ்வாருய இராகுவைக்கூறி அதனுல் கேதுவையும் உணர வைத்தார். கண் ஆம்-அறிவுக்கு அறிவாய் விளங்கும். உந்துதல்-செலுத்துதல். ஈண்டுக் கடைதல் என்னும் பொருளைக் குறிக்கும். காஷ்டாக்கினி - என்னும் வடமொழித்தொடர் காட்டாக்கின் என நின்றது. காட்டாக்கின் - விறகிடத்துத் தோன்றும் நெருப்புப் போல. இன் ஒப்புப் பொருளது. மேலைய வெண்பாவில் ஐந்தெழுத்தால் வழிபடுமாறு கூறி ஈண்டும் ஓது அஞ்செழுத்து என்றது அவ் அகவழிபாட்டை வலியுறுத்தவாம்.

நாள வடிவாம்-அடித்தண்டின் வடிவாம். இதய தாமரையின் தண்டு எண்விரல் நீளமுடையது என்பது. கேசர வடிவாம் - பூந்தாதுவின் வடிவாம். பொகுட்டு-கொட்டை. வீசவடிவாம் விதையின் வடிவாம்.

அண்ட பிண்ட சமமாம்-அண்டத்தில் உள்ளனவெல்லாம் பிண்டத்திலும் உண்டு. வித்தை என்பது இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால் வித்தியாதத்துவம் ஏழையும் சுத்தவித்தை யையும் குறித்து நின்றது. சித்தியார் பாடலில் மோகினி என்பது அசுத்த மாயையை உணர்த்திற்று. ஆகுபெயராய் அதன்பின் அதன் காரியமாகிய கலை முதலிய தத்துவங்களையும் குறித்து நின்றது.

எட்டுக்கொத்து ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு, வித்தியா தத்துவம் ஏழு ஆக முப்பத்தொன்றையும் பூதம், தன்மாத்திரை ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம், குணம், பிரகிருதி, கலாதி என எட்டுக்கொத்தாகக் கொள்ளல். கிரந்தி வடிவு-முடிச்சு வடிவு. அதச் சதனம்-கீழிடம். ஊர்த்துவச்சதனம்-மேலிடம்.

கலை: ஈண்டு அறுப்பத்து நான்காகக் கூறப்படும் தொகை முழுதையும் குறித்தமையின் ஆகுபெயராயிற்று. சாதி ஒருமை எனினும் இழுக்காது. ஈசர்: அவர் வதியும தத்துவத்திற்கு ஆயினமையின் ஆகுபெயராயிற்று அதனின் என வருதல் இலக்கண வழக்கு. அவ்வாறன்றி அதில் என வந்தமையின் அன்சாரியைத் தொக்கதென்ருர். திப்பிய கமலம் – தெய்வீகத் தாமரை.

## பயனியல்

பத்தாவது நூற்பா

**அவனே தானே யாகிய அந்நெறி**
**ஏகன் ஆகி இறைபணி நிற்க**
**மலம்மாயை தன்ெெடு வல்வினை இன்றே**

என்பது சூத்திரம். என்நுதலிற்ரோ வெனின், பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்ரோவெனின், சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ–ள்) மேல் ஏழாஞ்சூத்திரம் முதலிய மூன்ருனும் முறையே சாதிக்கும் பொருளது இயல்பும் சாதித்துப்பெறப்படும் பொருளது இயல்பும், சாதிக்குமாறும் உணர்த்தி, இனி அச்சாதனத்தானய பயன் இயல்பு வகுத்துக் கூறுவான் எடுத்துக்கொண்டார். அப்பயனவது பாசவீடும் சிவப்பேறும் என இருவகைப்படும். அவ்விரண்டனுள் சுட்டுணர்வினகிய ஏகதேச நோக்கத்தைத் திருவைஞ் செழுத்தினது உச்சரிப்பாற் பற்றறத் துடைத்தவழிப் பெறப்படுவதாகிய, மேலைச் சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட, ஆன்மசுத்திப் பயனுகிய பாச விடுதியைச் செய்துகொள்ளுமாறு, மேல் சிந்தனை செய்த பொருளைத் தெளியுமாறு உணர்த்து முகத்தான் உணர்த்துதல் இப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து எ–று.

இதனனே சூத்திர இயைபும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின்பிண்டப்பொழிப்பு.ஞானக்கண்ணுற் காணப் பட்ட அம்முதல்வன் தான் உடனய் நின்று அறியவும் வேறு காணப்படுமாறின்றி யானே அறிந்தேன் என்னும்படி உயிர் தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின்வழி நின்ற அப்பெத்த நிலைபோல், ஈண்டு உயிர் அம் முதல்வனேடு உடனய் நின்றறி யினும் தானென வேறுகாணப்படுமாறின்றி அவனெடு ஒற்றுமைப் பட்டு அவ்விறை பணியின் வழுவாது நிற்பின், மலமாயை யென்னும் இரண்டனேடு வலிய கன்மமலமும் இல்லையாய் ஒழியும் எ–று.

அவனே தானே யென்னும் ஏகாரம்இரண்டனுள் முன்னையது பிரிநிலைக் கண்ணும் பின்னையது தேற்றத்தின் கண்ணும் வந்தன.

நெறி உவமவுருபு.

மலமாயையொடு கூடிய வினையென்றாராகலின் இன்றே என்றார்.

உவமைக்கு ஓதியது பொருளினும், பொருளுக்கு ஓதியது உவமையினும் சென்று இயைந்தன.

ஈண்டொற்றுமைப் படுதலாவது, குடமுடைந்தவழிக் குடாகாயமும் ஆகாயமும் போல ஒருபொருளாய் ஒற்றுமைப் படுதலோ, அன்றிக் குற்றியை மகனென்பது போலத் திரிவு காட்சியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி மண்ணே குடமென்பது போல ஒன்று திரிந்தொன்றாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றி வெள்ளையும் தாமரையும் போலக் குணகுணித் தன்மையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தீயும் இரும்பும் போல ஒன்றி னொன்று விரவுதலான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப் பாலும் நீரும்போலப் பிரிக்கப்படாத சையோகத்தான் ஒற்றுமைப்படு தலோ, அன்றிக் கருடனும் மாந்திரிகனும் போலப் பாவனை மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ அன்றிக் காய்ந்த இரும்பின் நீர் போல ஒன்றினொன்று இலயமாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப் பேயும் பேய்பிடியுண்டவனும்போல ஆவேசத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி இந்தனத்தின் எரிபோல விளங்கா மையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஞாயிற்றின் ஒளியின் விளக்கொளி போலச் சத்தி கெட்டு நிற்றலான் ஒற்றுமைப்படு தலோ, அன்றித் தலைவனும் 'தலைவியும் போல இன்பநுகர்ச்சி மாத்திரையான்ஒற்றுமைப்படுதலோ,அன்றி நட்டாரிருவர் போல நட்புமிகுதியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஆவும் ஆமாவும் போல ஒப்புமை மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ என்று அவ்வச் சமயவாதிகள் மதம் பற்றி நிகழும் இன்னோரன்ன ஐயப் பாடுகளை யெல்லாம் நீக்குதற் பொருட்டு, அவனே தானேயாகிய அந்நெறியென உவமை யெடுத்துக்காட்டி யோதினார். ஈண்டுக் கூறிய ஒற்றுமைக்கண்படும் இயைபாவ தென்னையெனின் அது வருகின்ற சூத்திரத்திற் பெறப்படும்.

இதனுள் அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி என்றது ஓர் அதிகரணம்;இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே என்றது ஓர் அதிகரணம்; ஆக இரண்டு அதிகரணத்தது இச் சூத்திரம் என்று உணர்க.

(நு. வி) பாசக்ஷயம்-பாசநீக்கம். சாதிக்கும் பொருள்-உயிர். இதன் இயல்பு ஏழாவது நூற்பாவில் உணர்த்தப்பட்டது. சாதித்துப் பெறப்படும் பொருள்-குருவாளால் பெறும் திருவருள். பெத்த நிலைபோல்-கருவி கரணங்களுடன் கட்டுப்பட்டுக் கிடந்த சகலநிலை போல்.

அவனே என்பதிலுள்ள ஏகாரம் இறைவனினின்றும் உயிரைப் பிரித்தலின் பிரிநிலையாயிற்று. தானே என்பதிலுள்ள ஏகாரம் முதல்வன் உயிராகவே நிற்றலைக் குறித்தலின் தேற்றம் ஆயிற்று அந்நெறி—(அப் பெத்த நெறியைப்) போல, இப் பொருள்பட நிற்றலின் உவமவுருபாயிற்று. மலம் தன்னொடு வல்வினையின்றே மாயை தன்னொடு வல்வினையின்றே எனத் தனித்தனிக் கூட்டி முடித்தலின் இன்று என ஒருமையால் கூறினர். 'சிறப்பொடு பூசனை செல்லாது' என்பதையும் நினைவுகூர உள்ளது. இந்நூற் பாவில் கட்டுநிலை (பெத்த நிலை) உவமையாம். வீட்டுநிலை (முத்தி நிலை) பொருளாம். (உவமேயமாம்), அவனே தானே ஆகிய என்பது உவமைக்குக் கூறிய அடைமொழியாம். அவ் அடை மொழி பொருளாகிய ஏகனாகி இறைபணி நிற்க என்பதனோடும் இயைத்து உரைக்கப்பட்டது. பொருளுக்கு ஓதிய ஏகனாகி என்னும் அடைமொழி உவமையினும் இயைந்தது.

உயிர் முதல்வனொடு ஒற்றுமைப்படுதலைச் சமயவாதிகள் பலரும் ஏற்பர். எனினும் அவ்வொற்றுமையைக் காட்டும் நிலை பல்வேறு வகைத்தாம். அவ்வவர்தம் கருத்தையும் ஈண்டு ஆசிரியர் விளக்குகிறார்.

குடம் உடைந்தவிடத்து குடத்தில் அகப்பட்ட அதன் வெளியும் ஏனைப் பெருவெளியும் ஒருபொருளாதல் போலத் தளை நீக்கத்தில் உயிரும் சிவமும் ஒருபொருளாய் ஒற்றுமைப்படும் என்பர் ஒருசாரார்.

விபரீத உணர்வால் கட்டையே கள்வனாகத் தோன்றும் பின் தெளிந்தவழிக் கள்வன் இல்லையாய்க் கட்டையே உளதாகும். அதுபோல ஆணவத்தால் மயங்கியவிடத்துச் சிவமே உயிராய்த் தோன்றும்: அவ் ஆணவம் நீங்கி மெய்யுணர்வு பெற்ற காலத்தில் உயிர் என்பது இல்லையாய்ச் சிவமே உளதாம் என்பர் ஒருசாரார்.

மண் வேறுபட்டுக்குடமாதல் போலச்சிவமே தளை இயைபால் வேற்றுமைப்பட்டு உயிராகும். பின் அத்தளை நீங்கிய விடத்துச் சிவமேயாம் என்பர் ஒருசாரார்.

வெண் தாமரையில் வெண்மையாகிய குணமும் தாமரை யாகிய பொருளும் பிரிவின்றி இயைந்தாற்போலச் சிவமே பொருளாய் உயிர் அதன் குணமாய் விளங்கி ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார்.

தீயுடன் கலந்த இரும்பு அதன் தன்மைகெட்டுத் தீயாய்க் காணப்படுமாறுபோலச் சிவத்துடன் கலந்த உயிரும் தன் தன்மைகெட்டுச் சிவமேயாய் ஒன்று பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார்,

பாலுடன் கலந்த நீர் பிரிவின்றி இயைந்தாற் போலச் சிவத்துடன் கலந்த உயிரும் பிரிவின்றி இயைந்து நிற்கும் என்பர் ஒருசாரார்.

கருட மந்திரத்தால் பாவிக்கப் படுகின்ற தெய்வீகக் கருடனும் பாவிக்கும் மாந்திரிகனும் ஒன்றுமாறு போலச் சிவம் நான் எனப்பாவிக்கும் உயிரும் சிவமும் பாவக மாத்திரையால் ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார்.

இரும்பினிடத்து உளதாய நீர் நெருப்பை காய்ச்சுழி அந்நீர் சுவறி ஒற்றுமைப் படுதல் போலச் சிவத்தினிடத்தும் உயிர் தன் தன்மை கெட்டு ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார்.

பேய்பிடியுண்டவன் அப்பேயாய் நிற்றல் போல உயிரிடத்துச் சிவபரம்பொருளும் வெளிப்பட்டு (ஆவேசித்து)நிற்ப உயர் அச் சிவமேயாய் ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார்,

விறகிடத்து நெருப்பு இருந்தும் விளங்காமையால் ஒற்றுமைப் பட்டு நிற்றல் போல வீடுபேற்றிலும் இறைவனும் உயிரும் இருந்தும் உயிர் விளங்கித் தோன்றுது ஒற்றுமைப் பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார். கதிரவன் ஒளிமுன் விளக்கின் ஒளி 'விளங்குந் தன்மை கெட்டு அக் கதிரவன் ஒளியோடு ஒற்றுமைப்படுதல் போல இறையருளின் முன் உயிரது ஆற்றல் செயற்பாடின்றி இறையும் உயிரும் ஒற்றுமைப்பட்டு நிற்குமென்பர் ஒருசாரார்.

தலைவனும் தலைவியும் இன்ப நுகர்வில் ஒற்றுமைப்பட்டு நிற்றல் போலத் திருவருளின் இன்ப நுகர்வில் இறைவனும் உயிரும். ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒரு சாரார்.

உணர்ச்சி ஒத்த நண்பர் இருவர் நட்பின் மிகுதியால் ஒற்றுமைப்பட்டு நிற்றல் போல இறைவனிடத்து உயிர் வைத்திருக்கும் அன்பினிலும் உயிரிடத்து அவ் இறைவன் வைத்திருக்கும் அருளினுலும் உயிரும் இறைவ்னும் ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒரு சாரார்.

ஆவும் ஆமாவும் பசித்தன்மையால் ஒற்றுமைப்பட்டு நிற்றல் போலத் தளையை விடுத்து நிற்கும் உயிரும் சிவமும் பாசநீக்கம் பற்றிய ஒற்றுமையால் ஒற்றுமைப்பட்டு நிற்கும் என்பர் ஒருசாரார்.

கட்டு நிலையில் இறைவன் உயிராய் ஒற்றுமைப்பட்டு நிற்றல் போல வீடுபேற்றுநிலையில் உயிர்சிவமாய் ஒற்றுமைப்பட்டு நிற்கும்

இதற்கு மேற்கூறிய உவமைகளில் எதனையும் ஆசிரியர்கூறவில்லை. எனினும் அடுத்த நூற்பாவில் கண்ணொளியும் உயிரும் போன்று உயிரும் சிவமும் ஒன்றுபட்டு நிற்கும் என்பர். அவ்உவமையே பொருந்தும் என்பது ஆசிரியர் துணிபாம்.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

*ஈண்டுப் பரமேஸ்வரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்கவென்றது.*

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ஞானம் பிரக சித்து முதற் பொருளைக் காண்டல் மாத்திரையே வீடுபேற்றிற்கு அமையுமெனச் சிவ சமவாத சைவர் முதலியோர் மதம் பற்றி நிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண் ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

### ஏது

*அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையுமாகலான்*

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், அஃது எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் ஒற்றுமைப் பட்டு நின்றாலே யானும் எனதும் எனப்பகுத்து நிற்கும் மயக்கவுணர்விற்கு ஏதுவாய் மலம் நீங்கி அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாகலான் அச்செறுக் கறுதிக்குக் காரணமாதல் பற்றி ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்கவென மேற்கொண்டது எ-று.

அவ்வாறு நில்லாதவழி மலம் அறாது; அஃது அறாவழிச் சீபாதத்தை அணைதல் பெறப்படாது என்பார். நிற்கவேயெனத் தேற் றேகாரத்தாற் கூறினார். யான் எனப்படுவது ஞாதிரு. எனது எனப் படுவன ஞானஞேயங்கள். ஆறுவது பண்பின் கிழமையும் உணர்ச்சிக் கிழமையும் பற்றி வந்தது. ஒருமை தனித்தனி சென்று இயையும் செருக்கு ஆகுபெயர். அற்று அணையும் என்றது மழை

பெய்து குளநிறையும் என்றுற்போலக் காரணகாரியப் பொருள் பற்றி வந்த செயவென் எச்சத் திரிபு.

எடுத்துக்காட்டு

**நான் அவன்என்று எண்ணினர்க்கு நாடும்உளம் உண்டாதல்**
**தான்எனவொன்று இன்றியே தான்அதுவாய் – நான் எனவொன்று**
**இல்லென்று தானேயெனும் அவரைத் தன்னடிவைத்து**
**இல்லென்று தானும் இறை**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அங்ஙனம் பகுத்து நின்று உணரும் உணர்வை மயக்கவுணர்வு என்றது என்னை என்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ–ள்) நான் அவன் என்று எண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல் தான் என ஒன்று இன்றியே தான் அது ஆய்— யானென்றும் அவனென்றும் ஞாதிருஞேயங்களைப் பகுத்துணர்ந்து நிற்பார்க்கும் யானேயென நிற்பார்க்குப்போல அவ்வாறு எண்ணுகின்ற உயிருணர்வு முனைத்துத் தோன்றுமாகலான், அவ்வழித் தான் என்று ஒரு முதல் காணப்படுமாறு இன்றித் தான் அவ்வுணர்வேயாய்; நான் என ஒன்று இல் என்று தானே எனுமவரைத் தன் அடியில் என்று வைத்து தாம் ஆம் இறை — இனி யான் என்று ஒரு முதல் காணப்படுமாறில்லை என்று உணர்ந்து முழுவதும் தானேயெனக் காணும் தெளிவுடையாரை அவ்வாறே வேறு காணப்படுமாறு இல்லையென்று தனது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்து அவ்வாறே யாவன் முதல்வன் எ–று.

ஆய் ஆம் என வியையும். ஆயாமென்புழிச் செய்தனெச்சம் ''நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க்கு அமிழ்து ஒக்கும் இவன்'' என்றுற்போலத் தன் வினையாதல் உணர நின்றது.

நாடும் உளம் உண்டாய வழித் தான் இலனுதலும், அஃது இல் வழித் தான் உளனுதலும் யாங்ஙனம் பெறுதுமெனிற் காட்டுதும்: தூல வொளியாகிய கண்ணொளியும் சூக்கும வொளி யாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை உற்று நோக்க வல்லார்க்குப்பிரித்தறியவாராமையின், கண்ணொளி யாகிய காணுங்கால் காணும் தன்மையே முனைத்துத் தோன்று மாகலின் அவ்வழி விளக்கொளி இருந்தும் இல்லைத்தானே? அன்றி விளக்கொளியாகக் காணுங்கால் காட்டும் தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழிக் கண்ணொளி இருந்தும் இல்லைத்தானே? இனிக் கண்ணொளியும் விளக்கொளியும் எனப் பகுத்துக் காணப்புகினும் காணுந் தன்மையே முற்பட்டுத்

தோன்றுதலின், அவ்வழி விளக்கொளி திரிபு புலனாகக் காட்சிப் படுவதல்லது தெளிவு புலனாகக் காட்சி படுமாறில்லை; அதுபோலத் தூல அறிவாகிய உயிரும் சூக்கும அறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் பிரித்தறிய வாராமையின் ஆண்டும் இவ்வாறே கண்டுகொள்க.

கண்ணினர்க்கும் என இறந்தது தழீஇய எச்சவும்மை சந்தி நோக்கி மகரங் கெட்டு நின்றது.

இக்கருத்துப்பற்றி யன்றே ''கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடுங் கருத் தொன்றன்றே'' எனவும் ''காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை, காண்பார்கள் நன்முத்தி காணார்கள் காண்பானும் காட்டுவதும்காண்பதுவும் தன்கடந்தைச் சம்பந்தன் வாட்டுநெறி வாரா தவர்'' எனவும் கூறினர் புடைநூலாசிரியரும்

அற்றேல், இவ்விரண்டனுள் யாது திரிவு காட்சி? யாது தெளிவு காட்சி? எனின், கண்ணொளியோடு கூடிய வழியும், இது விளக்கொளி இது ஞாயிற்றொளி இது திங்கள் ஒளி என அவ்வப்பெற்றிய வேயாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவு காட்சியெனவும், அவ்வொளிகளோடு கூடியவழி, அவ்வாறு ஒரு பெற்றித்தாய்க் காணப்படாத கண்ணொளியை வேறு காண்டல் திரிவு காட்சியெனவும் கண்கூடாக விளங்கிக் கிடத்தலின், இவ்வாறே பொருளினும் வைத்து உணர்ந்து கொள்க. இவ்வாறின்றி, விளக்கொளி முன்னர்க், கண்ணொளி சத்தி மடங்கிப் போதலின் அது விளக்கொளியைப் போலக் காட்சிப் புலனாகாதாயிற்று. என்னுமோ வெனின் என்னும்; என்னை? கண்ணொளி சத்தி மடங்கிற்றாயின் விளக்கொளிக் காட்சிப் புலனாதல் பிரிதொன்றால் பெறப்படாமையின் அற்றேல், மின்மினித் துணையாயினும் தானே விளங்கும் இயல்பில்லாத கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்பதற்குப் பிரமாணம் என்னையெனின்; அறியாது கடாயினாய்; ஆகாயத்தின்கண்ணதாகியசத்த குணம் வியஞ்சகத்தானன்றித் தினைத் துணையானும் தானென விளங்குமாறு இன்மையின் அதுபற்றி எதிரொலிவடிவாய அவ்வோசையை ஆகாயத்தின் குணமன்று வியஞ்சகப் பொருளின் குணம் என்பார் யாரும் இல்லை. அதுபோலக் கண்ணின் கண்ணதாகிய ஒளியும் வியஞ்சக முள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்திரையே, பிறிதில்லை ஆகலான், அதனைக் கண்ணின் குணமன்று என்றல் அறிவிலாதார் கூற்றேயாம் எனவும், அக் கண்ணொளியாவது தன்னை விளக்குதற்கு உரிய வியஞ்சகப் பொருள் ஏகதேசமாயின் ஏகதேசமாய் விளங்கியும் அது வியாபகமாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்பதோர் இயல்பிற்று எனவும் உணர்க.

அஃது அங்ஙனமாக, கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் என்றற்குப் பிரமாணமென்னை: ஒரு விடயத்தின் வீழ்ந்த பல கண்ணொளிகட்குத் தம்முள் இயைபில்லாதவாறு போல ஒரு வயிற்பட்ட கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முள் இயைபில்லை என்றலே பொருத்தமுடைத்துப் போலும் எனின், அஃது அறியாதார் கூற்றேயாம் என்றொழிக. என்னை? ஒரு விடயத்தின் வீழ்ந்த கண்ணொளிகள் தம்முள் ஒன்றனை ஒன்று காணுமாறும் இல்லை, காட்டுமாறும் இல்லை: ஆகலான் அவை தம்முள் கலத்தற்கு ஓர் இயைபின்று என்பது ஒக்கும். அவ்வாறன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டலும் ஆகிய இயையு உண்மையானும், இவ்வியைபு தம்முள் பெறப்படாத கண்ணொளி முதலாயின ஈண்டைக்கு உவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்கள் தத்தம் விடயத்தோடு இயைந்தன்றிச் சந்நிதி மாத்திரையான் அவற்றை அறிதல் செல்லாவென்பது ஆகமங்களுக்கெல்லாம் துணிபு ஆகலானும், அத்தன்மைய வாய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முள் கலப்பில்லை என்றல் காண்டல் விரோதமாகலின் இவ்வாறு உவமைக்கு ஓதியனவெல்லாம் பொருட்கண்ணும் ஆமாறு உணர்ந்து உய்த்து உரைத்துக் கொள்க.

அற்றேல், ஈண்டு எடுத்துக் காட்டிய கண்கள் தம்முள் ஒன்றனை ஒன்று காணுமாறு இன்மைபோல உயிர்களும் தம்முள் ஒன்றனை ஒன்று அறியுமாறில்லை போலும் எனின், அறியாது கூறினாய்; கண்கள் தம்முள் ஒன்றொன்று காணப்படுமாறில்லை என்றது, விளக்கும் விடயமும் காணப்படுமாறு போல வேறு இயைந்து தனிப்பொருளாய்க் காணப்படுமாறு இல்லை என்ற துணையே அன்றிப் பிறிதின்மையின், விளக்கொளியைக் கண் காணுங்கால் அதுவதுவாய் நின்று காணும் பெற்றித்தாய்த் தன்னையும் அவ்விளக்கொளி வண்ணமாய்க் காண்டல் உண்டு என்பது கண்கூடாக அறியக் கிடத்தலின், ஏனைக்கண்களையும் அவ்வாறு காண்டல் அமையுமாகலான், அதுபோலத் தம்முள் தனித்து இயைதலில்லாத உயிர்களும் சிவத்தோடியைந்து நின்று தம்மையும் பிற உயிர்களையும் இவ்வாறு உணர்தல் அமைவுடைமையான் என்பது. ''நாடியரன் - றன்னாலே தன்னையும் கண்டு தமைக்காணார் என்னும் என அறிவார்'' என்றும், 'தன்னாலே தனையறிந்தார் - தன்னையுந் தானே காணும் தான் அதுவாகி நின்றே'' (சிவப்பிரகாசம் - 22) என்றும், 'அதிலறிவடங்கி - மன்னிட வியாபியாய வான்பயன் றோன்றும்'' (சிவப் - 28) என்றும், ''என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன் நின்னிலை அனைத்தையுங் கண்டேன் என்னே—

நின்னைக் காணு மாந்தர் தம்மையுங் காணுத் தன்மையோரே'' (திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - 13) என்றும் பிறுண்டும் இவ்வாறு ஓதும் அநுபவமுடைய தேசிகர் திருவாக்குகளாலும் இவ்வுண்மை உணர்ந்து கொள்க.

(நு - வி) வீடுபேற்று நிலையில் உயிர் சிவமாய் ஒற்றுமைப் பட்டு நின்றுலன்றி ஆணவம் நீங்காதாகவே இறைவனது திருவடி அடைதலும் கூடாது என்பது கருத்து. சீ பாதம் - திருவடி. ஞாதிரு - அறியும் பொருளாகிய உயிர். ஞான ஞேயங்கள் - அறிவால் அறியப்படும் பொருள்கள்.

எனது - என்னுடைய அறிவு. இப்பொருள்படுங்கால் அது என்னும் ஆறனுருபு பண்பின் கிழமை பற்றி வந்ததாம். எனது- என்னுடையபொருள். இப்பொருள் படுங்கால் ஆறனுருபு உடைமைக் கிழமை பற்றி வந்தது. எனது என்பது அறிவையும் பொருளையும் தனித்தனியே குறிப்பதல்லது ஒருங்கு குறிப்பதில்லை. ஆதலின் ஒருமை தனித்தனி சென்றியையும் என்ருர். செருக்கு ஈண்டு அதற்கு ஏதுவாய மலத்தைக் குறித்தலின் ஆகுபெய ராயிற்று. மழை பெய்து குளம் நிறையும்என்றவிடத்துச்செயவென் எச்சம் செய்தென் எச்சமாய் நின்றது. எனவே மழைபெய்யக் குளம் நிறையும் என்பதுவே கருத்தாகின்றது அதைப்போன்றே யான் எனது என்னும் செருக்கு அற்று ... அணையும் என்ற விடத்தும் செயவெனெச்சம் செய்தெனெச்சமாய்த் திரிந்து நின்றது. எனவே செருக்கு அறத்திருவடி அணையும் என்பது கருத்தாகின்றது. குளம் நிறைதற்குப் மழைபெய்தல். காரணமாதல் போலத் திருவடி அணைதற்குச் செருக்கறுதல் காரணமாதலின் காரணகாரியப் பொருள்பற்றி வந்ததென்ருர்.

தான் அதுவாய்த் தான் ஆம் என்ற தொடரில் உள்ள ஆய் என்பது செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சமாம். அவ்வெச்சம் ஆம் என்னும் வினைகொண்டு முடிந்தது. செய்து என்னும் வினையெச்சம் யகரஒற்ருயும் வருதல் தொல்காப்பியத்தில் வினையியலில் முப்பத்தொன்ருது நூற்பா உரையில் சேனுவரையர் உரைத்த உரையான் அறியலாம். தான் அதுவாய் என்ற விடத்து இறந்த காலமும், தான் ஆம் என்றவிடத்து எதிர்கால மும் படநின்றது இவ்வாறு காலம் வேறுபடநிற்றலின் அவ் விரண்டும் இறைவனது செயலேயாய் அமைந்துள்ளமையின் இழுக்கில்லையாம். 'நள்ளார்க்கு நஞ்சு ஒத்து நட்டார்க்கு அமிழ்து ஒக்கும் இவன்' என்றவிடத்து இறப்பும் எதிர்வுமாய காலவகை அமையினும் அவ்விரண்டும் ஒருவனது வினையே யாதலின் இழுக்கில்லாமைபோல ஈண்டும் இழுக்கில்லையாம். நள்ளார் - பகைவர். நட்டார் - நண்பர்.

கண்ணொளியும் விளக்கொளியும் கூடவே ஒளி தெரிகின்றது கண்ணொளி காணும் தகையது விளக்கொளி காட்டும் தகையது இவ்விரண்டும் கூடவே காண இயலுகின்றது. இவ்விரண்டனுள் ஒன்றை வேறுபிரித்து அறியுமாறில்லை அதைப் போன்றே காணும் தகையதாகிய உயிரும் காட்டும் தகையதாகிய சிவமும் வேறு பிரித்து அறியுமாறு இல்லை. உயிராய்க் காணுங்கால் சிவமில்லை சிவமாய்க் காணுங்கால் உயிரில்லை; இரண்டுமாய்க் காணப் புகினும் தற்போத முற்பட்டு நிற்றலின், அவ்வழியும் சிவம் ஐயக் காட்சிக்குப் புலனாய் நிற்பதல்லது தெளிவுக் காட்சிக்குப் புலனாய் நிற்குமாறில்லை; ஆகலான், தான் என ஒன்று இன்றியே தான் அதுவாய் என்றார்.

எண்ணினர்க்கும் என நிற்க வேண்டுவது இலக்கண விதிப்படி வருமொழியில் நகரம் வர நிலைமொழியில் மகரம் கெட்டு நின்றது. எனவே இவ்விடத்துள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாம். அவ்வும்மை, யானே என நிற்பாருக்கு அன்றி நான் அவன் என்று எண்ணினர்க்கும் என்ற தொடரைத் தழுவி நிற்றலின் இறந்தது தழீஇய எச்சவும்மை என்றார்.

கண்ணொளியை வேருகக்காண்டல் விளக்கொளியொடுகலந்து அவ்விளக்கொளியாகக் காண்டல் ஆகிய இரண்டனுள் முன்னையது மயக்கக் காட்சியாம். பின்னையது தெளிவுக் காட்சியாம் கண்ணொளி கதிரவன் ஒளி விளக்கொளி முதலிய எந்த ஒளியோடு கூடினும் அவ்வவ் ஒளியாய்க் காணப்படுவதல்லது தனித்துக் காணபடுவது இல்லை அவ்வாறு தனித்துக் காணபடாத கண்ணொளியைத் தனித்துக் காண்டல் மயக்கக் காட்சியாம். அக் கண் எவ்வொளியொடு கூடிக்காணுகிறதோ அவ்வொளியாகக் காண்டலே தெளிவுக் காட்சியாம். அதைப் போன்றே உயிரைத் தனித்துக் காண்டலும் சிவமேயாய்க் காண்டலும் என்னும் இரண்டனுள் தனித்துக் காண்டல் மயக்கக் காட்சியாம். சிவமேயாய்க் காண்டல் தெளிவுக்காட்சியாம். உயிர் சார்ந்ததன் வடிவாய் நிற்பதன்றித் தனித்து நிற்பதன்று. அவ்வாறு தனித்து நில்லாததனைத் தனித்துக் காண்டல் மயக்கக் காட்சியாம். சிவம் உயிரொடு கூடியவிடத்து உயிர் சிவமேயாய் விளங்கலின் சிவமாய்க் காண்டல் தெளிவுக்காட்சியாம்.

விளக்கொளியின் முன் கண்ணொளியின் ஆற்றல் மடங்கிப் போதலின் விளக்கொளிப் போலக் கண்ணொளி தெளிவாய் அறியப் படாததாயிற்று எனில் அற்றன்று கண்ணொளியின் ஆற்றல் மடங்கிப் போமாயின் விளக்கொளியை அறிந்தது எது என்ற வினாஎழும். அதற்கு விடையின்மையின் அது பொருந்தாதாம்,

அற்றேல் தானே விளங்கும் இயல்பில்லாத கண்ணுக்கு ஒளி உண்டென்றல் எங்ஙனம் எனில் கூறுதும். விண்வெளிக்கு ஒலியின் குணம் உண்டு. அது முரசு முதலிய ஒரு துணைக் கருவியினுலன்றி விளங்காது. அவ்வாறு விளங்காமையின் எதிரொலி காட்டும் விண்ணிற்கு அவ்வொலிக் குணம் இன்றென்பார் யாருமிலர் அதைப் போன்றே துணையொடு காணும் கண்ணிற்கும் ஒளியின்று என்றல் கூடாதாம். துணையாக நிற்கும் ஒளியின் சிறுமைபெருமைக் கேற்பக் கண்ணொளியும் விளங்கும். அதைப் போன்றே உயிரது அறிவும் உடல் கருவி உலகு முதலியவற்றோடு கூடுங்கால் சிறிதாயும் திருவருளொடு கூடுங்கால் பெரிதாயும் விளங்கும்.

ஒரு பொருளில் பல கண்ணொளிகள் வீழ அப்பொருளைப் பார்க்கும் பொழுது அக்கண்ணொளிகள் ஒன்றற்கொன்று கலப்ப தில்லை. அதைப்போன்றே ஒரு இடத்தின்கண் பொருந்திய கண்ணொளியும் விளக்கொளியும் தம்முள் கலத்தலில்லை. ஆதலின் சிவப்பிரகசம் கூறுமாறுபோலக் கண்ணொளியும் விளக்கொளியும் கலந்துநிற்கும் என்பது எங்ஙனம் பொருந்தும் எனில் கூறுதும். ஒருபொருளைப் பார்த்த பல கண்ணொளிகள் தமக்குள் கண்டும் காட்டியும் நிற்பதில்லை. அனைத்தும் கண்டவண்ணமே உள்ளன. ஆனல் கண்ணொளியும் விளக்கொளியுமோ கண் காணவும் விளக்கொளி காட்டவுமாக அமைகிறது. ஆதலின் இது அதனின் வேறும், அன்றியும் கண் முதலிய பொறிகள் தத்தமக்குரிய பொருளில் கலந்தேஅவற்றை அறிகின்றன. கலவாது அப்பொருள்கள் தம்முன் புலப்படு மாற்றானே அறிவதில்லை. இதுவே ஆகமநூல்துணிபுமாம். ஆதலின் கண்ணொளியும் விளக்கொளியும் கலந்து நிற்கும் என்பதே அமையும்.

உயிர்கள் தம்முள் ஒன்றுடன் ஒன்று கலப்பதில்லை. அதுபோல உயிரும் சிவமும் கலத்தலில்லை எனில் அது பொருந்தாது. உயிர்கள் அறிதற்குரியனவே. ஆனல் சிவமோ அறிந்தும் அறிவித்தும் நிற்கும் அருள் தகைமை உடையது. அன்றியும் உயிர் ஒன்றைச் சார்ந்தே நிற்கும். சிவமோ சார்ந்தும் தனித்தும் நிற்கும் தகைமையது. அன்றியும் உயிர் உடலோடு கூடிய வகையான் ஒரு உயிர் பிறிதொரு உயிருக்கு அறிவிக்குமேயன்றி உயிருக்குயிராய் நின்று அறிவிக்கும் தன்மையதன்று.

ஆனல் சிவமோ புறம் போந்தும் உயிர்க்குயிராய் நின்றும் அறிவிக்கும் தகையது. ஆதலின் உயிரும் சிவமும் தம்முள் கலத்தற்கு இழுக்கில்லையாம். மின்மினித் துணையாயினும்-மின்மினியளவு கூட. சத்தகுணம்-ஒலிக்குணம். வியஞ்சகத்தானன்றி-துணைப்பொருளானன்றி.

## இரண்டாம் அதிகரணம்

*இனி இறைபணி வழுவாது நிற்கவென்றது,*

என்பது மேற்கோள். என்னுதலிற்றோ வெனின், உடம்பு நிற்குங் காறும் அது கொண்ட வினைப்பயனும் அதனை அனுபவித்தற்குத் துணைக்காரணமாய் உடன் நிற்கும் முயற்சியும் ஒருவாற்றானும் நீக்கலாகாமையின் அவை அவ்வழி ஏகனாகி நிற்றற்குத் தடையாதலைக் கடக்குமாறில்லை போலும் எனச் சுத்தசைவர் ஈறாயினார் மதம்பற்றிநிகழும் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

நிற்றலாவது சலியாது நிலைபெறுதல் என்பார் வழுவாது நிற்க என்றார்.

ஈண்டு இறைபணி யென்றது யாதெனில், அஃது ஆசிரியர் தாமே முன்னர்த் தெரிந்துஉரைக்கின்றாமையின் இனிது விளங்கும்.

ஏது

*அவன் அருளாலல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா வாகலான்.*

என்பது ஏது. என்னுதலிற்றோ வெனின், ஏகனாகி நிற்றலே அமையும் இறைபணி நிற்றல் எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) தன் செய்திக்கு முதல்வன் செய்தியை இன்றியமையாத ஆன்மாச் செய்வனவெல்லாம் அவன் அருளின் வழி நின்று செய்யுமாயின் மாயேயமும் கன்மமும் ஏகனாகி நிற்றற்குத் தடையாய் வந்து தாக்கா; ஆகலான், அவை தாக்காமைப் பொருட்டுச் செய்யப்படும் உபாயமாதல் பற்றி இனி இறைபணி வழுவாது நிற்கவென மேற்கொண்டது என்க.

அஞ்ஞான கன்மம் உம்மைத்தொகை. மலமின்றாதல் மேற் பெறப்பட்டமையின் ஈண்டு அஞ்ஞானம் என்றது மாயையின் காரியமாகிய மயக்கத்தை என்பது பெற்றாம். உடம்பு நசிக்கும் அளவும் அவை மாய்வன அன்மையின் அறுமென்னாது பிரவேசியா வென்றார்.

## எடுத்துக்காட்டு

**நாம்அல்ல இந்திரியா நம்வழியின் அல்லவழி**
**நாம்அல்ல நாமும் அரன்உடைமை—யாமென்னில்**
**எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லைவினை**
**முற்செய்வினை யுந்தருவான் முன்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், உடம்பொடு நிற்பார் நுகர்தற்கு வேண்டப்படும் பிராரத்த வினையும் அதுபற்றி யேறும் ஆகாமிய வினையும் ஒருதலை உண்மையின், இறைபணி நிற்றல் பற்றி அவை பிரவேசியா என்றல் அமைவு உடைத்தன்று போலும் என்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) இந்திரியம் நாமல்ல—வினைகளை நுகர்தற்கும் ஈட்டு தற்கும் கருவியாகிய இந்திரியங்கள் மாயேயமாவனவன்றி யாமா வன வல்ல; நம் வழியின் அல்ல—அவை தொழிற்படுதலும் முதல்வன் வயத்தனவன்றி நம் வயத்தனவல்ல; வழி நாம் அல்ல நம் வழியின் அல்ல—வினை நிகழ்ச்சிக்கு வாயிலாகிய விடயாதி களும் அவ்விந்திரியங்கள் போல மாயேயமானவன்றி யாமா வனவல்ல அவைசேட்டித்தலும் முதல்வன் வயத்தனவன்றி நம் வயத்தனவல்ல; நாமும் அரன் உடைமையாம்—அவற்றோடு இயைந்து நின்று வினைகளை ஈட்டுதற்கும் நுகர்தற்கும் வினை முதலாகிய யாமும் ஞானச் செய்திகளை முதல்வன் விளக்கிய வழி விளங்கி அல்லுழி, விளங்குமாறு இன்மையான் அம்முதல்வன் வயத்தராவேமல்லது சுதந்திரராவேமல்லேம்; என்னில்—என்று இங்ஙனம் பசுபாசங்களது இயல்பை உள்ளவாறு உணர்ந்து செய்வனவெல்லாம் அவனருளின் வழி நின்று செய்யும் செயலாகக் கண்டுகொண்டு இருப்பாராயின்; இறை பணியார்க்கு எத்தனுவின் நின்றும் வினை இல்லை-இவ்வடிமைத் திறமுடையார் எவ்வுடம் பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவர்க்கு அவை பந்தமா தலில்லை; முன் செய் வினையும் தருவான் முன் ஆம்—அவ்வாகாமிய வினையை அவினுபாவமாய் உடன்கொண்டு தருவதாகிய பிராரத்த வினையும் தன்னைக் கட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியில் உடலூழாய்க் கழியும் எ-று.

நம்வழியின் அல்ல என்பது வழி யென்பதனோடுங் கூட்டி உரைத்துக்கொள்ளப்படும். மகனன்று குற்றி என்றாற்போல அன் மைச்சொல் தழுவப்படும் பொருண்மேல் நின்றது; "அன்மைக்

கிளவி வேறிடத்தான''(தொல். சொல்-25)என்பது ஒத்து ஆகலின் நின்றும் என்புழி உம்மை சிறப்பு; ஏனை உம்மைகள் இறந்தது தழீஇயின.

சஞ்சிதவினை தீக்கை செய்த மாத்திரையே எரிசேர்ந்த வித்துப் போலக் கெட்டொழிதலின் ஈண்டு முற்செய்வினை என்றது ஏற்புழிக் கோடலால் பிராரத்தவினை மேற்றாயிற்று.

தருதல் இடவழுவமைதி

கழியும் என்பது சொல்லெச்சம். உடலூழாய் என்பது அவாய் நிலையான் வந்தது.

## எடுத்துக்காட்டு

**சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்**
**சார்ந்தாரைக் காத்தும் சலம்இலனாய்ச்—சார்ந்தடியார்**
**தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்**
**ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், இறைபணியார்க்கு உளவாகிய முற்செய்வினை ஏனையோர்க்குப் போலன்றித் தருவான் முன்னாய் ஒழியுமாயின் அங்ஙனம் இருவேறு வகைப் படச் செய்யும் முதல்வன் நடுவு நிலைமையின்றிக் கோட்டமுடையான் எனப்பட்டு வழுவாம்போலும் என்பாரை நோக்கி வழுவன்மை கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதல் சார்ந்தாரைக் காத்தும்—தம்மாட்டு அடைக்கலமெனச் சார்ந்தாரை அவர்க்கு வரும் ஏதத்தை நீக்கிக் களைகணாய் நின்று காப்பது தலைமைக் குணம் உடையராயினார்க்குக் கடமை ஆகலான் முதல்வன் ஏனையோரை ஒழித்துத் தன்னைச் சார்ந்தாரை அங்ஙனம் பாதுகாப்பானாகியும்; சலம் இலன் ஆய்-அதுபற்றிக் கோட்டமுடையான் அல்லனாய்; சார்ந்து அடியார்தம் தானாச் செய்து பிறர் தங்கள் வினைதான் கொடுத்தல்—தன்னைச் சார்ந்து தன்னடித் தொழில் செய்வார் தன்போல் அகாமிய வினைத்தொடக்கிலராகச் செய்து பிறர்க்குவரும் ஆகாமியவினையைஅவர்க்குக்கொடுப்பான் ஆகலான்; ஆய்ந்து ஆர் முன் செய்வினையும் ஆங்கு அவ்விரு திறத்தோர்மாட்டும் நுணுகி வந்து கூடுவதாய பிராரத்த வினையும் அவ்வாறே செய்வோர் செய்திக்குத் தக்க பயனாய் இரு வேறு வகைப்படச் செய்வன எ-று.

இறைபணியார்க்கு இல்லைவினை, முற்செய்வினையும் தருவான் முன் என்றது பற்றி ஏனையோர்க்கு நியதி செய்து ஊட்டி இறை பணியார்க்கு வினையின்றாகச் செய்தல் இறைவனுக்கு நடுவு நிலைமையன்று என்பாரை நோக்கி, அதனை உடன்பட்டே அமைதி கூறுவாராய்ச் சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனெனப் பழ மொழி எடுத்துக்காட்டி இஃது அவ்வாறு நடுவன்மையும் அன்றென வலியுறுத்துவார் சார்ந்தடியார் தாந்தானுச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் என வேறு உவமை எடுத்துக்காட்டினார் சார்ந்தடியார் தாந்தானுச் செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் உண்டென்பதூம் அது கோட்டம் அன்று, நடுவு நிலைமையே யாம் என்பதூஉம் ஏனைச்சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அஃது ஈண்டைக் குவமையாயிற்று.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

சலம்-வஞ்சனை; அஃது ஈண்டுக் கோட்டத்தின்மேல் நின்றது.

சார்ந்தென்னும் வினையெச்சம் அடியாரென்னும் வினைக் குறிப்பு முற்றுப்பெயர் கொண்டது. சார்ந்தவென்னும் பெய ரெச்சத் தகரம் திரிந்து முடிந்த தெனினும் அமையும்.

தாமும் பின்வந்த தானும் அசை.

ஆதல் கொடுத்தல் என்புழி ஆனுருபு விரித்துரைக்க.

தானுச் செய்து என்புழி ஆக்கம் உவமவுருபின் பொருள் குறித்து நின்றது.

பிராரத்தவினை அதிசூக்குமமாய் வருவதாகலின் அதனியல் பறிதல் அரிதென்பார் ஆய்ந்து ஆர் முன் செய்வினையும் என்றார்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

ஆர்வினை வினைத்தொகை. ஆய்தல் அப்பொருட்டாதல் மேற் காட்டினாம்.

## எடுத்துக்காட்டு

**இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்**
**முன்செய்வினை மாயை மூண்டிடினும்—பின்செய்வினை**
**மாயையுடன் நில்லாது மற்றவன்தான் மெய்ப்பொருளே**
**ஆயஅத னால்உணரும் அச்சு.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின், இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை தாக்குதல் உண்டென்பதற்குத்

''தினைத்துணையேனும் பொறேன் துயராக்கையின் திண்வலையே'' (திருவாசகம் நீத்தல் - 39) என்றற் றொடக்கத்தான் அவர் கூறும் திருவாக்குகளே சான்றுகலின், அஃது அவர்க்குச் செய்வோர் செய்திப்பயனைய் ஒழியுமென்றல் அமையாமையின் அஃதுண்டா கவே அதுபற்றி நிகழும் ஆகாமியமும் பிறவிக்கு வித்தாய் நிலை பெறுல் உண்டு போலும் என்பாரை நோக்கி ஆண்டு பிராரத்த வினை தாக்குதற்கு ஏதுக்கூறி அது பற்றிச் செய்வோர் செய்திப் பயனைய் ஒழிதற்கு இழுக்கில்லையென வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) இங்குளி வாங்கும் கலம் போல—தன்பால் வைத் தெடுக்கப்பட்டொழிந்த பெருங்காயத்தினின்றும் அதன்வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாசனத்தின்கண் அவ்வாசம் மங்கிப்போய் மெலிதாய்க் கந்திக்குமாறுபோல; ஞானிபால் முன்செய் வினை மாயை மூண்டிடினும் - இறைபணி நிற்குந் தத்துவஞானிக்குப் பயிற்சி வயத்தான் ஒரோவழி ''நாடுமுளம் உண்டாதலும்'' உண்மையின் அதுபற்றிப் பிராரத்த வினையும் அதற்கு வாயி லாகிய உடம்பு முதலிய மாயேயமும் மங்கிப்போய் வாசனை மாத்திரையாய் மெலிதாய் வந்து மூளுமாயினும்; பின்செய் வினை மாயையுடன் நில்லாது—அம்மூட்சி பற்றி ஒருதலையாய் நிகழ்வ தாகிய ஆகாமிய வினை மேலைக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுத லின்றித் தனக்கு வாயிலாகிய மாயேயத்தோடு கெட்டொழியும்; அவன் தான் மெய்ப்பொருளே ஆய அதனல் மற்று அச்சு உணரும் - இறைபணி நிற்கும் அவன் சத்தாயுள்ள சிவமேயாய வாற்றுல் ஒரோவழி அவ்வாசனை பற்றிப் பிறழவரினும் பிறழ வொட்டாத அவ்வச்சினையே நோக்கி நிற்பனுகலான் எ - று.

ஒளி இருளைத் துரக்குமாறுபோல அவ்வுணர்வு அவ்வாகாமி யத்தை த் துரக்கும் என்பதாம். ''தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டேல் — அல்லொளி புரையும் ஞானத் தழலுற வழிந்துபோமே'' (சிவப்பிரகாசம் : உண்மை - 19) எனப் புடை நூலாசிரியர் ஓதியதூஉம் அது.

உளி ஐந்தாம் வேற்றுமை யுருபுபட நின்றது. ''மந்திரவிதி யின் மரபுளி வழாஅ—அந்தணர் வேள்வி'' (திருமுருகு) என்றாற் போல முற்றுகரக்கேடு இலேசாற் கொள்க.

வாங்குதற்குச் செயப்படுபொருள் அவாய்நிலையான் வந்தது. மூண்டிடினும் எனவே, மூளுதல் ஒருதலையன்று என்பது பெற்றும். மாயை ஆகுபெயர். மற்று வினைமாற்றின்கண் வந்தது. தானென்பது அனுவதித்தற்கண் வந்த இடைச்சொல். பிறழ விடாமைபற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ் செய்தார்.

எடுத்துக்காட்டு

**நண்அனல் வேவாத நற்றவர் தம்மினும்**
**பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும்—எண்ணி**
**அரனடி யோர்பவர் ஐம்புலனிற் சென்றும்**
**அவர்திறன் நீங்கார் அதற்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், முன் செய் வினை மாயை மூண்ட வழியும் அந்நிலையில் பிறழாது அவ் வச்சினையே உணர்ந்து நிற்றல் யாங்ஙனம் என்பாரை நோக்கி உவமை முகத்தான் அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் பண் அமரமாச் செலுத்தும் பாகரினும்—அங்கித் தம்பனத்தால் நண் ணனல் வேவாமைக் கேதுவாகிய நற்றவமுடையார் அவ்வனலுட் கிடப்பினும் தந்திறனின் நீங்காதவாறு போலவும் பண்ணுதல் அமரப்பரிமாவூர்தற்குரிய பாகனால் கற்றுவல்லார் அப்பரிமாவின் வேகத்துட்படினும் தந்திறனின் நீங்காதவாறு போலவும்: எண்ணி அரன் அடி ஓர்பவர்-ஐம்புலன்களில் அகப்படாமைக்கு உபாயம் யாதென்றெண்ணி முதல்வன் திருவடியாகிய அச்சை யுணரவல்லார்; ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் திறன் நீங்கார் — முன்செய்வினை மாயை மூட்சிபற்றி ஐவகைப்பட்ட விடயங்களிற் சென்றாராயினும் அதனால் அவர் தந்திறலில் தீர்ந்து பந்தத்தொடக் குறுவாரல்லர் எ-று.

பொருள்வினை உவமையினுஞ் சென்றியைந்தது.

நண்ணனல் கீழ்நீர் போல முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. நள்ளனல் நண்ணனலென மரீஇயிற்று, ''நீணுலகெலாம்'' (அப்பர்; திருக்குறுந் - 116) என்றாற்போல, தம்மால் நண்ணப்படும் அனலென்று உரைப்பினுமமையும், பண்ணுதல், கதிப்பித்தல. இன் இரண்டும் உவமவுருபுகள். உம்மை எண்ணும்மை. சென்றுமென்னும் உவமை சிறப்பு. அதற்கென்பது உருபுமயக்கம்.

எடுத்துக்காட்டு

**சதசத்தா மெய்கண்டான் சத்துஅருளிற் காணின்**
**இதமித்தல் பாசத்தில் இன்றிக் - கதமிக்கு**
**எரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்**
**அருகணையார் சத்தணைவா ராங்கு.**

என்பது உதாரணம். என் நுதலிற்றோ வெனின், சார்ந்ததன் வண்ணமாய்ச் சதசத்தெனப் படும் இயல்புடையார் அரனடியோ ரினும் ஐம்புலனிற் சென்றுழி அவற்றில் தொடக்குண்ணுது திறலு டையராதல் யாங்ஙனம் என்பாரை நோக்கிச் சார்ச்சிக்கட்படும் விசேடங்கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) சதசத்தாம் மெய்கண்டான் சத்து அருளின் காணின்-தன் ஹற் சாரப்படுவனவாகிய சத்தினும் அசத்தினும் அதுவதுவாதல் பற்றிச் சதசத்தெனும் தன் உண்மையை உணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் திருவருளாலல்லது ஒன்றையுங்காணுனய் அவ்வருளின் வழிநின்று காணுமாயின்; பாசத்தில் இதமித்தல் இன்றி - அவ் வழிப்பாசமாகிய அசத்தின்கண் இதஞ் செய்தல் இன்மையால் சத்து அணைவார் கதம்மிக்கு எரிகதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகு அணையார்-சத்தாகிய முதல்வனைத் தலைப் பட்டு நிற்பார் சீற்றமிக்கு எரியாநின்ற சுடரின் முன்னர் அந்தகாரம் போலச் சத்தெதிர் தனது சத்தி ஏற்கமாட்டாத அசத்தாய் ஐம்புல னின் மாட்டெய்தி நிற்பாரல்லர் எ-று.

வேறு முடிபாகலின் ஒருமைப் பன்மை மயக்கமின்மையுணர்க. அருளின் என்னும் இன்னுருபு ஏதுப் பொருட்கண் வந்தது; இத மித்தல் பெயரடியிற் பிறந்த வினைப்பெயர். இதஞ்செய்தல் பற்றுச் செய்தல். இன்றி யென்னும் செய்தெனெச்சக் குறிப்புக் காரணப் பொருட்டாய் நின்றது. இன்மைக்கு ஏது கூறுவார் கதமிக்கு எரி கதிரின்முன் இருள்போல் ஏலா அசத்து என்றார். கதமிக்கெரி கதிரென்றது ஒப்புமைபற்றிய உபசார வழக்கு. "எல்லையில்லவன் எரிதுள்ளினுல் எனவெகுண்டான்" (திருத்தொண்டர் புராணம்— அமர்நீதியார் - 26) என்பதனுலும் ஒப்புமையாதல் உணர்க.

இதனுற் போந்தது, சத்தும் அசத்தும் தம்முட் சமமல்லவாக லான் அரனடியோர்பவர் ஐம்புலனிற் சென்றுலும் அதுபற்றி அவர் திறனீங்கார் என மேலது வலியுறுத்தவாறுமென்க.

ஏகனுகி நிற்றலான் மலமின்றுதலும், இறைபணி நிற்றலான் மாயை வினைகள் இலவாதலும் பெறப்பட்டமையின், மலமாயை தன்னெடு வல்வினையின்றே என்பதனை வேறோர் அதிகரணமாக வைத்து ஓதாராயினர்.

(நு-வி) முதல் அதிகரணத்தில் கூறப்பட்ட ஏகனுகி நிற்றல் மல வாசனை அறுதற்கு உபாயம் கூறியது என்றும் இரண்டாம்

அதிகரணத்தில் கூறப்படும் இறைபணி நிற்றல் மாயை கன்மங்க ளின் வாசனை அறுதற்குரிய உபாயம் என்றும் பேருரை கூறும். இறைபணி-இறைவனது அருள் வழி. அஞ்ஞான கன்மம்-அஞ்ஞா னமும் கன்மமும் என விரிதலின் உம்மைத் தொகையாயிற்று. அஞ்ஞானம் - மாயை.

மாயேயம் ஆவன வன்றி - மாயையினது விளைவன்றி. விட யாதிகள்-உலகப் பொருள்கள். சேட்டித்தலும்-தொழிற்படுதலும். அவினுபாவமாய்-விட்டுநீங்காததாய். உடல்ஊடாய்-உடம்பின் அனுபவமாய்.

இங்குக் குறிக்கப்படும் அல்ல என்னும் சொல் அஃறிணையைக் குறிக்கும். அது நம் வழியின் அல்ல, நாம் அல்ல என்புழி வரும் நம் நாம் என்னும் உயர்திணையைத் தழுவாமல் அஃறிணைப்பொரு ளாகிய இந்திரியங்களின்மேல் நின்று இந்திரியங்கள் அல்ல எனக் கூட்டி உணர நின்றது. இது மகன் அன்று குற்றி என்றவிடத்து அன்று என்பது மகனைத் தழுவாது குற்றியைத் தழுவியது போலாம். அன்மைக்கிளவி வேறிடத்தான-அன்மைச் சொல் ஐயத்தின் வேருய்த் துணிந்த பொருளிடத்தாகும் என்பது இதன் பொருளாம். இங்குத் துணிந்த பொருள் குற்றியேயாதலின் அதனோடு இயைந் தது. எத்தனுவில் நின்றும்-கட்டுப்படுத்தற்குரிய எவ்வுடம்பிலிருந் தும். அத்தகைய உடம்போடு இருந்தும் வினை இல்லை என்றமை யின் உம்மை சிறப்பும்மையாம். ஏனைய உம்மைகளாவன 'நாமும்' 'முற்செய் வினையும்' என்ற இடங்களில் உள்ளன. தாமும் என்பது மேற்கூறிய மாயா காரியங்களேயன்றி நாமும் என்னும் பொருளைக் குறித்தது. முற்செய்வினையும்-முற்கூறிய வருவினையேயன்றி நுகர் வினையும் என்னும் பொருளைக் குறித்தது. இவை இரண்டும் இறந் தது தழீஇய எச்சவும்மைகளாம். முற்செய்வினை-முன்பு செய்த வினை: பழ வினையும் நுகர்வினையுமாம். எனினும் எட்டாம் நூற் பாவில் இறைவனே குருவாய் வந்து தீக்கைசெய்து அருளிய பொழுது பழவினை கெட்டு விடுதலின் ஏற்புழிக் கோடலால் நுகர் வினையை மட்டுமே குறித்து நின்றது. எரிசேர்ந்த வித்து-நெருப் பினைச்சேர்ந்த விதை. தன்மை முன்னிலைக்குரிய தருதல் என்பது படர்க்கைக்கண் வந்தமையின் இடவழுவமைதியாயிற்று. தருவான் முன் என்ற தொடரிடத்துக் கழியும் என்ற சொல் இன்றிப் பொருள் முடிவு பெறவில்லை. ஆதலின் அது சொல்லெச் சமாய் வருவிக்கப்பட்டது. கழியும் என்புழி எவ்வாறு என்ற வினு எழும். ஆதலின் உடல் ஊழாய் என்னும் சொல்லை அது அவாவி நிற்றலின் அவாய் நிலையான் வந்தது என்றார்.

இறையருள் வழி நிற்பார்க்கு அவர் முன்செய்த வினையை உடல் ஊழாய்க் கழிவித்தும் அவ்வாறு நில்லார்க்கு உயிர் அனுபவமாய் நுகர்வித்தும் செய்தல் இருவேறு வகைப்படச் செய்தலாம். இவ்வாறு செய்தல் இறைவனின் நடுவு நிலைமைக்கு இழுக்காகாமை இப்பாடற்கண் கூறப்படுகின்றது. கோட்டமுடையன்-நடுவு நிலைமை திறம்பியவன். இறைபணியில் நின்றார்க்கும் நில்லார்க்கும் வருவினைத் தொடக்கை நீக்கியருளுதல் போலவே நுகர்வினைத் தொடக்கையும் அவ்விருதிறத்தார் மாட்டும் நீங்கியருளுவன் என உரை காண்டலின் முன்னையது உவமையாயிற்று. பின்னையது பொருளாயிற்று.

சார்ந்தாரைக் காத்தும் என்றவிடத்துக் காத்தற்சிறப்பை உணர்த்துதலின் சிறப்பும்மையாயிற்று. சார்ந்து எனபது வினையெச்சம் சார்ந்த அடியார் எனக்கொள்ளின் அது பெயரெச்சமாம் அவ் விடத்துத் தகரம் கெட்டு நிற்கும். ஆதல்-ஆதலால் கொடுத்தல்-கொடுத்தலால்; இவ்வாறு விரித்தலின் ஈரிடத்தும்' ஆனுருபு விரித்தலாயிற்று. தானுக - தன்னைப்போல்பவனுக· இவ்வாறு உரை காண்டலின் ஆக என்பது, உவமவுருபின் பொருள் குறித்து நின்றது. என்றார் ஆய்ந்து ஆர்-நுணுகி வந்து கூடுவதால். ''ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஆய் ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'' என்னும் தொல்காப்பியமும் வருவினை கூடுமாறு அறிதல் போல நுகர்வினை கூடுதல் அறிதல் அரிதாம். ஆதலின் அதிசூக்குமமாய் வருவது என்றார். முன்செய் வினையும் என்றவிடத்துள்ள உம்மை வருவினையேயன்றி நுகர்வினையையும் தழுவி நிற்றலின் இறந்தது தழீஇயற்று என்றார். ஆர்வினை-அரும் வினை. எனவே கூடும் வினை, கூடுகின்றவினை, கூட இருக்கும் வினை என முக்காலத்தும் வருதலின் வினைத்தொகை என்றார். ஆய்தல்-நுணுகுதல். ஏழாவது நூற்பா மூன்றவது அதிகரணத்தில் முதல்வெண்பாவில் 'ஆயிழையாய்' என்ற தொடருக்கும் இவ்வாறே பொருள் உரைக்கப்பட்டது.

தினைத்துணையேனும்......திண்வலையே-இவ்வுடலாகிய வலிய வலையினுல்வரும் துன்பத்தைச் சிறிதும் தாங்க இயலாது. இக்கூற்று மணிவாசகரால் அருளிச்செய்யப்பட்டதாம் முத்தருக்கு நுகர்வினையையும் வருவினையையும் இறைவன் கெடுப்பன் என முற்கூற ஈண்டு முத்தரில் ஒருவராகிய மணிவாசகர் இவ்வாறு கூறுவானேன் என்பது வினு. இறையருள்வழி நின்றவிடத்தும் இவ்வாறு நுகர்வினை வருத்துதற்குக் காரணம் பழைய பழக்க வாசனையாம் எனக் காரணம் கூறுவதோடு அதனுல் வருவினை மிகாது எனவும் இவ்வெண்பா கூறுகின்றது.

இங்கு — பெருங்காயம். பாசனத்தின்கண் - மட்பாண்டத்தின்கண், கந்திக்குமாறு போல - மணம் வீசுமாறு போல, மாயேயத்தொடு கெட்டுழியும் - உடலொடு கெட்டவிடத்தும். அவ்வச்சினையே - அச்சிவபரம்பொருளையே.

தொல்லையில் வருதல் போல - நுகர்வினையும் வருவினையும் ஏகனுகி இறைபணி நிற்றற்கு முன் வந்தன போல. தோன்று இரு வினையதுண்டேல் - இறைபணி நின்ற பின்னும் அவ் விரு வினையும் வரினும். அல்லொளி குறையும் - ஒளிமுன் இருள் போல ஞானத்தழலுறு அழிந்து போமே - ஞானமாகிய நெருப்புப் பொருந்த அவை அழிந்து போம் என்பது இங்குக் காட்டப்பட்ட சிவப்பிரகாசத்தின் கருத்தாகும்.

உளி என்பது ஐந்தனுருபாகிய இன் என்னும் பொருள்பட நின்றது. அது திருமுருகாற்றுப்படையில் மரபுளி என்பது மரபின் என நின்ருற் போலவாம். எனவே இங்குளி என்பது பெருங்காயத்தின் எனப் பொருள்படும். இங்கு + உளி = இங்குளி முற்றுமற்று என்றவிதிப்படி உகரம் கெட்டது. வடமொழியாதலின் முற்றுகரம் என்ருர்· தமிழ்மொழியாயின் குற்றுகரமாம். வடமொழியில் குற்றியலுகரம் இல்லையாதலின் இவ்வாறு கூறப்பட்டது. வாங்குதல் என்பது மணத்தை யாதலின் அது அவாய்நிலையான் வந்தது என்ருர். மாயை; அதன் காரியத்தை உணர்த்தலின் ஆகுபெயராயிற்று. பின் வந்த மாயை என்பதும் அது. பிறழ வரினும் என்பதினின்றும் பிறழவொட்டாது என்னும் பொருளை மாற்றுதற்கண் மற்று என்பது வருதலின் வினைமாற்றின்கண் வந்தது என்ருர். தான் - இறை பணி நிற்கும் தான் எனப் பெருள் காண்டலின் அநுவதித்ததாயிற்று. அநுவதித்தல் - ஒன்றைப் பின்னும் கூறுதல். உருள் (சக்கரம்) பிறழாதவாறு வண்டின் அச்சு காக்கும். ஞானிக்கு வினைவயம் உண்டாயினும் அதனல் பிறழவொட்டாது திருவருளிலேயே நிலைத்திருக்கச் செய்தலின் அதனை அச்சு என்ருர்.

அங்கித்தம்பனத்தால்-நெருப்பிடை இருந்தும் அது தாக்காத வாறு இருத்தல் இப்பாடற்கண்வரும் நற்றவரும், பாகரும்உவமையாம் அரனடி ஓர்பவர் பொருளாம். அவர் திரள் நீங்கார் எனப் பொருளிற்குக் கூறப்பட்ட அடைமொழி உவமையினும் சென்று இயைந்தது. அனல் நண் எனற்பாலது நண்அனல் என முன் பின்னுகத் தொக்கது. அது நீர்க்கீழ் என்பது கீழ்நீர் என நின்றது போலாம். நள் அனல் என நிற்கற்பாலது எதுகை நோக்கி நண் அனல் எனநின்றது. அது திருநாவுக்கரசர் திருக்குறுந்தொகையில்

நீள் உலகெலாம் என்றிருக்க வேண்டுவது நீணுலகெலாம் எனநின்றது போலாம். நள் அனல்-நெருப்பின் நடு. நண்ணனல் என உள்ளவாறே கொள்ளின் நண்ணப்படும் அனல் எனப் பொருள்படும் கதிப்பித்தல்-குதிரையை வேகமாகச் செலுத்துதல். தம்மினும்பாகரினும் என ஈரிடத்தும் வரும் இன் உருபுகள் போல் என்னும் பொருள்பட நின்றது. அவ்விடத்து வந்த உவமைகள் எண்ணும் மையாம். சென்றும்—செல்லத் தகாத இடத்திற்குச் சென்றும் எனப் பொருள் படுதலின் அது இழிவு சிறப் பும்மையாம் அதற்கு-அதனல் என உரை காண்டலின் உருபு மயக்கம் என்ருர் ஆனுருபு குவ்வுருபாகத் திரிந்தது.

சதசத்து எனப்படும் இயல்புடையார் — சத்தைச் சார்ந்து சத்தாயும், அசத்தைச் சார்ந்துஅசத்தாயும்நிற்கும் உணர்வுடையர்: உயிர்.

மெய் கண்டான் என்பது ஒருமை. அருகணையார் என்பது பன்மை. இவ்விரண்டும் ஒருங்கு நிற்றல் பால் மயக்கம் ஆகாதோ எனின், ஆகாது. மெய் கண்டான் அருளிற்காணின் என்பது ஒரு முடிபும் சத்தணைவார் அசத்தின் அருகணையார் என்பது வேறு முடிபுமாய் நிற்றலின் இவை இயைந்து நிற்றல் இழுக்கின்ரும். அருளின்—அருளால். இவ்வாறு உரை காண்டலின் இன்னுருபு ஏதுப் பொருட்கண் வந்தது என்ருர். இதம் என்ற பெயரடியாக இதமித்தல் என்னும் தொழிற்பெயர் வந்தது. இதம் மித்தல்— இன்பம் செய்தல். இன்றி என்பது செய்தெனெச்சமாம். அது இன் மையால் எனப் பொருள் தருதலின் காரணப்பொருளின் வந்தது என்ருர். கதம் மிக்கு-சினம் மிக்கு. சினத்திற்கு நெருப்பு ஒப்புமை யாதல் 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' எனத் திருவள்ளு வனர் கூறுமாற்ருனும் அறியலாம். நெருப்பு சுழல்விட்டு எரியுங் கால் மேலோங்கி நிற்கும். அதைப் போன்றே சினமும்மிக்கிருக்குங் கால் மனம் துடிதுடித்து மேலோங்கி நிற்கும்.

சத்து நிலையுடைய பொருளாம்: பேரறிவுப் பொருளாம். அசத்து நிலபில் பொருளாம்: அறிவற்ற பொருளாம். எனவே இரண்டும் ஒரு தன்மைத்தன்று. ஆதலின் சத்தாகிய அரன் அடியை அறிந்தவர் அசத்தாகிய ஐம்புலனில் சென்ருலும் அதனில்கட்டுப் படாது மேம்பட்டே நிற்பர் என இப்பாடல் வலியுறுத்துகின்றது ஏகனுகி நிற்றல், இறைபணி நிற்றல் ஆகிய இரண்டானும்முறையே மலம் இலவாதலும் மாயைவினைகள் இலவாதலும் பெறப்பட்டன மல மாயை தன்னெடு வல்வினையின்றே என்றதொடரைத் தனித்து ஓர் அதிகரணமாக வைத்துக் கூருராயினர்.

பதினோராவது நூற்பா

**காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்**
**காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா வன்பி னரன்கழல் செலுமே.**

என்பது சூத்திரம். என்நுதலிற்றோ வெனின், பரமேசுரனது சீபாதங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் ஏகனாகி இறைபணிநிற்பார்க்கு அறிவிச்சை செயல்கள் விடயித்தற்கு உரியதோர் இயைபு ஆண்டுப் பெறப்படாமையின் விடயமாவது ஒன்றில்லை போலும் என்னும் வாதிகளை நோக்கி; விடயித்தல் இல்வழி ஆண்டுப் புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானம் போலச் சூனியமாமெனப்பட்டுக் குணம் சூனியமாகவே குணியும் சூனியமாய் முடியுமாகலான், அஃது ஏலாமையின், ஆண்டு அவை இயைபு பற்றி விடயிக்குமாறு உணர்த்து முகத்தானே, பயன் இரண்டனுள் முடிவாய் எஞ்சி நின்று சிவப்பேறு கூடுதலாய நிட்டையின் இயல்பு உணர்த்துதல் இப்பதினோராஞ் சூத்திரத்தின் கருத்து எ -று.

இதனானே, சூத்திரவியையும் இனிது விளங்கும்.

அற்றேல், ஏகனாகி இறைபணி நின்றார்க்கு இனிச்செய்யக் கடவதொன்றின்மையானும், இருணீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழ்ச்சியாயவாறு போலப் பசுத்துவ நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வன வாகலின் வேறு ஓத வேண்டாமையானும், முதனூலுட் சுவாநுபூதியாகிய சிவப் பேற்றைப் பத்தாஞ் சூத்திரத்துட் பாச நீக்கத்தோடு ஒருங்கு வைத்தே ஓதலானும் அதனை ஈண்டு வேறு வைத்தோதல் அமையாது போலும் எனின்; அறியாது கடாயினாய்; ஏகனாகி இறைபணி நிற்பது துரிதநிலைக் கண்ணதாகிய அருணிலையே யாகலின் ஆண்டு மலநீங்கிய துணையேனே சுகப்பிரபை மாத்திரையே விளங்குவதன்றி, அதீத நிலைக் கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரமசுகம் விளங்காமையின், அது விளங்குதல் அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யாமை மாத்திரையால் அமையாமையின், அதற்கு வேறும் ஆண்டுச் செய்யக்கடவது உண்டென்பது தானே போதருத லானும் இருணீக்கத்தின் ஒளிவிளக்கம் போலப் பசுத்துவ நீக்கத்தின் அருள் விளக்க மாத்திரையே யன்றி ஆனந்த விளக்கமும் உடனிகழாமையாலும், அவ்விரண்டற்கும் வேறு பாடு முன்னர்க் காட்டப்படுமாகலானும் முதனூலிற் பாசக்ஷயும்

பண்ணுமாறு உணர்த்தியவழிப் பாசநீக்க மாத்திரையே முத்தி யெனக்கொண்ட வாதிகளை மறுத்தற்பொருட்டுப் பாசநீக்கம் பெற்றோன் சுவாநுபூதி உடையவனாவனெனப் பதினோராஞ் சூத்திரஞ் செய்தற்குத் தோற்றுவாயாந் துணையே பத்தாஞ் சூத்திரத்திற் செய்து வைத்து, சுவாநுபூதி நிகழ்ச்சிக்கண் ஓதற்பாலன வெல்லாம் பதினோராஞ் சூத்திரத்துட் கூறுதலின், ஒன்பதாஞ் சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பண்ணுமாறு, பத்தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெற்றாற்போல, பத்தாஞ் சூத்திரத்தின் எடுத்துக் கொண்ட சுவாநுபூதிநிலை பதினோராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுதலான், அதன்கண் மலையாமைப் பொருட்டு, ஆசிரியர் சுவாநுபூதிமானாவன் என்பதனையும் அரன்கழல் செலும் எனப் பதினோராஞ் சூத்திரத் தானே ஒருங்குவைத்து ஓதினார்; ஆகலின், அது மாறன்மையானும், அவ்வாறன்றி மொழிபெயர்த்தல் யாப்பால் நூல் செய்துரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறுபடச் செய்துரையாராகலானும் என்பது. இதனானே, முதனூலில் சுவாநுபூதிமான் என வாளா கூறியவதனைப் பதினோராஞ் சூத்திரத்துப் பத்தி செய்க என்றதன் பின்னாகக் கொண்டுகூட்டி வைத்துரைத்தலே அதன் கருத்து என்பதூஉம் பெறப்பட்டது. அற்றாகலினன்றே, பத்தாஞ்சூத்திரம் பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்திற்று எனவும், பதினோராஞ் சூத்திரம் பரமசிவனது சீபாதங்களை அணையுமாறு உணர்த்திற்று எனவும் கருத்துரை செய்ததூஉமென்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாரே உரைப்ப.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு

காட்டக்காணும் தன்மையுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோடு ஒருங்கு இயைந்து நின்று காட்டி அவ்வுருவத்தைக் காண்கின்ற ஆன்மாவைப்போல, அறிவிக்க அறியும் இயல்புடைய அவ்வான்மா விடயத்தை அறியும்படி முதல்வன் அதனோடு ஒருங்கு இயைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலான், அவ்வத்துவித நிலையை மறவாது கடைபிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தானுபூதியைத் தலைப்படும் எ – று.

காணும் என்னும் உவமையடை பொருளினும், கண்டு என்னும் பொருள்வினை உவமையினும் சென்றியைந்தன. காண என்பதனை ஈரிடத்துங் கூட்டுக. "வேர்த்து வெகுளார் விழுமியோர்" (நாலடி 64) என்பதுபோலக் கண்டு காட்டல் என்பது மாறிவைத்து உரைக்கப்பட்டது. இக்கருத்து நோக்கியன்றே, இதனை விரித்துக் கூறுவான் புகுந்த வழி நூலாசிரியர், "காட்டிக்கண் டிடுமா போலக் காட்டிக்கண்டிடுவான்" (சித்தியார் 11 – 1) என்றதூஉமென்க.

அயராமைக்குச் செயப்படுப் பொருள் அதனை என்று எடுத்துக் கொள்க. அயரா அன்பு என்றது அயராமையானுகிய அன்பென "ஆறுசென்ற வியர்" போல நின்றது. அது "இத்தையாயும் அறிவுடையனுய் அன்புசெய்ய" என வழிநூலாசிரியர் கூறியதனுலும் உணர்க.

உள்ளத்தை யென்பது உருபு மயக்கம்.

அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் செலவும் முறையே காரணகாரியங்களாய் அவ் வொரு பொருண்மேல் ஒருங்கு நிகழும் என்பார் அயரா அன்பின் அரன் கழல் செலுமே என்ருர்.

இஃது என்சொல்லிய வாறேவெனின்: உயிரை இன்றியமையாத கண் உருவத்தைக் காணுங்கால் உயிரினதுணர்வு, கண்ணொளியெனத் தானென வேற்றுமையன்றி உடனுய் விரவி நின்று, கண்ணுக்குக் காட்டிய வதனைக் கண் கண்டது என்றும், கண்ணை அதிட்டித்து நின்ற உயிர் கண்டது என்றும் பகுத்தறிய வாராது, இரண்டன் காட்சியும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு போல முதல்வனை யின்றி அமையாத, உயிர் ஒரு விடயத்தை அறியுங்காலும் அம்முதல்வனது சிற்சத்தி, ஆன்மசிற்சத்தி யெனத் தானென வேறின்றி உடனுய் விரவி நிற்ப, முதல்வனும் அவ்வாறு விரவி நின்று ஆன்மாவிற்கு அறிவித்த தொன்றனை அவ்வான்மா அறிந்தது என்றும் அதனை அதிட்டித்து நின்ற தான் அறிந்தான் என்றும் பகுத்தறியவாராது இருவகையறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் இவ்வுபகாரம், பெத்தமுத்தி யிரண்டினும் ஒரு பெற்றித்தாய் உண்மையின்; 'ஏகனுகி இறைபணி நிற்கும் உயிர்' முதல்வன் அங்ஙனம் அத்துவிதமாய் உபகரித்து நிற்கும் உரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருட்கண் செல்லும் இச்சை அடங்காது மீதூருமாகலின், அவ்வழி அவ்விச்சையே தானுக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அனுபவிக்கப் பெறும் என அறிவிச்சை செயல்கள் மூன்றும் கண்டு விடயிக்குமாறு உணர்த்தி அதீதநிலையியல்பு கூறியவாருமென்க. அத்துவிதமாவது பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம். இக்கருத்தே பற்றி "அறிவொளிபோல் பிரிவரும் அத்துவிதம்" (சிவப்பிரகாசம் - 7) என்ருர் புடைநூலாசிரியரும். "அங்கியும் ஒன்றில் தங்கிநின்று அல்லது தன்ருெழில் நடத்தாது" (சங்கற்பநிராகரணம் - 12) ஆகலின், அதுபோல முதல்வனும் உயிரை அதிட்டித்து நின்றே எத்தொழிலும் செய்வன் என்று உணர்க. உயிர் ஒன்றனையறிதல் முதல்வன்

உடனின்றறிதலை யின்றி, அறிவித்தன் மாத்திரையான் அமை யாதென்பது, ''தொண்டனேன் நினையுமா நினையே'' ''விரும்புமா விரும்பே'' ''தொடருமா தொடரே''''நுகருமா நுகரே'' (திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா-11, 10, 9, 7,) என்று இவ்வாறு முத்தி நிலைபற்றி ஓதிய திருவாக்குகளானும் அறிக. இவ்வியல்பு நோக்கியன்றே ''அறிவானுந் தானே யறிவிப்பான் தானே'' என்று ஓதிய அம்மை அறிவாய் அறிகின்ருன்ருனே (அற்பு,20) என ஓதியதூஉம் என்க. முன் அறிதல் அறிவித்தற்பொருட்டு எனவும், பின் அறிவா யறிதல் விடயத்தில் அழுந்துவித்தற் பொருட்டு எனவும் கொள்க. இதனை ஈண்டு வைத்தார் அத்துவிதநிலை இனிது விளங்குதற்கு.

இவ்வாறன்றிக் காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டல் என்பதற்குக் காட்டும் உபகாரம் உணர்த்தன் மாத்திரையே கருத்து என்று உரைப்பாருமுளர். இதனைக் கண்ணழித் துரைப்புழி அவனும் அவற்றது விடயத்தை உணரும் எனக் காணும் உபகார மாத்திரையே எடுத்துக் கொண்டுரைத்தல் ஆசிரியர் கருத்தன்ருகலானும், காணும் உபகாரம் காட்டும் உபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழுமென்பது உணர்ந்து கோடற் பொருட்டு அதுவும் உடன் கூறப்பட்டதன்றி வேறின்மையானும், அவ்வாறன்று என்பார்க்கு. ஐந்தாஞ் சூத்திரத்துட் பெறப்பட்டதனை ஈண்டுக் கூறுதல் புனருத்தியாய் முடியுமாகலானும், அவர் உரைப்பன வெல்லாம் போலியுரை என்றொழிக. அற்றேல், முதனூலில்பதினேராஞ்சூத்திரத்துட் காட்டுவன் என்பது மாத்திரையே யன்றிக் காண்பன் என்பது கூறிற்றில்லையாலெனின், அறியாது வினயினய் ஆண்டுக் காட்டுவானும் என்ற உம்மை காண்பானுமாம், என எதிரது தழீஇ நிற்றலின், கூருமை யாண்டையது என்று ஒழிக. அவ்வும்மைக்குப் பொருள் காணமாட்டாதார். பாடம் வேருக ஓதுப.

இதனுள், காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டல் என்றது ஓரதிகரணம்; அதனை அயராவன்பின் அரன்கழல் செலுமே என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

(நு-வி) விடயத்திற்கு-தொழிற்படுதற்கு. ஆலய விஞ்ஞானம்-பிற கந்தங்கள் ஒடுங்கிய நிலையில் உயிர் செயற்ப டின்றி அறிவாய் உளதென்னும் மாத்திரையாய் நிற்பது. பயன் இரண்டனுள்-பாச நீக்கமும் சிவப்பேறுமாகிய பயன் இரண்டனுள். சுவாநுபூபதி-தனதாகக் கொண்டு நுகர்தல் அஃதாவது இறைவன் வழங்கியருளிய திருவடிப்பேற்றைப் பிரிவின்றி இயைந்து நிற்கும் தன் உணர்வாகக் கொண்டு துய்த்தல்.

மேலை நூற்பாவில் கூறியவாறு ஏகனுகி இறைபணி நின்றவர் சிவத்தை அடைந்தவரே யாவர், அவர்க்கு மேல் செய்ய

வேண்டியது ஒன்றுமில்லை என்றும் இருள் நீக்கிய பொழுதே ஒளி விளங்குமாறு போல மேலை நூற்பாவில் கூறியவாறு பாசம் நீங்கிய பொழுதே சிவப்பேற்றை அடைதற்கு தடையின்று ஆதலால், சிவ பெருமானது இறையடி சேரலை இந் நூற்பாவில் தனித்துக் கூற வேண்டுவது இல்லை. வடமொழி சிவஞான போதத்தும் இறைவன் திருவடி அடைதலை தனித்துக் கூருது பாச நீக்கத்துடன் இணைத்துக் கூறியிருப்பதால் ஈண்டும் அவ்வாறே கூறல் பொருத்தம் என்றும் கூறுப. ஏகனுகி இறைபணி நின்ற அளவில் பெறுவது அருள் விளக்கமேயாம். அதன் பயனுக இறைவன் திருவடியைக் கூடி இன்புறுதலாகிய பேறு அதனின் உயர்ந்ததும் வேருனதுமாகும். ஆதலின் அதனை இந்நூற்பாவில் கூறுதல் இன்றியமையாத தாயிற்று.

இந் நூற்பாவில், கண் உவமையாயும் உயிர் பொருளாயும் கூறப்பட்டுள்ளது. உவமையாகிய கண்ணுக்குக் கூறிய காணும் என்னும் அடையை உயிருக்கும் பொருளாகிய உயிருக்குக் கூறிய கண்டு என்னும்அடையைஉவமைக்கும்கூட்டி உரைக்கப்பட்டன காட்டிக் கண்டு என நிற்கற்பாலது கண்டு காட்டி என நின்றது. அது வெகுளார் வேர்த்து என நிற்கற்பாலது வேர்த்து வெகுளார் என நின்றது போலாம். இவ்வாறு மாற்றி உரைத்ததனை ஏற்ற வழி நூலாசிரியர் காட்டி கண்டிடுமோ போல என்றனர். அயராமை எனின் எதனை அயராமை என்ற விஞ எழும். அதற்கு விடையாக அத்துவித நிலை என்று கூறப்பட்டுள்ளது. அதுவே அயராமைக் குரிய செயப்படு பொருளாம். அயராமை–மறவாமை. அயரா அன்பு என்ற தொடரில் அயராமை காரணமாம். அன்பு காரிய மாம், ஆதலின், அயராமையான் ஆகிய அன்பு எனக் காரண காரியப் பொருளில் விரித்துரைத்தார். அது ஆறு சென்றமையால் (வழி நடந்தமையால்) ஆய வியர்வையை ஆறுசென்ற வியர் என்றது போலாம். காரண காரியப்பொருளில் இங்கு விரித்தாற் போலவே வழிநூலாசிரியரும் விரித்துள்ளார். இத்தை ஆயும் அறி வுடையனுய் என்பது காரணம். அன்பு செய்ய என்பது காரியமாம். உள்ளத்திற்கு என நான்கனுருபு ஏற்றிருக்க வேண்டுவது உள்ளத் தை என இரண்டனுருபு ஏற்று நிற்றலின் உருபு மயக்கமாம்.

அறிவின் தொழில் அயராமையாம். இச்சையின் தொழில் அன்பு செலுத்தலாம். செயலின் தொழில் அரன்கழல் செல்லுத லாம். அயராமையால் அன்பும் அவ்வன்பால் அரன்கழல்செலலும் கிட்டும். எனவே இவை ஒன்றற் கொன்று காரணகாரியமாய் நின்றன, அரன்கழல் செல்லுதலாகிய அப்பொருளின் மேல் அறிவு இச்சை செயல்களாகிய மூன்றும் நிகழ்கின்றன.

சிற்சக்தி–இறையாற்றல். ஆன்ம சிற்சக்தி–உயிரது அறிவாற்றல். அதீதநிலை இயல்பு – பேரானந்தப் பெருவாழ்வில் திளைக்கும்

இயல்பு: பேதப்பொருள் இரண்டும்-வேறுபாடுடைய உயிர், சிவம் ஆகிய இரண்டும். உயிர் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையது. சிவம் முற்றறிவும் பேராற்றலும் உடையது. அதல் பற்றிவேற்றுமையுடைய பொருளாயின. அறிவு ஒளி போல் பிரிவரும் அத்துவிதம் — உயிரறிவும் கண்ணொளியும் பொருளால் இரண்டெனப் படினும் பிரிக்க இயலாமையால் ஒரு தன்மைப்பட்டு நிற்கும். உயிரும் இறையும் கலந்த கலப்பும் இது போல்வதாம். அங்கியும்-நெருப்பும். நெருப்பு நுண்ணியதாக எங்கும் இருப்பினும் சுடுதலாகிய தன் தொழிலைச் செய்ய வேண்டின் விறகு முதலிய யாதானும் ஒன்றில் தங்கி நின்றே செய்ய வல்லதாம். அதைப் போன்றே இறைவனும் யாண்டும் இருப்பினும் செயலைச் செய்யும் பொழுது உயிரின் இடமாக நின்றே செய்யும்.

இந் நூற்பாவில் இறைவன் உயிருக்குக் காட்டும் உதவி ஒன்றையே செய்வன் என்று உரைப்பாரும் உளர். இறைவன் உயிருக்கு முதற்கண் காட்டிப் பின்னர் தானும் காண்பன் காட்டிய பின் காண்பான் என்றற்கே காட்டுதலை உடன் கூறினர். ஆதலின் தானும் காண்பன் என்பது இன்றியமையாது கொள்ளத்தக்கதாம். அன்றிக் காட்டும் உதவி ஒன்றனையே செய்வன் எனின் இது முன் ஐந்தாம் நூற்பாவால் பெறப்படுதலின் கூறியது கூறலாய் முடியும். ஆதலின் அது பொருந்தாது. முதனூலில் காட்டுதல் மாத்திரமே கூறியுள்ளதெனின் ஆண்டுக் காட்டுவானும் என்பதிலுள்ள உம்மையால் காண்பானும் என்பதையும் தழுவிக்கொள்ளுமாறு அமைந்திருத்தலின் ஆண்டும் இவ்வாறே பொருள் கொள்ள வேண்டுமென்பதாம்.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணருமென்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், முதல்வன் உயிர்க்குக் காட்டும் உபகாரம் மாத்திரையே உள்ளதென்னும் வாதிகளை நோக்கி அத்துவித நிலை உணர்த்துதற்கு எடுத்துக் கொண்ட சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற் கோடல் நுதலிற்று.

(இ-ள்) முதல்வனும் உயிர்களான் உணரப்படும் விடயத்தை உடனின்று உணருவன் எ-று.

உம்மை உயிர்கள் உணர்தலேயன்றி முதல்வனும் அதனை உணரும் என இறந்தது தழீஇயிற்று.

இஃதறியாது ஈண்டு உணரும் என்றது அறிவித்தற்கு ஏதுவாய் அறியும் என்று உரைப்பாரும் உளர். அவ்வாறு

உரைப்பிற் சித்த சாதனம் ஆகலானும், ஈண்டைக்கு இயல்பின் மையானும் அது போலியென்றொழிக.

அவையே தானேயாய்(சி. போ-2)எனவும், தாந்தமுணர்வின் தமியருள் (சி. போ-5) எனவும், மேற் பொதுவகையாற் கூறிப் போந்த அத்துவிதத்தை ஈண்டுக் காணும் உபகாரத்தின் வைத்துணர்த்தி இனிது விளக்கியவாறு.

ஏது

*இவ்வான்மாக்கள் அவனையின்றி அமைந்து ஒன்றையும் விடயியா வாகலான்.*

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், கண் சடமாகலானும் காண்டற்பயன் உயிர்க்கே யாகலானும், கண் காண்புழி உயிரும் உடனின்று காண்டல் பெறப்படும்; கண்போல் உயிர் சடமன்மை யானும், உணர்தற்பயன் உயிர்க்கேயாகலானும், அதனை எடுத்துக் காட்டி அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றல் அமை யாது என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளி யோடு கூட உருவத்தினும் கலந்தாலன்றி அஃது அவ்வுருவத்தைக் காண்டல் இன்றாயவாறு போல, அறிவிக்கவறியும் இயல்பினவாய உயிர்களும், முதல்வனது உணர்வு தம்மோடு விரவிநின்று தம் மோடு கூடச்சென்று விடயத்தினும் விரவி நின்றால், அறிவு விளங்கி அதனை அறியும் இயல்பினவன்றித் தனித்தமையவு மாட்டா, தனித்து ஒன்றனை விடயிக்கவுமாட்டா; ஆகலான், அறிவு விளங்குதன் மாத்திரைக்கே அன்றி விடயத்தைப் பற்றுதற் கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண்டப் படுதலான் ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என மேற்கொண்டது எ-று.

அவனை இன்றியமையாமையின் காட்டுமுபகாரம் விளங்கினாற் போல, அவனையின்றி ஒன்றையும் விடயியாமையின் காணுமுப காரமும் இனிது விளங்குமென்பார் அவனையின்றி அமைந்து ஒன்றையும் விடயியா வாகலான் என்றார்.

அமைந்து விடயியா என்றதனைக் "கந்தித்துச் சுழலும் (சித்தி10.6) என்றாற்போலக் கொள்க. உம்மை முற்றும்மை. விடயியா என்றது பெயடிரயிற் பிறந்த எதிர்மறைவினை.

"எவ்விடத்தும் இறையடியை யின்றியமைந்தொன்றை
யறிந்தியற்றி யிடாவுயிர்கள் ஈசன்றானும்
செவ்விதினின் உளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்

இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்ரு
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர்போல் நின்றிடுவ னுதலால் நாம்
அரனடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே''

என (சித்தி11-7) வழிநூலாசிரியர் இதனை விரித்து ஓதியவாறும் உணர்க.

எவ்விடத்தும் என்றது பெத்தம்முத்திஇரண்டினும் என்பதாம். இதனுள், இறையடியை இன்றியமைந்து ஒன்றை அறிந்தியற்றியிடாவுயிர்கள் எனவும், ஈசன்ருன் எங்குமாய்ச் செறிந்து நிற்பன் எனவும் கூறியது விடயத்தின்கட்படும் நிகழ்ச்சிக்கு எனவும், இவ்வுயிர்கள் தோற்றும்போது அவனையின்றித் தோற்ரு எனவும், அவ்வுயிர்போல் நின்றிடுவன் எனவும் கூறியது உயிரின்கட்படும் நிகழ்சிக்கு எனவும் கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் இருகாற் கூறுதல் புனருத்தியாய் முடியும் என்ருெழிக.

இனி விளக்கொளி கலத்தல் ஈரிடத்தும் வேண்டப்படும் என்பதும், 'விளக்கொளி கலந்தவற்றைக் கண்ணொளி அகல நின்றே கண்டிடும்'' எனவும் ''வேறு காணுக் கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும்'' (சிவப்-58) எனவும் புடைநூலாசிரியர் வகுத்தோதிய வாற்ருன் உணர்க.

அஃதங்ஙனமாக, பரமுத்தியில் உயிர்க்கு விடயமாவது ஒன்று இன்மையின் வழிநூலாசிரியர் எவ்விடத்தும் என்றது அமையுமாறு என்னையெனின்; அறியாது கூறினுய்; ''சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு'' (உண்மைவிளக்-51) எனவும் ''ஒன்றிநின் றுணரும் உண்மைக் குவமை ஆணவத்தோ டொன்றே''(சிவப்-87) எனவும் பிறுண்டும் இவ்வாறே ஓதுபவாகலின், பரமுத்தியில் உயிர் சிவானந்தானுபூதியை விடயித்தல் உண்டு எனவும், அது முதல் வனை இன்றி ஆகாமையின் அவனும் ஆண்டு அவ்வனுபூதியை உடனின்று அறிவன் எனவும் உணர்க.

எடுத்துக்காட்டு

ஐந்தையும ஒக்க வுணராது அவற்றுணர்வது
ஐந்தும்போல் நின்றுணரும் ஆகலான்—ஐந்தினையும்
ஒன்று ஒன்ருப் பார்த்துணர்வது உள்ளமே எவ்வுலகும்
ஒன்றுஒன்ருப் பார்க்கும் உணர்ந்து,

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அவனும் அவற்றது விடயத்தை உடனின்றுணருமாயின் அவற்றோடு அவனிடை அறிதற் கட்படும் வேற்றுமை இல்லைபோலும் என்பாரை நோக்கி வேற்றுமையும் காட்டி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) உள்ளம்-ஆன்மாவானது; அவற்று ஐந்தும்போல் நின்று உணர்வது உணரும் ஆகலான் - சுவையொளியூறோசை நாற்றம் என்னும் ஐந்தினும் ஐம்பொறிபோல் அதுவதுவாய்ச் செறிந்து நின்று உணர்தற்பாலதனை உணரும் தம்மைத்தாகலான்; ஐந்தையும் ஒக்க உணராது-அவ்வைம்புலன்களையும் ஒருங்கே உணர மாட்டாது; ஐந்தினையும் ஒன்றுஒன்றுப் பார்த்து உணர்வது-அவ் வைந்தினையும் ஒரோவொன்றாய் அறிந்து அறிந்து அனுபவிப் பதாம். ஒன்று அதைப்போலச் சார்ந்ததன் வண்ணமாய்ப் பல திறப்படுதலின் என்றும் ஒரு பெற்றித்தாகிய சிவம்; எவ்வுலகும் ஒன்று உணர்ந்து பார்க்கும்—எல்லா உயிர்களுடைய எல்லா விடயங்களையும் பொதுவகையான் ஒருங்கே உணர்ந்து அவ்வுயிர் களுடன் நின்று சிறப்புவகையானும் அறியும் எ-று.

இது சொற்பொருட் பின்வருநிலை. சிவத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. ஒன்றென்பது குறிப்பேதுவாய் நின்றபெயர்.

எடுத்துக்காட்டு

**ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்**
**போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்—ஏகமாய்**
**உள்ளத்தின் கண்ணானன் உள்குவார் உள்கிற்றை**
**உள்ளத்தால் காணானோ வுற்று.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோவெனின், ஆன்மா ஐம்பொறி யை விடயிப்புழிப் போல முதல்வனைவிடயிப்புழியும் முதல்வன் அவ்வாறு உடனின்று தன்னைத் தான் விடயிப்பான் எனின் ஆன்மாச்சிரயம் என்னும் குற்றமாம் ஆகலின், அது பெறப்படா மையான் அவனும் அவற்றது விடயத்தை உணருமென்றல் யாண்டுஞ் செல்லாது என்பாரை நோக்கி, யாண்டும் இவ்வாறு உணர்தலுண்டு என்பது உணர்த்தி, அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்)ஒன்று ஏகம் ஆய்நின்று இணை அடிகள் உணரவேதான் போகம் ஆய் விளைந்த பொற்பினன்- முதல்வனைச் சார்ந்தவன்

அவ்வண்ணமேயாய் ஒரு பெற்றிப்பட்ட ஆன்மா அவனேடுஒற்று மைப்பட்டு நின்று அவனது அடியிணைகளை உணரவே தான் அவ் வான்மாவுக்குப் பரபோகமாய் மேன்மேல்விளைகின்ற பொலிவினை யுடையன் ஆகலானும்; உள்ளத்தின்கண் ஏகம் ஆய் ஆனுன்— அங்ஙனம் உணருங்கால் அவ்வான்ம ஞானத்தினிடத்து ஏகமாய் விட்டு நீங்காதவன் ஆகலானும்; உள்குவார் உள்கிற்றை உள்ளத் தான் உற்றுக்காணுனே—கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவர் அறிவோடு கூடி நின்று அறியான் கொல்லோ. எ–று.

போகமாய்த் தான் விளைந்த பொற்பினுன், ஏகமாய் உள்ளத்தின் கண்ணுனுன் என்னும் பெயரடைகள் ஏதுப்பொருள வாய் நின்றன; யாண்டுஞ்சேறல் உணர்த்துதற்கு உள்குவார் உள்கிற்றை என்ருர், "வேண்டுவார் வேண்டியதே யீவான்" என்ருற்போல.

ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது. ஓகாரம் எதிர்மறை.

ஆன்மாக்கள் முதல்வனை விடயிக்குங்கால் அவற்றது விடய மாகிய அவன் தன்னுலும் உடனின்று உணரப்படுவன், உள்குவார் உள்கிய பொருள் ஆகலின்.

மேலைவெண்பாவிற் கூறிப்போந்த ஐம்புலன்போல என்று அனுமானவளவை காட்டுவார் உள்குவார் உள்கிற்றை உள்ளத் தான் உற்றுக் காணுனே என்றும், உள்குவார் உள்கிற்றுதல் ஈரிடத்தும் ஒக்கும் என்பார் ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப் போகமாய்த் தான்விளைந்த பொற்பினுல் என விடயித்தற்கட்படும் இயல்பும் ஏகமாய் உள்ளத்தில் கண்ணுனுன் என அறிவு விளங்குதற்கட்படும் இயல்பும் எடுத்தோதினுர்.

பரபோகமாய் என்னுது போகமாய் என்றதும் ஒப்புமை இணங்குதற் பொருட்டு. சேற்றுநிலம் மிதித்துச் சென்ருனுக்கு வன்னிலம் போல் பரபோகவிளைவு செயற்கைப் பொருளாய் நிற்றலின், ஆக்கமும் காரணமும் அடுத்து வந்தன. இணையடிகள் உணருந்தோறும் போகம் மேன்மேல் விளைதல், "புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதியநாய்—மணந்தாழ் புரிகுழலாள் அல்குல்போல வளர்கின்றதே" (திருக்கோவையார்91) எனவும் அப்பொருள் மேல் வைத்தோதிய திருவாக்கானும் அறிக.

தெளிவு பற்றிவிளைந்தவென இறந்தகாலத்தாற் கூறினுர். கண் கண்ணுடியினின்றும் தன்னை விடயித்தாற்போல, முதல்வன்

ஆன்மாவுடனின்று தன்னை விடயித்தல் பொருத்தமுடைமையின், ஆன்மாச் சிரயம் என்னும் குற்றம் இன்னோரன்னவற்றிற்கு எய்தா தென்றுணர்க. கண்ணுடிக் குள்ளாகத் தோன்றுவது போலும் எதிர் பிம்பமாவது பிம்பமேயன்றி வேறன்று என்பது சிவாகம நூற்றுணிபு என்க.

இதனுள் அவனும் அவற்றது விடயத்தை உணருமென உணர்வே பற்றி ஓதினரேனும், ''எத்திறம் ஞானமுள்ளது அத்திறம் இச்சை செய்தி'' (சித்தியார் - 1 - 62) என்பவாகலின். அவற்றிற்கும் இஃதொக்கும்; ஒக்கவே, பெத்தம் முத்தி இரண்டானும் ஆன்மா விடயிக்கப்படும் விடயங்களை முதல்வன் உடனின்று விடயிப்பன் 'என்பதூஉம்' பெத்தத்தின்கண் அவன் இவனுய் நின்று விடயித்தலின் விடயங்கள் அவனுக்கன்றி இவனுக்காயின; முத்தியின்கண் இவன் அவனுய் நின்று விடயித்தலின் அவன் ஒழித்த விடயங்களெல்லாம் இவனுக்கன்றி அவனுக்காயின என்பதூஉம் இனிது விளங்கும். இம்முறைமை நோக்கியன்றே உலகத்துள் ஒன்றனை ஈவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணம் எனக் கருதாதவழிக் குற்றமென்று ஆகமங்கள் ஓதியதூஉம் ''யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே— மாதொரு பாகனுர்தாம் வருவர்'' (சித்தி- 2 -25) என்பதூஉம், அவ்வுண்மை அறிந்தவழி எத்தனுவி னின்றும் இறை பணியார்க்கு இல்லை வினை—முற்செய்வினை யுந்தருவான் முன்'' (சி-போதம்) எனவும் ''பெற்றசிற் றின்பமே பேரின்பமாய்'' (உந்தி-337) எனவும் ''உடம்புடைய யோகிகள்தாம் உற்ற சிற்றின்பம்—அடங்கத்தம் பேரின்பத் தாக்கி'' (திருக்களிற்-76) எனவும் ''காணுங் கரணங்க ளெலாம் பேரின்பமெனப்—பேணும் அடியார்' (திருவாசகம்) எனவும் ''எல்லாஞ் சிவமாயிருந்ததே'' எனவும் இவ்வாறு ஓதியதூஉம் என்க.

(நு-வி) உயிர்களால் உணரப்படும் விடயத்தை-கட்டு நிலையில் உலகப் பொருள்களும் வீட்டு நிலையில் சிவமும் ஆக உணரப்படும் பொருளை. உணரும்- (உயிர் உணரும் பொருளை) இறைவனும் உடன் நின்று உணர்வன். இவ்வாறன்றி உயிர்க்கு அறிவித்தற் பொருட்டு அறிவிக்க வேண்டுவதை இறைவன் அறியும் எனப்பொருள் உரைப்பாரும் உளர். இக் கருத்து மேல் ஐந்தாம் நூற்பாவில் கூறப்பட்டிருத்தலின் ஈண்டும் கூறுதல் முடிவாகக் கூறப்பட்ட ஒன்றை மீண்டும் கூறலாகிய சித்த சாதனம் என்னும் குற்றமாம். அன்றியும் அத்துவித நிலை கூறும் இவ் விடத்து உயிர்க்கு வேருய் நின்று இறைவன் அறிதலைக் கூறுதல் இயைபில்லாதுமாம் ஆதலின் அது பொருந்தாது. அவையே தானேயாய் என்றவிடத்தும், தாம்தம் உணர்வின் தமியருள் என்றவிடத்தும் பொதுவாக அத்துவித நிலை

கூறப்பட்டிருப்பினும் இறைவன் உயிரொடு கலந்து நின்று அறிந்தும் அறிவித்தும் நிற்றலாகிய சிறப்பான அத்துவிதநிலை ஆண்டுக் கூறப்படாமையின் அதனை ஈண்டுக் கூறுகின்றார்.

சடம் ஆகலானும் - அறிவற்றதாகலானும். தனித்து அமையவும் மாட்டா - (உயிர்கள்) தனித்து நின்று ஒன்றை அறியவும் மாட்டா. விடயிக்கவும் மாட்டா - நுகரவும் மாட்டா.

அமைந்து ஒன்றையும் விடயியா : அமைந்து என்பது வினையெச்சமாம். ஆயினும் ஈண்டு அப்பொருளில்லாது செவ் வெண்பொருள்பட நின்றது. ஆதலின் அமைதலும் இல்லை; விடயித்தலும் இல்லை என உரை செய்யப்பட்டது. அது சிவஞான சித்தியாரில் கந்தித்துச் சுழலும் என்றவிடத்துக் கந்தித்தும் சுழற்வித்தும் என பொருள்கொண்டாற் போலவாம். செவ்வெண் -பெயர் வினையிடத்து உம்மை தொக்கு நிற்பதாம். ஒன்றையும் என்றவிடத்துள்ள உம்மை முற்றும்மையாம்.

எவ்விடத்தும் என்று தொடங்கும் பாடல் இறைவன் பொருளிடத்தும் உயிரிடத்தும் கலந்து நிற்குமாற்றை விளங்கக் கூறுவதாம். எங்குமாய்ச் செறிந்து நிற்பன் என்றது, இறைவன் பொருளின் கண் கலந்து நிற்றலை விளக்கும். அவ்வுயிர் போல் நின்றிடுவன் என்றது, உயிரின் கண் கலந்து நிற்கு மாற்றை விளக்கும். முன்னையதால் காணும் உதவியும் பின்னையதால் காட்டும் உதவியும் பெறப்படும். புனருத்தி-கூறியது கூறல்,

புடைநூலாசிரியர் - உமாபதி சிவாச்சாரியார். சிவானந்தாநுபூதியை விடயித்தல் - சிவானந்தத்தில் அழுந்தி நின்று துய்த்தல்

உயிர்கள் உணரும் பொருளை இறைவனும் ஒன்றிநின்று உணர்வனுயின் உயிர்கள் அறிதற்கும் முதல்வன் அறிதற்கும் வேற்றுமை இன்றும். இன்றுகவே உயிர்கள் பொருள்களோடு ஒன்றி அறிவதால் உலகியல் வழிப்பட்டுச் சிறுமையுறுதல் போல இறைவனும் சிறுமையுறுதல் கூடும். ஆதலின் இறைவன் உயிருடன் ஒன்றி நின்று உணர்வன் என்றல் சாலாது என் பார்க்கு இவ் வெண்பா விடை தருகிறது. உயிர் ஒவ்வொரு பொருளையும் பற்றி நின்று நுகருங்கால் அதுவதுவாகச் சார்ந்ததன் வண்ணமாய் ஆகி விடும். ஆனல் இறைவனே உயிர்கள் அனைத்தும் தாம்தாம் நுகரும் பொருள்களோடு ஒன்றி நிற்பினும் பொதுவாக அறிவதன்றிச் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறிவதில்லை. ஆதலின் உயிர் சிறுமையுறுதல் போல இறைவன் சிறுமையுருன் என்பது இவ் வெண்பாவின் கருத்தாகும்.

இவ்வெண்பாவில் ஐந்து என முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னும் வருதலின் சொற்பொருட் பின்வருநிலையாம். ஒக்கப் பார்த்து நிற்கும் சிவத்தினின்றும் ஒவ்வொன்ருகப் பார்த்துணரும் உள்ளத்தைப் பிரித்தலின் உள்ளமே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலையாம். உள்ளம் – உயிர். ஒன்று – சிவம் சார்ந்ததன் வண்ணமாதலின்றி என்றும் ஒரு தன்மைத்தாய் இருத்தலின் ஒன்று என்பது சிவத்தைக் குறித்தது. ஒன்று என்பது எண்ணைக் குறியாது குறிப்பாகக் குறித்து நிற்கும் பொருள் ஏதுவால் சிவத்தைக் குறித்தலின் குறிப்பேதுவாய் நின்ற பெயர் என்ருர்.

கட்டுநிலையில் உயிர் உலகப் பொருள்களை அறியுமிடத்து இறைவனும் உடன்நின்று அறிதல் பொருந்தும். வீட்டுநிலையில் உயிர் இறைவனை அறியுங்காலத்தும் அவ்வாறே அம்முதல்வன் உடன்நின்று அறிவனுயின் தன்னைத்தான் பற்றுதல் என்னும் குற்றமாம். ஆதலின் அது பொருந்தாது என்பார்க்கு விடை கூறுவது ஏகமாய் நின்றே என்னும் வெண்பாவாகும். வீட்டு நிலையில் தன்னெடு ஒற்றுமைப்பட்டு நிற்கும் உயிர்க்குப் பேரின்பமாய் மேலும் மேலும் புதிது புதிதாகத் தோன்றி வரும் அழகினை உடையனுய் இறைவன் விளங்குவன். அதனை உணர்ந்து இன்புறும் உயிரது அறிவில் அவ்விறைவனும் ஒன்றுபட்டு நிற்றலில் இழுக்கில்லையாம். வீடுபேற்று நிலையில் இறைவன் உயிரோடு கலந்து நிற்பன். பேரின்பத்தை வழங்கும் நிலையில் வேருய் நிற்பன். உயிர் அதனில் திளைக்குமாறு உடனுய் நிற்பன் என்பது இவ்வெண்பாவின் கருத்தாம். ஆன்மாச்சிரயம் – தன்னைப் பற்றுதல். யாண்டும் செல்லாது – கட்டு நிலையில் போல வீட்டு நிலையிலும் உடனுய் நிற்றல் என்பது செல்லாது. போகமாய் ஏகமாய் என்பன பொற்பினுன், கண்ணுன் என்னும் பெயர்களுக்கு முறையே அடைமொழிகளாக நின்றன. போகம் ஆயினுன் ஏகம் ஆயினுன் எனக் கூட்டி உரைக்கப்பட்டு ஏதுவாகவும் நின்றன. உள்குவார் உள்கிற்றை –தன்னை நினைவார் நினையும் கருத்துக்களை. உள்ளத்தான்–உயிர் அறியும் அறிவொடு எனப் பொருள்படுதலின் உடனிகழ்ச்சிப் பொருட்டாயிற்று. காணுனே என்பதிலுள்ள ஓகாரம் காண்பன் எனஎதிர்மறைப்பொருள் தருதலின் எதிர்மறைப் பொருளாயிற்று. உள்குவார் உள்கிய பொருள் – கருதுவார் கருதிய பொருள். ஐம்பொறிகளும் உயிரது அறிவோடு கூடி உயிரின் பொருட்டு உணரும். அதைப்போல இறைவனும் உயிர் நுகர்தற்பொருட்டு உயிருடன் நின்று உணர்வன்.

உயிர் வீடுபேற்று நிலையில் இறைவனை நுகரும் நுகர்வு மேலான இன்பம் (பரபோகம்) அந்நிலையேஇந்நூற்பாவில் கூறப்

படுகிறது. ஆதலின் பரபோகம் என்றே குறித்தல் வேண்டும். அவ்வாறன்றிப் போகம் என்றது கட்டுநிலையிலும் உயிரது நுகர் விற்கு ஏ து வ ா ய் அந்நுகர்பொருள் இன்பமாய் இருத்தலைக் குறிக்கவாம். எனவே கட்டு நிலையில் உயிரது உலகியல் உணர்விற்கு ஏதுவாயும் அவ்வப்பொருளாயும் நிற்றல் போல வீட்டு நிலையிலும் அவ்வாறு நிற்பன் என்பது கருத்தாம். போகமாய் என்பதிலுள்ள ஆய் என்னும் சொல் ஆக்கப்பொருள் குறித்து நிற்பதாம். ஆக்கமாவது முன்பு இல்லாத தொன்றைப் பெறுவதாம். ஆனால் இறைவன் உயிர்க்கு மேலாய இன்பமாய் நிற்றல், என்றும் உள்ள நிலையாம். அவ்வாறிருக்க ஆய் என்னும் ஆக்கச் சொல் கொடுத்ததேன் என்பது வினா. நிலம் மிதிப்பதற்கு என்றும் வலியதே. எனவே அது அதன் இயற்கையாம்; எனினும் சேற்று நிலம் மிதித்து வந்தானுக்கு இயற்கை நிலமும் செயற்கையே போலத் தோன்றும். அதைப்போன்றே இறைவன் என்றும் உயிர்க்குப் பேரின்பப் பொருளாய் இருப்பினும் உலகியற் பொருளை விட்டு நுகரும் நிலையில் அது புதியது போலத் தோன்றும். ஆதலின் ஆக்கச் சொல் கொடுத்தார். 'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' என்னும் தொல்காப்பிய நூற்பாவையும், அதன் உரையையும் காண்க. போகமாய்த் தான் விளையும் பொற்பினான் என எதிர் காலத்தால் கூறுது விளைந்த என இறந்த காலத்தால் கூறினார். உயிர்க்கு அந்நிலையில் போகப் பொருளாய் நிற்கும் தெளிவு பற்றி. 'வாராக் காலத்து வினைச்சொற் கிளவி, இறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும், இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை' ( தொல் - வினை. 48 ) என்னும் நூற்பாவும் காண்க. கண் கண்ணாடியில் நின்றும் தன்னைக் கண்டாற்போல இறைவன் உயிருடன் நின்று தன்னைக். காண்டல் குற்றமின்றாம்.

கண்ணாடிக்கு உள் தோன்றும் கண் அதன் எதிர்உருவமேயா ம் ஆனால் உயிரின் இடமாகத் தோன்றும் சிவமோ சிவத்தின் எதிர் உருவம் அன்று. அவ்வுயிரிடத்தும் பிறாண்டும் ஒப்ப நிற்கும் சிவமேயாம். அவ்வாறிருக்கக் கண்ணாடிக்குள் இ ரு க் கு ம் கண்ணை உவமை கூறல் பொருந்துமோ? எனில் பொருந்தும். கண்ணாடியை வைத்துக் கொண்டு கண்ணைப் பார்ப்பது அதன் எதிர்உருவாக இருக்கும் கண்ணை நோக்குதற்கு அன்றாம். கண்ண கத்துள்ள மாசினைக் கண்டு நீக்கவேயாம். ஆதலின் கண்ணாடியில் காணும் கண்ணும் கண்ணேயன்றி அதன் எதிர்உரு அன்று என்பது ஆகமத் துணிபாம். உணருதல் அறிவின் தொழிலாம் விடயத்தை உணரும் என அறிவு ஒன்றே பற்றிக் கூறினாரேனும் ஏனைய இச்சை செயல்கட்டும் இறைவன் ஒன்றி நின்று உணர்த்துதலும் உணர்தலும் பொருந்துவதாகும். இதனையே

'எத்திறம் ஞானம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி' என வரும் சித்தியார்ப் பகுதி விளக்கி நிற்கிறது. கட்டு நிலையில் இறைவன் உயிராய் நின்று அறிந்தும் அறிவித்தும் வருதலின் அந்நுகர்வுகள் உயிர்க்காயின. வீட்டு நிலையில் உயிர்கள் முதல்வனாய் நின்று உணர்ந்து நுகர்தலின் அந்நுகர்வுகள் அம்முதல்வனுக்கு ஆயின. அவன் ஒழிந்த விடயங்கள் எல்லாம்–இறைவனது அருளின்பம் நீங்கிய ஏனைய வினைகள் எல்லாம் இறைவனே உயிராய் நின்று அனைத்தையும் செய்தருளுகின்றான் என்ற உணர்வில் செய்யும் செயல்களெல்லாம் உயிரைக் கட்டுப் படுத்துவதில்லை. ஆதலால் தான் ஒன்றைப்பெறுவாரும் கொடுப்பாரும் சிவனுக்குரிமை எனக் கருதுவர். யாதொரு தெய்வத்தையும் மாதொரு பாகனாகக் கருதும் நிலை எல்லாம் சிவமாகவே காணும் நிலையாம். அவ்வாறு காண்பார் செய்யும் செயல்கள் எல்லாம் இறைவனின் செயலேயாகும் ஆதலின் வினைப்பயன் உளவாவது இல்லை.

## இரண்டாம் அதிகரணம்

### மேற்கோள்

இனிப் பத்தியினான் மறவாதேத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது.

என்றது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், ஏகனாகி நின்றார்க்கு அவ்வியைபு பற்றிஅறிவிச்சைச் செயல்கள் மூன்றும் ஆண்டு விடயிக்குமாறு யாங்ஙனம்என்பாரைநோக்கி நிட்டையின் இயல்பு உணர்த்துவற்கு எடுத்துக்கொண்ட இரண்டாங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ – ள்) சூத்திரத்து உரைத்தவாறு பற்றி உரைத்துக்கொள்க

''இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்புசெய்ய''(சித்தி11-1) என வழிநூலாசிரியரும் ஈண்டுமறவாது ஓதுதலின், பத்தியினால் ஏத்த எனச் சூத்திரப் பொருட் கேற்ப மாறிவைத்து உரைத்துக் கொள்க. ஏத்தவென்றது உபசார வழக்கு.

அன்பு பத்தி காதல் என்றாற் போல்வன இச்சை மீதூர்தற் பொருள ஆகலான், அது பரமுத்தியினும் உண்டென்பது உணரா தார் பத்தியாவது சீவன் முத்திநிலைக்கே செய்யப்படுவதொரு சாதனம் போலும் என மயங்கித் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப. பரமுத்தியின்கண் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அனுபவமாதல் செல்லாமையானும்' சீவன் முத்திநிலைக்கே

கூறுவது ஒன்ருயின் செம்மலர் நோன்ருள் என்னும் சூத்திரத்து ஒருங்கு வைத்து ஓத அமையும்; சூத்திரம் வேறுசெய்ய வேண்டாமையானும், அவ்வுரை போலியென்று ஒழிக.

### ஏது

*அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்.*

என்பது ஏது. என்நுதலிற்ருே வெனின், பத்தியினுன் மறவாது ஏத்தினும் ஆன்மா அவனது சீபாதத்தை அணைதல் பரமுத்தியி னன்றி முடியாது என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அம்முதல்வன் வேறு நில்லாது செய்வோர் செய்வன வற்றை அறிந்து அவ்வச் செய்திக்குத் தக்க பயனைச் செய்யலாயின் அவ்வப்பொழுதே விளைவித்தும், அல்லுழிக் காலாந்தரத்தின் விளைவித்தும் உடனய் நிற்பனுகலான் இனிப் பத்தியினுன் மறவாது ஏத்தவே அம்முதல்வனது சீபாதத்தை அணையும் என மேற்கொண்டது எ-று.

### எடுத்துக்காட்டு

**அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணுர்க்கு**
**இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்—அருட்கண்ணுல்**
**பாசத்தை நீக்கும் பகல்அலர்த்தும் தாமரைபோல்**
**நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்.**

என்பது உதாரணம். என்நுதலிற்ருே வெனின், அரன் கழல் சேறல் உடம்பின் நீங்கிய பின்னன்றி உடம்புள்ள வழியுங் கூடு மாயின், அதுஞாயிற்றின் ஒளிபோல மருங்குள்ளார்க்குப் புலனுதல் வேண்டும் என்பாரை நோக்கி அதுகூடாமையுங் கூடுமாறும் உவமை முகத்தானுணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) அருக்கன்நேர் நிற்பினும் காணுர்க்கு அல் இருளே — ஞாயிறு எல்லார்க்கும் ஒப்பநிற்பினும் அது காட்சியுடையார் கண் ணுக்கன்றி அஃதில்லார் கண்ணுக்கு இரவின் கண்ணதாகிய இருளேயாம், அதுபோல, ஈசன் பாசத்தார்க்கு இருட்கண்ணே — முதல்வன் எங்கணும் ஒப்ப நிற்பினும் மல நீங்கிய முத்தர்க்கன்றி அஃதுடையார்க்கு அவன் அம்மலத்தின் கண்ணேயாவன்; சீவன் முத்தரும் ஏனையோர் போல உடலுடைமையின் பாசத்தாராகலின் வேற்றுமை யின்ருலெனின், தாமரை அலர்த்தும் பகல்போல்— ஏனைத்தாமரைகளோடு ஒப்ப ஒருங்கு நிற்பினும் பக்குவமுடையு

தாமரையைக் கூம்புதலை நீக்கி அலர்த்தும் ஞாயிறு போல; நேசத்தில் தன் உணர்ந்தோர் நேர் அருட்கண்ணாய் பாசத்தை நீக்கும்—ஏனையோர் போல் உடம்போடு நிற்பினும் பக்குவமுடையராய்ப் பத்தியினால் தன்னை மறவாது உணர்வார்க்கு முதல்வன் தனது திருவருட் பார்வையால் பாசத்தை நீக்கி அறிவை யலர்த்தும், ஆகலான் உடம்புள்வழியும் அவர் பாசத்தாரல்லர் எ–று.

ஆகலான் உடம்புள்வழியும் அவர் பாசத்தாரல்லர் என்பது குறிப்பெச்சம்.

ஏகாரந் தேற்றம். திணிந்த இருள் என்பார் அல்லிருள்என்றார். மலத்திற்குக் கண்ணாவது அறியாமை. காணாரும் பகலும் ஆகு பெயர். அருக்கன் எடுத்துக்காட்டுவமை. தன்னையென்னும் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது. ஏழாம் வேற்றுமைப் பொருட்கண் வரும் நேரென்பது உருபு மயக்கமாய் நான்காவது உணர்த்திற்று. நீக்குதலும் அலர்த்துதலும் ஏனையிடத்தும் சென்று இயைதலின், ஈரிடத்தும் செய்யப்படு பொருள் ஏற்பன வருவிக்கப்பட்டன.

எடுத்துக்காட்டு

**மன்னும் இருளை மதிதுரந்த வாறுஅன்பின்**
**மன்னும் அரனே மலம்துரந்து—தன்னின்**
**வலித்து இரும்பைக் காந்தம் வசம்செய்வான் செய்தல்**
**சலிப்பில் விகாரியலன் தான்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், நேசத்தின் தன்னுணரும் சீவன் முத்தர்க்குப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துதல் பரமுத்தியினன்றி இல்லையென முரணிக் கூறும் வாதிகளை நோக்கிப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் முறைமை இவ்வாறென்று உணர்த்தி, அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ–ள்) அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதி துரந்தவாறு மலம் துரந்து-உயிரைத் தானாக்கிக் கோடற்கண் உளதாகிய இச்சை மிகுதியான் அவ்வுயிரோடும் அநாதியே நிலைபெறும் முதல்வன் கண்ணின்கண் நிலைபெறும் இருளைப் பிறைமதி நாடோறும் சிறிது சிறிதாக நீக்கி ஓட்டுமாறு போல அவ்வுயிரின் கண்ணதாகிய மலசத்தியை அவ்வப் பருவந்தோறும் சிறிது சிறிதாகச் சோபானமுறையில் நீக்கிப் பற்றறத் துரந்து; காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசம் செய்வான் செய்தல் சலிப்பு இல்–காந்தக்கல் இரும்பைத் தன்கண் ஈர்த்துத் தன்வசமாகச் செய்தல்போல மனம் அங்ஙனம் துரக்கப்படுந்தோறும்

அம்முறையே அச்சத்தி பதிவித்து உயிரைத் தன் கண் வலித்துக் கொண்டு தன் வசமாகச் செய்துவரும் செய்கையின் அவனுக்கு ஒரு ஞான்றும் சலிப்பில்லை; விகாரி அலன் தான் — அங்ஙனம் சலியாது செய்துவருதல் பற்றி விகாரியாவானுமல்லன், காந்தம் போலத்தனது சந்நிதி மாத்திரையிற் செய்யும் அம்முதல்வன் எ-று.

மதியென்றது ஏற்புழிக் கோடலான் ஈண்டு வளர் பக்கத்துத் திங்களின்மேற் றுயிற்று. ''அந்த அருளுனக்கிங்கு ஆதாரமாய் அல்லின், இந்து வெனவெறித் திட்டு (துகளறு-36)]என்றதும் அது. மலம் துரத்தல் உயிரின் செயலான் ஆவதன்று என்பதுபட நின்ற மையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. ''வான் பான் பாக்குக்கள் தொழிற்பெயர் விகுதியுமாம் என்பது ''கரப்பாக்கறிந்து'' (திருக் குறள்-1127) என்பதனுலுணர்க. உவமவுருபு விரித்துரைக்க. சலித்தல் - வேசறுதல். செய்தற் கண்ணென ஏழனுருபு விரித் துரைக்க. மதி துரந்தவாறு மலம் துரந்து என்றவிதனனே மலநீங்கு வது பின் என்பார் மதம் மறுக்கப்பட்டவாறு காண்க.

சோபான முறையில் நீக்குதலானன்றே, சத்திநிபாதம் சிவ புண்ணிய முதலாயின நால்வேறு வகைப்பட்டதூஉம், அவற் றுள்ளும் ஒரோவொன்று நந்நான்காய்ப் பதினறு வகைப்பட்ட தூஉம், அவற்றுள்ளும் ஒரோவொன்று பல்வேறு வகைப்பட்டு விரிந்ததூஉமென்க.

## எடுத்துக்காட்டு

**நசித்துஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்ரு**
**நசித்துஇலதேல் ஒன்று ஆவதில்லை—நசித்துமலம்**
**அப்பணைந்த வுப்பின் உளம்அணைந்து சேடமாம்**
**கப்பின்ரும் ஈசன் கழல்.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், உயிர்க்குக் குணம் போல அநாதியாயுள்ள சகசமலம் அவ்வுயிரின் வேருய்த் துரக்கற்பாலதன்று ஆகலின் மலந்துரந்தென்றது அமையா தென்னும் பாடாணவாத சைவரை நோக்கி அருத்தாபத்தியள வையான் அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) நசிந்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்ரு நசித்து இலதேல் ஒன்று ஆவது இல்லை—அரன்கழல் செல்லுங்கால் அதனை ஆன்மாக் கெட்டு ஒன்றுமோ கெடாது ஒன்றுமோ எனக் கடாயினர்க்குக் கெட்டு ஒன்றுமெனின், ஆன்மா கெட்டுப் போகலான் ஒன்றமாட்டாது, கெடாது ஒன்றுமெனிற் கெடாதவழி

இரு பொருளாய் நிற்றலின் ஒன்ருமாறில்லை, ஆகலான் அருத்தா பத்தியளவை யானே; அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம்—உப்புத் தனது கண்டிப்பு நீங்கி நீரின் ஒன்ருமாறு போலத் தனது சகசமலம் கெட்டொழிய ஆன்மா அரன்கழலை யொன்றி அவ்வரன்கழற்குச் சேடமாம்; கப்பு இன்று ஆம்—அங்ஙனம் சேடமாகிய ஆன்மாவுக்கு மீளக் கவர்ச்சியில்லை எ-று.

ஒன்ருனது என்னும் துவ்விகுதி விகாரத்தால் தொக்கது. பின் வந்த நசித்து என்பது செயவெனச்சத் திரிபு. யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கும் அஃது அதற்குச் சேடம் என்பதறிக. "அவையுடைமை யாளாம்நா மங்கு" (சி-போதம்) என ஓதுதலின், ஏனைப் பசு பாசங்கள் முதல்வனுக்குப் பொதுவகையால் சேடமாம் ஆயினும், இதுபோலச் சிறப்புவகையால் சேடமாதல் இன்மையின், இதனை வேறு எடுத்தோதினர்.

முத்திநிலை கூறி முடிந்தமையின் இறுதிக்கண் கப்பின்ருமென அவினுவிருத்தியும் கூறினர்.

## எடுத்துக்காட்டு

**பொன்வாள்முன் கொண்மூவில் புக்குஒடுங்கிப் போய்அகலத்**
**தன்வாளே எங்குமாம் தன்மைபோல்—முன்வாள்**
**மலத்துள் மறைந்துஉள்ளம் மற்றுலகை யுண்ணும்**
**மலத்துஇரித்துச் செல்லும் வரத்து.**

என்பது உதாரணம். என்நுதலிற்ருே வெனின், நான்காம் சூத்திரம் முதல் இதுவரையில் கூறிப்போந்த கேவல சகல சுத்த மென்னும் முத்திறத் தவத்தைகளினும் ஆன்மாத் தன்னியல் பிற்குக் கேடின்றியே நிற்குமென்பது உவமையின் வைத்துக் காட்டி மேலதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்)பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு-ஞாயிறுகாலைப் போதின் முகிற்படலத்துண் மறைந்து; ஒடுங்கி-அம்முகிற் படலம் ஒருபுடை நீங்கியவழித் தன்னெளி ஏகதேசமாய் ஒடுங்கித்தோன்றி போய் அகல எங்கும் தன்வாளே ஆம் தன்மைபோல்-அம்முகிற் படலம் பெருங்காற்ருன் அடியுண்டு முழுவதும் விட்டொழிந்த வழி எங்கணும் தன்னெளியேயாய்த் தோன்றும் பெற்றி போல; உள்ளம் முன் வாள் மலத்துள் மறைந்து-ஆன்மா அநாதியே தன் அறிவு மலத்துள் மறைப்புண்டு கேவலப்பட்டு; மற்று உலகை

உண்ணும் - பின்பு கருவிகளோடு கூடி ஏகதேசமாய் அறிவு விளங்கி ஐம்புலன்களை விடயிக்கும்; மலத்து இரித்து வரத்துச் செல்லும் - பின்பு அம்மலத்தை முதல்வனருளால் பற்றறக் களைந்து வியாபகமாய் அறிவு விளங்கி அவனது சீபாதத்தை அணைந்து சுத்தப்படும் எ - று.

தன்மையென்றார் கொண்மூவிற் புக்குழியுங் கேடின்மையின் ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. பின் வந்த வாள் ஆகுபெயர் வினைமாற்றின்கண் வந்த மற்றென்னும் இடைச்சொல் மலத் - திரித்து என்பதனோடு இயைந்தது; சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையாது வருதல் இலேசாற் கொள்க. உவமை வினைகள் பொருளினுஞ் சென்றியைந்தன. அறிவு மறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கியே எங்குமாய் நிகழ்தன் மாத்திரைக்கே பொன் வாள் உவமை என்பார், உலகை உண்ணும். வரத்துச் செல்லும் என வேற்றுமையும் உடன் கூறினர்.

மலநசித்தலாவது தனது மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப் படுதன் மாத்திரையே, பிறிதன்று என்பதூஉம் உவமையாற் பெறுதும்.

(நு - வி) இறைவனோடு ஒன்றாய் நின்று உணரும் வீட்டு நிலையில் இறைவனின் உதவியை அறிதலும் அன்புசெல்தலும், அவனது திருவடியைக் கூடுதலும் எவ்வாறு நிகழும் என்றவ் வினவிற்கு விடையாக இவ்வதிகரணத்து நிட்டையின் இயல்பு கூறப்படுகின்றது. நிட்டை - மனம் முதலிய கருவிகள் அசைவற்ற நிலையில் அவத்துடன் கூடி நிற்றல். இறைவன் உயிரொடு கலந்து நின்று அறிவித்தும் அறிந்தும் வருகின்ற பிரிவின்றி இயைந்த நிலையை மறவாது உறுதியாகப் பற்றி எல்லாம் அவன் செயலே என உணர்ந்து அருள்வழி நிற்பின் அவனது திருவடிப் பேற்றில் அழுந்தி நிற்கும் நிலை கைகூடும் என்பது இவ்வதி கரணத்திலுள்ள மேற்கோளின் கருத்தாகும்.

இந்நூற்பாவில் 'அயரா அன்பின்' எனவும், சிந்தியாரில் 'இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்பு செய' எனவும் கூறப் பட்டிருத்தல் கொண்டு ஈண்டும் 'மறவாது பத்தியினால் ஏத்த' என மாறிக் கூட்டப்பட்டது. ஏத்த - வழிபட. ஈண்டு அவன் அருள்வழி நிற்ப என்பதாம். அச்சொல் தன் பொருளை விடுத்து இவ்வாறு பொருள் கொள நிற்றல் ஏற்றுரையாம்.

செய்யல் ஆயின் - செய்து வருவதை ஆராயின். காலந்தரத் தின் - காலப் போக்கில்.

உடம்பு நீங்கியபின் அன்றி உடம்பு உள்ளபொழுதும் இறைவன் திருவடியடைதல் கூடுமாயின், ஒருவனுக்குத் தோன்றும் கதிரவன் ஒளி அதன் அருகில் உள்ளார்க்கு விளங்கித் தோன்றுவது போல உடம்புடைய ஏனையோர்க்கும் விளங்கித் தோன்றல் வேண்டும் என்பார்க்கு விடையாக இவ்வெண்பா அமைந்துள்ளது. கதிரவன் ஒளியுடைய கண்ணுக்கு ஒளியாய் விளங்குவன். ஒளி மழுங்கிய கண்ணுக்கு இருளாய்த் தோன்றுவன். அதைப் போன்றே இறைவனும் வீட்டுநெறி அடைந்தார்க்கு அறிவு வடிவாய் விளங்கித் தோன்றுவன். கட்டுநிலை உடையார்க்கு அறிய இயலாதவாறு மறைந்து நிற்பன். மலரும் பக்குவம் உடைய தாமரையும் அப்பக்குவமிலாத் தாமரையும் ஒருங்கு நிற்பினும் கதிரவன் பக்குவமுடைய தாமரையை மட்டும் விரியச் செய்வன். அவ்வமைவு இல்லாத தாமரையை விரியச் செய்யான். அதைப் போன்றே வீட்டு நெறி உடையாரும் கட்டு நிலை உடையாரும் உடம்புபெற்று நிற்பதில் ஒப்புடமை உடையராயினும் வீட்டுநெறி உடையார்க்கு உரிய பக்குவம் இருத்தலின் தன் திருவடியை அவரிடத்து விளங்கச் செய்வன். ஏனையோர்க்கு விளங்கச்,செய்யான் என உவமைவழி அதற்கு விடை கூறப்படுகின்றது.

அல்இருள் – இரவின் கண் உளதாகிய இருளாம்.பகல் – கதிரவன். அவ் இருளே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளது பகலில் மேகத்தால் கதிரவன் மறைக்கப்பட்டுழியும் இருள் தோன்றும். எனினும் அவ்விருள் முழுமையான இருளாகாது. இரவில் வரும் இருளே ஒளி விளக்கமற்ற முழுமையான இருளாகும். அவ்வாறன இருளையே ஈண்டு அவ்இருள் என்றார். இருட்கண் என்பது உயிர். அறியாமையால் விளங்கித் தோன்றுதிருக்கும் நிலையாகும். காணார்: காணும் தொழில் இல்லாத கண்ணைக்குறித்து நிற்றலின் ஆகுபெயராயிற்று. பகல் – ஒளி. ஈண்டு அதனைச் செய்யும் கதிரவனைக் குறித்தலின் ஆகுபெயராயிறறு – கதிரவனுக்கும் முதல்வனுக்கும் உள்ள ஒப்புமைச் சொல் இன்மையின் எடுத்துக்காட்டுவுவமை யாயிற்று. தன்னுணர்ந்தார்– நேர் தன்னை உணர்ந்தாரிடத்து : ஈண்டு நேர் என்றது ஏழன் உருபின் பொருள்பட நின்றது. ஆனல் உரையில் உணர்ந்தார்க்கு என நான்கன் உருபில் வைத்து உரை செய் தலின் உருபு மயக்கமாயிற்று. பாசத்தை நீக்கும் என்ற விடத்துள்ள நீக்கும் என்பது தாமரையொடும் கூடிக் கூம்பும் என உரை செய நின்றது. பகல் அலர்த்தும் என்பதிலுள்ள அலர்த்தும் என்பது பாசத்தொடும் கூட்டிப் பாசத்தை நீக்கி என உரைசெய நின்றது. வளர்மதி – நாள் தொறும் சிறிது சிறிதாக இருளை நீக்கி நிறை மதியில் முழுமையாக இருளை ஓட்டி வருகிறது. அதைப்போல இறைவனும் உயிரிடத்துள்ள மாசினைச் சிறிது சிறிதாக நீக்கி

முதிர்ந்த பக்குவத்தில் முழுமையாக நீக்கி விடுவன் என்பது கருத்து சோபான முறையில் படிப்படியாக நீக்கும் முறையில். துரக்கப் படும்தொறும்-நீக்கப்படுந்தோறும், அல்லின் இந்து-வளர்பக்கத்து மதி. இறைவனின் செயலால் மலம் நீக்கப்படுதலின்றி உயிரின் செயலால் அன்று என இறைவனினின்றும் உயிரைப் பிரித்தலின் பிரிநிலையாயிற்று. வான் பான் பாக்கு என்பன வினையெச்ச வாய்ப் பாடுகளாம். அவை ஒரோவழித் தொழிற்பெயர் விகுதியுமாக வரும், கரப்பாக்கு என்றவிடத்துக் கரப்பாதலை அறிந்து எனப் பொருள் பட்டவாறு போல, ஈண்டும்வசம் செய்வான் என்பதுவசம் செய்தல் என்ற பொருளில் வந்தது. வசம் செய்வான், வசம் செய்தல் போல என உரை விரிக்கப்பட்டிருத்தலின் உவமவுருபு விரித்துரைக்க என்ருர். வேசறுதல் - இளைத்தல்.

கண்டிப்பு நீங்கி-பருப்பொருளாம் தன்மை நீங்கி. சேடமாம்- அடிமையாம். நசித்து - நசிக்க என்னும் பொருள்பட நின்றது ஆதலின் நசிக்க என்னும் செயவெனெச்சம் நசித்து எனும் செய் தெனெச்சமாய்த் திரிந்தது என்ருர். அவை உடைமை ஆளாம் நாம் அங்கு என இரண்டாம் நூற்பாவில் நான்காவது அதிகரணத் தில் திருவடியை அடையாத ஏனைய உயிர்களும் பாசங்களும் அடிமையாதல் பெறப்படும். அவ்வாருகத் திருவடி அடைந்த உயிரை அடிமை என்றலின் சிறப்பொன்றும் இல்லையே எனின் கூறுதும். அடிமை பொதுவெனவும் சிறப்பெனவும் இருவகைப் படும். பொதுவாக உயிர்கள் தமக்கொரு முதல்வன் உளன் என்றும் அவன் அருள்வழியே தம் செயல் நடைபெறுகின்றன என்றும் அறி வதில்லை. அறியாமையால் பிறப்பதற்கே தொழிலாகி இறந்து வரு கின்றன. அவ்வாருன உயிர்கள் பொதுவாக அடிமை என்றற்கு உரி யன. தமக்கொரு முதல்வன் உளன் என அறிந்துஅவனை அடைதற் குரிய நெறிமுறைகளை அவன் அருள் வழிச் செய்து வீடுபேறு அடைதற்குரிய உயிர்கள் பிறப்பு இறப்பின்பாற் படுவதில்லை. திருவருள் இன்பத்திலேயே திளைத்து நிற்கும். அவ்வாருன உயிர் கள் சிறப்பாக அடிமை எனக் கருதப்பெறும். ஈண்டுக் குறிக்கப் பட்ட அடிமை இத்தகைய உயிர்களேயாம். அடுத்து ஒன்பதாம் நூற்பாவில் சேடனும் எனக்கூறிய அடிமை வீடுபெறுதற்குரிய சாதனை செய்யும் அடிமையாம். ஈண்டுக் கூறப்பட்ட அடிமை அச் சாதனத்தால் பெற்ற பயன் நுகரும் அடிமையாம். அவினு விருத்தி-விட்டு நீங்காமை. இறைவன் திருவடியைப் பற்றி நிற்ற லின் மீளக் கவர்ச்சியில்லை என அவ்வாருகிய இறைவன் திருவடியை விட்டு நீங்காமையும் உடன் கூறினுராயிற்று.

உயிர் மலத்துடன் கூடியுள்ள கேவலாவத்தை நான்காவது நூற்பாவிலும், உயிர் கருவிகளொடு கூடியுள்ள சகலாவத்தை

ஐந்தாவது நூற்பாவிலும், கருவிகளையும் மலத்தையும் நீக்கிநிற்கும் சுத்தாவத்தை ஆருவது நூற்பா முதல் இந் நூற்பா வரையிலும் கூறப்பட்டன. இவ்வாற்ருன் உயிருக்குத் தனித்தன்மை என்பது ஒன்றில்லை என்பது விளங்கும். அவ்வாறு உயிர் மூவகை நிலையில் நிற்பினும் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் தன்மையில் வேறுபடுதலின்றியே நிற்கும் என்பது இவ்வெண்பாவில் கூறப்படுகின்றது.

கதிரவன் மேகத்துடன் கூடினபொழுதும் அதனின்றும் சிறிது நீங்கிய பொழுதும் அறவே நீங்கிய பொழுதும் ஒளிதரும் தன் நிலையினின்றும் கெடுவதில்லை. அதைப் போன்றே உயிர் தனிநிலை, கூட்டுநிலை, தூயநிலை ஆகிய மூவகை நிலையிலும் நிற்கும் பொழுதும் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் தன் தன்மையினின்றும் மாறுபடுவதில்லை என்பது இதன் கருத்தாம். தன்மை என்பது தான் சார்ந்திருக்கும் பொருள் கெடும்போது கெடுவதாம். கதிரவன்பொருள்; ஒளிதருவது அதன் தன்மை. மேகத்தால் கதிரவன் மறைக்கப்படும் பொழுது கதிரவன் கெடுவதில்லை. எனவே அதன் ஒளியும் கெடுவதில்லை. மறைக்கப்பட்ட முகிற்படலத்துள்' அடங்கி நிற்கும் அவ்வளவே. ஆதலின் 'எங்குமான போல்' என்னுது 'எங்குமாம் தன்மை போல்' எனக் கூறிஞர். தன்வா வாளேஎன்புழிவந்த ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது. இப்பாடற்கண்வாள் என்பது மூன்று இடங்களில் வருகின்றன. அவற்றுள் இறுதியில் உள்ள வாள் என்பது அறிவைக் குறித்து நின்றது. வாள் - ஒளி ஈண்டு அறிவைக் குறித்து நிற்றலின் ஆகுபெயராயிற்று. பொன் வாள்-பொலிவு மிகுந்த ஒளி, ஒளிக்குப் பொலிவாவது பேரொளியாய் நிற்பது. மலர்தலை உலகின் மல்கிருள் அகல இலகொளி பரப்பி யாவையும் விளக்குவதில் கதிரவனினும் வேறு பொருள் இல்லையாதலின் அத்தொடர் கதிரவனைக் குறித்தது; 'வயம் வலியாகும்.வாள் ஒளியாகும்' என்னும் தொல்காப்பியமும்.மற்று உலகை எண்ணும் என்றவிடத்துள்ள மற்று என்னும் இடைச்சொல் தனி நிலைக்கு மாருகக் கூட்டுநிலையைக் காட்டுழி வருதலின் வினைமாற்றின் வந்ததென்ருர். மலத்து இரித்து - மலத்தை நீக்கி, மலத்தை என்பதில் ஐ இரண்டனுருபாம். அத்துச்சாரியையாம். 'சாரியை உள்வழித் தன்உருபு நிலைத்தல் வேண்டும்' என்னும் தொல்காப்பியமும். (தொல்-எழுத்து தொகைமரபு.15).ஈண்டு அத்துச்சாரியை இருந்தும் ஐயுருபு வாராமை அந்நூற்பாவில் உள்ள 'மெய்பெற' என்னும் இலேசால் ஆம். இவ்வெண்பாவில் கூறம்படும் உவமை கதிரவனும். பொருள் உயிராம். உவமையாகிய கதிரவனது வினை ஒடுங்கி நிற்றலும் எங்குமாதலும் ஆம். அவற்றை உயிர்க்கும் இயைத்துக் கூறப்பட்டுள்ளன. கதிரவனின் ஒளி மேகம் சிறிது நீங்கியவிடத்துச் சிறிது விளங்கலும் முழுவதும் நீங்கியவழிமுழுமையாக விளங்குதலும் ஆம். இதுவன்றிக் கதிரவன் ஒரு பொருளைச்

சார்ந்து நிற்பதில்லை. ஆனால் உயிரோ எந்நிலையிலும் ஒன்றைச் சார்ந்தே நிற்கும். ஆதலின் உயிர்க்குக் கதிரவன் உவமையாதல் ஏகதேசமேயாம். வரத்துச் செலுத்தும் - விளக்கிச் செல்லும். ஆணவ மலத்தின் தன்மை உயிரது அறிவை மறைத்தலாம். உயிர் வீடு பெற்ற நிலையில் ஆணவமலம் தன்மறைப்பாற்றல் கெட்டு நிற்கும் என்பதன்றி மலமே கெடுவதில்லை.

பன்னிரண்டாவது நூற்பா

**செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா**
**அம்மலம் கழீஇ அன்பரோடு மரீஇ**
**மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே.**

என்பது சூத்திரம். என்நுதலிற்றோ வெனின், அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டுக் வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

என்பது கருத்துரை. என்நுதலிற்றோ வெனின், சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) அயரா அன்பின் அரன்கழல் சென்ற முத்தர்க்குச் சீவன் முத்தி நிலைக்கண் அவ்வறிவிச்சை செயல்கள் ஒரோவழிப் புறத்துச் செல்லுங்கால். அவை செல்லுமிடம் இவை என்பது உணர்த்து முகத்தான் வாக்கு மனாதீதமாய்ப் பத்தியினான் மறவாதேத்த நின்ற முதல்வனை வாக்குமனக் கோசரமாம்படி தெளியக்கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் இப்பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்து எ - று.

சூத்திர வியையும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. அயரா அன்பின் அரன் கழல் அணைந்த சீவன் முத்தனாவான் செங்கமல மலர் போல விரிந்து விளங்கிய முதல்வனது நோன்றாளை அணைய வொட்டாது அயர்த்தலைச் செய்விக்கும், அவ்வியல்பினை யுடைய மும்மல அழுக்கை ஞானநீராற் கழுவி, அங்ஙனம் அயராவன்பு செய்யும் மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி மல இயக்கம் நீங்குதலான் அன்பு மிக்குடைய அவரதுதிருவேடத்தை யும் சிவலாயத்தையும் முதல்வனெனவே கண்டு வழிபட்டு வாழும் எ - று.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்று வருவிக்கப்பட்டது. சீவன் முத்தனென்பது ஏற்புழிக் கோடலாற் பெறுதும் நோன்றாள் - வினைத்தொகை. நோன்றல் - பொறுத்தல். எடுத்துச்

'சுமப்பானே' (திருவருட்பயன் - உயிர் விளக்கம் - 51) என்ருர் புடைநூலாசிரியரும். கழீஇ - என்றது குறிப்புருவகம். மாலற நேயம் மலிந்தவர் என்றது அம்மலம் கழீஇ அன்பரோடு மரீஇயினர் என்னும் பொருள் தந்து சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. நேயம் மலிதல் கூறவே வழிபாடும் பெறப்படும். தான் அசை. அம்மலம் கழீஇ என்றதனல் அறிவு வியாபரிக்குமிடமும் அன்பரோடு மரீஇ என்றதனல் சிகிச்சை வியாபரிக்குமிடமும், தொழும் என்றதனல் செயல்வியாபரிக்குமிடமும் பெறப்பட்டன. படவே சீவன்முத்தர்க்கு அறிவு இச்சை செயல்கள் ஏனைய விடயங்களிற் செல்லா வென்பதூஉம் பெறப்பட்டது. இம் மூன்றும் பிரிப்பின்றி ஒரிடத்து ஒருங்கு நிகழ்வன ஆகலின். விடயவேற்றுமை யின்மையும் உணர்க.

தொழுக என்னுது தொழும் என்றமையின், இஃது அணைந் தோரது தன்மை என்பது பெற்ரும். அற்ருகலின் அன்றே, இதனைச் சாதன வோத்தின்கண் வையாது ஈண்டு வைத்தா ரென்பது. இனித் தொழும் என்றதனை இரட்டுற மொழிந்து கொண்டு விதிப்பொருள்பட நின்ற முன்னிலை ஏவலாக்கியும் உரைத்துக்கொள்க; என்னை? செல்வப் பெருக்கமுடையார்க்கு உணவாகிய ஆன்பால், உடம்பு நோயின்றி வளரச்செய்யும் மருந்துமாதல் போல. இவ்வழிபாடு மலவாசனை சிறிதும் தாக்குத லின்றிச் சிவானந்தம் மேன்மேல் வளரச்செய்யும் சாதனமாதலும் உடைமையின். கண்ணழித்துரை பற்றி விதியாக வைத்துரைத்த லும் அதுபற்றி.

இதனுள், செம்மலர் நோன்ருள் சேரலொட்டா அம்மலம் கழீஇ என்றது ஓரதிகரணம்; அன்பரொடு மரீஇ என்றது ஓரதி கரணம்; மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே என்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதி கரணத்தது இச் சூத்திரமென்று உணர்க.

(நு - வி) அசிந்ததனுய் - நினைத்தல் சொல்லுதற்கும் எட்டாத வனுய். சிந்திதனுய் - அன்பினுய் அவ்விரண்டிற்கும் எட்டுதற் குரியனுய் வாக்கு மனுதீதமாய் - சொல்லிற்கும் மனத்திற்கும் எட்டுதற்கு இயலாதவனுய். கோசரமாம்படி - விளங்கும்படி.

எழுவாய் ; சீவன்முத்தன் என்னும் எழுவாய். இதற்கு முன்னைய நூற்பாவில் அரன்கழல் செலுமே என்பதால் மேலான வீடுபேறு அடைந்த நிலையே கூறப்பட்டது. அவ்வாறு அடைந் தார்க்கும் ஒரோவழித்தோன்றும் வினைப்பயனல் கீழ்நோக்குதலும் நேரும். இவ்வாற்ருன் சீவன் முத்தன் என்னும் சொல் ஏற்புழிக் கோடலால் வருவிக்கப்பட்டதாம். சீவன் முக்தன் - அயரா அன் பின் அரன்கழல் அடைந்தோன். நோன்ருள் என்பது நோன்ற,

நோற்கின்ற, நோற்கும் என முக்காலத்தும் விரிதலின் வினைத் தொகையாயிற்று. நோன்றல்-பொறுத்தல், அஃது அன்னதாதல் உற்றநோய் நோன்றல் என்பதனானும் அறிக. புடைநூலாசிரியர்-உமாபதிசிவம். 'கழீஇ- கழுவி. கழுவி என்பது மலத்தை அழுக்காகவும்ஞானத்தை நீராகவும் உருவகித்தற்குரிய குறிப்புச்சொல்லாய் நிற்றலின் குறிப்புருவகமாயிற்று. நேயம் மலிந்தவரும் மலம் கழுவி அன்பரொடு மருவியவரும் வேறல்லர் ஆதலின் அன்பு மிக்குடைய அவரது திருவேடம் எனச் சுட்டுப்பெயரால் கூறப்பட்டது. நேயம் மலிதல்- அன்பு செய்தல். ஆலயந்தானும் என்புழி உள்ள தான்என்பது அசைநிலையாம். வியாபரிக்குமிடம் - தொழிற்படும் இடம், விடய வேற்றுமை-நுகரப்படும் பொருள் வேற்றுமை.

தொழுக என்னும் ஆணைச் சொல்லால் கூறுது தொழும் என்னும் இயல்புச் சொல்லால் கூறினமையின் இந்நூற்பா அணைந்தோரது இயல்பு கூறப்பட்டதாயிற்று. தொழும், தொழுக என இரு பொருள்பட நின்றது. தொழுவன் எனில் சீவன்முத்தனது இயல்பு கூறியதாம். தொழுக எனில் ஆணை வழங்குதலாம். இவ் வழிபாடு சீவன் முத்தரிடத்துச் சிவானந்தப் பேறு மேன்மேல் விளைவித்தற்கு ஏதுவாக நிற்றலின் அவர்க்கு உணவாயிற்று. மலநீக்கம் பெற அவர்க்கு உதவும் வகையில் மருந்துமாயிற்று. இவ்வாறு ஆணை மொழியாகவும் பொருள்பட நிற்றலின் மேற்கோளிலும் களைக என்றும், வழிபடுக என்றும், இணங்குக என்றும் கூறினர்.

## முதல் அதிகரணம்

### மேற்கோள்

ஈண்டு ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங் களைக் களைக என்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோவெனின், சீவன்முத்தர்க்கு ஒருதலையான் முன்னர்ச் செய்யக்கடவது இது வெனச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

கன்ம மலமே தன் மூலத்தை நோக்கக் கான்மியம் எனவும் படும், காமியம் எனப் பாடமோதி, ஆகாமியம் காமியமெனத் தலைக் குறையென்று உரைப்பாருமுளர்.

ஏது

அவைதாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்துமாகலான்.

என்றது ஏது. என்நுதலிற்றோ வெனின், மலமாயை தன்னொடு வல்வினையின்றே எனப் பாசநீக்கம் மேலே பெறப்பட்டமையின். மெய்யுணர்ந்து நிட்டை கூடிய பின் அவை களையக்கிடத்தல் யாங்ஙனம் என்பாரை நோக்கிச் சூத்திரத்தின்கண் உடம்பொடு புணர்த்தோதிய பொருளைத் தெரித்து உணர்த்தி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அம்மலங்கள் மூன்றும், மெய்யுணர்ந்து நிட்டை கூடினோர் மாட்டும், யாதானும் ஒராற்றான் நுழைந்து அவர்தம் மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீத உணர்வை மேற்படுத்துவனவாம்; ஆகலான், அஃது அவர்க்கு ஆகாமையின் ஈண்டு ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைகவென மேற்கொண்டது எ-று.

உணர்த்துதல்-உணர்விற்கேதுவாதல். ஈண்டு அஞ்ஞானம் என்றது விபரீதவுணர்வை.

எடுத்துக்காட்டு

**புண்ணிய பாவம் பொருந்தும்இக் கான்மியமும்**
**மண்முதல் மாயைகாண் மாயையும்—கண்ணிய**
**அஞ்ஞானங் காட்டும்இவ் வாணவமும் இம்மூன்றும்**
**மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அவை அஞ்ஞானத்திற்கு ஏதுவாய் வந்து நுழையுமாறும் அஃது அவர்க்கு ஆகாமையும் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) புண்ணிய பாவம் பொருந்தும் இக்கான்மியமும்—புண்ணிய பாவப் பயனையும் புண்ணிய பாவ காரணமாயும் பொருந்துகின்ற இக்கன்ம மலமும்; மண் முதல் மாயை காண் மாயையும்—நிலமுதல் மோகினியீறாகக் காணப்படுகின்ற இம்மாயா மலமும்; கண்ணிய அஞ்ஞானங் காட்டும் இவ்வாணவமும்—

சுட்டியறிவதாகியவிபரீத உணர்வைப் பயக்கும் இவ்வாணவ மலமும்;இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு - இம்மலங்கள் மூன்றும்மெய்யுணர்வுடைய உனக்கு ஆகாமையான், அவற்றை விடுத்துஒழிவாயாக எ - று

எல்லா மலங்களும் பற்றறத் துடைத்து மெய்யுணர்ந்து நிட்டை கூடினுர்க்கு. உடம்பு நிற்குமளவும் பிரார்த்தவினை அவ்வுடம்பைப் பற்றி நிற்றலான். அஃது அவர்க்கு ஒரோவழி வாசனை வயத்தான் இங்குளி வாங்கும் கலம்போல வந்து தாக்கும்: அவ்வழி, "பிற்செயாது அனுபவிப்பதின்று" (சித்தியார் - 2 : 11) ஆகலின், அது சார்வாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்: அவை உளவாகவே, "பரமே பார்த்திருப்பார்" (சித்தியார் - 11 : 2) க்கு நில முதலிய ஏகதேசப் பொருள் காட்சிப்படும்; படவே, அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீத உணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாம். இவ்வாறு இம்மூன்றும் அறிவற்றம் பார்த்து இம் முறையானே வந்து தலைப்படுமெனக் காட்டிக் கூறுவார் கன்மம் மாயை ஆணவம் என்று இம்முறையின் வைத்து அவ் வக்காரிய நிகழ்ச்சிகளை எடுத்தோதிச் சுட்டிக் கூறினுர். இகரச் சுட்டு இடையினும் வந்தியையும்.

புண்ணிய பாவம் என்றது உபசாரம். முன் வந்த மாயை முப்பத்தோராம் எண்ணுமுறைமைக்கண் நின்ற தத்துவத்தை உணர்த்தி, விடாதவாகுபெயராய்த் தன்னை ஈருகவுடைய ஏனைத் தத்துவங்களையும் தழீஇயிற்று. காண்மாயை செயப்படுபொருளோடு முடிந்த வினைத்தொகை.

இவை, சிவபோகப் பெருவாழ்வை இழப்பித்தலின் மெய்ஞ் ஞானிக்கு ஆகாவாயின. மேன்மேன் முறுகுவனவாய் இவற்றைத் தோன்றும்போதே துடையாக்கால் "களைகுநர் கைக்கொல்லுங் காழ்த்த விடத்து" (திருக்குறள் - 340) என்னும் முறைமைத்தாய் முடியுமென்பது பற்றி, விடு என ஈண்டும் வலியுறுத்தப்பட்டது விடுதலாவது, அவை அம்முறையான் நிகழ்ந்தவழி இவ்வஞ் ஞானம் ஏகதேசக்காட்சியான் ஆயதுஎனவும், அக்காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தான் ஆயது எனவும் அத்தோற்றமும் பிரார்த்தவினை நுகர்ச்சிகட் சென்ற தற்போதத்தால் ஆயதென வும் அறிந்து அங்ஙனம் செல்வதாகிய தற்போதம் முனையாத வாறு பரிகரித்துச் சிவஞானத்துள் அடங்கிச் சிவானுபவம் சுவானுபூதியாம்படி ஞானநிலையில் உறைத்து நிற்றல்.

மாயை கன்மங்கள் அஞ்ஞானங்காட்டுதல் ஆணவமலச் சார்வானுய செய்ற்கை என்பது உணர்த்துதற்கு, மூன்றற்கும்

பொதுவாக ஏதுவுட் கூறிப் போந்த அதனை ஈண்டு ஆணவ மாத்திரைக்கே சிறந்தெடுத்தோதினர்.

(நு - வி) ஒருதலையான் - உறுதியாக. கன்மம் - மூலகன்மம் என்றும் கன்மம் என்றும் இருவகைப்படும். மூலகன்மம் என்பது உயிரிடத்து இயல்பாய் உள்ள விருப்பு வெறுப்பாம். அதன் வினைவாகத் தோன்றும் நல்வினை தீவினைகள் காமியம் எனப்படும்

நூற்பாவில் அம்மலம் என்ற தொடரொடு செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா என்ற தொடரையும் இயைத்துக் கூறியது உடம்பொடு புணர்த்தலாம்.

விபரீத உணர்வு - தானல்லாத உடம்பைத் தான் என்றும் தனதல்லாத பொருள்களைத் தன்னுடையவென்றும் கருதலாம். ஆணவத்தால் மாயையும் (மயக்கமும்) அம்மயக்கத்தால் கன்மமும் ஏற்படும். உணர்த்துதல் என்பது அவ்வாறு உணரும் உணர்விற்கு ஏதுவாதல் என்னும் பொருளது. எனவே ஆணவம் மாயை, கன்மம் ஆகிய மூன்றும் ஞானத்தை உணர்த்துதற்கு ஏதுவாகாது அஞ்ஞானத்தை உணர்த்துதற்கு ஏதுவாகும் என்பது கருத்தாம்.

புண்ணியத்தின் பயன் இன்பம். பாவத்தின் பயன் துன்பம் புண்ணியத்திற்குக் காரணம் நல்வினை. பாவத்திற்கு காரணம் தீவினை. எனவே கன்மம் என்பது விருப்பு வெறுப்பாயும் அவற்றின் விளைவாயும் நிற்கும் என்பது விளங்கும். மோகினி ஈருக- அசுத்தமாயை ஈருக, பரமே பார்த்திருப்பார் - சிவத்தையே பார்த்திருப்பார். அறிவு அற்றம் பார்த்து - அறிவு மறக்கும் காலத்தை நோக்கி. கான்மியத்திற்கும் ஆணவத்திற்கும் கொடுக்கப்பட்ட இகரச் சுட்டை மாயைக்கும் கூட்டி இம் மாயாமலம் என உரை செய்தார், புண்ணிய பாவம் என்பன அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களையுந் காரணமாகிய நல்வினைதீவினை களையும் குறித்து நிற்றல் ஏற்றுரையாம். மாயை என்பது தன்னையும் தனக்குக் கீழான ஆறு தத்துவங்களையும் குறித்து நின்றமையில் விடாத ஆகுபெயராயிற்று. புளியைத் தின்றான் என்றவிடத்துப் புளியாகிய சுவையை விடாது அதனை உடைய காயையோ அல்லது கனியையே குறித்து நிற்பின் அது விடாத ஆகு பெயராம். முள்மரத்தை இளம் பருவத்தில் களையாது அது முதிர்ந்துழிக் களையின் களைவார் கையினையே அம்முள்மரம் களையும். அதுபோல இம் மும் மலங்களையும் தோன்றும் பொழுதே களையாக்கால் அவையே உயிரைக் களையும் என்பது கருத்தாம். களைக என மேற்கோளில் கூறி ஈண்டும் அதனை விடு என்றது வலியுறுத்துதற்காம். தற்போதத்தால் - உயிரது முனைப்பால்.

மும்மலங்களும் உயிருக்கு அறியாமையைச் செய்யினும் அஞ் ஞானம் காட்டும் இவ்வாணவமும் என ஆணவத்தையே ஈண்டுச் சிறப்பித்து ஓதினர். ஏனைய இரு மலங்களும் அதன் வினைவாதலால்.

# இரண்டாம் அதிகரணம்

## மேற்கோள்

இனிச் சிவபத்தர்களோடு இணங்குக வென்றது.

என்பது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், அம்மலம் கழீஇயினர்க்கு அதனை நிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக் கடவது இதுவெனச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

ஈண்டுச் சிவபத்தர் என்றது பத்தியினன் மறவாதேத்த முதல் வனது சீபாதத்தை அணைந்த சீவன்முத்தர் மேற்று.

இணங்குதல் நட்புச்செய்தல் சிவபத்தர்களோடு இணங்குக எனவே,எதிர்மறை முகத்தான் ஏனையரோடு இணங்கற்க என்ப தூஉம் பெறப்பட்டது.

## ஏது

அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவா ராகலான்.

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், உறவும் பகையும் ஒழித்த மெய்ஞ்ஞானிகள் சிலர்மாட்டு நட்பும் சிலர்மாட்டு நட்பின்மையும் உடையராதல் சால்பன்று என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துமாறு—

தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின

ஆத்த மானா ரயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியருஞ்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக வரற்றி மலைந்தனர்

(திருவாசகம்–போற்றி 42–53)

என்றற் றொடக்கத்துத் திருவாக்குக்களான் அறிக.

மும்மலங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் இலக்குவாய்த் துழி ஏது வாதன் மாத்திரையே; சிவபத்தரல்லாதார் அவ்வாறின்றி இலக்கு வாயாத வழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை உபாயங்களானும் தம்மோடொப்ப விபரீத உணர்வைச் செலுத் தியே விடுவர்; ஆகலான் அம்மலங்களினும் கொடியராகிய இவரை அவற்றினும் அஞ்சி விட்டொழிதலே அறிவுடைமைக்குச் சால்பு என்பதாம்.

எடுத்துக்காட்டு

**மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்**
**சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை—அறப்பித்துப்**
**பத்தர் இனத்தாய்ப் பரன்உணர்வி னுல்உணரும்**
**மெய்த்தவரை மேவா வினை.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அஞ் ஞானத்தை உணர்த்தும் அவரோடு இணங்காமை மாத்திரையே அமையும்; சிவபத்தர்களோடு இணங்குதல் எற்றுக்கு? என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ–ள்) தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இல்லார் தம் திறத்துச் சேர்வை அற—முதல்வன் காட்டியும் கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவித நிலையை மறவாது கடைப்பிடிக்கும் தமது ஞானக்கண்ணை இழப்பித்துத் தீய நெறிக்கண் கொண்டு சென்று மலங்களாகிய பிறவிக்குழியில் வீழ்வித்துத் துயருறுத்துவாராகிய அன்பில்லார் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்று வந்த சேர்க்கை கூறும்படி;

பத்தர் இனத்துப் பித்தாய்ப் பரன் உணர்வினுல் உணரும் மெய்த்தவரை—அம்மறவியை மாற்றி ஞானக் கண்ணை உதவிப் பிறவிக்குழியினின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ் விக்கும் சிவபத்தரது கூற்றிலே பேரன்புடையராய் அவ்வன்புசார் பாக விளங்கும் சிவஞானக் கண்ணுல் அந்நிலையைக் கடைப் பிடித்து உணரப் பெற்ற மெய்த்தவராயினுரை; வினை மேவா— எல்லா அனர்த்தங்கட்கும் மூலமாய் வந்து சிறப்பில்லார் தந்திறத் துச் சேர்வையைப் பயப்பிக்கும் பிராரத்த வினைகள் வாதியா எ-று.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் சிறப்பில்லார் என மேற்சொல்லிய பொருளையே அநுவதித்து விரித்தோதினுர், அதன் எதிர்மறை முகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை உணர்ந்து கோடற்பயனுேக்கி.மலம், ஆகுபெயர்.வீழ்க்கும் என்றதுஉருவகங் குறித்து நிற்றலின், அவ்வாறு உரைக்கப் பட்டது. எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின் அதனைச் சிறப்பு என்ருர். பித்துப்போறலின் அன்பு பித்தெனப்பட்டது. ஏனைத் தவங்களெல்லாம் மெய்யாத லின்றி மலநடையாய்ப் போதலின், பரனுணர்வினுல் உணரும் தவம் ஒன்றே மெய்த்தவம் எனப்பட்டது.

வினை; பால்பகாவஃறிணைப்பெயர். சிவபத்தர் மாட்டு அன்பு டையராய் மனம் சொற் செய்கைகளான் அவர்வழி நிற்பார்க்கு உலகியல் உணர்வு மாறிச் சிவானுபூதி உணர்வே மேம்பட்டு நிகழும்; அது நிகழவே பௌதீக உடம்பைப் பற்றி வரும் பிராரத்த வினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின் வாதிக்க மாட்டா; மாட்டாது ஒழியவே, அவை பற்றுக்கோடாக நிகழும் சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை பற்றறக் கெடுமென்பார் சேர்வை யறப் பித்துப் பத்தரினத்தாய்ப் பரன் உணர்வினுல் உணரும் மெய்த்தவரை மேவா வினை என்ருர். எனவே, வீட்டு ணர்வை நிலைபெறுத்தும் சிவபத்தர்களோடு இணங்கினுலன்றி வினை பற்றுக்கோடாகத் தொன்று தொட்டுப் பயின்று வந்த சிறப்பில்லா ரது இணக்கம் அருமையின், அவ்விணக்கம் ஒருதலையான் வேண்டுமென வலியுறுத்தவாருயிற்று.

(நு-வி) சிவஞானிகள் அல்லாதார் மெய்ம்மை உணர வல்லா ரல்லர். ஆதலின் தெய்வமே இல்லை என்பார் கூற்றையும் நம்புவர், விரதமே தெய்வம் என்பார் கூற்றையும் நம்புவர். ஆதலின் அன் னுரை நம்பாது சிவஞானிகளையே நம்புக, அவரொடு இணங்குக என்ருர். தெய்வம் ஒன்று உண்டு எனக் கருதும் நிலையே அரிய பேரும். அப்பேறு வாய்த்த வழியும் சமயக்கணக்கர் மதிவழிச் செல்லாது உண்மை நெறிப்படுதல் மேலும் அரிதாம் என்ற கருத் தை விளக்கவே திருவாசகப் பகுதி எண்டுக் காட்டப்பட்டது.

சீவன் முக்தரை மலங்கள் கெடுப்பது ஒரோவழி அவர்தம் உயிரறிவு முனைத்து நின்ற பொழுதேயாம். சிவஞானிகளல்லாத இவர்களோ பல்லாற்றானு முனைந்து தத்தம் வழிப்படுத்த முனைவர். ஆதலின் அவற்றினும் இவர் கொடியர் என்றார்.

அநர்த்தங்கள்—துன்பங்கள்

அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் என ஏதுவில் கூறிய பொருளையே மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்கும் சிறப்பில்லார் தந்திரத்துச் சேர்வை அற வேண்டும் என விரித்துக் கூறினார். இவ்வாறு முன்மொழிந்ததையே வழிமொழிந்து விரித்துக் கூறியதன் காரணம் இவர்க்கு எதிராய சிவபக்தரின் சிறப்பை உணர்தற்கேயாம். சிவபக்தராவர் அஃது அல்லாத ஏனையோருக்கு ஞானத்தை வழங்கிப் பிறவிப் பெருங்கடலினின்றும் கரையேற உதவுவர்.

மலம்-மலங்கன்: அவற்றின் விளைவாய் ஏற்படும் பிறவிக் குழியை உணர்த்தினமையின் ஆகுபெயராயிற்று. வீழ்க்கும்-வீழ்த்தும். அதற்கேற்பப் பிறவியைக் குழியாக உருவகித்தார். மலநடையாய்-மலத்தின் வழி உளவாகும் பிறவிக்கு ஏதுவாய். வினை என்பது ஒருமை பன்மை ஆகிய இரண்டிற்கும் பொதுவாகிய அஃறிணைப் பெயராம். ஆதலின் அதனைப் பால்பகா அஃறிணைப் பெயர் என்றார். ஈண்டு மேவா என்ற பன்மைக்கு ஏற்ப வினைகள் என உரைசெய்யப்பட்டது.

# மூன்றாம் அதிகரணம்

## மேற்கோள்

இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக என்றது.

என்றது மேற்கோள். என்நுதலிற்றோ வெனின், அன்பரொடு மரீஇயினார்க்கு அம்மருவுதலை நிலைபெறுத்துவதாய் அதன் பின்னர் செய்யக்கடவது இதுவெனச் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள்வெளிப்படை.

காண்டல் ஐயுறவின்றித் தெளிதல்.

காமக்கிழத்தியர்வடிவிற்காணப்படும்ஆடை சாந்துஅணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல,

மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையின் வசீகரித்து இன்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையும் சிவாலயத்தையும் என்று உபசரித்தார். அது சேலுங் கயலுந் திளேக்குங் கண்ணர் இளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும் பொடியணி மார்பிலங்கும் என்று புண்ணியர் போற்றிசைப்ப (திருப்பல்லாண்டு-8) என்னும் திருவாக்கானுமறிக. திருவேடத்தினியல்பு

'தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோ லன்பின் நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே''

(திருநாவு. புரா-140)

''சிந்தை யிடையரு வன்பும் திருமேனிதனில் அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும் கையுழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசும் எதிர்வந் தணைய''

(திருஞான. புரா-270)

''கண்ட கவுணியக் கன்றும் கருத்திற் பரவுமெய்க் காதல்
தொண்டர் திருவேடம் நேரே தோன்றியதென்று தொழுதே''

(திருஞான. புரா-271)

என்றல் தொடக்கத்துத் திருவாக்குகளானும் அறிக.

ஏது

அவன் மற்று இவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்

என்பது ஏது. என்நுதலிற்றோ வெனின், மெய்யுணர்வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமேசுரனெனக் காண்டலே பொருத்தமுடைமையானும், நின்ற திருத்தாண்டக முதலியவற்றுள் அவ்வாறு ஓதுதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப் பொருள்கள் உயிரில் பொருள் எல்லாவற்றையும் தனித்தனி எடுத்தோதி வழிபாடு கூறுதலானும், ஈண்டு இவற்றை மாத்திரையே விதந்துகொண்டு ஓதியது என்னை என்பாரை நோக்கி மேற் கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ-ள்) அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரில் நெய்போல விளங்கி நிலை பெற்று, அல்லுழி யெல்லாம் பாலில் நெய் போல வெளிப்படாது நிற்றலான் இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக்கண்டு வழிபடுகவென மேற்கொண்டது எ-று.

மற்று, உரையசை.

எப்பொருட்கண்ணும் இறைவன் கலந்துளன் என்பது தெளிந்து கோடற் பொருட்டுத் திருவுருத்திரத்தின் அவ்வாறு ஓதப்பட்டது எனக்கொள்க.

எடுத்துக்காட்டு

**தன்னுணர வேண்டித் தனதுஉருவைத் தான்கொடுத்துத்**
**தன்னுணரத் தன்னுள் இருத்தலால்—தன்னுணரும்**
**நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல்**
**பாசத்தார்க்கு இன்றாம் பதி.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், திருவேடத்தின் கண் இறைவன் பிரகாசமாய் நிற்குமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்) பதி—அசிந்திதனாய் நின்ற பரம்பொருளே; தன் உணர வேண்டி-உலகத்துள்ளார் தன்னை அறிதற்பொருட்டு; தனது உருவைத் தான் கொடுத்து-திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது திருவடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்தலானும்; தன் உணரச் செய்து-அவ்வன்பர் தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலானும்; தன்னுள் இருத்தல்-அங்ஙனம் ஒருகுறியின்கண் நின்றுணரும் அவரைத் தனது வியாபகத்துள்ளாக இருத்துதலானும்; தன் உணரும் நேசத்தர் தம்பால் ததிநெய்போல் நிகழும்-குறியும் இறந்து நின்று தன்னை உள்ளவாறு உணருமவர் மாட்டுத் தயிரின் கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றும்; பாசத்தார்க்கு இன்று ஆம்-அவ்வியல்பில்லாத பாசக்கட்டுடையார் மாட்டுப் பாலின் கண்ணதாகிய நெய்போல விளங்காது நிற்கும் எ-று.

செய்து என்பது சொல்லெச்சம். இருத்தல் அல்லீற்றுப் பிற வினைத் தொழிற்பெயர். கொடுத்துச் செய்திருத்தலான் நிகழும் என வியையும். தன்னுணரும் நேசத்தர் எனப் பெயரடையானும் ஓர் ஏதுக் கூறப்பட்டது. தன்னை என்னும் இரண்டனுருபு

விகாரத்தால் தொக்கது. உணர்தலை மூவிடத்தோதுதலின் இஃது அங்ஙனம் வேறு வேறு உரைக்கப்பட்டது. பாசத்தார்க்கு என்பது உருபுமயக்கம். இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது.

எடுத்துக்காட்டு

**கண்டதொரு மந்திரத்தால் காட்டத்தில் அங்கிவேறு**
**உண்டல்போல் நின்று அங்குஉளதாமால் – கண்டவுருத்**
**தான்அதுவாய் அன்றுஞன் தான்அதுவாய்த் தோன்றுனே**
**தான்அதுவாய்க் காணுந் தவர்க்கு.**

என்பது உதாரணம். என்னுதலிற்றோ வெனின். சங்கம வடிவிற்குக் கூறிப் போந்த இயல்பு இல்லாத தாவர வடிவில் மந்திர சாந்நித்தியம் உள்வழியன்றிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படாது என்பாரை நோக்கிச் சிவாலயத்தினிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்றலை நுதலிற்று.

(இ-ள்) காட்டத்தில் அங்கி வேறு உண்டல்போல் – விறகிற்றீ கடைகோலாற் கடைந்துழி வேருய் விளங்கியும் அல்லுழி விளங்குவது அன்றுஞற்போல; கண்ட உருத் தான் அதுவாய் அன்று ஆஞன் – உயிர்கட்குப் புத்தி முத்தி அளித்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவர வடிவின்கட் கலப்பினுல் அதுவே தாஞய் அதுவன்றி வேறு பொருளுமாம் இயல்புடைய முதல்வன்; கண்டது ஒருமந்திரத்தான் நின்று அங்கு உளதாமல் – அதுவே தாஞகக் காணுதவர்க்குத் தம்மால் அறியப்பட்டது ஒரு மந்திர சாந்நித்தியமில்வழி அவ்வடிவின்கண் விளங்காது நின்று அஃதுள்வழி விளங்கித் தோன்றும் பொருளாம்; அது தாஞய்க் காணும் தவர்க்கு அது தாஞய்த் தோன்றுனே – அவ்வாறன்றி அவ்வடிவே அவஞகக் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு அப்பெற்றியனேயாய் விளங்கித் தோன்றுன் கொல்லோ என்றவாறு.

காணுதார்க்கு என்பது சொல்லெச்சம். மந்திரத்தால் என்னும் பொருளடைக்கேற்ப உவமையினும் வருவித்து உரைக்கப் பட்டது. உண்டல் – உண்டாதல்; ஈண்டு விளங்குதன்மேற்று. ஆல், அசை. ஆஞன் என்பது பெயர். ஓகாரம், எதிர்மறை. பொருண்மை பற்றி உளது எனவும் கூறிஞர். தானதுவாய் அன்றுஞன் என்னும் பெயரடையான் அவரவர் பாவனைக்கேற்ப விளங்குதற்கு ஏதுக்கூறியது. தானதுவாய் அன்றுதல் சங்கம வடிவிற்கும் ஒக்குமேனும் தாவர வடிவின்கண் நிகழும் கடாவை

இதனுனன்றி நீக்கலாகாமையின் ஈண்டுக்கூறினர். இஃது ஈரிடத்தும் ஒக்குமென்பது முன்னர்ப் பெறப்படும்.

(நு - ள்) காண்டல் - சிவபரம்பொருளோ அன்றோ என்னும் ஐயமின்றிச் சிவபரம் பொருளே எனத் தெளிதல். சிவனடியார் களையும் திருக் கோவிலில் திருமேனி கொண்டு எழுந்தருளி யிருக்கும் மூர்த்திகளையும் சிவபெருமான் எனக் கண்டு வழிபடுக என்னுது சிவனடியார் தம் திருவேடத்தையும் திருக் கோயிலையும் சிவபெருமான் எனக் கண்டு வழிபடுக என்றது என்னையெனில் விலைமகளிர்தம் உடலில் காணப்படும் ஆடையும் திலகமும் அணிகளும் காட்சி மாத்திரையில் காமுகரை வயப்படுத்தி அவருக்கு இன்பம் செய்யுமாறு போலச் சிவனடியார்தம் திரு வேடமும் திருக்கோயிலும் காட்சி மாத்திரையில் மெய்யுணர் வுடையாரை வயப்படுத்தி அவர்க்கு இன்பம் செய்தலின் அவற்றைத் தொழுக என அவற்றின்மீது ஏற்றி உரைத்தார். சிவனடியார்தம் திருவேடத்திற்கு விலைமகளிர்தம் உடலில் சாந்து முதலியன உவமையாதல் இங்குக் காட்டப்பட்டிருக்கும் திருப்பல்லாண்டாலும் அறியலாம். திருவதிகையில் கரையேறி அங்குள்ள வீதியில் செல்லும் அப்பர்பெருமானின் திருவேடத் தைத் 'தூய வெண்ணீறு' என்னும் திருப்பாடல் விவரிக்கின்றது. காழிப்பதியில் அப்பர் பெருமானின் திருவேடத்தைக்கண்ட ஞானசம்பந்தர் அவரை வணங்கிப் போற்றியதை அடுத்த இரு பாடல்கள் விவரிக்கின்றன.

பகுப்பின்றி - இவ்விடத்தில் உளன் இவ்விடத்தில் இல்லை என்ற பாகுபாடின்றி மெய்யுணர்வுடையார்க்கு எங்கும் எதுவும் சிவமாய்த் தோன்றும். 'எங்கும் சிவமாய் இருந்தலால் எங்கெங் கும் தங்கும் சிவம்' (திருமந்திரம் - 2722) என்பதும்' காண்க. இறைவன் யாண்டும் நீக்கமற நிற்கும் நிலையை நின்ற திருத் தாண்டகத்தில் அப்பரடிகள்,

''இருநிலனய்த் தீயாகி நீருமாகி
இயமானனய் எறியும் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிருகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவும் தாமேயாகி
நெருநலையாய் இன்ருகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே''

எனக் கூறுமாற்ருன் அறியலாம். திருஉருத்திரம்–ஸ்ரீருத்திரம் என வழங்கும். சிவமந்திரங்களுள் ஒன்று சிறப்பாகப் போற்றிக் கூறப் படுவது. சிவோகம்பாவனை– சிவமாகப் பாவித்தல். ததி–தயிர் தன் உணர என்றவிடத்துச் செய்து என்றது சொல்லெச்சமாய் நின்றது இருத்தல் – இருத்துதலால் எனஉரைகாண்டலின் பிறவினை தொழிற்பெயராயிற்று. நேசத்தார் என்பதற்குத் தன்னுணரும் என அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது. தன்னை உணர் தலாகிய ஓர் ஏதுவும் அதனல் கூறப்பட்டது. இவ் வெண்பாவில் உணர என ஈரிடத்து உணரும் என ஓரிடத்தும் வந்துள்ளது ஆதலின் அவற்றிற்கு வெவ்வேறு பொருள் கூறப்பட்டுள்ளது. பாசத்தார்க்கு–பாசத்தாரிடத்து எனப்பொருள் விரிக்கப்பட்டிருத் தலின் ஏழனுருபு நான்கனுருபாய் வந்த மயக்கமாம். பாசத்தார்க்கு இன்று என்பதிலுள்ள இன்மை விளங்காமையைக் குறித்து நின்றது.

சங்கமவடிவிற்கு – அடியாரது திருவேடத்திற்கு. தாவர வடி வில்–இயங்குதல் இல்லாத திருவுருவில்: சிவலிங்கம் முதலிய திரு வுருவங்களில். மந்திர சாந்நித்தியம் – மந்திரத்தால் கட்டுப்பட்டி ருத்தல். இயக்கமில் பொருளாகிய தாவர வடிவில் இறைவன் கலப்பினல் அவ்வடிவமே தானயும் பொருளின் தன்மையால் வேருயும் தோன்றுவன். அப்பொருள்களிடத்து மந்திரம் முதலிய செயற்பாடுகளால் விளங்கித் தோன்றுவன். அச்செயற்பாடு இல்லாதவிடத்து விளங்காது நிற்பன். மந்திரத்தால் காணும் தன்மையன்றி அவ்வடிவாய் சிவபரம் பொருளாகக் காணும் தவ முடையார்க்கு அவர் நினைத்தவாறே அவ்வுருவில் நின்று விளங்கித் தோன்றுவன். கண்ணப்பர் சுந்தரர் முதலியோர்தம் வரலாற்றில் இவ்வுண்மை விளங்கித் தோன்றும்.

காணுந்தவர்க்கு என்பதால் அதன் மறுதலைச் சொல்லாகிய காணுதார்க்கு என்பது வருவிக்கப்பட்டது. விறகைக் கடைந்த விடத்து நெருப்பு உளதாவது போலச் சிவலிங்கம் முதலியதிரு வுருவங்களில் மந்திரச் செயலால் அவ்வம் மூர்த்திகள் நிலை பெற்று விளங்குவர். எனவே விறகு உவமையாம். தாவரவடிவாய் நிற்கும் திருவுருவங்கள் பொருளாம். பொருளில் மந்திரத்தால் உளதாம் என்பதற்கேற்ப உவமையில் கடைகோலால் கடைந்த விடத்து உளதாம் என வருவித்து உரைக்கப்பட்டது. தான் அதுவாய் அன்ருனன் என்றவிடத்து ஆனன் என்பது முதல்வன் என்னும் பொருள்பட நிற்றலின் பெயராயிற்று. தோன்ருனே என்புழி உள்ள ஓகாரம் தோன்றுவன் என்னும் எதிர்மறைப் பொருள்பட நிற்றலின் எதிர்மறையாயிற்று. ஆனன் என்னும் பெயருக்கு தான் அதுவாய் அன்று என்னும் அடைமொழி கொடுக்கப் பட்டுள்ளது. அதுவே தானய்க் காண்பார்க்கு அதுவாயும்

பெயராகக் காண்பார்க்கு வேருயும் விளங்கி நிற்பன். இவ்வாற்ருன் பாவனேக் கேற்ப அவன் விளங்குமாறு அறியலாம். முதல்வன் தானதுவாய் நிற்பதும் வேருய் நிற்பதும் தாவரம் சங்கமம் ஆகிய இரண்டிற்கும் ஒக்கும் சங்கம வடிவில் அவ்வாறு நிற்றலே முன்னேய வெண்பாவிலும் தாவர வடிவில் அவ்வாறு நிற்றலே இவ்வெண்பாவிலும் கூறியுள்ளார். தாவர வடிவில் இறைவன் தானதுவாய் நிற்றலினுல்தான் அவன் அவ்விடத்து விளங்கித் தோன்றுகின்ருன் என்றல் பொருந்துவதாயிற்று. ஈரிடத்து–தாவரம் சங்கமம் ஆகிய ஈரிடத்தும். முன்னர்ப் பெறப்படும் – வரும் அதிகரணத்தால் பெறப்படும்.

## புறனடை

### மேற்கோள்

*இனி இவ்விடங்களின் வழிபடுகவென்றது.*

என்பது மேற்கோள். என்நுதலிற்ருே வெனின், மேற்கூறிப் போந்த மூன்றும் சீவன் முத்தர்க்குத் தாமேயுளவாம் இலக்கணம் ஆகலின் அனுவாதமாக வைத்து உணர்த்தற்பாலனவாகிய இவற்றைக் கிளக இணங்குக வழிபடுகவென விதியாக வைத்தோதியது எற்றுக்கு என்பாரை நோக்கி அதனே அவற்றது ஒழிபாகக் கொண்டு சாதித்தற்கு மேற்கோடல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

இவ்விடங்கள் என்பது மேற்கூறிய இரண்டனேயும்.

வழிபடுக என்று எடுத்தல் ஓசையான் அநுவதித்து உணர்வதே அமையும் என்பாரை நோக்கி விதித்தலே வலியுறுத்தவாறு. இனம் பற்றிக் களேதல் இணங்குதல்கட்கும் இஃதொக்கும்.

ஏது

*நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவை யாகாவாறு அப்புருடனுமாகலான்.*

என்பது ஏது. என்நுதலிற்ருே வெனின், எய்தியதனே விதித்தல் பயனுடைத்தன்று போலும் என்பாரை நோக்கி மேற்கோளேச் சாதித்தல் நுதலிற்று.

(இ–ள்) நரம்பு முதலிய தாதுக்களின்கண் வேற்றுமையின்றி, அதுவது தானுய் வருகின்ற உயிர், ''நாடியோ என்போ நரம்பு சீக் கோழையோ'' (சி. போதம் - 9, அதிகரணம் 1 )என்று இங்ஙனம் டைமறியாய்ப் பார்ப்பார்க்கு (நாலடி – தூயதன்மை 2 )அந்நரம்பு நாடி முதலியவையாகாது, அவற்றின் வேறுமாயினுற்போல உயிர்க்

குயிராகிய அம்முதல்வனும், உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றினும் கலப்பான் அதுவது தானுகியும், பொருண்மை யான் அல்லனுகியும், நிற்பனுகலான், அதுவது தானுய்க் காணும் காட்சி பற்றி எய்திய வழிபாடு, அல்லனுய் நிற்றலைக் காணுங்கால் எய்தாதாகலின், அவ்வழியும் எய்துவிக்க வேண்டுதலான், இனி இவ்விடங்களில் வழிபடுகவென விதித்தோதியது எ-று.

அவை யாகாவாறு அப்புருடனும் எனவே அவ்விடத்து எய்துவித்தல் ஒருதலையான் வேண்டுமென்பது தாற்பரியமாயிற்று. மேற்கோளின்கண் இவ்விடங்களை என்னுது இவ்விடங்களின் என வேற்றுமைப்படுத்தோதியதூஉம் இஃதுணர்ந்து கோடற் பொருட்டு. இதனுனே, எய்தாதது எய்துவிப்பதூஉம், எய்தியது இகந்துபடாமற் காப்பதூஉம், எய்தியதனை ஒருமருங்கு மறுப் பதூஉம் என்னும் விதி மூன்றனுள், இஃது எய்தியது இகந்து படாமற் காத்தது என்பது போந்தவாறு உணர்க.

வாறு உவமவுருபுபட நின்றது. முதலானவற்றை என்பது உருபு மயக்கம்.

எடுத்துக்காட்டு

**அதுவிது என்றது அதுவல்லான் கண்டார்க்கு**
**அதுஇது என்றதையும் அல்லான் — பொதுவதனில்**
**அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே**
**அத்துவிதி அன்பில் தொழு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், முதல்வனுக்கு அவ்வியல்பு எல்லாப் பொருட்கண்ணும் உண்மையின் அவற்றுள் இவ்விடயங்களின் மாத்திரையே வழிபாடு விதித்தது என்னை என்பாரை நோக்கி அதனை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ - ள்) கண்டார்க்கு-முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றினும் நிற்கு நிலைமை அறியப் பெற்றோர்க்கு; அது இது என்றது அல்லான் - கண் அருக்கன் போல் அதுவும் இதுவுமென பக்கிசைத்து ஓதப்பட்ட பேதநிலைமையனும் அல்ல னுய்; அது என்றது அல்லான்-உடலுயிர் போல் அதுவே என்று ஓதப்பட்ட அபேத நிலைமையனும் அல்லனுய்; அதுஇது என்றதை யும் அல்லான்-குணகுணிபோல் அதுவாகிய இது என்று பக்கிசை யாமல் ஓதப்பட்ட பேதாபேத நிலைமையனும் அல்லனுய், பொது வதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமுந் தைவமே -அறிவொளி போல் அம் மூன்றற்கும் பொதுமையான் அத்துவித நிலைமையன்

ஆதலான் எல்லாப் பொருள்களும் அவன் வடிவேயாமாயினும்; அத்துவிதி அன்பின் தொழு – அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடையோய்! அவற்றுள்ளும் அன்பு விளையுமிடத்தில் வழிபடுவாயாக எ – று

அதுவிது என்றது முன்னையது உம்மைத்தொகை; பின்னையது இருபெயரொட்டுப் பண்புத்தெகை. அல்லான் என்பதனை மேலும் கூட்டி, என்றது என்பதனை அது என்றதோடும் கூட்டி யுரைக்க அல்லான் என்பது முற்றெச்சக் குறிப்பு. என்றதை ஐயீற்றுடைக் குற்றுகரம். உம்மை இறந்தது தழீஇயிற்று. பொதுவது என்னும் அது பகுதிப்பொருள் விகுதி. தைவம் என்னும் சொல்லியல்பு மேலே (நூற். 9அதிகரணம் 2)உரைத்தாம் ஏகாரம்,தேற்றம். ஆயினும் என்பது சொல்லெச்சம். அன்பு ஆகுபெயர். ஏழாவது விரித்துரைக்க.

''திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி'' யினன்றி ''எங்கும் உருக்காண வொண்ணுத பால் முலைப்பால் விம்மி ஒழுகுவது போல் வெளிப்பட்டருளுவ'' தாகி அடிப்பட்டு வரும் அன்பு விளையாமையின் ஆண்டுச் செய்யும் வழிபாடே அத்துவித ஞானத்தை நிலைபெறுத்தற் பயத்தது என்பார். அத்துவிதமாதல் அகண்டமுந் தைவமே என அநுவதித்து அத்துவிதி யன்பிற் றெழு என்றார். அத்துவிதி என்னும் அண்மை விளி பயனுணர நின்ற குறிப்புப் பெயர். இதனானே விதிக்குப் பயன் கூறி யதூஉமாயிற்று. இனி அது இது என்பன அருவுருவாகிய திருமேனி எனக்கொண்டு அதற்கியைய உரைப்பாரு முளர்: அவர் அன்பின் என்றதனை ஏதுப்பொருட்கண் வரும் ஐந்தனுரு பேற்ற இயற்பெயராக வைத்துரைப்ப.

எடுத்துக்காட்டு

**வினையால் அசத்து விளைதலால் ஞானம்**
**வினைதீரின் அன்றி விளையா — வினைதீர**
**ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்**
**ஆனத்தால் அன்பிற் றெழு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அசத்தா யுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று கண்டு ஒருவனே ஞான சொருபம் உளதாய் அத்துவிதத்தை உணர்த்துமாகலான் அதன் பொருட்டு வழிபாடு வேறு விதித்தல் எற்றுக்கு என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) வினையால் அசத்து விளைதலான் வினை தீரின் அன்றி ஞானம் விளையா - உடம்பின் கண்ணதாகிய பிராரத்த வாசனை உயிரைத் தாக்குவதாய் உள்ள துணையும் அதனான் வரும் விருப்பு வெறுப்புக்களும் அவைபற்றிக் காட்சிப்படும் மண்முதல் மாயைகளும் அவைபற்றி நிகழும் விபரீத உணர்வும் ஆகிய அசத்துக்கள் ஒருவிய வழியும் வந்துகூடி மேம்படுவன வாக லான், அவ்வளவிற்கு எல்லாம் மூலமாகிய பிராரத்த வாசனை பற்றறக் கழிந்தாலன்றி அவ்வசத்தைக் கீழ்படுத்து மெய்யுணர்வு மேம்படுதல் கூடாதாகலின்; வினை தீர ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும் - அவ்வாசனை பற்றறக் கழிதற்பொருட்டு அம்மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே அவ்வினை நீங்கி மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும்; ஆனத்தால் அன்பின் தொழு- ஆகலான் அன்பினல் அவரை வழிபடுவாயாக எ-று.

அசத்தை யொருவியவழி உளதாகிய ஞானசொரூபம் நிலை பெறுதல் அவ்வசத்தினது விளைவிற்கு வேருகிய வினைத்தீர்வின் கண்ணதாகலான், அவ்வினை வேரறுத்து மெய்யுணர்வை நிலை பெறுத்துதற் பொருட்டு அதனை அங்ஙனம் நிலைபெறுத்தினர் மாட்டுச் செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படும் என் பதாம். அற்றேல், அதன்பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப் படி உச்சரிக்கவென்ற அதுவே அதற்கு அமையுமெனின், அஃது ஒக்கும் அவ்வுச்சரிப்பும் இவ்வழிபாட்டை இன்றியமையாது என்க: அற்றுகபினன்றே, ஆன்றி அந்நெழுந்தால் எனவும் கண்முதல் நாளம் எனவும் அகத்து வழிபாட்டை உடன் கூறியதூஉமென்பது

விளையாதென்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றெக்கது. பின் வந்தஞானம் ஆகுபெயர் ஆனதனல் என்பது ஆனத்தாலென மரீ இயிற்று.

எடுத்துக்காட்டு

தன்னை அறிவித்துத் தான்தானய்ச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது - முன்னவனே
தானேதா னச்செய்தும் தைவம்என்றும் தைவமே
மானே தொழுகை வலி

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், அங்ஙனம் பயன் பற்றி விதிக்கப்படும் வழிபாடு, வேள்வி முதலியன போலப் பயன் வேண்டாமையானதல். பின்னர்ச் செய்து பெறும் என்றுதல் ஒரோவழி ஒழியவும் படுங்கொல்லோ வென்பாரை நோக்கி, அது செய்யா வழிப்படும் குற்றமும், செய்தல் கூடாமையாமாறும் உணர்த்தி விதித்தலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்) தன்னை அறிவித்துத் தான் தானச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை அலது - தன் உண்மையை அறிய மாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அதனை தெரித்து உணர்த்தி எத்தனையும் எளிய அவ்வுயிரை எத்தனையும் அரிய தானும் வண்ணம் செய்தளித்த பெரியதோர் உதவியை அதன் பின்னர் மறக்குமாயின் அஃது இதற்குமுன் அறியாமை யான் மறந்த குற்றம்போலத் தீர்திறன் உடையதோர் குற்ற மன்றாகலானும்; முன்னவனே தானே தானச் செய்தும் தைவம் என்றும் தைவமே மானே தொழுகை வலி-முதல்வன் அங்ஙனம் தான் தானேயாகச் செய்தாலும் இதுகாறும் தனக்குச் சுதந்திர மின்றி முவல்வனது உபகாரத்தை இன்றியமையாதாய் அடிமை யாகிய உயிர் எக்காலத்தும் அவ்வாறு அடிமையேயாம் ஆக லானும் தான் தானச் செய்தளித்த அப்பெரியோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியாவது எ - று.

தமது முதல் தானே குருவாகலின் தான் தானச் செய்தானை என்றும், முன்னை மறந்த குற்றம் அறியாது நிகழ்ந்ததாகலிற் கழுவப்படும். இஃது அதுபோற் கழுவப்படுவது அன்று என்பார் பின்னை மறத்தல் பிழையலது என்றும் கூறினர். பின்னை மறத்தல் என்றதனல் முன்னை மறத்தல் பெறப்பட்டது. ''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' என்னும் கருத்து நோக்கிக் கூறியதூஉமாம்.

அலதும் எனப் பாடமோதி இது பிழையாதல் அன்றியும் என்று உரைப்பாரும் உளர். ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையன தேற்றம். செய்தாலென்பது செய்தெனத் திரிந்தது. உம்மைச் சிறப்பின் கண் வந்தது.

தான் தானச் செய்தல் எதனையெதனைப் பற்றினும் அதுவது வாம் உயிரை, தன்னை அறிந்தவழி எண்குணங்களான் நிறைந்து தன் வண்ணமாகச் செய்தல். அங்ஙனம் செய்த வழியும், ''உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கே யுரித்து'' என்பார் தைவம் என்றும் தைவமே என்றார். தைவம் என்னும் சொல்லியல்பு மேலே உரைத்தாம்.

மானே என்னும் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது: மான் என்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க, வலிதருவதனை வலி யென்று உபசரித்தார்.

இவ்வுதாரணங்கண் மூன்றனும்,வழிபாட்டிற்கும் இடத்துநிகழ் பொருள் மாத்திரையேஅன்றி இடவிசேடமும் பெறல்வேண்டும்.

என அதனை வலியுறுத்து முகத்தானே, முறையே சிவலிங்கத்தையும் சிவபத்தர் வேடத்தையும் சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

எடுத்துக்காட்டு

**சிவம்என்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்**
**பவம்இன்றும் கண்வா சகத்திற்—சிவமுண்டாம்**
**ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங்கு ஒண்குருவால்**
**இன்றிந்நூன் மும்மை மலர்க்கு.**

என்பது உதாரணம். என்நுதலிற்றோ வெனின், இங்ஙனம் சிவாகமத்துள் ஞானபாதப் பொருள் எல்லாவற்றையும் பொது உண்மை என்று இருவகைப்படுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நான்கு இயலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞானபோத நூலைக் கோடற்குரிய அதிகாரிகளாவார் இவரென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சிவம் என்னும் அந்ததர-தான் தானச் செய்தவாற்றாற் சீவன் என்னும் இயல்பின் நீங்கிச் சிவமென்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே; ஒன்றும் இரண்டும்மலத்தார்க்கு-ஒன்றும் இரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞான கலர்க்கும் பிரளயாகலர்க்கும்; சிந்தைநேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்றும் சிவம் உண்டாம்-முறையே அறிவின்கண் நின்று அருட்பார்வையான் நோக்குதலானும் தேவகுருவாய் முன்னின்று செய்யும் திருநோக்கம் பரிசம் வாக்கெனப்படும் தீக்கையானும் பிறவிக்கேதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கு மாகலான்; மும்மைமலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல்-அவரின் வேறாகிய மும்மலம் உடையவர்க்கே உரித்து இவ்வுலகத்து அனுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச்சிவஞான போத நூல் எ-று.

அந்தம் வேதாந்தம், அந்ததரம் சித்தாந்தமாகலின், அதனைப் பெற்றாரது பெருமை கூறுவார் சிவமென்னும் அந்ததர வென்றார். என்னும் என்புழிப் படுசொல் தொக்கு நின்றது. சிந்தை, அறிவு கண்ணுருபு விரித்துரைக்க. நேர் நோக்குதல். முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையான் நோக்குதல், நோக்க நோக்குதலானென்க. கண் வாசகங்களைக் கூறவே இனம் பற்றிய பரிசமும் உடன் கொள்ளப்படும். பவம் ஆகுபெயர். இந்நூல் அனுபவமுடைய தேசிகனலன்றி விளங்காதென்பார் ஒண்குருவால் என்றார்.

போதிக்கப்படும் என்பது அவாய் நிலையான் வந்தது.

இன்றிந்நூல் என்பது இந்நூலென்னும் பொருட்டு. இக் காலத்து உரைக்கப்படும் நூலெனினும் அமையும். அது[1] "தானு ரைத்தான்...இன்று" என வருகின்ற வெண்பாவாற் கூறியவாற் றுனும் அறிக.

மும்மை என்றது ஈண்டு எண்ணின்மேன் நின்றது; "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல

(நு-வி)மேல் மூன்று அதிகரணங்களிலும் முறையே கலேக இணங்குக வழிபடுக என விதிவகையால் கூறப்பட்டன. ஈண்டும் இவ்விடங்களில் வழிபடுக என மூன்றும் அதிகரணத்தில் கூறிய வாறே கூறப்படுகின்றது. இவ்வாறு கூறியது வழிமொழிதலாம்; சீவன்முக்தர்க்கு இயல்பாகவுள்ள இம்மூவகை நிலையையும் விதியாக ஓதியது எற்றுக்கு என்பதற்கு விடையாக இப்புறனடை அமைகின்றது. மூன்றும் அதிகரணத்தில் கூறப்பட்ட விதிமுறைக் கும் இவ்வதிகரணத்தில் கூறப்பட்டிருக்கும் முறைக்கும் வேறுபாடு உண்டு. மூன்றும் அதிகரணத்தினுல் கூறப்பட்டது படுத்தல் ஓசையால் கூறப்பட்டதாம். அஃதாவது மென்மையாகக் கூறப் பட்டதாம். இங்குக் கூறப்பட்டிருப்பது எடுத்தல் ஓசையால் கூறப்பட்டதாம் அஃதாவது வன்மையாகக் கூறப்பட்டிருப்பதாம். படுத்தல் ஓசையால் கூறிய விதியை இவ் எடுத்தல் ஓசையால் வலியுறுத்துகிருர் என்பது விளங்கத்தக்கதாம். பைமறியாய்ப் பார்ப்பார்க்கு-(தூய்தல்லாத)பையைப் திருப்பிப் பார்ப்பார்க்கு தூய்தல்லாதபையைத்திறந்துஅதன்உட்புறத்தைக்காணின்அதன் கண் உள்ள மாசுகள் விளங்கும். அதுபோல உருவின் மிக்கதோர் இவ்உடம்பையும் திறந்து அதன் உட்புறத்தை நோக்கின் அதன் கண் அருவருத்தற்குரிய பல மாசுண்மைகள் விளங்கும். இதனைத் 'தோற் போர்வை மேலுந் தொளை பலவாய்ப் பொய்ம் மறைக்கும், மீப்போர்வை மாட்சித் துடம்பானு மீப்போர்வை, பொய்மறையாக்

---

1 எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பான்
நந்தி யருள்செய்த ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தா லின்று.

காமம் புகலாது மற்றதனைப் பைம்மறியாய்ப் பார்க்கப்படும்' எனவரும் நாலடியார் பாடல் விளக்கும்.

வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூத்துவிளி வுடையது தீப்பினி இருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா உள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து
மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய்

என மணிமேகலை கூறுவதும் ஒப்புநோக்குதற்குரியது.

இறைவன் தாவர சங்கமங்களின் வேருக நிற்பதைக் காணும் காலத்தும் வழிபாடு செய்ய வேண்டும் என்பது விதித்தவாரும். இவ்விடத்து வழிபாடு செய்தல் இன்றியமையாது என்பது தாற்பரியமாம், தாற்பரியமாவது ஒரு பொருள் பற்றி அறியத்தகும் உண்மையாகும். இவ்விடங்களில் வழிபடுக என விதித்தது முன் எய்தியது இகந்து படாமல் காத்தலாம். அவை ஆகாதவாறு என்றவிடத்து வாறு என்பது போல என்னும் உவமப் பொருள் பட நின்றது. முதலானவற்றை என்பது முதலானவற்றின்கண் எனப்பொருள்பட நிற்றலின் உருபு மயக்கமாயிற்று.

பக்கிசைத்து – பிரிந்திசைத்து. அகண்டமும் தெய்வமே – அனைத்துப்பொருள்களும் அவன் வடிவே.

அது இது என வரும் முன்னையது உம்மை விரித்துப் பொருள் கொள நிற்றலின் உம்மைத்தொகையாயிற்று. அடுத்து வரும் அது இது என்பது அதுவாகிய இது எனப்பொருள்கொள நிற்றலின் இருபெயரெட்டுப் பண்புத்தொகையாம். அல்லான்– அல் லனுய் எனப்பொருள் கொளப்படுதலின் முற்று எச்சக்குறிப்பு ஆயிற்று. என்றதையும் என்றதிலுள்ள உம்மை அது இது என்றதும் அல்லான் என்னும் தொடரைத் தழுவி நிற்றலின் இறந்தது தழீஇயிற்று. அகண்டமும் தெய்வமே என்புழிவந்த ஏகாரம் தேற்றப் பொருளது. அன்பு–ஈண்டு அது விளையும் இடத்தைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று.

ஞானம்: ஈண்டு அதனை உடையாரைக் குறித்தலின் ஆகு பெயராயிற்று அலதும் எனப் பாடம் கொண்டவர் பாண்டிப் பெருமாள் ஆவார். முன்னவனே என்பதிலுள்ள ஏகாரம் அசை நிலையாம். பின்பு வரும் ஏகாரங்கள் தேற்றப்பொருளவாம். தெய்வம்–இதையுடைமை. மானே என்ற விடத்துள்ள இரண்டனுருபு தொக்கது.

வலி தருவதனை–வலிமை தருவதனை.

பவம்: ஈண்டு அதற்கு ஏதுவாகிய உயிர் முனைப்பைக் குறித்தலின் ஆகுபெயராயிற்று.

மும்மைத் தென்னம் பொருப்பன் என்றவிடத்து மும்மை என்பது எண்ணைக் குறித்தது போல ஈண்டு மும்மை என்றது எண்ணைக் குறித்து நின்றதாம்.

சிவஞான போத மூலமும் சிற்றுரையும்

முற்றுப்பெற்றன.



# சிவஞான போதம்

## முதற் குறிப்பு அகரவரிசை

(எண்: பக்க எண்)

## உரைமேற்கோள்

## செய்யுட்கள்



